த்துவதற்காக இலக்க அடையாளங்களை ஏற்படுத்துவதற்கும் இலக்கணங்களிருக்கின்றன. இசைவிகற்பங்களுடைய சில தோத்திரப் பாட்டுகளின் வித்தியாசம் தெரிவதற்காக பாட்டுகள் ஒருதரமன்றிப் பலதரம் பாடப்படுகின்றன.

இந்த சாமவேதத்தில் ஆரிஷிய பிராமணம் என்கிற பெயரினால் இரண்டுபாகங்களுக்கு அட்டவணைகளும், அதில் வாக்கியங்களுடைய பெயர்கள் அல்லது முதல் மொழிகள் ஆரணியகானததைத் தொடர்ந்து வருகிற கிராமகேயம் அல்லது ஆர்ச்சிகத்தில் வருகிறபடி இலக்கமிட்டும் அவைகள் எந்தெந்த தேவதையின் பெயரும், சந்தர்ப்பத்தையும் குறிக்காமல் அதுதன் கிரந்தகர்த்தாவாகிய ரிஷியின் பெயரைமாத்திரம் குறிக்கப்பட்டும், இவைகளில் சில பாட்டுகள் காதுக்கும் கேட்காத விதமாகவும். கேவலம் ஊகையினாலறியக்கூடிய ஊகைக்கானமென்ற ஒரு வகுப்பு ஆகவும் இருக்கிறது.

இந்த சாமவேதத்தின் 2-வது பாகத்துக்கு உரித்தான பிராம்மணம் என்னும் பெயரால் பலவித கிரந்தங்களும், இவற்றில் ஒன்று விரிவாயும், அவற்றிலொன்றான சாரதி விம்ஷம் என்பதில் 24 அத்தியாயங்களும் மற்றொன்றுக்கு அத்பூதம் என்றும், 3-வது பிராம்மணத்துக்கு பஞ்ச விம்ஸம் என்றும் பெயர்பெற்று, இதில் 24 அத்தியாயங்களிருக்கின்றன. மேலும் இந்த வேதபாகத்தின் பிராம்மணங்களில் தாந்தியம் என்னும் பிராம்மணம் பிரசித்தியானதாய்ச் சாயனாசாரியால் வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிற தன்றியில், பாஞ்சிகம் என்னும் 2-ம் கண்டம் அடங்கிய பாகத்துக்கு அக்கினிஷ்டோமம் சமயாசாரச் சடங்கு விஷயத்தைச் சார்ந்திருக்கிறது.

கடைசியாக இந்த சாமவேதத்தில் சில பிராம்மணமந்திரகளிருப்பதன்றியில் விசேஷமும் விஸ்தீரணமுமான சாந்தோக்கிய உபநிஷத்து 8-பிரபாடகங்களுடன் இருக்கின்றது. இவைகள் பிராம்மணங்களிலிருந்து, சேர்க்கப்பட்ட

வைகளாகவும், 3 முதல் 10 வரையில் இலக்கமிடப்பட்டும், முதலிரண்டில் சமயாசாரச் சடங்குகள் சேர்க்கப்படாமல் சுமார் 150 பிரகரணங்களுக்கு மேலிருக்கின்றன.

இந்த சாமவேதத்தின் தலவாகர சாகையைச்சார்ந்த தலவாகர உபநிஷத்துமிருக்கிறது. ஸ்ரீ சங்கரர் பாஷியபிரகாரம் இது 9வது அத்தியாயத்தைச் சார்ந்ததாகவும், 4 சந்தசுகளுடையதாகவும் உபாத்தியாயர்களுக்கும் சீடர்களுக்கும் நடந்த சல்லாபனைகளடங்கியதாகவும் இருக்கிறது.

---

## அதர்வணவேதம்.

வேதத்தின் 4-வது பாகமாகிய இந்த அதர்வணவேத ஸ்தோத்திரங்களின் திரட்டு 28 காண்டங்களாகவும், 1015 வாக்கியங்களாகவும், சுமார் 200க்கு மேற்பட்ட அநுவாகங்களாகவும். 760க்கு மேல்பட்ட சூக்தங்கள், ரிக்குகள் ஏறக்குறைய 40 பிரபாடகங்களாகவும் பிரிக்கப்பட்டு மிருக்கிறதன்றியில், 19-வது காண்டம் 43-வது சூக்தம் முழுதிலும் இந்த அதர்வணவேத பாஷை நடை முதலானதுகளைக் காட்டியும், அந்தக் காண்டத்தின் ஆரம்பத்தில் 6-வது சூக்தம் வெள்ளையஜுஸின் 31-வது அத்தியாயத்திலிருந்து இதற்குமுன் சொன்ன மொழிகளைப்போ லிருக்கின்றன.

ரிக்குகளிலும் ஆங்காங்கு ஒவ்வொரு மொழி பேதப்படுத்தி மாற்றியிருப்பதாகவும், அதே காண்டத்தின் அடுத்த சூக்தத்தில் கிருத்திகைமுதல் 28 நக்ஷத்திரங்களின் விவரத்தையும், ஆசிலேஷம்மார்க்க சிரமாதங்களைப்பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டும், 19 வது காண்டம் 4—வது அநுவாகத்தில் மந்திரோச்சாடனத்தைப் பற்றியும், சத்துருநாசத்தின் பொருட்டு அநேக சாபனைகளைப் பற்றியும் சொல்லப்பட்ட அலங்காரங்களிருக்கின்றன. இவைகள் உண்மையில் நேசதத்துவ பேதங்களையும் ஆத்மதத்துவ பேதங்களையும் பற்றி நிக்கிக் கொள்ளும் விதானங்களாம். அதற்குத் திருஷ்டாந்தமாக அடுத்த வாக்கியங்களில் பரமேசுவரருக்கு யஜனியமென்னும் கிரி

யைகளையும் வேதாசாரக் கிரியைகளையும் அநுஷ்டானங்களையும் பற்றிய ஸ்தோத்திர சூக்தங்கள் அநேகமிருக்கின்றன.

இந்த அதர்வணவேதத்தின் இரண்டாவது பாகத்துக்கு கோபத பிராம்மணம் சேர்ந்ததாயும், 5 பிரபாடகங்களையுடையதாயும், இதன் முதலத்தியாயத்தில் பிரபஞ்சத்திற்கு ஆதிகாரணம் பிரம்மமென்றும், இந்த அத்தியாயம் 4-வது பிரகரணத்தில் அதர்வணர் உலகத்தை சிருஷ்டித்து பிராணிகோடிகளைப் பாதுகாக்கும்படி பிரஜாபதியாகமாறியதைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறதன்றியில், 5-வது அத்தியாயத்தில் முதல்புருஷன் பஞ்சாங்கத்திற்கு சம்பந்தமுண்டாக்குகிற சம்வத்சரத்தோடு உண்டானவனாக எண்ணப்பட்டும், 5-வது பிரகரணத்தில் 12 சாந்திரமாசங்கள் ஒருவருஷமென்றும், அதன் உட்பிரிவுகள் 360 நாள்களாகவும் 10104 முகூர்த்தங்களாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றன.

மற்றப்பாகங்கள் அடியிற்கண்ட உபநிஷத்துக்களையும் அவற்றின் தாத்பரியங்களையும்பற்றி சொல்லியிருக்கின்றன.

இந்த அதர்வணவேதத்தில் முண்டக உபநிஷத்து இரண்டுபாகங்களாகவும், 6 பிரகரணங்களாகவும் சங்கரரால் பாஷியம் செய்யப்பட்டும், அந்த பாஷியத்துக்கு அநந்தஜ்ஞானியர், கௌடபாதர், ஆநந்தகிரி முதலானவர்களுடைய விரிவுரையுமிருக்கிறது. வேதத்தின் இந்தப் பாகத்திலிருக்கும் நரசிம்மதாபனி என்னும் உபநிஷத்துக்கும் சங்கரர், கௌடபாதர் முதலானவர்கள் பாஷியம் செய்திருக்கின்றனர். இந்த உபநிஷத்துக்கடுத்திருக்கும் கடவல்லிக்கும் சங்கரர் பாலகிருஷ்ணய்யர்களின் பாஷியமிருக்கின்றன. இதன் 6 பிரகரணங்களில் நாசிகேதசனுக்கும், யமனுக்கும் நடந்த சம்பாஷணை இருக்கிறது. மேலும் இந்த அதர்வணத்தில் தான் கேநோபநிஷத்து என்னும் ஒரு சிறிய பாகம் இருக்கிறதன்றியில், நாராயண உபநிஷத்தும் இருக்கிறது. இதன் போக்கைப் பார்க்கும்போது தைத்திரிய யஜுர்வேதத்தின் ஆரணியத்தைச்சார்ந்து முடிந்திருக்கிறதாகத் தோன்றுகிறதன்றியில் பிருகுவல்லி, ஆனந்தவல்லி என்னும் தைத்திரிய வாரவளியைக்

என்கிற பெயரால் கருப்பு யஜுஸின் ஆரணியகத்திலிருந்து இதில் சேர்த்ததாகத் தோற்றுகிறது.

ஆரியர் வேதத்தில் இருக்கும் சங்கதிகளின் சார சங்கிரகத்தை இதுவரை எடுத்துக்காட்டியதில் இதில் ஆரியருடைய ஆதிகர்மானுஷ்டானங்களின்னவை யென்றும், அக்காலத்தில் அவர்கள் தசைக்குத்தக்கபடி ஒரே பரப்பிரம்மத்தை அக்கினி, வாயு, வருணன், மித்திரன் என்றுதி பெயர்களால் உபாஸனை செய்து வந்து, முடிவில்; தத்துவஞானிகளாகி, அந்த ஒரே பிரம்மத்தை அறிந்து அநந்த கலியாண குணங்களால் அலங்கரித்து வேதாந்த உபநிஷத்துக்களைக் கொண்டு உஜ்ஜீவித்தார்களென்றும் ஸ்பஷ்டமாகும். இந்த வேதாந்த உபநிஷத்துக்கள் விருத்தியான காலமுதல்தான் இந்த ஆரியாவர்த்தத்தில் அநந்த சமயக்கோட்பாடுகளும் சாஸ்திரக் கோட்பாடுகளு முண்டானதன்றியில், அவ்வுபநிஷத்துக்களே இப்பிரபஞ்ச பரிசுத்த ஆஸ்திகமதத்துக்கு ஆதி அஸ்திவாரங்களாகவும் அவதார புருஷர்களைப்போன்ற ஸ்ரீ சங்கரர், மஹீதரர், வித்தியாரணியர், மத்வாசாரியர், இரங்க ராமானுஜர் முதலான மஹான்களால் பல பாஷியங்கள் செய்யப்பட்டும் இன்றளவும் இந்நாட்டிலும் மற்றெந்நாட்டிலுமுள்ள தத்துவசாஸ்திரிகளும் சாது சற்சனர்களும் கொண்டாடி வருகிறபடியால், இனி உபநிஷத்துக்களின் சாரசங்கிரகத்தைப்பற்றிச் சற்று விசாரிப்போம்.

---

## உபநிஷத்துகள்.

உப×நி×ஷத்=உபநிஷத்து என்னும் பதம், ஷத் என்னும் தாதுவினால்=உட்காரல் (Sit) என்றும், நி என்னும் முன்னிடைச்சொல்லினால்=கீழே (down) என்றும், உப, என்னும் பதத்தினால்=அருகில் அல்லது கிட்ட (near) என்றும் அதாவது ஒரு உபாத்தியாயருக்கு அருகில் சிடர்கள் சுற்றிக் கீழே உட்கார்ந்து கேட்கும்படியான விஷயமென்றும், இதற்கு உதாரணமாகத் திரிகண்ட சேஷமென்பதில்

சமீபசாதனம் என்னும் பதத்தினால் (வித்துவானிடத்தில்) அருகில் உட்கார்ந்து பாடம் கேட்டல் என்ற பொருளாகிறது என்று (பாணினிமுதலானோர்) அபிப்பிராயப்படுகிறார்கள்.

சிலர், ஷத் என்னும் பதத்துக்கு=கெடுத்தல், நசிக்கச் செய்தல், என்றாதி பொருள்களாகையால், இதன் சஹாயத்தால் காமக்குரோதாதிகளை நசிக்கச் செய்வதால் உபநிஷத்தெனாயிற்றென்றும், சிலர் ஷத் என்னும் பகுதிக்கு=முன்வருதல் எதிர்நிற்றல் என்றாதி பொருள்களாகையால், இந்த (உபநிஷத்தின் சகாயத்தால்) ஒருவன் பிரம்மஞானத்துக்கு முன்வரவும், எதிர்நிற்கவும் உதவியாயிருக்கிறதென்றும், ரிக்வேதம் 9—11—6-ல் நமஸ இத்யுபஸீதாதா என்றதனால் அவரிடம் நமஸ்கரித்து நில் என்பதாயும், சாந்தோக்கியம் 16—10—ல் "அதமாபிரதர் யுபஸீதாதா" என்றதினால் "ஞானத்தின்பொருட்டு நாளையதினம் காலை என்னிடம்வா" என்பதையும், கோபிலிய கிருஹ்ய சூத்திரம் 2—10—28-ல் ஒரு சிடன் தன் ஆசாரியன்முன், கைகட்டி பயபக்தியுடன் ஆசாரியனுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்ற விதிக்கு யுபஸத் என்று சொல்லப்பட்டிருப்பதால், உபநிஷத்து என்பதற்கும் ஆசாரியனருகில் உட்கார்ந்து கற்றுக்கொள்ளும் பிரமஞானமென பொருள்செய்திருக்கிறார்கள்.

உபநிஷத்து என்னும் இந்த வடமொழிப் பதத்துக்கு அகராதிகளில், இரகசியம், அந்தரங்கம், ஞானம், பிரார்த்தனை என்றாதி பொருள்களென்றும்! ஸ்ரீ சங்கரர் முதலான பாஷியகாரர்கள், இதற்கு பிரமஞானம், தத்துவஞானம் என்றாதி பொருள்களென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, உபநிஷத்து என்னும் பதத்துக்கு "திவ்ய பரிபூரண ஞானத்தையும், அந்த ஞானத்தினால் ஆசாபாசங்களினின்று நிவர்த்தியாகி மோக்ஷத்தை யடையும் மார்க்கத்தையும் உண்மையாகக்காட்டும் சாதனம் என்பதாம். ஆனதுபற்றியே, மஹாவித்வ சிரோன்மணியாகிய தாராநாததர்க்காலங்கார

வாசஸ்பதியவர்கள் உபநிஷத்து என்னும் பதத்துக்கு எது பரமேசுவரனுக்கு சமீபத்தில் சேர்க்கின்றதோ அதாவது எது ஜீவாத்துமாவைப் பரமாத்துமாவினிடம் சேர்க்கின்றதோ, அதுவே உபநிஷத்தென்றும், உரை செய்திருக்கின்றனர்.

இவ்வுபநிஷத்துக்களெல்லாம் நான்குவேதப் பிரிவுகளிலிருக்கும் சம்ஹிதை பிராம்மணம், ஆரணியகம் என்கிற பாகங்களைச் சார்ந்தவை. இவைகள் இவ்வளவு என்று சொல்லச் சரியானகணக்கு எவருக்கும் இதுவரையில் அகப்படவில்லை. மஹாவாக்கிய முக்தாவளி என்னும் கிரந்தத்திலும், முக்திக உபநிஷத்திலும் 108 உபநிஷத்துகளென்று சொல்லப்பட் டிருக்கின்றன. இந்த 108ம் தக்ஷிணதேசத்தில் மஹாபரிசுத்தமான கணக்கென்றும். இந்த கணக்கின்படியே 108 விஷ்ணு ஆலயங்களிருப்பன பிரத்யக்ஷமாகையால் இந்த எண்ணை நம்பக்கூடாதென்று பர்னல் சாஸ்திரி அபிப்பிராயப்படுகிறார். வெபர் சாஸ்திரியார் 235 உபநிஷத்துகளிருக்கிறதாக கணக்கிட்டிருக்கிறார். சிலர் 170 உபநிஷத்துகளிருக்கிறதாகவும், இவைகளில் 52 விசேஷமானவைகளாகவும், இவற்றில், முதல் 15 அதர்வண வேதத்தைச் சார்ந்தவைகளாகவும் மற்ற 37 பல சாகைகளைச் சார்ந்தவைகளாகவும் அடுத்த 9 உபநிஷத்துக்களில் 3 முதல் 15 வரையிலுள்ளவைகள் விசேஷமானவைகளாகாமையால் எவரும் வியாக்கியானம் செய்யவில்லை என்றும 16 முதல் 28 வரையிலுள்ள சில்லரை உபநிஷத்துக்களில் முதல் 13-க்கும் வியாக்கியானமில்லை என்றும் 19-முதல் 34-வரையிலுமுள்ள அடுத்த 6 உபநிஷத்துக்களுக்கு நரசிம்மதாபனி என்றும் இவைகள் 5 பூர்வதாபனி என்றும் இதற்கு கௌடபாதரும் ஸ்ரீ சங்கரரும் பாஷியம் செய்திருக்கிறதாகவும் அடுத்த 2 உபநிஷத்துக்களைக் கடவல்லி என்றும் அவற்றிற்கு ஸ்ரீ சங்கரர் பாலகிருஷ்ணர் பாஷியம் செய்திருக்கிறதாகவும்; அவைகளில் 6 பிரகரணங்களை வல்லி என்றும், அவைகளும் உத்தரவல்லி பூர்வவல்லி என்றும் பெயரைப்பெற்று அதில் எமன் நசிகே

தன் இவர்கள் சம்வாதமடங்கியிருக்கின்றதென்றும்; அடுத்த 3 உபநிஷத்துகளுக்கும் வியாக்கியானம் செய்யப்படவில்லையென்றும்; ஆநந்தவல்லி, பிருகுவல்லி, என்கிற உபநிஷத்துக்கள் தைத்திரியவாருணி என்கிற பெயர்களால் விளக்கப்பட்டு கருப்பு யஜுஸின் ஆரண்யகத்திலிருந்தெடுத்ததாகவும் மேலேசொன்ன 44 - 45-வது உபநிடதங்களைத் தொடர்ந்திருக்கிறதாகவும், மற்ற 7 உபநிஷத்துகளுக்கும் வியாக்கியானம் கிடையாதென்று சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ நாராயணபட்டர் பாஷியம் செய்திருக்கிறதாக ஸ்ரீராம மாய தர்மரத்னகரர் தமது (Bibliotheca Indian) இந்து வேதாகம நூலில் குறித்திருக்கிற உபநிஷத்துக்கள் எவையெனில்—

1 சிரோபநிஷத்து, 2 கர்போபநிஷத்து, 3 நாதவிந்து உபநிஷத்து. 4 பிரமவிந்து உபநிஷத்து, 5 அமிர்தவிந்து உபநிஷத்து, 6 தியானபிந்துபநிஷத்து, 7 தேஜோபிந்து உபநிஷத்து, 8 யோகசிகோஉபநிஷத்து, 9 யோகதத்துவ உபநிஷத்து, 10 சந்நியாச உபநிஷத்து, 11 ஆருணிய உபநிஷத்து, பிரமவித்திய உபநிஷத்து, 13 க்ஷுரிகா உபநிஷத்து, 14 சூலிகா உபநிஷத்து, 15 அதர்வசிகா உபநிஷத்து, 16 பிரமோபநிஷத்து, 17 பிராணாக்னிஹோத்ர உபநிஷத்து, 18 நீலருத்ரோபநிஷத்து, 19 காந்த சுருதி உபநிஷத்து, 20 பிண்ட உபநிஷத்து, 21 ஆத்மோபநிஷத்து, 22 இராம பூர்வதாபனி உபநிஷத்து, 23 இராமோத்திரதாபனி உபநிஷத்து, 24 ஹனுமத்தாத உபநிஷத்து, 25 சர்வோபநிஷத்து, 26 ஹம்ஸ உபநிஷத்து 27 பரமஹம்ஸ உபநிஷத்து, 28 ஜாபாலோபநிஷத்து, 29 கைவல்ய உபநிஷத்து, 30 காருட உபநிஷத்து, 31 நரசிம்ம பூர்வதாபனி உபநிஷத்து 32 நரசிம்ம உத்தரதாபனி உபநிஷத்து, 33 ஸத்காசுர உபநிஷத்து, 34 கோபாலதாபனி உபநிஷத்து என்றுஇவைகள் சமயாபிமானமும் சாதாரணமும் நவீனமுமானவைகளென்று எழுதியிருக்கின்றனர்.

இதற்கு திருஷ்டாந்தமாக நமது தக்ஷிணாமூர்த்தியில் தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்து, அன்னபூரணி உபநிஷத்து

அவதூதோப நிஷத்து பஸ்மஜாபாலோப நிஷத்து, கைவலி யோபநிஷத்து, காலாக்னி ருத்ரோப நிஷத்து, நிராலம் போபநிஷத்து, கணபத்தியுபநிஷத்து, ருத்திரபிராம்மணோப நிஷத்து, பாசுபத பிராம்மோபநிஷத்து, முதலானதுகளை வைஷ்ணவர்கள் சிரேஷ்டமானவைக ளெனக்கொள்ளாதி ருப்பது போலவே; நாராயணோப நிஷத்து, வராஹோபநிஷ த்து, வாசுதேவோபநிஷத்து, ஸீதோபநிஷத்து, ராமதாபனி உபநிஷத்து, நரசிம்மதாபனி உபநிஷத்து கருடோபநிஷத்து ஹயக்ரீவ உபநிஷத்து, கிருஷ்ணோபநிஷத்து கோபாலதா பனி உபநிஷத்து முதலானதுகளை சைவர்களும் சிரேஷ்ட மானவைகளென்று கொள்ளாமலிருத்தல் பிரத்தியக்ஷம். மேலும்,

இந்த ஆரியநாட்டை ஆக்பர்பாதுஷா ஆண்டுவரும் கா லத்தில், அவர் தாக்ஷணியத்துக்கு உட்பட்டஆரிய பண்டிதர் ஒருவர் அல்லா உபநிஷத்து என்ற பெயரால் ஒரு புது உப நிஷத்தைக் கற்பித்து வேதத்தில் நுழைத்தசங்கதி அநேக ருக்குத் தெரிந்த விஷயம், அதை இதனடியில் காண்பிக்கி றோம்.

## அல்லா உபநிஷத்து.

ஓம்! அஸ்மல்லம் இல்லா·மித்ரா வருணோ-திவ்யாநிதத்த இலில்லாவருணோ ராஜபுணர்த்தது ஹயாமிமித்ரோ இல்லம் இல்லல்லாதி-இல்லல்லாம் வருணோ மித்ரோ தேஜகாமः ஹோ தாரகுந்தரோ-மஹாசூரிந்தர அல்லோஜ்யாஸ்தம் ஸ்ராஸ்தம் பரமம் பூர்ணம் பிரம்மானமல்லாம் அல்லோரசூர மஹமதா க்கம் வரஸ்ய அல்லோ-அல்லம் அதல்லா உகமேகாகாம், அல்லம் உகாம் நிகதாகாம்-அல்லோயக்ன- நஹுதாஹுத் த்தவாஹா அல்லாசூர்யசந்த்ர ஸர்வ நக்ஷத்ரः அல்லோருஷி நாம் ஸாதிவ்யாநிந்தரியः பூர்வம்மயாபரமானஹஅந்தரிக்ஷஹ அல்லோ புருதிவ்ய அந்தரிக்ஷம்விஸ்வரூபம் திவ்யாநிதாதி, இலில்லாவருணோ ரராஜபுணர்புதது இல்லாகுவாரா, இல்லா குவாரா, இல்லாரா இல்லில்லாதி இல்லில்லாஹ இல்லா இல் லில்லா அனதிஸ்வரூப அதாவணோசாகம். ஹருரும் ஹிரிம்

ஜானனபாஸன் ஶ்ரீதான் ஜலசர்ன அதிருஷ்டம குருகுருபத அஸுரஸம் ஹாரிணிம் ஹம் அல்லோராசுர மஹமதாகம வரஸ்ய அல்லோ அலலம் இல்லல்லாதி இல்லல்லாஹ, என்பதே.

அல்லா என்னும் பதத்திற்கு ஸம்ஸ்கிருதத்தில் தாய் என்று பொருள் அதாவது அல்லாயிதி அஸிபுஷியாயி குருஹூதி லாதிலா கா என்ற சப்தத்தில் ஸ்பஷ்டமாகும்.

அக்பர்பாதுஷாவுக்குப் பிறகு எத்தனை புது உபநிஷத்துக்களைப் பாடி வேதங்களில் நுழைந்தார்களோ தெரியவில்லை. இப்போது நமது நாட்டில் கொண்டாடிவரும் எல்லா உபநிஷத்துக்களையும் சம்பாதித்துத் தக்கபடி பண்டிதர்களைக்கொண்டு சோதிப்போமாகில், பெரும்பாகமான சில்லரை உபநிஷத்துகளெல்லாம் புராதனமான பத்து பெரிய உபநிஷத்துகளிலிருந்து சில வாக்கியங்களை யெடுத்து அவைகளுடன், தம் தம் மதசித்தாந்தத்துக்கு தக்கபடி சில புது வாக்கியங்களைச்சேர்த்து புது உபநிஷத்துக்களாகப் பெயரிட்டிருத்தல் பிரதியக்ஷமாகும்; இப்படிப்பட்ட புது உபநிஷத்துகள் அதர்வணவேத பாகத்தில் அதிகமிருக்கின்றன. புராதனமான பெரிய உபநிஷத்துகளின் பாஷை நடைகளின் போக்கும், புது உபநிஷத்துகளின் பாஷை நடைகளின் போக்கும் படிப்பாளிகளுக்கு பட்டப்பகல்போல ஸ்பஷ்டமாகும்.

ஸ்ரீ வேதமூர்த்திகளான சங்கராசாரியர் முதலான பிரபல பாஷியக்காரர்களாலும், நிருக்தகாரர்களாலும் பாஷ்யங்களும் நிருக்தங்களும் வியாக்கியானங்களும் எழுதப்பட்டிருக்கிற இராவணாதி மஹான்களால் சக்குபந்தி யேற்படுத்தப்பட்டும், ஹிமசேதுபரியந்தமுள்ள சகலவித ஹிந்துமத புத்திமான்களாலும் அங்கிகரிக்கப்பட்ட உபநிஷத்துகள் பத்து அவைகளே தசோபநிஷத்துக்களென்று எவராலும் கொண்டாடப்படுகின்றன. அவை எவையெனில்:

1 சாந்தோக்கிய உபநிஷத்து, 2-தலவாகரம் அல்லது கேனோபநிஷத்து, 3 - ஐதரேய உபநிஷத்து 4 - கவுஷீதகி

உபநிஷத்து, 5-வாஜஸநேயம் அல்லது ஈச உபநிஷத்து, 6 கடோபநிஷத்து, 7-முண்டக உபநிஷத்து, 8-தைத்திரேயக உபநிஷத்து, 9-பிரஹதாரணிய உபநிஷத்து, 10-சுவேதாசுவதர உபநிஷத்து, பிரச்னோபநிஷத்து என்பவைகளாம். ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள் இயற்றிய ஸர்வோபநிஷதார்த்த தநுபூதிபிரகாசிகை என்னும் கிரந்தத்தில் ஈசோபநிஷத்தை விட்டு அதற்கு பதில் மைத்திரேயண உபநிஷத்தைச் சேர்த்தும், இந்தத்தசோப நிஷத்துக்களே ஆதி உபநிஷத்துக்களென்றும், பட்டியமானவைகளென்றும், சகல சமயத்தாரும் அங்கீகரிக்கத் தக்கவை என்றும் சொல்லியிருக்கிறார்.

—:o:—

## தசோபநிஷத்துக்களின் சாரசங்கிரகம்.

### சாந்தோக்கிய உபநிஷத்து.

இது சாமவேதத்தைச் சார்ந்த பிரபாடகங்களென்னும் 8 அத்தியாயங்களுடையதாயும், 150 பிரகரணங்களுக்கு மேலான உப பிரிவுகளுடையதாயும் ஓங்கார பிரதிபாதித மான பிரம்ம ஞானத்தை பிரபலமாக்குகின்றது. முதலிரண்டு பிரபாடகங்கள் சமயாசாரச் சடங்குகளைப் பற்றிப்போதிப்பவைகளாக இருக்கினும் அது ஓங்கார ஸ்வரூபமான பிரமஞானத்தைப்பற்றி போதிப்பதேயாகும்.

8-வதில் பிரஜாபதிக்கும் இந்திரனுக்கும் ஆத்மாவைக் குறித்த சல்லாபனையும், 7-வது அத்தியாயத்தில் சநத்குமாரருக்கும் நாரதருக்கும் நடந்த சல்லாபனைகளும் 6-வது அத்தியாயத்தில் சுவேதகேதுவுக்கும், உத்காலகருக்கும் நடந்த சல்லாபனைகளும், 5-வது அத்தியாயத்தில் ஜீவலன் புத்திரன் பிராவகன் உத்தாலகரை வேதாந்தத்தில் ஜயித்த சல்லாபனையும், 4-வது அத்தியாயத்தில் ஜானஸ்ருதி என்பவனைக்குறித்த கதையும், உபநிஷத்தின் 5-வது அத்தியாயத்தில் உபமன்யுவின் புத்திரன் பிராசீனசீலன், சத்திய ஜனியன், இந்திரத்யும்னன், ஜனன் ஊதிலன் என்பவர்கள்

செய்த பிரமலக்ஷண சர்ச்சையில் பிரமமானது பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்முதலான பூதியங்களுக்கு மேற்பட்டு எல்லையற்ற சக்திப்பொருளென்று நிரூபித்துத் தர்க்கித்த விநோத சல்லாபனை இருக்கின்றது, இந்த சாங்கேதாக்கிய உபநிஷத்து வேதாந்த தத்துவஞானம் போதிப்பதிற் சிறந்தது.

### ஈசோபநிஷத்து.

இதை ஈசாவாஸ்ய உபநிஷத்து என்று சொல்வதுமுண்டு. இது யஜுர்வேதத்தைச் சார்ந்த ஒரு சிறிய உபநிஷத்தாக இருந்தாலும், இதில் பிரபஞ்சப் பொருள்கள் எல்லாவற்றிலும் சிறந்தது பிரமஞான மென்றும் அதுவே நிரந்தரமானதென்றும், இதற்கு இரண்டாந்தரமானது வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிற கர்மானுஷ்டானங்களென்றும், குரு சிஷ்ய சல்லாபனை பாவனையாக சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த உபநிஷத்தை (Raja Rama Mohan Roy) இராஜா ராம மோஹனராயரும் (Sir William Jones) ஸ்ரீ வில்லியம் ஜோன்ஸ் (Baily) பெயிலி முதலானவர்களும் ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்த்திருக்கின்றனர்.

### கடோபநிஷத்து.

இந்தக் கடோபநிஷத்தையும் சிலர் சாமவேதத்தையும் சிலர் அதர்வணவேதத்தையும், சிலர் யஜுர்வேதத்தையும் சார்ந்ததென்று எண்ணினாலும், இதனையாய்ந்த பண்டித சிகாமணிகளால் இது யஜுர்வேத தைத்திரிய பிராமணத்தைச் சார்ந்ததென்றும், அதற்காதாரமாக இதில் நசிகேதருடைய கதையிருக்கிலே பிரத்தியட்சமென்றும் ஸ்தாபிக்கிறார்கள்.

இந்த உபநிஷத்தில் கட்டக்கட்ட வல்லிகள் (கொடிகள்) அல்லது சாகைகளும்: இவைகளிற் சில வசன பாகங்களாகவும், சில கவிகளாகவும் இருக்கிறதன்றியில் பாஷையின் வியாகரணம், சந்தசு முதலானவைகளால் இது புராதன உபநிஷத்தென்று ஸ்பஷ்டமாகிறது. இதில் பரமாத்து

மாவை தாத்திரி என்னும் பெயரால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இதை இராமமோஹனர் முதலில் இங்கிலீஷ் பாஷையில் மொழிபெயர்த்தாலும்; பாரசீகம், பிராஞ்சு, ஜெர்மனி பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிற தன்றியில் (Wendischaman) விண்டிஸ்காமன், (Poley) போலி, (Gough) கவ்; (Weber) வெபர், (Muir) மூர், (Cole brook) கோல்புரூக் (Max Muller) மோக்ஷமூலர் முதலானவர்களுடைய மொழிபெயர்ப்புகளும் இருக்கின்றன.

## பிரசனோபநிஷத்து.

இது அதர்வண வேதத்திலிருக்கும் பிப்பலாத சாகையைச் சார்ந்தது. பிப்பலாதர் என்றால், இதை போதித்த ஓர் உபாத்தியாயருடைய பெயர். இதை மந்திரபாகத்தைச் சார்ந்ததென்று ஸ்ரீ சங்கரர் எண்ணினாலும், முண்டக உபநிஷத்தைச் சார்ந்த மந்திரோபநிஷத்தென்று அநந்தகிரியார் அபிப்பிராயப்பட்டார்; இதற்கு திருஷ்டாந்தமாக மந்திரோபநிஷத்தென்று அநேக உபநிஷத்துக்களுக்கு பொதுவாகச் சொல்லிவருவதும் பிரதியக்ஷம்.

## பிரஹதாரணிய உபநிஷத்து.

இது யஜுர்வேத பாகத்திலிருக்கும் சதபதபிராம்மணத்தைச் சார்ந்த 6, அத்தியாயங்களுள்ளது. பிரம்ஞானத்தைப் போதிப்பதற்கு இதுவும் ஓர் விசேஷ உபநிஷத்து; இதற்கு ஸ்ரீ சங்கரர் செய்த பாஷியத்தை (Dr. Roer) ரோயர் என்பவர் இங்கிலீஷில் மொழிபெயர்த்திருக்கிற தன்றி ஸ்ரீ துவிவேதி நாராயணசுனதி என்பவரும் துவிவேதி கங்கர் என்பவரும் வியாக்கியானம் செய்திருக்கின்றனர்.

## முண்டக உபநிஷத்து.

இது அதர்வணவேதத்தைச்சார்ந்த மந்திரஉபநிஷத்து இதில் யாக யக்கியங்களாலும், பூஜைபுனஸ்கார கர்மங்களாலும் பிரமத்தை அடையக்கூடாதென்றும், ஆரு[illegible] எவர் உலக ஆசாபாசங்களை விட்டொழித்து சுத்த [illegible] சிக

ளாகின்றனரோ அப்படிப்பட்டவர்களால் மாத்திரம் அடையக்கூடுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை (Dara Shoka) தாராஸாகொ என்பவர் பாரஸிக பாஷையில் மொழிபெயர்த்தார். பிறகு (Roer) ரோயர் பண்டிதர் ஐரோபா பாஷையில் மொழிபெயர்த்தார், பெயர்த்துமென்ன? இந்த உபநிஷத்துக்கு இந்தபெயர் வந்தகாரணம் இன்னதென்று பூரணமாகக் கண்டுபிடித்தார்களில்லை. சிலசிறந்த பண்டிதர்கள் இதற்கு ஒருவித பொருளுரைத்திருக்கின்றனர். அதாவது முண்டமென்றால்—சுத்திசெய்யல் என்றும் ஆகவே, மனம் புத்தி சித்தாதிகளை சுத்திசெய்விக்கும் உபநிஷத்து என்றும் இந்த உபநிஷத்தின் ஆதாரத்தைக்கொண்டே, புத்தமதக்குருமார்கள் சர்வாங்கமுண்டனமாக க்ஷவரம்செய்து கொள்ளுகிறார்களாம் அதாவது ஸர்வாங்கம் மாசு நீக்கி சுத்திசெய்து கொள்ளுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள்.

### தைத்திரீய உபநிஷத்து.

இது யஜுர்வேத பாகத்தின் தைத்திரேய ஆரணியத்திலிருக்கிறது, இதன் 10-பிரபாடகங்களில் முக்கியமான ஆரணியங்கள் ஆறு; மற்ற 7. 8. 9. பிரபாடகங்கள் கூடியதற்கு தைத்திரிய உபநிஷத்தென்றும்; சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இதற்கு பாஷியம்செய்த ஸ்ரீமத் சங்கராசாரியார் தமது கிரந்தத்தில் சிக்ஷாவல்லி பிரம்மாநந்தவல்லி என்று பெயரிட்டாலும், மூன்றாவதாகிய பிருகுவல்லியின் பெயரைப்பற்றிச் சொல்லாமல் பாஷியமாத்திரம் செய்திருக்கிறார், சாயனர் இந்தத் தைத்திரேய ஆரணியத்துக்கு பாஷியம் செய்தபோது இதன் 7-வது அத்தியாயம் சிக்ஷாத்தியாயம் என்றும் 12 அனுவாகங்களை சம்ஹிதஉபநிஷத்தென்றும் அபிப்பிராயித்தியிருக்கிறதன்றியில் 8-9 பிரபாடகங்களுக்கு வாருணி உபநிஷத்தென்று சொல்லினர். இவர் பாஷியத்துக்கு சிக்ஷா பாஷியமென்றும் பெயர். இதன ஆநந்தவல்லி பிருகுவல்லிகளைச் சிலசமயங்களில் அதர்வண உபநிஷத்துகளிலே சேர்த்துச் சொல்வாருமுண்டு. இதன் ஒவ்வொரு வல்லியின் முடிவில் அனுவாக அட்டவணையும் அப்படிப்பட்ட அனுவாகங்கள் பனிரெண்டு மிருக்கின்றன.

இது கருப்பு யஜுர்வேதம் தைத்திரேய பாகத்தைச் சார்ந்ததும் சிலசமயங்களில் சுவேதாசுவதர நாமமந்திரோபநிஷத்தென்று சொல்வது முண்டு. இதன் முதல் அத்தியாயத்தின் அந்தத்தில் சுவேதாசுவதரர் சிறந்த வனவாசிகளுக்கு கற்பிக்கும்போது இது மஹா இரகசிய தத்துவமாகக் கொண்டாட வேண்டுமென்று சொல்லி யிருக்கிறார்கள். சுவேதாசுவதரம் என்றால் வெள்ளைக் கோவேறு கழுதைக்கும் பெயர். இது அக்காலத்தில் ஒருவருடைய பெயர். அதற்கு திருஷ்டாந்தமாக, அர்ஜுனனுக்கு, சுவேதாச்வா—வெள்ளைக் குதிரையென்று பெயரிருப்பதன்றியில் சில வேதரிஷிகளுக்கு ஷியாவாச்வா—கருங்குதிரை என்கிற பெயருமிருந்தது.

இந்த உபநிஷத்தின் பெயரெப்படி யிருக்கினும் வித்தியாரணியருடைய ஸர்வோபநிஷத்து அர்த்தானுபூதி பிரகாசிகை என்னும் கிரந்தத்தில் கண்ட 12-உபநிஷத்துகளில் இதுவும் ஒன்றாகவும், ஸ்ரீ சங்கரர் இதை ஓர் விசேஷ உபநிஷத்தாகக்கொண்டு பாஷியம் செய்திருக்கின்றனர். புராதனமும் கஷ்டமானதும் பரமாத்துமாவை அக்கினி, ஆதித்தன், வாயு,ஹர,சிவ, பகவத் என்றநி பெயர்களால் பாடப்பட்டுப் பிரகாசிக்கின்றது. இதை நவீன உபநிஷத்தென்று எண்ணுவாருமுண்டு.

இதிலிருந்தே சாங்கியசாஸ்திர முண்டானதாகச் சிலரும் வேதாந்தசாஸ்திர முண்டானதாகச் சிலரும் அபிப்பிராயப்பட்டாலும் இதில் பரமாத்துமாவைப் புருஷாகாரப் படுத்தியும் சுவரூப அத்துவைதத்தைக் கண்டித்து துவைத சித்தாந்தத்தை ஸ்தாபிக்கிறது. இதற்கு ஸ்ரீ சங்கரர் செய்த பாஷியத்தை (Dr Roer) சாஸ்திரி முதலில் ஐரோபா பாஷையில் மொழிபெயர்த்தார். இந்த உபநிஷத்தின் சரித்திரத்தை விவரமாக அறியவிரும்புவோர் பரமாம்ஸபரிவ்ராஜக நிரியநந்தாத்மருடைய பீடர் சங்கரானந்தர் செய்த பாஷியத்தைப்பார்க்கவும்.

## தலவாகாரம் அல்லது கேநோபநிஷத்து.

இது சாமவேதத்தி லிருக்கும் தலவகார பிராமணத்தைச்சார்ந்தது. இதைக் கேநோபநிஷத்து என்று சொல்வதுமுண்டு. கேனிஷிதம்—என்றால் பிரம்மத்துக்கும் பெயராகையாலும் இந்த உபநிஷத்தில் பிரமஞானத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லியிருப்பதாலும் இதை பிரமோபநிஷத்தென்றும் சிலர் சொல்வதுமுண்டு. இதற்கு பாஷியம்செய்த ஸ்ரீ சங்கரர் தலவாகர பிராம்மணத்தின் ஒன்பதாவது அத்தியாயமாகவும், பிரம்மஞானத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்வதாகவும், இதற்குமுந்தி இருக்கும் மற்ற எட்டு அத்தியாயங்களில் யாகயக்கிய கருமானுஷ்டானங்களைப்பற்றி விவரமாகச்சொல்லிப் பிறகு வம்ச விருக்ஷத்தையும். காயத்திரிசமனத்தைப்பற்றிச் சொல்லி இருக்கிறதாகவும் சொல்லியிருந்தாலும் 1878-௵ தஞ்சையில், (Dr. Burnell) பர்னல் சாஸ்திரியார் தகுந்த வேத வித்துவான்களைக்கொண்டு புராதன கிரந்தங்களைக்கொண்டு பரிசோதிக்கச்சே, இது தலவாகர பிராம்மணத்தைச் சார்ந்ததென்றும், இதன் ஒன்றாகுறைய கடைசிபாகத்தில் 145 காண்டங்களில் காயத்திரிஸமனத்தைப் பற்றியும் 134-வது காண்டம் வம்சாவளியைப் பற்றிச் சொல்லியிருப்பதாகவும், இந்த கேநோபநிஷத்து 135 முதல் 145 வரையில் அதாவது 10-வது அனுவாகம் வரையிலிருப்பதாகவும், இதன் 139-வது அத்தியாயம் 'அலம்வா இதம் அகிரஆஸித்' என்று ஆரம்பிக்கிறதாகவும் தெரியவந்ததன்றியில், இந்த உபநிஷத்தில் தாண்டியர், ஸாத்தியாயனி என்ற உபாத்தியாயர்களுடைய போதனைரூபமாக விருக்கிறதென்றும்; ஆகவே, இந்த பிராம்மணத்தின் பெரும்பாகம் அக்கினிஹோத்ரம், அக்கினி ஸ்தோமாதிகளைப்பற்றியும், கடைசி 4 அத்தியாயங்களின் 145 வாக்கியங்களில் பிரம்மஞானத்தைப்பற்றிச் சொல்லியிருப்பதாகவும், ஸ்ரீ சங்கரர் சொல்லி இருப்பதைப்போல இது 9-வது அத்தியாயத்தைச் சாராமல் 4-வது அத்தியாயத்தைச்சார்ந்த 10-வது அனுவாகமென்றும் தெரிவித்திருக்கிறார். இந்த உபநிஷத்தைப்பற்றி

வித்துவான்களின் கருத்துகள் எப்படி இருந்தபோதிலும், இது ஒரு விசேஷ உபநிஷத்தானபடியால் முதலில் இராஜா ராம மோஹனர் பங்காள, ஹிந்தி, இங்கிலீஷ் பாஷைகளி லும் (Dara Shukoh) தாராசுகோ என்பவர் பார்சி பாஷை யிலும், (Auquetil Defferronn) டப்பிரின் லத்தின் பாஷை யிலும், (Wendischaman) ஜெர்மனிபாஷையிலும், (Web) வெப், (Colebrook) கோல்புருக், (Poley) போலி முதலான வர்கள் மற்ற ஐரோபா பாஷைகளிலும் மொழிபெயர்த்திரு க்கின்றனர்.

## ஐதரேய உபநிஷத்து.

இது ரிக்வேதத்திலிருக்கும் ஐதிரேய ஆரணியகத்தைச் சார்ந்தது. ஐதிரேய பிராம்மணத்தில் அநேக சில்லரை கிரந் தங்களுண்டு. அவற்றில் பிரம்மஞானத்தைப் போதிக்கும் சில பிராமமணங்களே, மஹிதாசர் என்னும் ரிஷியானவர் தம் சிடர்களுக்குப் போதித்த பாகத்துக்கு ஐதிரேய உபநிஷத்து என்று சிலர் எண்ணுகிறார்கள். இந்த ஐதிரேய ஆரணியகத் தின் சிலபாகங்களில்கருமானுஷ்டானங்களைப்பற்றிப் போதி த்தாலும் ஷை ஆரணியத்தின் இரண்டாவது பாகத்தைச்சார் ந்த 4—5—6 அத்தியாயங்களிலே யிருப்பதாகத் தோற்று கிறது. நாராயணேந்திரர், அநந்தஞானர், அநந்ததீர்த்தர் முத லானவர்கள் பாஷியம் செய்திருக்கின்றனர். இந்த ஐதிரேய உபநிஷத்தை பார்சிக பாஷையில் மொழிபெயர்த்திருக்கிற தன்றியில், ராஜேந்திரலால் மித்திரர், ஸ்ரீ சங்கரபாஷியத்தின் மேல் சயாயனர் செய்த பாஷியத்தை இங்கிலீஷில் மொழி பெயர்த்திருக்கிறார்.

## கவுசிதகி பிரர்ம்மண உபநிஷத்து.

இந்த உபநிஷத்து ஐதிரேய உபநிஷத்தைப்போல ரிக் வேத சாகைக்குச் சார்ந்தது. இது கவுசிதகி பிராம்மணத் தைச்சார்ந்த 30 அத்தியாயங்களுடையது. இவை நான்கு அத்தியாயங்களும் அவற்றையடுத்த ஐந்து அத்தியாயங்களைப் போல ஐதிரேய ஆரணியகத்தைச் சார்ந்தவைகளைப்போலத் தோன்றுகின்றன. இதற்கு சங்கராசாரியர் செய்த பாஷியத்

தின்மேல் சங்கரானந்தர் தீபிகை எழுதியிருக்கின்றனர். இதை விவரமாக அறியவிரும்புவோர் (Cowell) கவுல் சாஸ்திரியின் மொழிபெயர்ப்பைப் பார்க்கவும்.

## உபநிஷத்துகளின் பாஷியங்களும் அவைகள் வெளியான விதமும்.

இந்த வேத வாக்கியங்களும் முக்கியமாக உபநிஷத்துக்களும் புராதனமானவைகளாக இருப்பதோடு, அவற்றின் பொருளைக் கற்றோரன்றி மற்றோர் கண்டறிதல் கஷ்டசாத்தியம்; மேலும்பெரும்பான்மையான வாக்கியங்களுக்குப் பூதார்த்தவாதம்—அதாவது நடந்ததை நடந்த விதமாகவும் சரித்திரமாகவும் சொல்லுதல் என்னும் அருத்தமும் குணார்த்தவாதம்—தத்துவ விஷயமாகவும், மஹிமாவிஷயமாகவும் அலங்காரமாகவும் சொல்லுதல் என்னும் இரண்டுவித அர்த்தங்களும் இருப்பதன்றியில், ஒவ்வொரு வாக்கியத்துக்கும் கர்மார்த்தம்' 'ஞானார்த்தம்' என்ற இரண்டுவித அர்த்தங்களுமுண்டு.

இவ்வேதவாக்கியங்களுக்குத் தொன்றுதொட்டு மஹாவித்துவசிகாமணிகள் பலர் பற்பலவித பாஷியங்களைச் செய்திருக்கிறார், ஸ்ரீ வேதமூர்த்தி சங்கரா சாரியருக்கு முன்பு பாஷியம் செய்திருக்கிறவர்களுடைய பெயர் முதலான விவரங்களைத் திட்டமாகக் காட்டும் சரித்திர மகப்படவில்லை. ஆகவே, அப்பாஷியங்களை இக்காலத்தில் விசேஷமாகக் கொண்டாடுவாருமில்லை.

1198-ஐ அதாவது ஏழாம் நூற்றாண்டுக்கு முன் ஓர் அவதார புருஷராக ஜனித்த ஸ்ரீ சங்கராசாரியர் வேதவாக்கியங்களுக்கு பாஷியம் செய்த பிறகே, ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள், மாதவர் சாயணர், இரங்கராமாநுஜஜீயர், ஆநந்த தீர்த்தர், ஆநந்தகிரியார், அநந்தாநந்தர் முதலானவர்கள் பாஷியங்களைச் செய்தனர். இப்படிச்செய்த பாஷியங்கள் அந்தந்த மதஸ்தர்களில் உயர்குலத்தாராகிய சிலருக்கு மாத்திரம் தெரிந்து அநுஷ்டித்து அந்தரங்கமாக வைத்திருந்தனர். பிறகு,

இந்த இந்துதேசம் மஹம்மதியர் வசமாகியதில், இடைக்கிடை இந்துக்களுக்கும் மகம்மதியருக்கும் மத விஷயமாக மனஸ்தாபங்க ளுண்டாகிவரச்சே, மஹமதிய சக்கிரவர்த்திகளில் சமரஸவேத ஞானியாக இருந்த ஆக்பர்பாதுஷா சக்கிரவர்த்தியானவர் தமது ராஜாங்கத்துக் குட்பட்ட இந்து மஹம்மது மதஸ்தர்களுக்குள் சமயாதீத சஹோதரவாஞ்சை உண்டாக்கி சுகமாக வாழச்செய்தால், தமதுராஜ்ஜிய பாரத்துக்கு சுகமும் க்ஷேமமு முண்டாகுமெனக் கருதியும்; அக்காலத்தில் தமது ஸமஸ்தானத்தி லிருந்த ஆரிய பண்டிதர்களைத்தருவித்தும், சில வேதவாக்கியங்களையும், பகவத்கீதாதி சில கிரந்தங்களையும் பார்சி முதலான பாஷைகளில் மொழிபெயர்ப்பித்து பரவச்செய்துக்கொண்டிருக்கச்சே, அவர் பரமபதமடைந்தனர்.

பிறகு அவரது பேரரும், ஸஹிஜிஹான் சக்கிரவர்த்தியின் ஜேஷ்ட குமாரருமாகிய மஹமது தாராசுகே சுல்தான் என்பவர் தமது பாட்டனார் ஆக்பர் பாதுஷாவைப்போலவே ஸமரஸ சமயஞானியாக இருந்தமையாலும், தாம் ஒருகால் காஷ்மீர தேசத்துக்குப் போயிருந்தபோது அவிடத்திய ஆரிய பிராம்மணர்கள் அருணோதய காலத்தில் வேத உபநிஷத்துக்களைப் பாடி உத்தமனை உபாசிப்பதைக் கண்டாநந்தித்து; இப்படிப்பட்ட வேத சுருதிகளை பார்சி பாஷையில் மொழிபெயர்த்து தம் இந்து மஹம்மது குடிகளுக்கு கற்பித்தால், தமது ராஜியத்தில் மதக் கலகமின்றி சுகமாக வாழ்வார்களென் றெண்ணி தமது ராஜதானியாகிய டில்லி பட்டணத்துக்கு வந்து கி. பி. 1640௵ காசி பட்டணத்திலிருந்த அநேக ஆரிய பண்டிதர்களைத் தருவித்தும், மஹாசபைகூட்டியும் அவர்களுதவியால் சுமார் 50 உப நிஷத்துக்களை பார்சி பாஷையில் மொழி பெயர்ப்பிக்க ஆரம்பித்து 1657-௵ முடிப்பித்தார்.

இது சங்கதியை யறிந்த இவர் தமையனாரும், இந்து மதத்துவேஷியுமாகிய அவுரங்க சிப்பானவர், இந்த வேத உப நிஷத்துக்கள் வெளியானால், மஹம்மது மதத்தின் மகி

மை இந்தியாவில் மேலிட்டோங்குவதைக் கண்டு, அநியாயமாக மஹாசமரமென்னும் ஞானியாகிய மஹமத்தாராசுகோ சுல்தானவர்களை கொலை செய்வித்தும் அந்த அவுரங்கசீபே இத்துதேச சக்கிரவர்த்தியாகியும், இந்த மதத்தைக் கண்டித்திறந்தார்.

அக்காலத்தில் இந்த இந்துதேசத்தில் பார்ஸி பாஷையே இராஜகிய பாஷையாகி இமயசேதுபரியந்தம் பரவியிருந்தமையாலும், பார்ஸி பாஷையில் மொழிபெயர்த்த உபநிஷத்துக்கள் இந்நாட்டில் பல பாகங்களில் பரவியேறதுவான் தன்றியில், அக்காலத்தில் ஐரோபாக் கண்டத்திலிருந்து இந்நாட்டுக்கு வர்த்தக விஷயமாகவும், வைதிக விஷயமாகவும் வந்துப்போய்க் கொண்டிருந்த கிரேக்கர், உரோமர், போர்த்துகேயர், பிரான்சியர் முதலானவர்களுக்கும் அவ்வுபநிஷத்துகளின் பார்சிக மொழி பெயர்ப்புகள் கொஞ்சம் கஞ்சம் அகப்படவே, அவர்கள் அவைகளை ஐரோபாக்கண்டத்துக்குக் கொண்டுபோய், லத்தின், கிரேக், பிரான்சு, ஜெர்மனி, இங்கிலீஷ் முதலான பாஷைகளில் மொழிபெயர்த்து விநோதசாலைகளில் விநோத காக்ஷிகளாக வைத்தார்கள்.

### இந்த வேத உபநிஷத்துக்களை ஐரோபா பாஷைகளில் மொழிபெயர்த்துப் பாதுகாத்தவர்கள்.

இப்படி நமது ஆரியவேத உபநிஷத்துக்களை ஐரோபா பாஷைகளில் மொழிபெயர்த்துப் பாதுகாத்த பேருபகாரிகள் யாவர்களெனில், கி. பி. 1801-1802ஆம் அனகிடில் டிப்பரோன் (Auquetil Dupperron Ouprnellhat) என்பவர் சில உபநிஷத்துகளை லத்தின் பாஷையிலும் 1827 முதல் 1834ஆம் வரையில் விண்டிஸ்காமன் (K. J. H. Windischamann) என்பவர் சில உபநிஷத்துக்களை ஜர்மனி பாஷையிலும், 1833ஆம் விண்டிஸ்காமன் (F. W. Windischamann) என்பவர் ஸ்ரீ சங்கரர்செய்த வேதாந்த பாஷ்யத்தை க்கு ஜெர்மனி பாஷையிலும் மொழிபெயர்த்த தன்றியில் கர்னல் போலியா (Col. Polia) ஆரியவேதம் முழுதும்

கையெழுத்து பிரதியாக ஜயபூர் ஸமஸ்தானத்தில் அகப்பட்டதை லந்தன் கண்காக்ஷி சாலையில் சேர்த்தார். ஸ்ரீராபர்ட்டு சேம்பர்ஸ் (Sir R. Chambers) என்பவர் ஆரியவேதத்தின் அதிகபாகம் காசி பட்டணத்தில் சம்பாதித்து லந்தனுக்கு அனுப்பினார். ஜெனரல் மார்ட்டின் (Gl Martin) என்பவர் வேதங்களின் அதிக பாகத்தைச் சேகரித்து லண்டனுக்கு அனுப்பினதன்றியில், ஸ்ரீ விலியம் ஜோன்ஸ் (Sir William Jones) என்பவர் வேதவேதாந்த உபநிஷத்துகளின் சில பாகங்களை இங்கிலீஷில் மொழிபெயர்த்தார். ஸ்ரீ ரோயர் பண்டிதர் (E. Koer) 1853௵ தைதிரியம், ஐதிரியம், சுவேதாசுவதரம். கேன, ஈச, கடம், பிரசன்ன முண்டகம, மாண்டூக்கியாதி உப நிஷத்துக்களை (Bibliothica Indian) இந்து வேதநூல் என்னும் பெயரால் இங்கிலீஷில் மொழிபெயர்த்துப் பதிப்பித்தார். ஸ்ரீகவுல (E. B. Cowell) பண்டிதர் 1861௵ கவுஷிதகி பிராம்மண உபநிஷத்தை இங்கிலீஷில் மொழிபெயர்த்துப்பதிப்பித்ததன்றியில், 1870-௵ தைதிரேய உபநிஷத்தை இங்கிலீஷில் திருப்பிப் பதிப்பித்தார்; வெபர் பண்டிதர் (A. Webere) வஜ்ரசூசி, அச்வ கோஷி, இராமதாபனி முதலான உப நிஷத்துக்களை 1860-௵ ஜர்மனி பாஷையில் மொழிபெயர்த்து பதிப்பித்தார். கியூ (Ab Gough) பண்டிதர் உபநிஷத்து தத்துவமென்னும் பெயரால் கல்கத்தா ரிவ்யூவில் பதிப்பித்திருக்கிறார்.

1876-ம் வருஷம் ரெகுநட்டர் (P Regunntter) என்பவர் சில உபநிஷத்துக்களை பிராஞ்சு பாஷையில் மொழிபெயர்த்து பாரீஸ் பட்டணத்தில் பதிப்பித்தார். போலி என்பவர் (Poley) என்பவரும் சில உபநிஷத்துக்களை பிராஞ்சு பாஷையில் மொழிபெயர்த்திருக்கிறார்.

ஓரியண்டல் திரான்ஸ்லேஷன் கம்பெனியார் ரிக்வேதத்தை (மேஸ்டர் ஸ்டிவின்ஸன் என்பவரால்) இங்கிலீஷில் மொழிபெயர்த்து அருத்தத்துடன் அச்சிட்டனர். புனாகாலேஜ் மார்ட்டின் ஹாக் என்பவர் ஐதிரேய பிராம்மணத்தை அங்

கிரேக்க பாஷையில் மொழிபெயர்த்துப் பதிப்பித்தார். மேஸ்டர் வார்ட் என்பவர் நான்குவேத சங்கிரஹத்தை இங்கிலீஷில் மொழிபெயர்த்து பதிப்பித்தனர். கோல்புருக் என்பவர் (H. T Colebrook) என்பவர் 1873-௵ வேதங்களின் சில்லரை விஷயங்களை 3 புஸ்தகங்களாக இங்கிலீஷில் பதிப்பித்தனர். 1870 ௵ மோக்ஷமூலர் (F Max Muller) ரிக் வேதத்தையும் தசோபநிஷத்துக்களையும் இங்கிலீஷில் மொழிபெயர்த்து பதிப்பித்தார். இது நிற்க.

இந்த இந்தியாவில் இங்கிலீஷ் ராஜ்யம் ஸ்தாபிக்கவே, அவர்களுடைய மதாநுஷ்டானிகளாகிய கிறிஸ்து பாதிரிமார்கள் இந்நாட்டுக்கு வந்து இந்துமதம் அஞ்ஞானமதமென்றும், கிறிஸ்துமதமே ஸத்தியமதமென்றும் தம் கிறிஸ்து மதத்தின் பெருமையைப்பற்றி பலவிடங்களில் பிரசங்கங்கள் செய்தும், கோயில்களைக் கட்டுவித்தும், இந்துக்களைத் தம் கிறிஸ்து மதத்துக்கு வந்துசேரும்படி போதித்துவரச்சே, இந்துக்கள் இந்தக் கிறிஸ்து மதத்தையும் இதற்கு முன் இந்நாட்டுக்கு வந்த மஹம்மது மதத்தையும் பார்த்து பிரமித்து தம் சொந்தமதம் நல்லதா? அல்லது இந்நாட்டுக்கு நவீனமாக வந்த மதம் நல்லதா என்று மயங்கிக்கொண்டிருக்கையில்.

1774-௵ ஓர் அவதார புருஷராக ஜனித்த ஸ்ரீ ராஜா ராமமோஹனராய் என்னும் ஓர் பிராம்மணசிரேஷ்டர், ஸம்ஸ்கிருதம், ஹிந்துஸ்தானி, பங்காளி, பார்ஸி, அரபி, லாதின், கிரீக்கு, ஹீப்ரூ, இங்கிலிஷ் முதலான பலபாஷைகளைக் கற்றுத் தெளிந்த கல்விக்கடலும் நிபுணசிரோமணியுமாக இருந்தமையால், ஆரியவேதமென்னும் ஆழ்ந்த சமுத்திரத்தில் புகுந்து அதின் ஆழத்திலிருந்த முத்துகளைப்போன்ற உபநிஷத்துக்களையெல்லாம் எடுத்து, அவைகளிலும் போலிமுத்துகளாக இருந்தவற்றை விட்டெறிந்து, அசல்முத்துகளாகவிருந்த தசோபநிஷத்துக்களைச் சேகரித்து வங்காள பாஷையிலும், ஹிந்தி இங்கிலீஷ் முதலான பாஷைகளிலும் மொழி

பெயர்த்தும் அவற்றிலுள்ள சத்துக்களான சரக்குகளை பல ருக்கும் காட்டியும் அவைகளைச் சகலதேச, சகலகால, சகல மதஸ்தர்களும், சமரசமாகக் கொள்ளத்தக்கவை யென்று தக்க தருக்கங்களால் பிரஸ்தாபித்ததுமன்றியில் தமது சுஜாதியாராகிய இந்துக்களைத் தம் இந்துமதமாகிய சொந்த மதத்திலேயே சத்துக்களிருப்பதால் இவர்கள் இந்நாட்டில் நவீனமாக வந்த மதங்களுக் கேகவேண்டிய தனாவசியமென்று தகுந்த நியாயங்களால் நிரூபித்தும் அக்கருத்தை இந்நாட்டிற் பரவச்செய்ய 1830-ம்வருஷம் பிரம்ம மதசித்தாந்த ஸபையை ஸ்தாபித்தும், இந்து தேசாபிமான விஷயமாக 1831-ம் வருஷம் இங்கிலாந்துக்குப் போக அங்கு பிரிஸ்டல் நகரத்தில் 1833-ம் வருஷம் பரமபதமடைந்தனர்.

பிறகு இந்த பிரம்மமத சித்தாந்தத்தின் பெருமையை நன்கறிந்தவரும் காலிகட்டத்திற்கல்விப்பொருளினுஞ் செல்வப்பொருளினும் சிறந்து இராஜரிஷியாக எழுந்தருளியிருக்கும் மஹரிஷி தேவேந்திரநாத சர்மாவவர்கள் இந்த ராஜா ராமமோஹனருடைய கருத்துத் தகுந்த அஸ்திவாரத்தின் மேல் ஆதாரப்பட்டிருக்கிறதோ என்பதை அறியவேண்டிப் புத்திமான்களான நான்கு பிராம்மணவாலிபர்களுக்குத் தக்க திரவியசகாயஞ்செய்து காசிப்பட்டணத்துக்கு அனுப்பி இருக்கு,எஜுர்,சாமம், அதர்வணம் என்னும் நான்குவேதபாகங்களையும், அந்நால்வரும் ஒவ்வொரு வேதபாகத்தை அருத்தத்துடன் கற்றுவரும்படி அனுப்ப அந்நால்வரும் அப்படி போய் சில வருஷங்கள் காசிபட்டணத்தில் தகுந்த பண்டிதர்களிடத்தில் நான்குவேதங்களையுங்கற்றுத்தெளிந்துவந்து நான்கு வேதங்களின் சாராம்சமாகிய தசோபநிஷத்துக்களை இந்துக்களுக்கு வேதமாகுமென்று பிரபல நியாயங்களால் நிரூபித்துக் காட்டியதன்மேல், ராமமோஹனர் ஸ்தாபித்த பிரம்ம ஸபையோடு, தத்துவபோதினிசபையை ஸ்தாபித்தும், அச்சபைக்குத் தகுந்த சம்ஸ்கிருத வேதவேதாந்த பண்டிதர்களை நியமித்தும் பிரதி வாரந்தோறும் பிரம்ம சித்தாந்த சம்பந்தமான உபநிஷத்துகளைப் படிக்கச் செய்தும் வியாக்கியானங்கள் செய்யச்செய்தும், அவைகளை அச்சபையின் சஞ்சிகையாகிய தத்துவபோதினி பத்திரிகையில் பதிப்பித்தும் பகிரங்கமாக்கிய தன்றியில், தாமும் உத்கிருஷ்டமான சில உபநிஷத்துக்களையும் உத்கிருஷ்டமான சில தரும சாஸ்திர வாக்கியங்களையும திரட்டி அவைகளின் பூர்வபாஷி

யத்தோடு சில ஸமரசமான விசேஷ உபந்நியாச உரையைச் சேர்த்தும் பிராமதருமம் என்னும் பெயரால் ஒரு கிரந்தத்தை வங்கபாஷையில் பதிப்பித்தனர்.

அதை இங்கிலீஷ் இந்துஸி, குஜராத்தி, மஹாராஷ்டிரம் முதலான பாஷைகளில் மொழிபெயர்த்திருப்பதைப்போலவே, சென்னையிற் சுமார் முப்பதுவருஷங்களுக்குமுன் ஸ்தாபிதமான வேத சமாஜத்தார் தத்துவபோதினி பத்திரிகையில் தமிழில் சிலபாகம் மொழிபெயர்த்து பதிப்பித்தார்கள். பிறகு ஸ்ரீதரர்வங்கநாட்டுக்குப்போய் வங்கபாஷையைக் கற்றுத் தெளிந்துவந்து, அந்த பிராமதருமத்தை தமிழிலும் விசேஷ உரையுடன் மொழிபெயர்த்துப் புத்தகரூபமாக பதிப்பித்தனர். இவருடைய தெலுங்கு மொழிபெயர்ப்பையும் வேறு சில உபநிஷத்துக்களையும் புச்சயபந்துலு புத்தகரூபமாக பதிப்பித்தனர்.

அன்றியும் சம்வச்சராதி 1881-ம் வருஷம் வடமேற்கு பாகத்தில் ஓர் அவதாரபுருஷராய் ஜனித்த தயாநந்தசரஸ்வதியவர்களும் வேதங்களின் சிலபாகங்களுக்கும், சில உபநிஷத்துக்களுக்கும் காலதேச வர்த்தமானத்தைத் தழுவி வியாக்கியானம் செய்ததைப் பாஞ்சால தேசத்திலிருக்கும் அவரது சிஷ்டர்களாகிய ஆரிய ஸமாஜத்தார் இந்துஸி பாஷையிலும் இங்கிலீஷிலும் பதிப்பித்திருக்கின்றனர்.

இப்படிசுமார் மூந்நூறுவருஷகாலங்களாக ஆரியர் வேத உபநிஷத்துக்களை ஐரோபாவின் பல பாஷைகளிலும், இந்தியாவின் சில பாஷைகளிலும் மொழிபெயர்த்து அச்சிட்டிருக்கும் அநேக மஹான்களுடைய அரிய பெரிய கிரந்தங்களைப் பல வருஷங்களாக வாசித்தும், அவைகளையே ஆதார நூல்களாகக் கொண்டும். இந்த இந்துமைபில் அல்லது ஆரியர் சத்தியவேதம் என்னும் இந்த கிரந்தத்தை யான் பதிப்பித்தனன். ஆகவே, நமது ஆரியர்வேத உபநிஷத்துக்களை விசேஷமாக அறிய விரும்புவோர் இந்த நூலுக்கு ஆதாரமாக இருந்த மேற்படி ஆரியர்வேத மொழிபெயர்ப்புக் கிரந்தங்களைக் கொண்டு வாசித்தறிந்து ஆநந்த மடையலாம்.

இப்படிக்கு,

சே. ப. நரசிம்மலு நாயடு.

# முகவுரை.

இப்பூவுலகில் பிரபலமாக இருக்கும் பெரிய மதங்கள் ஒவ்வொன்றுக்கும் உரிய வேதம் அல்லது சமயக்கிரந்தம் இருத்தல் பிரதியக்ஷம். அவைகளில் பெரும்பான்மையான வை கல்வியும் நாகரீகமும் விருத்தியாகும் இக்காலத்தில், அந்தந்த மதஸ்தர்களுடைய பாஷைகளிலும், வேறுபாஷை களிலும் அச்சிடப்பட் டிருப்பதால்; அந்தந்த மதஸ்தர்கள் அவைகளைப் பெற்றும், கற்றும், கேட்டும், தம்தம் மத சித் தாந்தங்களின் உண்மையை யறிந்தும், அநுஷ்டித்தும் வரு வதன்றியில்; ஏனையோரும் அம்மத நூல்களை அறிந்தும் படி பகிரங்கப் படுத்தியும், அவைகளைத் தழுவி வரும்படி செய்தும் வருதல் பிரதியக்ஷம்.

இப்படி பூலோகத்தில் பிரபலமாகவிருக்கும் எல்லாப் பெரிய மதங்களிலும் புராதனமானதும், சிறந்ததுமான மதங்களில் ஒன்றாகிய, ஆரியர் மதமென்னும் நமது இந்து மதத்துக்கும் புராதனமும், பெருமை பெற்றதுமாம். வேதம், ஸம்ஸ்கிருத பாஷையில் இருத்தல் பிரத்தியக்ஷம். அந்த ஸம்ஸ்கிருத பாஷைக்கு ஆதிமுதல் நாளது வரையில் அதற்கென்று தனியான எழுத்துக்கள் ஏற்பட்ட காலம் முதல் நாகரி; கிரந்தம், தெலுங்கு, மஹாராஷ்டிர முதலான எழுத்துக்களில் எழுதி வெளியாக்கக் கூடியதாக இருக்கி னும்; மஹாபரிசுத்தமும் ரஹஸ்யமுமானதாக எண்ணிய இந்து வேதத்தை அனைவரும் படிக்கும்படி வெளியிடுதல் பாவமென்று பாமரத்துவத்தால் சிலர் பயந்தும்; சிலர், தம்மைப்போலவே ஏனையோரும் வேதத்தைப் படித்தால் தமது மஹிமைக்குக் கெடுதி வருமென்கிற துரபிமானங் கொண்டும் மூடிவைத்தார்கள். ஆயினும், கல்வி கேள்வி சீர்திருத்தம் விருத்தியாகு மிக்காலத்தில், மதாபிமானம் தேசாபி மானமுள்ள சிலர், பாமரருடைய பிதற்றலுக்குப்

பயப்படாமலும், தம்மைப்போலவே ஏனையோரும் தத்துவ
ஞானமடைந்து தேவநாகரி, கிரந்தம், மஹாராஷ்டிர முத
லான சில பாஷைகளில் வேதத்தின் சில பாகங்களையும்,
முக்கியமாக உபநிஷத்துக்களையும் அச்சிட்டு வெளியாக்கி
இருப்பதினால்; அவைகள் அந்தந்த பாஷைகள் தெரிந்தவர்
களுக்கு உபயோகப்பட்டு வருவதன்றியில், ஐரோபாக்
கண்டத்துக்கும்போய்; அங்கு இத்தலி, பிராஞ்சு, ஜர்மனி,
ஆங்கிலேய முதலான பாஷைகளில் மொழிபெயர்த்தும்,
பதிப்பிக்கப்பட்டும், அவைகளின் பெருமையை ஐரோபா
அமெரிக்காக் கண்டத்தார்களும் கண்டு ஆநந்தமடைந்து
வருகிறார்கள்.

இப்படி இந்த இந்துதேச வேதத்தின் பெருமை தூர
மான தேசங்களுக் கேகி துதிக்கப்பட்டு வரச்சே, இந்த
இந்து தேசத்தின் தென்பாகத்தில் வசித்துவரும் தமிழ்
வாசிகளுக்கு அவர்கள் அநுஷ்டித்துவரும் ஆரியர் மதத்
தின் பெருமையைத் தக்கபடிமொழிபெயர்த்துப் பதிப்பித்த
ஆதி வேதம் இல்லாதது பெரும் குறைவன்றோ?

இக் குறையை நீக்கக் கருதியே இடைக்கிடை சில
புத்திமான்கள் மத்திய காலங்களில் வேதாந்த உபநிஷத்து
க்களின் சில பாகங்களை மொழிபெயர்த்து அச்சிட்டிருந்தா
லும், அவைகள் பெரும் பான்மையும் அத்துவைத விசிஷ்
டாத்துவைத சித்தாந்தங்களைச் சார்ந்தவைகளாகவும், வைதிக
விஷயங்களில் உயர்தர ஞானமடைந்த சிலருக்கன்றி, வாசி
பர் முதலான சாதாரண ஜனங்களுக்கு அவ்வளவாகப் பயன்
படாம லிருக்கின்றன. இதையறிந்தே சுமார் முப்பது வரு
ஷங்களுக்கு முன்பு சென்னையில் பிரசுரஞ் செய்துவந்த தத்
துவபோதினியில், ரிக்வேதத்தின், சில பாகங்களையும்
உபநிஷத்துக்களின் சிலவற்றையும் மொழிபெயர்த்து,
இடைக்கிடை பதிப்பித்து வந்தாலும்; அந்தப் பத்திரிகை
யைத் தக்கபடி போஷிப்பாரின்றி நின்றுவிட்டது.

பிறகு தமிழ் நாட்டார் ஆரிய வேதத்தைத் தமிழில்
மொழிபெயர்த்து அச்சிட்டு வெளியாக்கத் தெரிந்தாக

ளில்லை; துணியாததற்குக் காரணம், தமிழ்ப் பாஷையானது ஸமஸ்கிருத பாஷையிலிருந்து உற்பத்தியான தெலுங்கு கன்னட முதலான பாஷைகளைப்போ லல்லாமல், இது தன்னந்தனிச் சுதந்தரபாஷையாகவும், இதில் இலவுகீக வைதீக விஷயங்களுக்கு இன்றியமையாத இலக்கிய இலக்கண நூல்களும், வாகடஜோதிஷாதி நூல்களும் ஏராளமாக இருப்பதன்றியில்; திருவாசகம், தேவாரம், திருவாய்மொழி முதலான சிறந்த பக்திரசாதி கிரந்தங்களுங்; கைவலியம் முதலான வேதாந்த கிரந்தங்களும் ஏராளமாக இருப்பதனாலும் இவைகளின கருத்தெல்லாம் ஆரிய வேதத்தின் சாராம்சமாக இருப்பதனாலும், இனி இவ்வளவு சுலபமான பாஷையில் இருக்கும் கிரந்தங்களைவிட்டு, கஷ்டமான பாஷையாகிய ஸம்ஸ்கிருத பாஷையிலிருக்கும் ஆரியவேதம் முழுதையும் மொழிபெயர்த்து அச்சிடுவது அனவசியமென்று விட்டார்கள்போலும்.

ஆயினும், காலவித்தியாசத்தினால் இக்காலத்துத் தமிழ் வாலிபர்களில் சிலர், தம் முன்னோரியற்றிய அருமையான தமிழ் இலக்கிய இலக்கண பக்தி ஞான வேதாந்த நூல்களை உபேக்ஷை செய்து நாஸ்திகராகி நிம்மதியாகக் காலங்கழித்துவருகிறார்கள். சிலர், கிறிஸ்து முதலான மதஸ்தர்கள் தம் தம் மத கிரந்தங்களை அழகாக அச்சிட்டு அவைகளின் பெருமையைப் பற்றி பகிரங்கமாகப் பிரசங்கஞ் செய்து போதிக்கச்சே மதிமயங்கி, அந்த மதங்களில் பிரவேசிக்க, அதனால், தம்பெற்றோர் உற்றோருக்கு மனஸ்தாபங்களும், மாச்சரியங்களும், சண்டை சச்சரவுகளு முண்டாகி கோர்ட்டுக் கச்சேரிகளுக்குப் போய் வியாஜியங்கள் செய்தும் விசனப்படச் சம்பவிக்கிறது. தமிழ் வாலிபர்களில் சிலர், கிறிஸ்து முதலான மதஸ்தர்களுடைய உபதேசங்களைக் கேட்கும்போது, அவ்விதமான உபதேசங்களே தமது தேவாரம் திருவாய்மொழி கிரந்தங்க ளிருக்கக்கண்டு அவர்களுக்குக் காட்டினால்; கிறிஸ்து முதலான மதஸ்தர்கள். "ஓ! இந்தத் தேவார திருவாசக திருவாய்மொழிகள் நவீனமான நூல்க

ளொன்றும், அவைகளில் ஒன்று சிவமதத்தைக் கண்டித்தும், மற்றொன்று விஷ்ணுமதத்தைக் கண்டித்தும் இருப்பதால்; அவைகள் இந்துக்களுடைய ஆதிவேதமல்லவென்றும், கடைசியாகத் தமிழர்களுக்கு வழிபடும் வேதமே கிடையாதென்றும் சொல்லச்சே," தமிழ் வாலிபர்கள் கேட்டு மதிமயங்குகிறார்கள். அதற்குத் திருஷ்டாந்தமாக,—அன்றோர் நாள் எனது குமாரன் "அரங்கநாதன்" என்னும் வாலிபன் கோயமுத்தூர் கடைவீதியில் போய்க் கொண்டிருக்கையில், ஒரு கிறிஸ்துமத போதகர் இவ்விதமாகப் பிரசங்கஞ் செய்துக் கொண்டிருந்ததைக்கேட்டு வந்து "என்னை நோக்கி கிறிஸ்து முதலான மதஸ்தர்களுக்கு அவரவர்கள் மதவேதம் அச்சிடப்படும், அனைவரும் வாசித்தறியும்படியாக வெளியிடப்பட்டும் வரச்சே, நமது தமிழ் நாட்டாருக்கு மாத்திரம் நமது மதவேதமில்லாதக் காரணமென்ன? ஒரு வேளையிருந்தால், அதை அனைவரும் அறியும்படி வெளியிடாதிருக்கக் காரணமென்ன?" என்று கேட்டான். இக்கேள்வி உண்மையான கேள்வியாகவும், நியாயமான கேள்வியாகவும் இருந்தமையால், அவனுக்கும், அவனைப்போன்ற வாலிபர்களுக்கும் திருப்தியாகவும், உதவியாகவும் இருக்கும்பொருட்டு; ஆரிய வேதத்தில் முக்கியமான தசோபநிஷத்துக்களையும் தமிழில் பொருளுடன் பதிப்பிக்க எண்ணினேன். ஆனால் அப்படி அந்தத் தசோபநிஷத்துக்கள் முழுமையும் பதிப்பித்தால் புஸ்தகம் பெரிதாகி, இக்காலத்து வாலிபர்கள் படிக்கமாட்டார்களென்று எண்ணிய "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்னும் விதியைத் தழுவி, பிரபஞ்ச சிருஷ்டி விசாரத்தைப் பற்றியும், ஜீவாத்துமாவின் விசாரணைத்தைப் பற்றியும், பரமாத்துமாவின் லக்ஷணத்தைப்பற்றியும், பரமாத்துமாவை யடையும் உபாஸனையைப்பற்றியும், அதி ஆரிய தருமானுஷ்டானங்களைப் பற்றியும் பல உபநிஷத்துகளில் சொல்லியிருந்த சங்கதிகளைத் தொகுத்து இதை முதற் புஸ்தகம் அல்லது பழைய ஏற்பாடாகவும், மநு முதலான தரும சாஸ்திரம், பகவத்கீதை, பாகவதாதி புராணங்கள், பாரத ராமாயணாதி கிரந்தங்களிலிருக்கும் பொது சத்தியங்களைத் திரட்டி

அதை இரண்டாம் புத்தகம் அல்லது புது ஏற்பாடாகவும் பதிப்பிக்க; ஆந்திரம் ஆங்கிலேய முதலான பாஷைகளில் மொழிபெயர்க்கப் பட்டிருந்த ஆரிய வேதத்தின் சில உத்கிருஷ்டமான உபநிஷத்துகளையும், அவைகளுக்கு ஸ்ரீ நித்தியே ந்திரநாத மஹரிஷி, ஸ்ரீதரர் முதலான மஹான்கள் செய்த வியாக்கியானங்களையும், அவைகளுக்கு இங்கிலீஷ் கருத்துகளையுஞ் சேர்த்து "இந்துபைபில்" என்னும் தலைப்பினால் எனது கலாநிதி பத்திரிகையில் பக்ஷந்தோறும் பதிப்பித்து வந்தனன். இதைப்படித்துப் பார்த்த சில தமிழ் வித்துவான்கள்; இதன் உத்தேசத்தை அங்கீகரித்தாலும், இதற்கு இந்துபைபில் என்றும், ஆரியர் சத்தியவேதமென்றும் பெயரிட்டது பொருந்தாதென்றும்: இதற்கு இந்துபைபில் என்ற பெயரிட்டதனால் "இது கிறிஸ்து மதப்புத்தகப் பெயரென்றும் இது கிறிஸ்தவர்களுடைய பாணியென்றும் "பைபில்" என்ற பெயருக்கு வேதமென்னும் பொருள் பொருந்தாதென்றும் பின்னும் பலவிதமாக ஆக்ஷேபித்தும்" சில பத்திரிகைகளில் பதிப்பித்து வந்தார்கள். (அதற்கோர் சமாதானம்.)

பைபில் (Bible) என்பது இங்கிலீஷ் பதம், இப்பதத்திற்கு மூலம் அஃறிணைப் பன்மைப்பெயராகிய பிபிலியா அல்லது பைபிலியா = (Biblia) லத்தீன் மொழி. இந்த பைபிலியா என்னும் பதம் = புத்தகங்கள் எனப்பொருள் தரும் பன்மைப்பாலாய பிபிலியா = (Bibilia) என்னும் கிரேக்கு மொழியிலிருந்து பிரிந்ததும், இதன் ஒருமைப்பாலாகிய பிபிலியோன் என்னுங் கிரேக்கு மொழியிலிருந்து உற்பவித்தது இந்த பிபோலியோன் என்னும் மொழியோ, புப்ரோஸ் என்னும் ஒருவகை மரத்தின்பட்டை என்னும் சொல்லிலிருந்து ஜனித்தது. அதுவே பப்புரோஸ் என்னும் மொழியினின்று, பப்புருஸ் என்னும் லத்தீன் மொழியும், இப் பபுருஸ் என்னும் மொழியினின்று பப்பியே என்ற பிராஞ்சு மொழியும் =பேபர் என்ற அங்கிலேய மொழியும் பிறந்தது. இந்த பப்பியே அல்லது பேபர் என்ற பதத்துக்கு தமிழில் = கடிதம்

அல்லது கடிதாசி என்று பொருளாகிறது; ஆகவே, பைபில் என்ற பதத்துக்கு கிறிஸ்து வேதமென்று பொருள்கொண்டது பொருந்தாது. கிறிஸ்து வேதத்திலுள்ள சங்கதிகள் பலவருஷங்களாக வாய்மொழி போதகமாயிருந்து, பிறகு எழுத்துக்கள் ஏற்பட்ட பிறகு அவைகளை முதல் முதல் மரப்பட்டைகளில் எழுதி பாடஞ் செய்யப்பட்டும், பிறகு அந்த மரப்பட்டைகளையே நாளாவட்டத்தில் மெலிசும் மேன்மையுமாகச் செய்யப்பட்டும், அவைகளே பேபர்—கடிதமென்று பெயரைப் பெற்றும், அம்மரப் பட்டையே பிறகு புத்தகமென்று வழங்கி வரப்பட்டும், கடைசியாக புத்தகங்களில் விசேஷ புத்தகமாகிய வேதத்துக்கு வழங்கப்பட்டதனால் பைபில் என்கிற பெயரைப் பெற்றது. இப்பெயரை இப்போது வழக்கத்தில் வேதபுத்தகத்துக்குப்பொதுப்பெயராக வழங்கி வருகிறார்கள். ஆகவே பைபில் என்னும் பதம் கிறிஸ்து மதஸ்தர்களுடைய வேதத்துக்கு மாத்திரம் உரியதாகாமல், குரானுக்கு—மகமதியர் பைபில் என்றும், பார்சிகள் ஜந்தவஸ்தாக்கு—ஜந்துபைபில் என்றும், புத்தருடைய திரிபிடகத்துக்கு—புத்தபைபில் என்றும் சொல்லிவருவது சாதரணமாக இருப்பதால் ஆதியில் எழுத்துகளில்லாமல் கேவலம் ஒலி ரூபமாகிய ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்த ஆரியவேதத்தின் சாரசங்கிரஹத்தை இப்போது எழுத்துருவமாகால் கடிதத்தில் பதிப்பித்து புத்தகரூபமாக வெளியில் விடுவதால் இதற்கு இந்துபைபில் என்று பெயரிடப்பட்டது, இப்பத பிரயோகத்தைப்பற்றி ஆக்ஷேபிக்கும் தமிழ் பண்டிதர்கள் ஆங்கிலேய பாஷையையும் இப்போது பல மதஸ்தர்களுடைய வேதங்களை அந்தந்தப்பைபில் என்று ஐரோப்பிய இந்திய பண்டிதர்கள் பெயரிட்டுப் பதிப்பித்திருக்கிற கிரந்தங்களையும் பார்வையிட்டால் திருப்தியை யடைவார்கள் போலும். இது கிடக்க,

சிலர், பிறப்பில் பிராம்மணனல்லாத நான், இப்படிப்பட்ட வேதாதி உபநிஷத்துக்களை அர்சிடவும், வெளியிடவும் கூடுமோ என்று என்னுகிறார்கள். இந்தச் சந்தேகம் ஆதி

முதல நாளது வரையில் அநுஷ்டிக்கப்பட்டு வந்தனவோ என்பதைப்பற்றி ஆரியர்வேத உபநிஷத்துக்களை ஆராய்வோமாகில்,

பிருஹதாரணியம் 2-வது அத்தியாயம் 1-வது பிராம்மணத்தில், "கார்க்கியர் என்ற பிராம்மணன் அஜாதசத்துரு என்ற அரசனை ஆசாரியனாகக்கொண்டு பிரம்ம வித்தையை அப்பியசித்ததாகவும்,—சந்தோக்கிய உபநிஷத்து 5-வது அத்தியாயத்தில் சுவேதகேது, ஆருணேயர், ஜைபலி அரசனிடம் பிரம்மவித்தையை அப்பியசித்ததாகவும்,—மேற்படி உபநிஷத்து 4-வது அத்தியாயத்தில் ஜானசுருதி என்ற சூத்திரம் ரக்குவியர் என்ற பிராம்மணரிடம் பிரம்மவித்தையை அப்பியசித்ததாகவும்;—ஐதிரிய பிராம்மணம் 5-வது சஞ்சிகையில் கவுஷன் என்ற வேடன் வேதாப்பியாஸம் செய்ததுடன் ரிஷியுமாகி யாகாதி கிருத்தியங்களில் பிராம்மணர்களோடு கலந்து மகிமை பெற்றதாகவும்,—ஜனகமகாரிஷியிடம் சுகர் உபதேசம் பெற்றுக்கொண்டதும்; சதபத பிராம்மணம் தர்ச பூரணமாச பிரகரணத்தில் பிராம்மண க்ஷத்திரியர்கள் இன்னின்ன மந்திரங்கள் உச்சரிக்கவேண்டுமென்று விதித்ததுபோலவே, சூத்திரன் "ஆயாவெதி" என்கிற வேதவாக்கியத்தை உச்சரிக்கவேண்டுமென்றும் சொல்லி இருத்தல் பிரதியக்ஷம்.

அன்றியும் சூத்திரன் புராணங்களைப்படிக்கவும் கேட்கவும் அதிகாரமுண்டென்னும் பக்ஷத்தில் "பாரதம் ஆதிபர்வம்" 3-ம் அத்தியாயத்தில், "ஸ்ராவயேத்" என்ற வாக்கியமும் சுருக்தபோபாக்யாணம் 74-வது அத்தியாயத்தில் காம் தாளம் &c., என்றுதி சுருதி வாக்கியங்களையும் படிக்கவும் கேட்கவும் கூடுமே, அப்போது இந்தச் சங்கேதத்துக்கு என்ன வழி கூறக்கூடும்? ஒரு வேளை இந்தப் புராணங்களைப் படிக்கவும் சூத்திரர்களுக்கு அதிகாரமில்லை என்று சிலர் என்னும் பக்ஷத்தில் அப்போது இந்தப் புராணங்களை எழுதியவர்களில் பலர் சூத்திரர்களாக இருக்கல் பிரதியக்ஷம். சூதசம்ஹிதை என்னும் கிரந்தத்துக்குக் கர்த்தா

ருகர் என்பது அனைவருக்கும் தெரிந்த விஷயம், இவர்களு க்கு மாத்திரம இந்த சுவாதந்திரயம் எப்படிக் கிடைத்ததெனில், இவர்கள் மஹான்களாகையால் விசேஷதமில்லை என்பார்கள். அவர்களுடைய மஹத்துவத்துக்கு ஞானமேயல்லவாகாரணம்.—இந்த ஞானத்தினாலேயே யல்லவா நந்தனார் கண்ணப்பர் முதலான நாயன்மார்களும், திருப்பாணாழ்வார், திருமங்கையார் முதலான ஆழ்வாராதிகளும் மணம் பெற்றார்கள். இப்போதும் அந்த ஞானத்தைப் பாதவருஷத்தில் பிரபலப்படுத்தினால் பிரகிருதத்திலுள்ள ருத்திரர்களில் பலர் பெருமையைப் பெறுவார்களன்றோ? மேலும்,

நமது ஆரியவேதத்தின் அநேக பாகங்களையும், உபநிஷத்துக்களையும், பார்சி, பிராஞ்சு, ஜர்மனி, இங்கிலீஷ் முதலான பாஷைக்காரர்கள் படிக்கும்படி அன்னிய நாட்டார் தம் தம் பாஷைகளில் பதிப்பித்து வெளியிடச்சே இந்த இந்து தேசத்திலேயே பிறந்தும், இந்து சமூஹத்திலேயே வளர்ந்தும் இந்த இந்துமத சமயாசாரங்களையே அனுஷ்டித்தும் இந்த இந்துமத வேஷபாஷாதிகளை ஸ்வரூப சின்னங்களாகக்கொண்டும், இந்த இந்துமதத்தின் பெருமையை அனைவரும் அநுஷ்டித்து, இந்த இந்துதேசத்தை அலங்கரிக்கவேண்டுமென்ற தேசாபிமான மதாபிமானங்கொண்ட நான் இதை அச்சிடவும், வெளியிடவும் கூடாதென்று எண்ணுவது விந்தையே. இவ்வித அபிமானங்கொண்டவர்கள், என்னால் பதிப்பிக்கப்பட்ட வேதாந்த சூரியோதயம் அல்லது வேதப்பொருள் சாரசங்கிரகம் என்னும் கிரந்தங்களை வாசித்துப் பார்த்தால் அவர்களுக்குத் தக்க சமாதானம் கிடைக்கும்.

கடைசியாக, இந்தப் புத்தகத்தின் மூலவாக்கியங்கள் புராதனமும் கஷ்டமுமான ஸம்ஸ்கிருத பாஷையாகவும், இவைற்றின் மொழிபெயர்ப்பு விசேஷமான தமிழ்ப்பாஷையாகவும் இவைற்றின் கருத்துரை இங்கிலீஷ் பாஷையாகவும் இருக்கி இம்மூன்று பாஷைகளுக்கும் பொருத்தமானவையும், பிறந்தது முதல் நாளதுவரையில் வீட்டிலும் வெளியிலும் விசேஷமாக

வழங்குபாஷைக்காரனாகியநான் ஒருவனே, இந்நூலைக் குறைவு குற்றங்களின்றித் திருப்திகரமாக வெளியாக்கத் துணிந்தது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப் பட்டதுபோலாம்; ஆயினும், அரைச் சொல்லைக் கொண்டு அம்பல மேறினால், அரைச் சொல்லும் முழுச்சொல் லாகலாமென்று எண்ணி, யானையுலாவுங் காட்டில் பூனை உலாவத் துணிந்ததைப்போல இந்நூலை அச்சிடத் தொடங்கினேன். அந்தோ! இந்நூலை அச்சிட்டு முடிப்பதற்குள்ளாக, இந்நூலை அச்சிட்டுத் தரும்படியாக ஏவிய எனது அருமையான ஏகபுத்திரனாகிய அரங்கநாதன் வியாதியால் பிடிக்கப்பட்டு பரமபத மடைந்ததனால், ஆதியில் எண்ணியபடி இப்புத்தகத்தைத் திருப்திகரமாக முடிக்கக் கூடவில்லை. ஆகவே, புத்திமான்களான பெரியோர்கள், இந்நூலில் காணும் குறைவு குற்றங்களை க்ஷமித்தும், இதில் சேர்க்கத் தகாதவை இன்னவை யென்றும், இதில் இன்னும் சேர்க்கவேண்டியவை இன்னவையென்றும் எனக்குத் தெரிவித்தால், இரண்டாம் பதிப்பில் தக்கபடி சீர்திருத்திப் பதிப்பிக்கத் தீர்மானித் திருக்கின்றனன்.

கோயமுத்தூர்
1898ஞு
ஏப்ரல் மீ 15உ.

இப்படிக்கு,
சே. ப. நரசிம்மலு நாயுடு.

# சிறப்புப்பாயிரம்.

சேலம் ஜில்லா ஹரூர் போலீஸ் இனிஸ்பெக்டரும், ஆரிய மாங்கிலேயத் தமிழ், கன்னட இலக்கியங்களை நன்கறிந்த இயற்றமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத் தில்லையம்பூர்

## வேங்கடராம ஐயங்காரவர்கள் எழுதியது.

கோயம்புத்தூர்க் கலாநிதி பத்திராதிபராகிய

ஸ்ரீ சேலம், பகடால, நரசிம்மலுநாயடு அவர்களுக்கு.

ஐயா,

தாங்கள் அனுப்பிய "ஆரியர் சத்தியவேதம்" என்னும் புத்தகத்தைப் படித்துப்பார்த் தானந்தமடைந்தோம். நமது வாலிபரின் இக்காலத்தைய கல்விநிலையை நாம் ஆராய்ந்து பார்ப்போமாயின், இவ்வகையான ஓர் புத்தகம் வேண்டியது மிகவும் அவசியமாகின்றது. நமது வாலிபரோ புராதனமாகிய நமது தேயத்துப் பழைய நூல்களின் மர்மத்தைப்பகுத்தறியாது போலிநூல்களின் வழியிலிறங்கி வெகுவாய் இடர்ப்படுகின்றார்கள். அவ்வகை யிடர்களை ஒருவாறு போக்க இப்புத்தகம் பயன்படுமென்று நாமெண்ணுகிறோம்.

காரணகுரு ஒருவர் நேர்ந்தாலன்றி இக்கலியில் வேதங்களிலும் உபநிடதங்களிலும் புதை பொருளாய் மறைந்துள்ள ஸாராம்சங்களை நம்மவர் பகுத்தறிந்து சுவாநுபவிகளாதல் முடியாது. இவ்வாறாயினும் உபதேசவழியாலவர்போதித்தவைகளைச் சிர்தூக்கி அப்பியாசம் செய்து பார்த்தாலன்றி உண்மை விளங்காது.

சுவாநுபவிகள் அருளிச்செய்த கிரந்தங்களில் பல நாட்பழக்கமும் சிரவணமும் இருந்தாலன்றி அந்நூல்களின் பிடி கருத்து இனிது விளங்காது.

மதப்பேய் உயர்குலப்பேய் கல்விப்பேய் உயர்பதப்பேய் முதலிய பேய்களின் வழியினின்றும் விலகி, ஜீவகாருணியம் முதலாய நற்குணம் வாய்ந்தவர்களுக்குச் சுவாநுபவ நூல்களைப்படிக்குங்கால் கண்ணுங்கருத்தும் நேர்வழியை நாடி அருள்வழியிற்சேர்த்து ஆநந்தப்போதத்தைகொடுக்கும்; இப்படிப்பக்குவமில்லாதார்க்கு ஆழ்வார்பிரபந்தங்கள், நால்வர் பாடல்களின் பொருள்விளங்காது. அபக்குவிகளுக்கு விளங்கும் பொருளோ உலக நடைப்படி தேகயாத்திரையை நடத்திவரப் பயன்படுமேயன்றி அறிவு மார்க்கத்துக்குப் பயன்படாது. வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை யென்பது புராதன நியாயம்.

வேதம் என்பது கன்மகாண்டிகட்கு உபயோகமாய் முதல் மூன்று வருணத்தாரால் ஓதப்படுவது; இது முதலில் எழுதாமறையா யிருந்து, பிறகு கர்ண பரம்பரையின் நிலை புறநாட்டார்களின் ஓய்வில்லாத வரவினால் திடங்குறையவே முன்பு நான்கு வேதங்களும் புத்தகரூபமாய் எழுதி வைக்கப்பட்டன. ஆரியர்களில் பிரம்மவிசாரணை வேதம் விளங்கும் பாஷையாகிய வடமொழியிலே நடந்தேறிவந்தது. அப்பொழுது ஆரியாவர்த்தத்தில் (விந்தயவரை இமையவரைக் கிடைப்பட்ட இடத்தில்) க்ஷேத்திரம் பீஜங்களின் நியாயம் ஒருவாறு வரம்புகடவாத நிலையிலிருந்து வந்தது. அப்பொழுது பிறப்பும் குணமும் அந்தணரில் ஒருங்கு குடிகொண்டிருந்தன. புறநாட்டார் வரவால் க்ஷேத்திரபீஜ நியாயங்கள் மாறி அந்தணரின்வகை பிறப்பாலும் குணத்தாலும் பிரிவுபடத் தலைப்பட்டன. பிறகு சந்நியாசம் பிரம்மவிசாரம் முதலியன சூத்திரரிலும் நடைபெறத்தொடங்கின. இவ்வாறாகப் பழைய ஆசாரங்கள் மாறிப் புது ஆசாரங்கள் ஏற்பட்டன.

பிறகு வடமொழியிற் பழக்கமில்லாரும் வேதங்களிலடங்கிய கருத்துகளை வேறு பாஷைவாயிலாக அறிந்துகொண்டு மெய்ஞ்ஞானத்தை யடைந்து வந்தார்கள். நம்மாழ்வார், திருப்பாணாழ்வார், ஆண்டாள், ஞானசம்பந்தர், நந்

தன் முதலானோரும் இம்மார்க்கத்திற்குச் சாக்ஷியாக விளங்குகின்றனர்.

## நூலசூக்தும நியாயத்தின்படி.

வேதத்தை யோதினவர்களும் வேதத்தின் சாரமறிந்தவரும் பிற்காலத்தைய வழக்கப்படி வேத மறிந்தவர்களானோர்கள். ஞான சம்பாதனத்திற்கு வேதத்தின் ஸாரமே முக்கியமாகையால் சூத்திரர்களும் பெண்ணினத்தாரும் ஞானிகளாகத் தடையில்லை. நம்மாழ்வார், ஆண்டாள், காரைக்காலம்மை இவர்கள் சரித்திரத்தால் இந்தநியாயம் நன்கு விளங்குகின்றது: அநுபவிகளான ஆழ்வார்கள் தாங்க ளருளிச்செய்த பிரபந்தங்களில் புராதனமாகிய வேத உபநிடதங்களில் விளங்காத நுண்ணியகருத்தை விளக்கியிருப்பதாய் ஸ்ரீ வேதாந்ததேசிகர் அவர்செய்த தமிழ்ப்பிரபந்ததில் அருளிச்செய்தார். அதாவது:—"தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்பதுதான். எனவேவடமொழிவேதமுணர்ந்தும் தமிழுணராததால் ஆழ்வார்பிரபந்தங்களிலடங்கியஸாரமுணராதவர்கள் இருத்தலுங் கூடுமென்றே ஸ்ரீ வேதாந்ததேசிகர் அவர்களின் பொருட்டு "திரவிடோபநிஷத்தின் தாற்பரியமென" வடமொழியில் ஓர் நூல்செய்தனர். "திராவிடோபநிஷத்தின் ஸார"மென மற்றொரு நூலும் வடமொழியிற் செய்திருக்கின்றனர். சகல வேத உபநிடத புராண இதிகாசங்களின் சாரமே திராவிட வேதமென்று இவர் கூறி யிருக்கின்றனர். இந்நயங்கருதியே தமிழ் வேதத்தைப் பொற்குடமாகவும் வடமொழி வேதத்தை மண்குடமாகவும்கொண்டு உபயவேதாந்தங்களை நம்முன்னோர் விளக்கியிருக்கின்றனர்.

காலவேறுபாட்டால் வடமொழிவேதம் ஞானஸம்பாதனத்திற்கு அவ்வளவாய்ப் பயன்படா விடினும், உலக வாழ்க்கையில் கன்மகாண்டவிதி சந்நியாசிகளுக்கும் ஞானிகளுக்கும் உண்டாகையால் வடமொழி வேதபாகங்களும் பயன்படுகின்றன. தான் செய்யும் கருமத்தைச் சாதனமென்றெண்ணமலும் பலனைக் கருதாமலும் கருமம் செய்கிறவர்க

லையன்றோ கண்ணன்கீதையில் ஞானியென்றும் யோகியென்றும் அருளிச்செய்தான். தமிழ் வேதங்களுக்கு வடமொழி வேதம் மூலமாகையாலும் கன்மகாண்ட மில்லாமலே ஞானகாண்ட வநுபவ மில்லாமையாலும் உபய வேதாந்தங்களும் ஸ்ரீ வைஷ்ணவர்களால் வேண்டப்பட்டன.

சொல்லாலும் பொருளாலு மளவையாலும் தொடர வொண்ணாதவருள் நெறியெதுவோ அதையறிந் தநுபவிகளாவதற்கே வேதமும் உபநிடதங்களும் ஆழ்வார் பிரபந்தங்களும் நால்வர் பாடல்களும் நமக்குச் சாதனங்களாகின்றன. மாணிக்கவாசகர் முதலிய சிவனடியார் பலரும் சுவாநுபவிகளே; அவர்கள் நூல்களும் ஆழ்வார்கள் பிரபந்தம்போலப் பெரும்பயன் தருபவைகளே. கன்ம ஞான பக்தி பிரபத்தி மார்க்கங்களில் அதிகாரிகளின் தாரதம்மியத்தையும் மூலமாகிய வோற்றையெழுத்தில் மாண்டூக்கிய உபநிடதத்தில் மும்மூர்த்திகளின் சம்பந்தம் காட்டி விளக்கி யிருப்பதையும் நன்குணர்ந்து இரு பற்றற்றவர்களுக்கே நற்கருத்து விளங்கும் சுவாநுபவமும் நேரிடும். ஒருமூர்த்தியின் பாவனை திடமாவதற்கன்றே அம்மூர்த்தியையே சிறப்பிப்பது. பாவனை முதிர்ந்தால் சமரச ஞானமும் அதனால் வந்த தற்போதமும் தனை மறந்து சுகிக்கும் நிலையும் நேரிடும். சோபானக்கிரமத்தால் பக்திமார்க்கத்தில் அநேக படிகளுண்டு; இது சைவ வைணவர்களுக்குப் பொதுவாம். இப்படி யுணர்தல் மெத்தக் கடினம்.

புராதன ஆரிய ஆசாரங்கள் குந்தலிக்கும் இக்கலியில் வேத உபநிடதங்களிலும், அவைகளின் வழிநூல்களிலும் நம்பிக்கை குறைந்து, வேறு சமய நாட்டமும் போக்கும் நடந்தேறி வருகின்றன. கெதிசாபகாரியும் நமது பழைய நண்பருமாகிய தாங்கள் இந்து பைபிலெனப்பெயர் சூட்டி ஆரியர் சத்திய வேதமென்னும் இப்புத்தகத்தை அச்சிட்டுப் வெளியாக்கியதை நாம் கண்டானந்திக்கின்றோம்.

நம்மவரிற் பலர் பைபில் என்னும் பெயர்சூட்டி உபநிடதங்களை அறிந் தொருத்தது பிழையென்று எண்ணலாம்,

நமது நாட்டு வாலிபர்களின் மனம் நல்வழியை நாடும்பொருட்டு அவர்களின் போக்கிற் கொத்தபடி புதுப்பெயர் சூட்டியழைத்ததே யன்றி வேறன்று.

பைபிளென்றாலும், குருனென்றாலும், வேதமென்றாலும், உபநிடதமென்றாலும் இலக்கியார்த்தம் ஒன்றேயாம். இக்கலியில் பெருந்தொகையாக நமது நாட்டார் நாட்டம் நல்நாட்ட மாவதற்கன்றே புதுப்பெயர் வந்தது. நமது எண்ணம் நல்ல தாகையால் புதுப்பெயரும் நன்மை பயக்குமென் பதிலையமில்லை.

---

இந்நூலின்பேரில் எமக்குண்டான அபிப்பிராயங்களை அடியிற்கண்ட கவிகளில் அடக்கியிருக்கின்றனம்.

ஆசிரியவிருத்தம்.

ஆரியரி னருள்நெறிகள் தத்தளிக்கு மிக்கலியி லருளுணர்ந்து தமிழ்தேர் மாக்கள், சீரியதாஞ் சத்தோடு சித்ததனை யுணர்ந்தடங்கி யானந்த போதஞ்சேரப், பாரிலுயர் சேலநகர்ப் பகடால நரசிம்ம நாயுடுவாம் பத்தர் தந்த, ஆரியர் தஞ் சத்தியஞ்சேர் வேதமீதிற் பற்றறுக்கு மருள்நெறிகள் பலவு முண்டே.

உண்டென்றால் நம்மவரி லொருசாரார் ஒறுத்தெழுவர் புதியதிது வென்றே பேசிப், பண்டையதே சிறப்பெனினும் புதியதுவும் பழையதுபோற் பயன்படுதல் பாரிற் கண்டோம், பண்டையதைப் பெரும்பான்மை பகுத்தெடுத்தே நல்லுரையுஞ் சில குறிப்பும் பதமாய்க் கூட்டிக், கொண்டதிதாங் குணமாகுங் குவலயத்திற் குணநாடுங் கோதற்ற குணத்தோர்க்கே.

குணநாடிற் காலமிட மிவையுணர்ந்தே யருள்நெறியைக் குவலயத்தே கூட்டு வித்தல், மணமாகு மற்றதுவு மிக்கலியில் வாய்த்திடிலோ வசைகூற வழியு மில்லை, பணமாடு

மக்களினிற் பற்றற்றார் பழையதொடு புதியதனைப் பகுத்துக் காணக், கணமேனுங் கருதார்கள் கலிதொலைக்கு மொருமருந்தா மின்னூலு நன்னூ லாமே.

இங்ஙனம்,
இயற்றமிழ்ப்பண்டிதர்,
தில்லையம்பூர் வேங்கடராம ஐயங்கார்.

---

## இக்கிரந்தத்தைப்பற்றிச் சில பண்டிதர்களின் அபிப்பிராயம்.

P. KALYANA SUNDARAM MUDALIAR Avl.,
*A well-known Tamil Pandit, Madras.*

சென்னை
அஷ்டாவதானம்
பூவை. கலியாணசுந்திர முதலியாரவர்கள்
இயற்றியது.

எண்ணரிய வைதிக பற்பலநல் லுபநிடத மினிது தேர்ந்தங், கேகமே சப்பொதுவிற் பொருட்பயக்குஞ் சுலோகங்க ளெல்லாந் திரட்டிப், பண்ணமர்செந் தமிழ்மொழியின் மிகநயமா யுரைவிரித்துப் பாரிலியாரும், பகர்குருசங் கர ராமாநுஜர்மத்வா சாரியார்தம் பண்பைக் காட்டி, நண்ணரிய வாங் கிலேயமொழி பெயர்ப்பதுவு மாங்காங்கு நலக்கக் ஈட்டி, நவமுறுமா ரியர்க்குரைத் தியவேதப் பனுவலெல்லா நாமஞ்சூட்டித், தண்ணளிசேர் கலாநிதியத் ராதிபனென் றேவிளங்குந் தகைமைவாய்ந்த, தக்கசர சிட்டுரைய யம் வள்ளலியாவர்க்குந் தயைசெய் தானால்.

---

M. R. Ry. A. SANKARALINGAM PILLAI Avl., B. A.,
*A well-known Tamil Pandit of Tinnevelly.*

திருநெல்வேலி முத்தூர்

ம-ா-ா-ஸ்ரீ

## அ. சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் B. A.,

இயற்றியது.

சீவினி பயிற்றுமந்தி சிலைந்திடும் பொற்புவாய்ந்த
காவினி பொதியுஞ்சேலக் கவின்பதி களிக்கவந்தோ
னாவினி லுறுகுசெம்ம னரசிம்ம னுங்கமென்னத்
தூவினி தெளித்தவிந்துத் தூரிசுடைப் பையின்மாட்சி.

சொற்றிடுந் தகைமைத்தம்மா சூழ்ந்திடு நத்தவீட்டஞ்
செற்றிடுந் தாமனென்றோ செப்பிய வேதமென்றோ
புற்றிடும் புயகவேர்ந்து புழுங்கிடும் போலிச்சார்பை
யெற்றிடும் பெரியவேத மிதுவென நிறுவினூல்.

மாண்டகை யீன்றூன்முன்னூண் மன்னய முனிவபின்னர்க்
காண்டகை நூலின்சீர்த்தி கழறின ராய்ந்துதூறி
யீண்டகை செறிந்தகோல வெழிற்றிர மெடுத்தலாகா
வாண்டகை யிசைத்தவிந்த வாரியர் வேதமாதோ.

---

M. R. Ry. R. SABAPATHI PILLAI Avl.,
*Head Tamil Pandit of Coimbatore College, Coimbatore.*

கோயமுத்தூர் காலேஜ் என்னும்

கோயமுத்தூர் கலாசாலையில் தமிழ்ப்பண்டிதர்,

கும்பகோணம் ம-ா-ா-ஸ்ரீ

## R. சபாபதி பிள்ளையவர்கள் இயற்றிய

நேரிசையாசிரியப்பா.

திருவுறு பூதத் திரளினு முலகினைப்
பொருவறப்படைத்துங் காத்தும் போக்கியும்

விளங்குமுத் தேவராய் வீற்று வீற்ருகித்
துளங்கு பொருள்களுந் துளங்காப் பொருள்களுந்
தானா யலவாய்த் தயங்கு பரப்பொருளே
யானா வுலகிற் கருளிற் கூறிய
நான்மறை நவையறப்பொருளை வடித்து
மேனா ளுதவு வியன்றசோப நிடத்தைப்
பற்பல தேசப் பாவலர் பலரும்
பொற்பொடு தத்தம் பாஷையிற் புனைந்தே
வெளியிடச் சிறுவரும் விருப்பினோடிக்
களிகொளக் கண்டிக் காமர் தென்னாட்டுச்
செந்தமிழ்ப் புலவர் முந்துறத் தமிழிற்
தந்திடா தொழிந்தது தவறே யாதலின்
எனைப்பொரு சிறுவரு மெளிதி னுணர்தர
வனப்புறு தமிழ்வா சகத்திற் றருகென
நடைகுணங் கல்வி நவையி னல்லறம்
கொடைமுத னலமெலாங் குறைவறக் குழுமி
வந்ததிச் சகத்தென மருவுதன் பெருந்தவத்
தந்தி னுதித்த வரங்க நாதன்
வேண்டின னாக விரும்பி முகமலர்ந்து
நீண்டவத் தசோப நிடதந் தன்னை
ஆடியல் பொருளை யடக்கிக் காட்டல்
கூடுநற் றமிழிற் சுருக்கிக் கொடுத்தன
காசினி யோர்கள் களிப்பொடு புகழும்
ஆசில் கோவையக் கனியென வடைந்தோன்
கூறிய மதியோ ரிடைவுறு நாப்பண்
சீரிய மதியெனத் திகழுநல் லறிஞன்
வைய முற்ற வறந்தன தளிர்ப்பப்
பெய்முகி லெனப்பொழி பிரசங்க மேகம்
புலவர்கள் பலரும் பொருந்துமற் றிவையெனப்
பலகலை தமிழிற் பரிவிற் செய்தோன்
ஏருறு பன்னாட் டியலெலா முணர்ந்தும்
பார்புகழ் கலாநிதிப் பத்தி ராதிபன்

தயைபொறை கல்வி தவங்கொடை ஞானம்
சயம்பெறு குணமிவை தங்குறு முளத்தன்
பரவு சீர்ச் சேலம் பகடாளு
நரசிம்ம லுவெனு நாமபண் டிதனே.

---

M. R. Ry. C. THIRUCHITRAMBALAM PILLAI Avl.,
*Head Tamil Pandit of L. M. H. School, Coimbatore.*
கோயமுத்தூர் லண்டன்மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ம-ா-ா-ஸ்ரீ,

## ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்கள்

இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி லாசிரியவிருத்தம்.

திருவளரு மூலகமதன் சிருட்டிமுதற் றேகத்தி னியல்புந் தேருங், குருவளரத் துவைதவிசிஷ் டாத்துவைத விலக்கணமுங் குரவர் தங்கள், உருவளருஞ் சரிமுமோங் காரத்தின் பெருமையையு முரைத்து மேன்மை, மருவளரு முபநிடத சூத்திரமு முறைதொகுத்து மனத்திருடி. (க)

மன்பெரிய சுதேயத்தின் பெருமைக்கு மறைகட்கு மறக்க லாற்று, தன்புரிய நற்புதல்வ னரியகுண நிறைந்தவனு மரங்கநாதத், தின்பிரியத் திற்குமென வெழுத்திட்டுத் தமிழ்ச்சிறுவர்க் கியற்றித்தந்தான், நன்மைகொளிந் தியமையில் நரசிம்ம நாயுடெனும் நாவலோனே. (உ)

---

M. R. Ry. SEVATHA MARAKOIR Avl.,
*A well-known Mahomedan Pandit of Nagur.*
இஃது
நாகூர் வித்வான்

## ம-ா-ா-ஸ்ரீ செவத்த மரைகாயரவர்கள்

இயற்றியது.
அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

கடலுலகங் களிபொதுளு மாறுபல நூலொருங்கு கவினச் செய்து, வடமலையுச் சத்தாவிளக் கம்போன்று தேசாபிமானம் பூண்டு, திடமுயல்வா லின்றியமை யாதநன்மை யினிதியற்றிச் சீர்த்தி பெற்று, மடமகற்று ஞானியாய் நரசிம்ம நாயகப்பேர் மருவிநின்று. (ங)

கறையகன்ற மறைபயில வெனுமாணுக்கர்க்கு முதற் கருவியாகித், துறைபலவு முபரீடத நனிவிளக்கி முதுக்குறை வு துலக்கவல்ல, விறைதரும்பு மாரியர்சத்திய வேதமெனும் பெயரா நிலவத்தந்த, முறைதனக்கோர் கைம்மாறு யாதுள திந் நிலத்தெடுத்து மொழியுங்காலே. (உ)

அன்னவொரு நூல்பெருகித் தழைத்தோங்கி யதனக த்தே யருமைதோன்ற, மன்னரிய விழுமியவான் பொருடே ரு மாண்பினர்க்கு மகிழ்ச்சிதந்து, சொன்னபெரி யவனினிச் செய் பெருமுயற்சி யெலாங்கூடித் துலங்கும்வண்ணஞ், சின் னமறத் திருவருளை யெஞ்ஞான்றும் வந்தித்துச் சிந்திப் பாமே. (ங)

---

M. R. Ry. S. SAMINATHA PILLAI Avl.,

*Head Tamil Pandit of St. Michæl's College, Coimbatore.*

கோயமுத்தூர், செயிண்ட் மைக்கிள்ஸ்காலேஜ்,

பிரதம தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ வீராசாமிபிள்ளையென்கிற

சி. சாமிநாதபிள்ளை யவர்கள்

இயற்றியன.

கொச்சகக்கலி:—

திருப்புலவர் குறிவளங்கள் செழித்துயருஞ் சேரலமா
மருப்பொலியுஞ் சோலைநகர் வாழிரங்க பூபதியே
குருப்பொலியும் பொன்னுடை கொளுமது சூதனனருளா
னிருப்புலவர் குருப்பரிசி னீந்தநரசிம்மனெம்மான். (க)

பலபுகழும் வாய்ந்துபல பலப்பன்னூ னுலகுய்ய
நலமுடனே தந்தநண்ப னுங்காசி யாத்திரையிற்
சொலவுடைய பெருமையுஞ்சேர்சுகுணனருட்கிருக்கைநவிக்
கலகவிழியார்களுக்குக் கண்ணு குமழி வில்மதன். (உ)

தருக்கமுதற்சாத்திரங்கடாவில்பெரியார்பலர்த
முருக்கமுள மக்களுக்கா யுஞற்றியமைத் திட்டதுணர்ந்
தருக்கரெனு மாழிரங்க நாதனெனு மருமாந்த
தருக்குலவு காத்தப்பேர்த் தன்குனு கேட்டபடி. (ங)

பூவென்னப் படுவதுவும் பொறிவாழும் பூப்போலு
மாவென்னப் படுவதுவு மருமுனியா வதுபோலு
நாவென்னப் படுவதுவு நவிலின்முறைக் காமுறையாங்
கோவென்னப் படுவைவிற் கூறுவதென் றுலகுரைப்ப. (ச)

புராந்திமகாண் டப்பகுதி பொருவினுன் மறைதழுவக்
கராந்தியங்க வரியரியின் காதலனு வுபநிடதந்
தராந்திகழ வாய்ந்தச்சிற் றந்தபெட்புக் கரைந்திடவவ்
வராந்திங்கு மெனின்யாமு மசைத்திடவு மாகுமதே. (ரு)

---

M. MANONMONY AMMAL.,

*A well-known Tamil Poetess, Madras.*

சென்னைநகர்ப்பண்டிதை

## ஸ்ரீமதி. ம. மனோன்மணியம்மாள்

இயற்றியன.

வேதோப நிடதங்க ளின்பிரிவு முறுபொருளும் விரித்து ரைக்கு, மேதாகப் பற்பலவா மிகவரிய விடயங்க ளெவருந் தேர்வா, ருதார மானசெந் தமிழாங்கி லேயத்தி லருத்தந் தந்து, மேதாவி யோர்கள் காணுந் தோறுங் குதுகலிக்க விளக்கஞ் செய்தும். (க)

அத்தகுவே தாந்தகுத் திரந்தனையா தரவாக வரிதி யற்றும், வித்தகசே வலவிசிட்ட மறுதலையென் றுறுமத்து விதங்கடம்மை, யொத்தவிரு விடையுறுசங் கிரகமென்று மாரியர்க ளுண்மைகொள்ளச், சத்தியவே தப்பனுவ லெனத் திரட்டி யளித்தனனற் சமயநூல்கள். (உ)

எல்லையில வாராய்ந்து பன்னூல்க ளச்சிட்டிங் கெவரு மெச்ச, வல்லகலா நிதிபத்தி ராதிபனென் றுயர்சீர்த்தி வண் மையேற்ற, நல்லபக டாலநர சிம்மமென வேவதியு நாவ லோனே, தல்லியமாஞ் சுத்தாத்து விதவுண்மை யென்னே யோ சொலக்கா ணேனே. (ங)

—(o)—

தத்ஸத்.

ஸ்ரீ

# இந்து பைபில்

என்னும்

# ஆரியர் சத்திய வேதம்.

பழைய ஏற்பாடுகள்—உபநிஷத்துக்கள்.

## கடவுள் வணக்கம்.

சுவேதாசுவதர உபநிஷத்து

இரண்டாம் அத்தியாயம் 17-வது வாக்கியம்.

யோதேவோக்நௌ யோ அப்ஸு யோவிச்வம்
புவநமாவிவேச; யஓஷதீஷு யோ
வநஸ்பதிஷு தஸ்மைதேவாய நமோநம:

பொழிப்புரை.

எந்தேவன் தீயிலும், நீரிலும் செடிகளிலும், மரங்களிலும், எல்லா உலகங்களிலும் பிரவேசித்திருக்கிறனோ அத்தேவன் பொருட்டு நமஸ்காரம் நமஸ்காரம்.

விசேஷ உரை.

நாம் வசிக்கும் இந்த உலகம் ஒருகாலத்தில் அதாவது ஆதியில் அதிக பயங்கர அக்கினிஜ்வலரூபமாக இருந்தது.

அப்போது, அந்த பயங்கர அக்கினிஜ்வலத்தினிடையிலிருந்தும் அதை நியமனத்தில்வைத்தும், அப்போது அதில் வதிந்துவந்த அநந்தகோடி அக்கினி ஜ்வல ஸ்வரூபமான ஜீவஜந்துக்களை சிருஷ்டித்தும் சுகமாகவாழும்படி செய்வித்தவன் எவனோ.

நாம் வசிக்கும் இந்த உலகமே, அநேக ஆயிரம் வருஷங்களாக அப்படி அக்கினிஜ்வலரூபமாக இருந்ததைப் பிறகு, அதிகபயங்கரமான அலைகளால் நிறைந்த எல்லையற்ற அகண்ட ஜலசமுத்திரமாக மாற்றியும், அதை நியமனத்தில் வைத்தும் அதனிடையிலிருந்தும் அதில் அநந்தகோடி ஜலஜந்துக்களை சிருஷ்டித்தும் அவைகள் சுகமாக வாழும்படி செயவித்தவன் எவனோ.

நாம் வசிக்கும் இந்த உலகமே, இப்படி ஜலசமுத்திரமாக இருந்து அநேக ஆயிரம் வருஷங்களானபிறகு, அநேக அந்தபயங்கரமான அகண்ட சமுத்திரத்தின் ஓர் சிறு பாகத்தில் அநேக ஆயிரம் விதமான கந்தமூலச் செடிகளும், பயங்கரமான பெரியவிருக்ஷங்களும் விளங்கோங்கும்படி மாற்றிப் படைத்தும், அதினிடையே யிருந்தும், நியமனத்தில் வைத்தும், வேனிற்கால மழைத்தாரைகளால் சுகமாக வாழும்படி செய்வித்தவன் எவனோ.

நாம் வஸிக்கும் இந்த உலகமே இப்படி பலவித மாறுதல்களுடன் பல்லாயிரம் வருஷங்களான பிறகு, அநேக ஆயிரம் விசித்திர விநோத ஜீவஜந்துக்களையும், பற்பலவிதமான பக்ஷிகளையும், விதம் விதமான விலங்குகளையும், மதிப்பற்ற மானவஜாதியார்களையும், வதிந்துவரும்படி படைத்து, நியமனத்தில் வைத்தும், அவற்றினிடையிலிருந்தும் அநந்த ஜீவகோடி ஜந்து சமூஹபிராணிகளைச் சுகமாக வாழும்படி செய்வித்தவன் எவனோ.

நாம் வசிக்கும் இந்த உலகத்தைவிட அநேக ஆயிர மைல்கள் பருமனும், அநேக ஆயிரஞ் சூரியசந்திராதிகளால் சூழப்பட்டும், அநேக ஆயிரம் மைல்கள் தூரத்திலும், அந்

திக்கனிகளைப் போல் அந்தரத்தி லாடிக்கொண் டிருக்கும் அநேக மாயிரக்கணக்கான விண்ணுலகங்களைச் சிருஷ்டித்தும், அவற்றினிடையிலிருந்தும், அவைகளை நியமனத்தில் வைத்தும், அவற்றிலும் அநந்தகோடி ஜீவஜந்துக்களைப் படைத்தும் சுகமாக வாழும்படி செய்வித்தவன் எவனோ.

நாம் வசிக்கும் இந்தப் பூமிக்கும் நமது சிரசிற்குமேல் ககனமார்க்கத்தில் உல்லாசமாக உலாவும் விண்ணுலகங்களுக்கும் இடைவெளியில் அநேககோடி ஜீவஜந்துக்களைச் சிருஷ்டித்தும், அவைகளுக்கிடையி லிருந்தும், அவைகளை நியமனத்தில் வைத்தும், அவைகளைச் சுகமாக வாழும்படி செய்வித்தவன் எவனோ.

இப்படி எல்லா காலங்களிலும், எல்லா விடங்களிலும், எல்லாப்பொருள்களிலும, எப்போதும் தன்மயமாக ஜீவவித்துக்கொண்டிருக்கிற ஸத்தியஸ்வரூபியும், ஞானஸ்வரூபியும், அம்ருதஸ்வரூபியுமாகிய தேவாதிதேவனை நமஸ்கரிக்கின்றோம்.

ஓ நித்தியா நந்தனே! நினது இருப்பையும், நின்னால் சிருஷ்டிக்கப்பட்ட இப்பிரபஞ்சத்தின் பெருமையையும் இப்பிரபஞ்சத்தில்வதிந்துவரும் ஆத்மகோடிகளின் விலக்ஷணத்தையும் இவ்வாத்மகோடிகள் நின்னை நாடி இகபரசுகத்தையடைய சுலப சாதனமான உபாஸனா மார்க்கத்தை யவலம்பிப்பவர்கள் அநுஷ்டிக்க வேண்டிய தருமங்களையும், ஆதி ஆரியரிஷிகள் ஆரியபாஷையில் சொன்ன வேதவாக்கியங்களின் கருத்தைப்; புண்ணிய பூமியாகிய இந்தப் பரதகண்டத்தின் தென்திசையில் வதிந்துவரும் நின் மக்களுக்கு அமிழ்தினும் சுவையுடைய தமிழ்பாஷையிற் சொல்ல அருள்ஞான சத்தியைத் தந்தருள்வாய்! நின் அருள்வேதமாகிய இதை இந்நாட்டாரின் ஒவ்வொருவர் உள்ளத்திலும் சுவர்ண எழுத்துகளைப்போலப் பதியச்செய்து நின்மக்க ளனைவரும் அநுஷ்டித்து இகபர சுகமடையச்செய்வாய்.

ஓ! ஆரிய ரிஷிகள் வணங்கிய ஆதிமூலமே! பாரதவருக்ஷத்தின் புராதனமான பகவானே! எமது முன்னோருடைய

குலதெய்வமே! நினது பரிசுத்தமான இந்த சமரச வேதம் இந்த உலகமுழுதும் பரவும்படிசெய்து, இவ்வுலகத்திலுள்ள சகலதேசத்தார்களும், சகல ஜாதியார்களும் சகல மதஸ்தர்களும் இதைச் சமரச வேதசித்தாந்தமாகக்கொண்டு படித்தறிந்து இகபரசுகம் பெற்றுய்ய அருள்புரிவாய். நினது பரிசுத்தமான ஆஸ்திகமதம் எங்கும் பரவி யாவரும் ஆநந்தமடைய அருள்புரிவாயாக. ஓம் தத்ஸத்.

ஓம் பிரம்ம கிருபா ஹி கேவலம்.

---

முதல் அத்தியாயம்.

## ஆதி ஆகமம்—சிருஷ்டி விஷயம்.

### (1). சாந்தோக்கிய உபநிஷத்து

6-வது பிரபாடகம் 2-வது கண்டம் 1-வது வாக்கியம்.

**இதம்வா அக்ரே நைவகிஞ்சி தாஸீத்; [தீயம் ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீ தேகமேவாத்வி ஸவாஏஷ மஹாநஜ ஆத்மா அஜரோ அமரோ அம்ருதோ அபயஹ.**

போழிப்புரை.

இவ்வுலகமுண்டாவதற்குமுன் ஒன்றும் இருந்ததில்லை. ஓ பிரிய சிஷியனே! உலகமுண்டாவதற்குமுன் கேவலம் ஸத்வஸ்வரூபியும் ஒருவருமான அத்துவிதீயர் இருந்தார் அவர் சிறந்தவர் பிறப்பற்றவர், பரமாத்மா, மூப்பற்றவர், சாவற்றவர், நித்தியர், பயமற்றவர்.

விசேஷ உரை.

சிருஷ்டிக்கு முன்னம் ஒரே ஸத்துப்பொருளாகிய பிரும்மிருந்தது, அதுவன்றி இரண்டாவது பொருளில்லை; சிருஷ்டிக்குபின்னரும், சேதநாசேதநங்களாகிய எல்லாப்பொருள்களும் கேவலம் ஒன்றேயாகிய அவரையே பற்றிக்கொண்டிருக்கின்றன; அதனாற்றான் அவர் ஒருவரான அத்விதீயரென்று சொல்லப்பட்டார். யார் ஸத்ஸ்வரூபியாகிய ஒன்றான அத்விதீயரோ, அவர் சேதநப்பொருள்; அவர் தன்னைத்தா

னறிகிறார்; இந்த ஹேதுவைப்பற்றி அவர் ஆத்துமாவென் னும் பதத்தினாற் சொல்லப்படுகிறார்.

சிருஷ்டிக்கு முன்னம் இருந்த பிரும்மம், பிருதுவீ, அப்பு வாயு முதலான அசேதன பதார்த்தங்களைப் போல ஞானமற்றதன்று. இதை நிரூபிக்க;

பிரஹதாரணியம் 1-4 10-ல்

பிரஹ்மவா இதமக்ர அஸீத்ததாத்மா
நமேவாவைது அஹம்பிரஹ்மாஸ்மீதி

பரமாத்துமா இந்த உலகத்தின் உற்பத்திக்கு முன்னி ருந்தது நான் பிரம்மமென்று தன்னைத்தான் அறிந்துக்கொ ண்டது என்று சொல்லியிருப்பதினால், சிருஷ்டிக்கு முன்னி ருந்த பிரும்மம் என்றும், தன்னைத்தான் அறிந்து இருந்தது என்ற இந்தவாக்கியத்தில் காணும் பிரம்மமே ஜீவாத்மா என்று மயங்கலாம்; ஆனால் இந்த வாக்கியத்தில் சொல்லி யிருப்பது பிரம்மமேயன்றி ஜீவாத்மாவல்ல. ஆகவே, இதை த்தெரிவிக்கும் நிமித்தம்—அவர் பிறப்பற்றவ ரென்றும் சிற ந்த ஆத்மாவென்றும் மூப்பற்றவரென்றும் சாவற்றவரென் றும் நித்தியரென்றும் பயமற்றவரென்றும் பிறகு சொல்லப் பட்டார்.

சிலர்: பரமாத்துமா எப்படி அனாதியோ அப்படியே ஜீவாத்துமாவும் அனாதி என்று சந்தேகிக்கிறார்கள். அதற்கு

தைத்திரியம்-11-ல்

ஆத்மாவா இதமேகஏவாக்ர ஆஸீத்நாந்யத்கிஞ்ச நமிஷத்ஸஈக்ஷதலோகாந்நுஸ்ருஜா இதி"

இந்த உலக சிருஷ்டிக்குமுன்பு ஒன்றான பரமாத்துமா வே இருந்தார். அவர் தன்னைத்தவிர வேறொன்றும் இல்லை எனக்கண்டு உலகங்களை சிருஷ்டிசெய்ய இச்சித்தார் என்று சொல்லி இருப்பதால் உலகத்தின் உற்பத்திக்கு முன்பு ஒன் றான பரமாத்துமாவே இருந்தது. அநேக ஆத்மாக்கள் இல்லை என்பது திண்ணம். மேலும் பிருஹதாரணியம் 1-41-ல் ஆத்

மை வேதமக்ர ஆஸீத்புருஷவிதஹ இந்த உலகஉற்பத்திக்கு முன்பு பரமாத்துமாவே இருந்தார் அவர் புருஷ ரூபியாய் இருந்தார் என்று சொல்லி இருப்பதால் அவர் அசேதனசத் பதார்த்தமாக இருந்தாரென்னும் பிராந்திக்கு இடமில்லாமல் இச்சாதி கர்த்ருதவங்கள் எல்லாம் உடைய புருஷரூபியாய் இருந்தார் என்று சொல்லியிருப்பதால் அவர் பூரணபுருஷர், ஸ்வயம்பு, ஸ்வதந்திரர், நித்தியர்.

## இங்கிலீஷில் இதன்கருத்து.

Nothing of this was before Only He the True, O! Beloved! before this was, Who is One only without a second.

## (2). தைத்திரிய உபநிஷத்து

### ஆநந்தவல்லி 6-வது அனுவாகம் 2-வது வாக்கியம்.

ஸதபோதப்ய தஸதபஸ்தபத்வா இதகும்
ஸாவமஸருஜ தயதித ம்கிஞ்ச.

### பொழிப்புரை.

அவர் உலகத்தைப் படைக்கும் விஷயமாக ஆலோசனை செய்தார் ஆலோசனை செய்துகொண்டே இங்கே எவ்வளவு ஸ்வல்பமா யிருக்கின்றனவோ இவையாவற்றையும் படைத்தார்.

### விசேஷ உரை.

சிருஷ்டிக்கு முன் பிரம்மம் தவிர வேறொருபொருளும் இருந்ததில்லை. ஆனதால் அவர் சாதாரணமாக வஸ்துக்களைச் செய்கிறவர்களைப்போல ஒரு முதற்பொருளைத் துணையாகக் கொண்டு ஒன்றையும் படைக்கவில்லை. அவர் படைத்தலென்னும் செய்கைவிஷயமாகக் கருதினார். கருதிக் கொண்டே இவை யாவுமாகிய உலகத்தைப் படைத்தார். நாம் மண் கல் உலோகம் முதலியவைகளைக்கொண்டு வேறு பொருள்களைச் செய்யமாட்டோம் ஆனால் அவற்றைப் படைப்பென்று சொல்லத்தகாது. வேறொரு முதற்பொருளின் துணையின்றி தனதிச்சையில் ஒருபொருளை உண்டுபண்ணும் செய்கையின் பெயர் படைப்பு. அதுபற்றி நமக்கொருபொருளையும் படைக்கும் வல்லமை இல்லை. படைக்கும் வல்லமை கேவலம் ஒப்

ருகிய பரமாத்மாவினிடத்திலேயே யிருக்கிறது; அவர் தனியாக தனக்கியற்கையான ஞானம் வல்லமை செய்கை இவைகளைக்கொண்டு சேதநா சேதனங்களாகிய எல்லாப் பொருள்களுடன் இவ்வியப்பாகிய உலகயந்திரத்தை உண்டாக்கிஞர்.

சிலர் இந்த உலகம் அநாதி என்றும், சிருஷ்டிக்கு முன் புமூலபிரகிருதியாக இருந்த தென்றும் சந்தேகிக்கிறார்கள், ஆனால், பிரஹதாரணியம், 3-8-8.ம் 1-9-ல் (யஹஸர்வஞ் ஹஸர்வவித்ப அஸ்யஞானமயந்தபஹ தஸ்மாதேதத், ப்ரம் ஹநாம ரூபமந்நம்சஜாயதே) யார் சர்வக்கியஞே எல்லாம் அறிந்தவஞே யாருடைய தபசு ஞான மயமானதோ அந்த பிரம்மத்தால் நாமரூபங்களும் அன்னரூபமாகிய ஜகத்தும் உற்பத்தியாகின்றன என்று சொல்லி இருப்பதால், நாமரூபமாகிய பிராணிகளும் அவைகளுக்கு அன்னரூபமான ஜகத்தும் அநாதியல்ல அவரது இச்சாதி சக்திகளால் சிருஷ்டிக்கப்பட்டன.

He meditated a meditation, and meditating all this He created whatever.

(3). நாராயண உபநிஷத்து

1-வது அனுவாகம் 12-வது வாக்கியமும்

சுவேதாசுவதர உபநிஷத்து.

3-வது அத்தியாயம் 3-வது வாக்கியமும்.

விச்வதச்சக்ஷுருத விச்வதோமுகோ
விச்வதோ பாஹுருதவிச்வ தஸ்வாத்
வட்பாறெதயாம தமதி ஸம்பத த்ரைர்த்யாவ
பூமிஜயந் தேவ ஏகறெ.

பொழிப்புரை.

எங்கும் அவரதுகண், எங்கும் அவரது முகம், எங்கும் அவரதுகை, எங்கும் அவரது கால், அவர் மனிதரது உடலுக்குக் கைகளையும், பறவைகளினது உடலுக்கு சிறகுகளையும், சேர்த்து வைத்திருக்கிறர். ஒன்றகிய பரமேசுவரரே மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் படைத்தார்.

## பிரபஞ்ச பிண்டஉற்பத்தி விவரம்

சிரசிற்குமேலிருக்கும் ஆகாயத்தைச் சுத்தமான இருட்டுக்காலத்தி லேறிட்டுப்பார்க்கில், அங்கு அநந்தகோடி நக்ஷத்திரங்கள் தம்தம்கதிகளிற் சுழன்று பிரகாசித்தல் பிரத்தியக்ஷமல்லவா?

அந்தநக்ஷத்திரங்களுக்குமேலாக தூரதிருஷ்டிகண்ணுடி, சூக்ஷ்ம வீக்ஷணிகளைக் (Telescope & Spectroscope கொண்டு பரிசோதிக்கில் அங்கு சில வெண்ணிறமாயும், சில வெளரிய செந்நிறமாயும், சில மஞ்சள் நிறமாயும், சில வெண்மணல் நிறமாயும், பின்னும் பல வைர இரத்தினப் பொடிகளைப் போலவும் பிரகாசிக்கும் தாரகா கணங்கள் அநந்தம் தோன்றும்.

அவைகளுக்கு (நுபிலீ Nebulæ) பிரபஞ்சப்பரிணுமமுற்படலாகிருதம் என்று பெயர்—அதாவது பிரபஞ்சங்களுற்பத்திக்குக் காரணமான பகோள மண்டலங்களாம்—அவைகள் அனந்தகோடி மைல் தூரங்களில் அநந்தகோடிவருஷங்களாக ஆவிரூபமாய்ச் சுழன்றுக்கொண்டிருக்கும் பிரபஞ்ச அஸ்திவார பிண்டங்களாம்—அப்பிண்டங்களை நாளாவட்டத்தில் நரர் வசிக்கத்தக்க இந்த உலகத்தைப் போல பல பிரம்மாண்டங்க ளாகின்றன—எப்படியெனில்.

ஜகதீசுவரனுடைய சுவாசங்களென்றுச் சொல்லத்தகும் பிராணவாயுவும், (ஆக்ஸிஜன் — Oxygen) ஜலவாயுவும் (ஐடிரிஜன் Hydrogen) பின்னும் சில மூலகாரண பூதங்கள் (அவருடைய இச்சாசக்தியினுல்) அவ்யக்தம் அல்லது மூலபிர கிருதியின் ஸ்வரூபமாகிய பரமாணுவை (ஈதர் Ether) த்தாக்க அது, மின் தாதுக்களாக(எலக்டிரன்ஸ் Electrons) மாற்றம்பெற்றும்; அம்மின்தாதுக்கள் பிரகாச அணுக்களாக (ரேடியமாக Radium) மாற்றம்பெற்றும், அந்த பிரகாசித அணுக்கள் சூக்ஷ்ம வக அணுக்களாக (ஆடம்ஸ்—Atoms) மாற்றம்பெற்றும்; அவைகள் நாளாவட்டத்தில் அணுத்திரள்களாக (மோல்கூல்ஸ்—Molecules) மாற்றம்பெற்றும்; அவ்

வணுத்திரள்கள்கூடி, முன்னுக்கும் பின்னுக்கும் இழுக்கும் கவர்ச்சி சக்திகளாற் பந்தப்பட்டு சுழல்வதனுல், அக்கினி பிண்டங்களாக (திமொத்தை—Mosses) மாற்றம்பெற்றும் அப்படியாகிய அக்கினிபிண்டங்கள் பலசூரியர்களாகிப் பகோளத்தின் பலபக்கங்களில் பறந்து, அக்கினி புகைகளுடன் சுடர்விட்டெரிந்தும், கர்ஜித்துக்கொண்டும், அநேககோடி வருஷங்களாகச் சுழன்றுக்கொண்டிருக்க; அவற்றின் அக்கினி ஸ்வரூபமான ஆவிகளெல்லாம் திரண்டு சுழன்று வருவதனுல் கோளாகார பிண்டங்களாகின்றன.

அக்கோளாகார பிண்டங்களே, பின்னும் பலகோடி வருஷங்களாகச் சுழல்வதனுல், அக்கினி ஜலபிண்டங்களாக மாற்றம்பெற்றும்; அவ்வக்கினி ஜலப்பிண்டங்களும் பலகோடிவருஷங்கள் சுழன்றுவருவதனுல், அவற்றின் அக்கினிமயமான சூடுசெற்றுத்தணிய, ஜலசமுத்திர பிண்டங்களாக மாற்றம்பெற்றும்;—அச்சமுத்திராண்ட பிண்டங்களும் பின்னும் பல்லாண்டுகளாகச் சுழன்றுவருவதனுல், அச்சமுத்திர ஜலத்தினுலுண்டான ஓர்விதப் பாசியினுலும், அதினுற்பத்தியான கந்தமூல கிரிமிகீடாதி சவசத்துக்களாலுத், ஓர்வித கிட்டம்—பிரகுருதி Matter தோன்றிய பிறகு அவை பசுபக்ஷி மநுஷர் வதிக்கத்தக்க மண்ணுலகங்களாகி விடுகின்றன.

நாம் இருக்கும் இந்தபூமியும் ஒருகாலத்தில் நமதுசூரியாண்டத்திலிருந்து அக்கினிமய ஆவியாகக் கிளம்பி (Igneous fusion) தணல்விட்டெரிந்து உருகிய லோகங்களினுல் மொத்தையாகி, பயங்கரமான அக்கினிப் புகைகளினுலும், மேகங்களினுலும், சூழப்பெற்றும் (Centripetal & Centrifugal) மத்திபாபிகர, மத்தியாதீத கவர்ச்சிகளினுல் அநேகஆயிரம்வருஷகாலங்களாகச் சுழன்று கோளாகார ரூபத்தைப்பெற்றது.

ஆதியில் அக்கினிமய பிண்டமாக இருந்த இந்தஉலகம் குளிர்ந்து கட்டிமயமாக 80,000,000 எட்டுகோடி வருஷங்

களான தன்மையில்; இது சூரியனிடமிருந்து பிரிந்தபோது 200,000 சென்டிகிரேட்டு குளிர்ச்சிக்குவர, 350,000,000 முப்பத்தைந்துகோடி வருஷங்களாகியதாம்.

அப்படிக்காகியும், இந்த உலகத்தின் அடியில் ஆழமாகத்தோண்டிப்பார்க்கில், அங்குபயங்கரமான அக்கினிஜ்வலம் சுடர் விட்டெரிந்துக்கொண்டு இருக்கிறது, அப்படி எரியும் அக்கினியினால் பூமியின் பலபக்கங்களில் பூகம்பங்களுண்டாகி அவற்றின் மூலியமாக அக்கினிக்கங்களும், எதனா, விசுவியஸ் முதலான அக்கினி பருவதங்களும் பீறிக்கொண்டுவந்து தணல்விட்டெரிந்து கர்ஜித்தல் பிரதியக்ஷம். சில அக்கினிபருவதங்களின் அக்கினிசுவரூபம் நாளாவட்டத்தில் தணிய அவைகளின் கிட்டம் பெரும்பாறைக் கற்களாகவும், பெரும் பருவதங்களாகவும் மாற்றம் பெறுகின்றன.

இரவில் நமக்கு ஆநந்தகரமாக வெளிச்சத்தைத் தரும் நமது சந்திரனும் ஒருகாலத்தில் நமது பூமியின் மைய அக்கினியிலிருந்து பீறிட்டுக்கொண்டு போய் பலவருஷங்கள் எரிந்து பிறகு தணிந்து சுழலும் பெரும்பாறைக்கல் பிண்டமேயாம்.

இம்மட்டோ! நமது கண்களுக்கு கேவலம் மின்மினிப் பூச்சிகளைப்போல பிரகாசிக்கும் நக்ஷத்திர கோடிகளைப் பெரிய தூரதிருஷ்டிக் கண்ணாடிகளைக்கொண்டு சோதிப்போமாகில், ஆகாச மண்டல ஆறாவது அளவில் மூவாயிரம் பெரிய உலகங்களும்; முதல் அண்டகோச அளவில் இருபதும்; இரண்டாவது அண்டகோசத்தில் எழுபதுமாக சுமார் நூறு பிரம்மாண்டமான உலகங்கள் நமது பூமி, சூரியன், சனி முதலான உலகங்களைவிட பெருமைபெற்றும் பிரகாசிக்கின்றன. இந்த ஜோதி உலகங்களின் ஒன்றின் பிரகாசம் மாத்திரம் ஒரு நிமிஷம் ஒன்றுக்கு 1,20,00,000 [ஒருகோடியே இருபது லக்ஷம்] மயில்கள் தூரம் பீறிக்கொண்டு வந்தாலும், அந்தபிரகாசம் நமது உலகத்தில் வந்துசேரக்குறைந்தபக்ஷம் 14000 [பதினாலாயிரம்] வருஷங்கள் செல்லும். இப்படி எத்

தனையோ எண்ணிறந்த பிரம்மாண்ட கோளங்களாக நமது பார்வைக்கும் தூரதிருஷ்டி கண்ணாடிக்கும் தோன்றாமல் கோடானுகோடி மயில்கள் தூரத்தில் சுகமாகச் சஞ்சரிக்கும் விண்ணுலகங்களையும், நமது மண்ணுலகத்தையும், உயர் ஒப்பான இரண்டாவதற்ற பரமாத்துமாவே சிருஷ்டித்தார்.

## விசேஷ உரை.

எங்கும் அவரது கண், அவர் யாவற்றிற்கும் சாக்ஷி; யாவற்றினது உள்ளும் புறமும் அவர் ஸமமாய்ப் பார்க்கிறார். இருளடைந்த இரவினது கோரமாகிய இருளும் அவரது பார்வையை மறைக்க வல்லதன்று. எங்கும் அவரது முகம் பாபிகள் அவரது முகம் கொடுமையாயிருக்கவும், புண்ணியவான்கள் அவரது முகம் குளிர்ந்திருக்கவுங் காண்கின்றனர். எங்கும் அவரது கை, இவ்வுலகத்தில் எல்லாக் காரியங்களிலும் அவரது வல்லமையும் கௌசலமுமே விளங்குகின்றன. எங்கும் அவரது அடிகளிருக்கின்றன. அவர் எங்கும் நிறைந்திருக்கிறார். அவர் மனித உடல்களுக்குக் கைகளைச் சேர்த்திருக்கிறார். மேலும் அவர் பக்ஷி உடல்களுக்கு இறக்கைகளைச் சேர்த்திருக்கிறார். அததற்குரிய தொழிலைச் செய்யவும் அதற்குவேண்டிய சுகத்தைப்பெறவும் எதற்கெவ்வகையான உறுப்புப்பயனோ அதற்கவ்வகையான உறுப்பையருளியிருக்கிறார்.

நமது சாதாரண பார்வைக்கு கேவலம் தட்டை ரூபமாகத்தோன்றும் இந்த உலகத்தைப் பூகோளசாஸ்திர ரீதியாகச் சோதிப்போமாகில், இது உருண்டைவடிவாகிய கபித்தாகார கோளமாய் இருக்கிறது. இது இருபத்தையாயிரத்து இருபது மயில்கள் சுற்றளவு உள்ளதாயும், பிரக்ஷரேகைக்குஎழாயிரத்துத்தொள்ளாயிரத்துஎழுபத்துஎட்டுமயில்கள் குறுக்களவு உள்ளதாயும், துருவமுனைகளுக்கு எழாயிரத்துத் தொளாயிரத்துமுப்பத்தெட்டு மயில்கள் உள்ளதாயும் பத்தொன்பது கோடியே எண்பத்தொன்பது லக்ஷத்து ஐம்பதினாயிரம் சதுரமயில்கள் விஸ்தாரமுள்ள மேற்புறப்பரப்புள்ளதாயும் மணி ஒன்றுக்கு அறுபத்தெட்டாயிரம் மயில்

களாக சூரியனைச் சுற்றியும், முன்னூற்று அறுபத்தைந்து நாள், ஐந்து மணி, நாற்பத்தொன்பது நிமிஷங்களில் வருஷமொன்றையுடையதாயும், கடைசியாக 1,256,195,670,000, 000,000,000,000-டன் கனமுள்ள பிரகிருதி பாகத்தையுடையதாயும், அநந்தகோடி தாது கந்தமூல ஜீவராசிகளுள்ள விசித்திரவீடாயும் இருக்கின்றது. இப்படிப்பட்ட இந்த பூமியின் அடிபாகத்தைப்பற்றி பூதத்துவ சாஸ்திரோகத்மாகச் சோதிப்போமாகில், கேவலம் கல் மண் நீர் நிறைந்த நிலத்தின் அடியில் முப்பத்தைந்து மயில் ஆழத்தில் வெட்டிப்பார்க்கில், அங்கு அகன்ற அக்கினி ஜ்வாலைகளிருக்கின்றன. மேலும் இப்பூமியின் அடியில் 2430 கெஜம் ஆழம் வெட்டி அங்கு தண்ணீர்விடில், அது வெந்நீராகிவிடும். 8400-கஜ ஆழத்தில் ஈயம் உருகிவிடும்; 21 மயில்கள் ஆழத்தில் பொன்னும் உருகிவிடும், 74 மயில்கள் ஆழத்தில் இரும்பும் உருகிவிடும், நூறுமயில் ஆழத்தில் அகன்ற அக்கினி சமுத்திரங்கள் இருக்கின்றன.

நமது பாதத்துக்கு அடியிலிருக்கும் இந்த மண்ணுலகத்தின் மேன்மையே மாந்தருடைய மனதை மருட்டும்படி இருக்கிறதென்றால், நமது தலைக்குமேல் இருக்கும் விண்ணுலக அமைப்பு அதிலும் ஆச்சரியப்படத்தக்கதாய் இருக்கிறது. சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலான கிரஹங்கள் யாவும், நமது மண்ணுலகத்தைப்பார்க்கிலும் பெருமை பெற்ற உலகங்கள். இவைகளில் சூரிய வுலகம் 883217(எட்டுலக்ஷத்து எண்பத்து மூவாயிரத்து இருநூற்றுப்பதினேழு) மயில்கள் குறுக்களவுள்ளதாயும், நமது சந்திரவுலகம் 2200 (இரண்டாயிரத்து இருநூறு மயில்கள் குறுக்களவுள்ளதாயும், அங்காரகனுலகம் 4189 (நாலாயிரத்து நூற்று எண்பத்தொன்பது] மயில்கள் உள்ளதாயும், புதனுலகம், 4200 [நாலாயிரத்து இருநூறு] மயில்கள் குறுக்களவு உள்ளதாயும், வியாழனுலகம் 89170 [எண்பத்தொன்பதினாயிரத்து நூற்று எழுபது மயில்கள் குறுக்களவும்—நான்கு சந்திரர்களை உடையதாயும், வெள்ளி

உலகம், 7687 [ஏழாயிரத்து அறுநூற்று எண்பத்தேழு மயி ல்கள் உள்ள நீரகம்பொருந்திய உலகமாயும், சனி உலகம், 80000 [எண்பதினாயிரம்] மயில்கள் குறுக்களவும்—ஏழு சந் திரர்கள் உடையதாயும், இடைக்கிடை விநோதமான தூம கேதாதி உத்பாதங்கள் இருப்பதன்றியில்; தூரவீக்ஷணி என் னும் தூரதிருஷ்டிக் கண்ணாடியினால் ஜோதி மண்டலத்தைச் சோதிக்கையில் ஜானோருலகம், விசித உலகம், பானுலகம், ஹரிரிஷி உலகம், நெப்தூன் முதலான பல உலகங்கள் பிர காசிக்கின்றன. இவைகளில், பானுலகம் 2200 [இரண்டாயி ரத்து இருநூறு] மயில்கள் குறுக்களவுள்ளதாயினும், ஹரி ரிஷி உலகம் 35109 [முப்பத்தையாயிரத்து நூற்றொன்பது] மயில்கள் நீளமுள்ளதாயும்,—ஆறு சந்திரர்களால் சூழப்பட் டதாயும் இருக்கிறது. நமது உலகத்துக்கு தக்ஷண கோளார் த்தத்துக்குசமீபத்திலிருக்கிறதாகத்தோன்றும் சகடபுரி என் னும்ஜோதி உலகமானது 2,10,00,00,000[இருநூற்றுப்பத்து கோடி] மயில்கள் தூரத்திலிருப்பதனால் அதன் பிரகாசம் நமது உலகத்துக்கு வந்து சேர மூன்று வருஷமும் மூன்று மாதங்களுக்கும் மேலாகும். நமது வடகோளார்த்தத்துக்கு சமீபமாகத்தோன்றும் (Cygny) சகுணலோகம் 6,30,00, 00,000, [அறுநூற்றுமுப்பதுகோடி.] மயில்கள் தூரத்திலிரு ப்பதால் அதன் பிரகாசம் நமக்கு எட்டப்பத்து வருஷங்களு க்கு மேலாகும்.

His eye is everywhere His face is everywhere. He is that furnisheth arms to men and wings to birds. One God has created the havens and the earth.

---

## (4). பிருஹதாரணிய உபநிஷத்து

5-வது அத்தியாயம் 8-வது பிராம்மணம் 9-வது வாக்கியம்.

ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி
த்யாவா ப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டதஹ.

பொழிப்புரை.

இவ்வழிவற்ற பொருளினது நியமத்தால் மண்ணுலக விண் ணுலகங்களும் தாங்கப்பட்டிருக்கின்றன.

விசேஷ உரை.

இப்படி எப்பொழுதும் அழிவற்ற அபாரசக்தியையு டைய பரமேசுவரரால் படைக்கப்பட்ட நமது மண்ணுலகந் தவிர, சூரிய சந்திர நட்சத்திராதி ஒளியையுடைய எத்தனை உலகங்கள் இருக்கின்றனவோ அவற்றின் தொகுப்புக்குப் பொதுப்பெயர் விண்ணுலகம். அவரது ஆக்கினையால் விண் ணுலகங்கள் அத்தனையும் அந்தரத்தில் ஆடிக்கொண்டிருக் கின்றன. ஜோதிமண்டலத்தில் சூரியபிம்பம் நடுநாயகம் போல நடித்துக்கொண்டு; அதன் ஆகர்ஷணத்துக்கு உட்பட் டிருக்கிற நமதுமண்ணுலகத்தையும்; சந்திரன், அங்காரகன், புதன், வியாழன், வெள்ளி, சனி, யூரானிஸ், நெப்தியூன், ஜூ னோ, முதலிய பலபிரம்மாண்டங்களையும் தனது ஒளியால் பிரகாசிக்கச்செய்தும், தனது மத்தியை நாடுகிற (Centri-petal force) சக்தியினாலும், மத்தியாதீத (Centrifugal-force) சக்தியினாலும் சுழன்றுக்கொண்டிருக்கிறது. இப்படி அந்தரத்தில் ஆகர்ஷணையால் ஆடிக்கொண்டிருக்கும் சூரிய பிம்பத்துக்கு நமது மண்ணுலகம் 9 கோடியே 20 லக்ஷம் மயில்கள் தூரத்திலும், சந்திரவுலகம் இரண்டரை லக்ஷம் மயில்கள் தூரத்திலும், அங்காரகனுலகம் 14 கோடியே 40- லக்ஷம் மயில்கள் தூரத்திலும், புதனுலகம் 3 கோடியே 70- லக்ஷம் மயில்கள் தூரத்திலும், வியாழனுலகம் 49 கோடியே 60 லக்ஷம் மயில்கள் தூரத்திலும், வெள்ளி உலகம் 689 லக்ஷ ம் மயில்கள் தூரத்திலும், சனி உலகம் 900 கோடி மயில் கள் தூரத்திலும், யூரெனிஸ் என்னும் ஹரிசீல் உலகம் 183 கோடி மயில்கள் தூரத்திலும், நெப்தியூன் என்னும் வருண உலகம் 286 கோடியே, 40 லக்ஷம் மயில்கள் தூரத்திலும் பின்னும் அநேக ஜோதி உலகங்கள் அநேகமாயிர லக்ஷம் கோடி மயில்களுக்கு அப்பால் ஆடிக்கொண்டிருக்கின்றன. இந்த பிரம்மாண்டங்கள் எல்லாம் அந்த அற்புத புருஷரு டைய நியமத்தினால் நியதமாகத் தாங்கப்பட்டு இருக்கின்ற ன. அவற்றில் ஒரு அணுவளவும் அவரது நியமத்திற்கு புறம் பாகாது.

It is through His rule, O! Gargi, the earth and the heavens are upheld.

---

## (5). பிருஹதாரணியம்.

5-வது அத்தியாயம் 7-வது பிராம்மணம் 4-வது வாக்கியம்.

ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி:
ஸூர்யா சந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டதஹ:

### பொழிப்புரை.

இவ்வழிவந்ற பொருளினது நியமத்தால் ஓ கார்க்கீ! சூரிய சந்திர பிம்பங்கள் தாங்கப்பட்டிருக்கின்றன.

### விசேஷ உரை.

சூரிய பிம்பம் சிருஷ்டிப்பொருள்களில் சிறந்தது. பிரபஞ்சப் பிராணகோடிகளுக்கு இன்றியமையாப் பொருள்களுக்கெல்லாம் பிரதானமாக இருப்பதால் பிரபாகரனை பிரபஞ்சத்துக்கு பிராணன் என்று எண்ணுவோரும் உண்டு. அருணோதயகாக்ஷி, சிருஷ்டியில் காணும் எல்லாக்காக்ஷிகளிலும் சிறந்தகாக்ஷி. ஆதித்தன் ஆகாச வீதியில் பிரவேசிக்கும் முன்னம், அதன் அக்கினி ரூபமான கலைகள் மேகங்களின் ஊடாகப் பீறிக்கொண்டு பிரவேசிப்பதைப்பார்க்கில், அந்தத் தினகரனுடைய வருகையைத் தேவதூதர்கள் முன்னோடி வந்து உலகத்தாருக்கு எச்சரிக்கை செய்வதுபோல் இருக்கின்றது. இந்த எச்சரிக்கையைக்கண்டு இரவியின் வருகைக்கு எதிர்பார்க்கும் சில நிமிஷங்களுக்குள், வெய்யோனும் உதித்துவர, அதன் குன்றுவளம் பொருந்திய பிரகாசம் பிரபஞ்சத்தின் பல பக்கங்களிலும், பல பொருள்களின்மீதும் பீறிக்கொண்டுபோய, கடன் ஞாலத்தைக் கௌவிக்கொண்டிருந்த காடாந்தகாரமான இருள் யாரிடமும் சொல்லாமல் ஓடிப்போகின்றது. மனோரஞ்சிதமான மலர்களின்மேல் விழுந்து தூங்கும் பனித்துளிகளின்மீது கதிரவன் காந்திவிழ, அப்பனித்துளிகள் முத்து பவள மரகத மாணிக்கங்களைப்போல மதிக்கச்செய்கின்றது. பாலசூரியன் உஜ்வல ரூபத்துடன் வருவதைக்கண்டு நஅந்தகோடி பக்ஷிகள் உற்சாகம் பொரு

திய உள்ளத்துடன் இனிய கீதங்களைப்பாடி, வேந்தனை வந்த னவழிபாடுடன் வரவழைப்பதைப்போல நடிக்கின்றன. பிர பஞ்ச இயற்கைப்பொருள்களாகிய பருவத பிரதேசங்கள், பள்ளத்தாக்குகள், பல விருக்ஷவனங்கள் விநோத வர்ணங் களைப்பெற்று விண்மணியின் பெருமையை உத்கோஷிக்கின் றன. இந்த விந்தையான வைகறையில் எந்த பிராணிதான் உற்சாகமடையாதிருக்கும் ? அநந்தகோடி கிருமிகீடங்கள் எழுந்து களிப்புடன் பாடிப் பறந்து பரிதியைப் பெருமைப் படுத்துகின்றன. பகலவன் பிரகாசத்தினால் பறவை, பசு, பல வித செடி, கொடி, மரம் முதலான உத்பீஜங்கள் உயிர்ப்பை யடைகின்றன. இந்தப் பானுவின் பிரகாசத்தினால் உஷ்ண மும், உஷ்ணத்தினால் மேகங்களும், மேகங்களினால் மழைக ளும், மழைகளினால், மண்ணுலகத்துக்கு மகிழ்ச்சியும் உண் டாகிறது. ஆ ! இப்படிப்பட்ட அற்புதங்களுக்கு இடையிலி ருக்கும் மானவ ஜாதியாராகிய நாம் இந்த ஆதவன் அரு மை பெருமையைக் கண்டு ஆநந்தப்படாமல் இருக்கக்கூடு மோ ? திருப்பள்ளி எழுச்சியில் நம்முன்னோர் இதை விள க்கியுள்ளார்.

இப்படி இந்த பிரபஞ்சத்துக்கு அற்புத ஆநந்தத்தை விளைவிக்கும் சூரிய பிம்பத்தின் தத்துவத்தைப்பற்றி சாஸ்தி ரோக்தமாக சோதிப்போமாகில், அது நமது பூமியைப்பார்க் கிலும் பதின்மூன்று லக்ஷம் பங்குள்ள பெரிய உலகம்; அதா வது நாம் வசிக்கும் மண்ணுலகத்தைப்போல பதின்மூன்று லக்ஷம் உலகங்கள் சேர்ந்தால் எவ்வளவு பெரிய உலகமாகு மோ, அவ்வளவு பெரிய உலகம் சூரியன். அது எட்டு லக்ஷ த்து எண்பதினாயிரம் மயில்கள் குறுக்களவு நீளமும், இருப த்து எட்டு லக்ஷம் மயில்கள் சுற்றளவும், முப்பத்து எட்டு லக்ஷம் மயில்கள் விஸ்தீரணமுள்ளபிரமாண்ட உலகமாய் இரு ந்தும், நமது உலகத்துக்கு ஒன்பதுகோடியே இருபது லக்ஷ ம் மயில்கள் தூரத்திலிருப்பதால், நமது இயற்கைப் பார்வை க்குச் சிறியதாகத் தோன்றுகிறது, இந்த சூரிய உலகில் பிர மாண்ட பருவதங்களும், பள்ளத்தாக்குகளும், சமுத்திரங்க

ளும் இருப்பதன்றி, அதிபயங்கர அக்கினி மலைகளும் அந ந்தமிருக்கின்றன. அவற்றின் புகையானது அடிக்கடி கரும் புள்ளிகளைப்போலக் காணுகின்றன. அவற்றின் ஒரு புள்ளி எழுபத்தி ஏழாயிரம் மயில் குறுக்களவும், மற்றொன்று லக்ஷத்து எண்பதினாயிரம் மயில் நீளமுமுள்ளதாம். இந்த சூரியவுலகத்திலிருந்து நமது உலகத்துக்கு வரும் உஷ்ணம்: அந்த சூரியவுலகத்தில் இயற்கையாக இராமல் அதற்கு அநேக லக்ஷம் மயில்களுக்கு தூரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் அதன் மேகங்களில் இருந்து உண்டாவதால், அந்த சூரியவுலகத்திலும் அநந்தகோடி ஜனங்கள் சுகமாக வாழ்ந்துக்கொண்டிருக்கின்றனர்.

நமது சிரசிற்குமேல் ஒவ்வொரு இரவிலும் நவ நவமாக உருவம் பூண்டு பிரகாசித்து பிரபஞ்சத்தின் பலபொருள்களிலும் அமுதம்போன்ற கிரணங்களை வீசும் தமநாசகனுடைய தண்மை என்ன? அது மாந்தருடைய மனதை மலரச்செய்தும், அதன் மனோகரமான வெளிச்சத்தினால் உத்பிஜங்கள் வளப்பமான தன்மை யுடனும் வன்மையுடனுமிருக்கின்றன. இரமணீயமான சந்திர பிம்பத்தின் தத்துவத்தை சாஸ்திர ரீதியாகச் சோதிப்போமாகில்; நிசாதியதி நமது பூமிக்கு இரண்டரை லக்ஷம் மயில்கள் தூரத்தில், இரண்டாயிரத்து நூற்றறுபது மயில் குறுக்களவுள்ளதாயும், அதற்கு இயற்கையாக இல்லாத பிரகாசத்தை பானுவினிடம் பெற்று நமது பூமிக்குத்தரும் ஓர் பெரிய உலகம். இந்த சந்திர பூமியைத் தூரவீக்ஷணி கருவியைக்கொண்டு பார்ப்போமாகில், அதில் அநேக பர்வதங்களும், பெரும்பாறைகளும், பள்ளத்தாக்குகளும் தெரிகின்றன. அந்தப் பருவதங்களில் சில மூன்று மயில் நான்கு மயில் உயரமுள்ளவைகளாக விருக்கின்றன. இப்படிப்பட்ட சூரிய சந்திர பிம்பங்கள் அப்ரமேயருடைய சக்தியினால் தாங்கப்பட்டும், அவரது சக்தியால் அந்தரத்தில் ஆடிக்கொண்டுமிருக்கின்றன.

It is through the rule of this, Imperishable Being, O! Gargi, the Sun and the Moon are upheld.

(6). கடோபநிஷத்து

6-வது வல்லி 3-வது வாக்கியம்.

*யதிதம்கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராணஏஜதி நிஸ்ருதம்;*
*மஹத்பயம் வஜ்ரமுத்யதம்*
*ய ஏ த த்விதுரம் ருதாஸ்தேபவந்தி.*

பொழிப்புரை.

இதோ இருக்கிற உலக முழுதும் பரமாத்துமாவினிடத்திலிருந்து வெளிப்பட்டதாகி பிராணஸ்வரூபனாகிய அவரிலேயே அசைந்துகொண்டிருக்கின்றது. இடிக்கிற இடியைப்போல அவர் மிகவும் பயங்கரமானவர். இந்த வஸ்துவை அறிகிறவர்கள் நித்திய பதவியடைகின்றனர்.

விசேஷ உரை.

*பரமாத்துமா இவ்வுலகத்திற்குப் பிராணன்; அவரிடத்திலிருந்தே உலகங்களும் உண்டாகி அவரைப் பற்றிக்கொண்டே அந்தரத்தில் அசைந்துகொண்டிருக்கின்றன. எதுவும் அவரது நியமத்தினாலேயே அதனதன் செய்கைகளில் நியோகிக்கப்பட்டிருக்கின்றன.*

*பிராணன் என்பது இன்னதென்று இதுவரையினும் அறிந்தவர்கள் யாரும் இல்லை. ஆனால் அதன் இருப்பை அதன் தொழில்களால் அறிகிறோம். எப்படியெனில், மானிடசரீரம் ஜனிக்கும்பொழுது அந்தசரீரம் எந்தெந்த பதார்த்தங்கள் சேர்ந்து ஆக்கப்பட்டதோ, அந்தபதார்த்தங்களை எப்போதும் நிலையாக நிற்காமல் தேகமுயற்சிக்கும், தேகத்தொழிலுக்கும் தக்க, பிறக்கும்போது இருந்த பழைய பதார்த்தங்கள், புது, பதார்த்தங்களுக்குத்தமது இடத்தைத் தந்து ஆவிரூபமாக அகன்றுவிடுவது பிரத்தியக்ஷம். இப்படித்தேக விருத்திக்கு உபயோகமற்ற பழைய பதார்த்தங்களைக் கழித்தும், இன்றியமையாப் புது பதர்த்தங்களைச்சேர்த்தும் சரீரத்தைத் தேறும்படிசெய்யும் சக்தி எதுவோ அதுவே பிராணன்.*

*இரண்டாவது—மானிட சரீரம் அதிக உஷ்ணமுள்ள பாலைவனத்தில் இருக்கினும், அல்லது குளிர்ச்சியான உறைய*

னிக்கட்டிகள் நிறைந்த வடதுருவ முனையில் இருக்கினும், அல்லது ஆகாயத்தில் தண்ணீர் வெந்நீராகும்படியான இடத்திலிருக்கினும், உஷ்ணவரையறை (Thermometer)க் கருவியைக் கொண்டு சோதிப்போமாகில், இந்த மானிட சரீரத்துக்கு இன்றியமையாத (98 ° டிகிரி) உஷ்ணம் இருப்பதுபிரத்தியக்ஷம் இப்படி மானிடன் எப்படிப்பட்டசீதோஷ்ண தேசத்தில் இருக்கினும், அவனுக்கு இன்றியமையாத உஷ்ணத்தை மாறிப்போகாதபடி பாதுகாக்கும் சக்தி எதுவோ அதுவேபிராணன்.

மூன்றாவது—பூமியின் கவர்ச்சி சித்தாந்தத்தின்படி ஜலமானது எப்போதும்கீழ்நோக்கி வடிந்துவிடவேண்டியது அதன் இயற்கைத் தருமமாதலால், மானிடசரீரத்தில் பரந்து நிற்கும் ஜலபாகம், மானிடன் எழுந்து நிற்கும்போது அவனது அடிப்பாகமாகியபாதங்களுக்கும், படுக்கும்போதுமுதுகுக்கு அடியிலும் வடிந்துவிடவேண்டும், அப்படி வடிந்துவிடாமல் அந்தந்த பாகத்தின் ஜலம், அந்தந்த பாகத்திலேயே இருக்கும்படி செய்வது ஹிருதயதாளகத் தொழிலேயாம், இப்படி ஹிருதயதாளகங்கள் கிரமேண தம்தம் தொழில்களைச்செய்யச்செய்யும் சக்தி எதுவோ அதுவே பிராணன்.

நான்காவது—ஒரு பதார்த்தத்தை வேறொரு பதார்த்தம் அல்லது கருவியைக்கொண்டு உரைத்துத் தேய்த்தால் அது கரைந்து அழிந்துவிடுவதுசுபாவம், இந்த, பிரமாணப்படி உயிரற்ற சரீரமானது தேய்ப்பு, உரைப்புகளினால் மெலிந்து உரைந்து அழிந்துபோகின்றது ஆனால் உயிருள்ள சரீரமோ தேய்ப்பு உரைப்புகளால் வன்மையைப் பெறுகின்றது. கடினமான வேலைகளைச் செய்யப்பட்டவர்கள், அக்கடினமானபதார்த்தங்களை அடிக்கடி தொட்டுச் செய்வதில் அக்கடின பதார்த்தங்களின் தேய்ப்பு உரைப்புகள் அவர்களுடைய கைகளின் தோல்களை தடிக்கசெய்து கெட்டியாக்குவதும்; காடு, கானல், கரடுகளின் சதா நடமாடுபவர்களுடைய பாதங்கள் கிரமேண தடித்துக் காய்ப்புக் காய்த்து திடன் பெறுவதும் பிரத்தியக்ஷம். ஆகவே தேய்ப்பு உரைப்புகள் சரீரத்தைமெ

விதாக்கி அழிந்துபோகச்செய்யும் சுபாவத்தைத் தடுத்து அத் தேய்ப்பு உரைப்புகளால் தேகத்துக்குத் திடனை கொடுக்கும் சக்தி எதுவோ, அதுவே பிராணன்.

ஐந்தாவது—(உயிரற்ற) சரீரத்தைத் தன் கடையாகவிட்டிருந்தால், அது அழுகிப்போக ஆரம்பித்து துர்நாற்றமெடுக்கவும், அந்தச் சரீரத்தில் சம்பந்தப்பட்டிருந்த பிருதிவி, அப்பு, வாயு முதலான பௌதிக பதார்த்தங்கள் பரந்துதமக்கு இனமான பிரபஞ்ச பௌதிக பதார்த்தங்களுடன் சேர்ந்துவிடுகின்றன.

இப்படிப் பூத உடலில் இருக்கும் பௌதிக பதார்த்தங்களை பிரபஞ்ச பௌதிகபதார்த்தங்களுடன்கலந்து மறைந்து போகாதபடி செய்யும் சக்தி எதுவோ அதுவே பிராணன். இத்தியாதி தொழில்களினால் பிராணன் இன்னதென்று ஸ்பஷ்டமாகிறது. கேவலமாகிய ஓர் மானிட சரீரத்தின் வளர்ச்சிக்கும் உஷ்ணத்துக்கும்' உறுதிக்கும், உயிர்ப்புக்கும், வாழ்வுக்கும் பிராணன் இன்றியமையாததாயிருக்கில், பிரம்மாண்ட கோளமாகும் இந்த ஜடஜகத்தாகிய சரீரம் பரமாத்மாவாகிய பிராணன் இல்லாவிட்டால், ஒரு விநாடியிலே நிற்குமோ?

நமது பூமியானது ஆதியில் அக்கினி ஜலரூபமாக இருந்து பிறகு அநந்தலக்ஷ வருஷகாலங்களாகத் தணல்விட்டு எரிந்து உருகிய லோகங்களின் மொத்தையாகி அகண்ட அக்கினிமயமான ஆவிகளாலும், பயங்கரமான புகைகளாலும், மனோவாக்குக்கு எட்டா மேகங்களினாலும் சூழப்பட்டிருந்தது பிறகு அநேக லக்ஷம் வருஷங்களாக அகண்டஜலரூபபிண்டமாகமாறி அந்த ஜலத்தில் கொஞ்சபாகம் சுண்டி பூமிபிட்டம் தோன்ற (9,80,00,000) ஒன்பது கோடியே எண்பது லக்ஷம் வருஷங்களாயின. ஸெண்டிகிரேட்டு கணக்கின்படி 20,000° ஸெண்டிகிரேட்டு உஷ்ணத்திலிருந்து 200° ஸெண்டிகிரேட்டுக்குத் தக்க குளிர்ச்சியைப்பெற 35,00,00,000 முப்பத்தைந்துகோடி வருஷங்களாயிருக்குமென்கிறோம். இந்த ஸ்திதியில பூமியானது உஷ்ணமறிவிக்கும் கருவியால் சோதி

த்தால், பாரினீட்டு கணக்கின்படி 212° டிகிரியிலிருந்து 77° டிகிரிக்கு குளிர்ச்சியையடைய சுமார் (2,29,80,00,000) இருநூற்று இருபத்தொன்பது கோடியே எண்பது லக்ஷம் வருஷங்களாகும்.

இந்தப்பூமி இப்படிப்பட்ட பயங்கரஸ்திதியிலிருந்து இப்போது இருக்கும்படியான சுக சந்தோஷங்களுக்கு இருப்பிடமாவதற்குக் காரணம் யாது? கேவலம் அக்கினிமயமாயும்,ஜலமாயும் பல்லாண்டுகளாக இருந்த இந்தப்பிரம்மாண்டமான பூமி தனது தினகதி வருஷகதியில் அணுவளவும் பிசகாமல் அசைந்தாடிக்கொண்டிருக்கத் தாங்கி நிற்பவர் யார்? பிராணஸ்வரூபியாகிய பரமாத்துமாவே யல்லவா? இதோ இந்த ஜகம் கேவலம் ஸ்தூல தேகத்தைப்போல பௌதீக பதார்த்தங்களால் நிறைந்துள்ள அசேதனப்பொருள். இந்த ஜகதேகத்துக்கு பரமாத்துமாவாகிய பிராணனில்லாவிடில் இது மற்ற சூரிய சந்திர அங்காரகாதி கிரஹங்களுடன் கிட்டித் தாக்கிக்கொண்டும், ஒன்றோடொன்று இடித்து அடித்துக்கொண்டும், சின்னபின்னமாகியும் அதோகதியாய்விடும்; அப்படிப்பட்ட அபாயங்க ளுண்டாகாதபடி பரமாத்துமா தனது சக்தியினால் தாங்கி ஆட்டிக்கொண்டிருக்கிறார் என்பது திண்ணம்.

---

இடி என்பது என்னவென்று தத்துவசாஸ்திரத்தின்படி சோதிப்போமாகில் (எலக்ற்றிசிற்றி என்னும்) மின்சாரத்தினாலுண்டாகும் கர்ஜ்ஜனையாம். நமது மண்ணுலகத்தை ஆகாயமாகிய வாயுசமுத்திரம் மூடிக்கொண்டிருக்கிறது. நமது பூமியின்மேல் இருக்கும் ஜலம் சூரிய வெப்பத்தினால் ஆவியாக பரிணமித்து அந்த ஆகாய சமுத்திரத்தில் மேகங்களாக மாறுகிறதைப்போலவே, பொட்டிலுப்பு, கந்தகம், மெழுகு முதலான திரசவஸ்துக்கள், சில மேகங்களில் அதிகமாகச்சேரும். அதிகமாகச் சேரச்சேர அம்மேகங்கள் கருத்து அடர்ந்து காணுகின்றன. அப்படிக் கருத்து அடர்ந்து காணுவதனால், இனி திரசவஸ்துக்கள் அம்மேகங்களில்

சேர்ந்திருக்கமுடியாமல் ஒன்றுக்கொன்று தேய்ப்பினால் எரிந்து நமது பூமியின்மீதாவது, அல்லது நிரவவஸ்துக்கள் அதிகமாக சேர்ந்திராத வேறு மேகங்களின்மீதாவது மின்சாரமாகப்பாயும். அப்படிப் பாய்ந்து பரக்கும் பிரகாசமே மின்னல். மின்னல், ஆகாய சமுத்திரத்தில் இடையொன்று பிறிக்கொண்டு பாய்வதனால் ஆகாய சமுத்திரம் அலைஅலையாக அலைக்கப்பட்டு பயங்கர சப்தம் உண்டாகிறது. இந்த சப்தமே இடி—மின்னல் ஒரு விநாடிக்கு (196000) லக்ஷத்துத் தொண்ணூறாயிரம் மயில்கள் தூரம் செல்ல, இடி ஒரு விநாடிக்கு (1115) ஆயிரத்து நூற்றுப்பதினைந்து அடிகள் தூரம் பிறிக்கொண்டு பாயும். இப்படிப்பாயும் ஓர் வெளிவெட்டின் வேகத்தைத் தடுக்க (12220) பன்னிரண்டாயிரத்து இருநூற்று இருபது குதிரைகளின் சக்தியுள்ள இயந்திரம்வேண்டும்; ஆ! இடியானது இந்தப்பிரபஞ்சத்துக்கு எவ்வளவுபயங்கரமானது.

ஆகவே, பரமாத்துமா இவ்வுலகத்திற்குப் பிராணன்; அவரிடத்திலிருந்தே எல்லா உலகங்களும் உண்டாகி அவரைப்பற்றிக்கொண்டே அந்தரத்தில் அசைந்துக்கொண்டிருக்கின்றன. எதுவும் அவரது கருத்தைமீறிநடக்கவல்லதல்ல. எதுவும் அவரது நியமத்தினாலேயே அதனதன் செய்கைகளில் நியோகிக்கப்பட்டிருக்கின்றன. யார் காம குரோத லோப மோஹாதிகளில் மமதையடைந்து பாபத்தில் விருப்பமுடையவர்களாகி அவரால் நியமிக்கப்பட்ட தருமமாகிய எல்லையைக் கடந்து செல்லுகின்றனரோ அவர்களுக்கவர் இடிக்கிற இடியைப்போல் அதிபயங்கரமானவராகிறார். யார் அவரைச் சாந்தம், சத்தியம், பக்தியினால் அறிகின்றனரோ அவர்கள் நித்திய பதவியைப் பெற்று அழிவற்ற பிரமானந்தத்தை யனுபவிக்கின்றனர்,

Whatever is in this world, all proceeding from God, move in Him the Life: He is most terrible and is as the impending thunderbolt. They who know Him attain Immortality.

## (7). முண்டகோபநிஷத்து

2-வது முண்டகம் 2-வது கண்டம் 5-வது வாக்கியம்.

யஸ்மிந்த்யௌஃ ப்ருதிவீசாந்தரீக்ஷ மோதம் [மநஸ்
ஸஹப்ராணைச்ச ஸர்வைஃ; தமேவைகம்
ஜாநத ஆத்மாந மந்யாவாசோ விமுஞ்சத
அமருதஸ்யைஷ ஸேதுஃ.

பொழிப்புரை.

இவ்விடத்தில் விண்ணுலகமும், மண்ணுலகமும், ஆகாயமும், மனதுடன் எல்லாப்பொறிகளும் நிலைப்பட்டிருக்கின்றன. ஒன்றாகிய அந்தப் பரமாத்மாவை அறியுங்கள், அவருக்குப் புறம்பாகிய வார்த்தைகளை விடுங்கள், மோக்ஷமார்க்கத்துக்கு இவர் ஸேதுவைப் போன்றவர்.

விசேஷ உரை.

ஆகாயமானது இந்தப் பிரபஞ்சத்தின் எல்லாப் பக்கங்களிலும் வியாபித்துக் கவிந்துக்கொண்டிருக்கும் இயற்கைப் பொருள். அது நாம் கண்ணினால் காணக்கூடாததும், தெளிவும், வர்ணமற்றும் லேசானதுமாக இருக்கினும், பிரபஞ்சத்திலுள்ள மற்றப் பதார்த்தங்களுக்குள்ள சலனம் எடை முதலிய குணங்கள் உண்டு. நாம் அதைப் பரிச உணர்ச்சியினால் அறிந்துக்கொள்வதோடேகூட அது அசைந்து நமது தேகத்தின்மீது தாக்கும்போதும் தெரிந்துக்கொள்ளுகிறோம். இவ்வளவு லேசான இந்தப் பொருளைத் தகுந்த கருவியைக்கொண்டு சோதிப்போமாகில், ஒரு கன அடி எடையுள்ள ஆகாயத்தின் பளுவு 573⅓ நெல்லெடை உள்ளதாகவும், பதிமூன்று கன அடி எடை ஒரு ராத்தலாகவும், இந்த கணக்கின்படி பூமியின்மேல் பரவி இருக்கும் ஆகாயத்தின் பாரம் ஒவ்வொரு சதுரங்குலத்தின் மீதும் பதினைந்து ராத்தலுக்குக் குறையாத அளவினதாய் இருக்கிறதன்றி,27,810 கன அடியுள்ள ஆகாயம் ஒரு டன் எடையுள்ளதென்றுங் காணப்படுகிறது. சாதாரண ஆகிர்தியுள்ள ஓர் மானிட சரீ

ரத்தில் 2,000 சதுராங்குல வீதியுண்டு. இப்படிப்பட்ட சரீரம் அதைச் சுற்றியிருக்கும் 30,000 ராத்தல் அல்லது சுமார் பதினான்கு டன் ஆகாயத்தினால் அழுத்தப்படுகின்றது. அப்படி அழுத்துவதில் சரீரம் நசுங்கிப்போகாமலிருப்பதற்கேற்ற ஜலபாகம் தேகத்திலிருப்பதால் ஒன்றையொன்று அழுத்துவதனால் சரீரம் சுகஸ்திதியைப் பெறுகின்றதாம். ஆகாயமானது நமக்கு அதிசமீபத்திலிருக்கினும், அது நமது பூமிக்கு நாற்பத்தைந்து மயில் உயரம் வரையில் பரவி அகன்ற சமுத்திரத்தைப்போல் கவிந்துகொண்டிருக்கிறது. இதை இருநூறு மயில் உயரம் வரையில் பரவி இருப்பதாக எண்ணுவோருமுண்டு.

---

ஆகாயம் என்பது ஒரே பூதியம் என்று அநேக வருஷங்களாக எண்ணி இருந்தார்கள். பிறகு, போன நூற்றாண்டிலே அதைத் தக்கபடி பரிசோதிக்க அது ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் தண்ணீரிலிருக்கிற பிராணவாயுவு ஒரு பங்கும், நைட்ரோஜன் (Nitrogen) என்னும் உப்பு வாயுவு நான்கு பங்கும் கொஞ்சம் (Carbon) கரிவாயுவாதிகள் கலந்ததாய் காணப்பட்டது. இதில் பிராணவாயுவுதான் ஜீவஜந்துக்களுடைய பிராணாதாரம். ஆனால் ஆகாயம் முழுவதும் இந்த பிராணவாயுவாக இருந்தால் எந்த ஜந்துவும் உயிரற்றுப்போம். ஆகவே அது உப்புவாயுவோடு அளவாகக் கலக்கப்பட்டிருக்கிறது. ஜீவஜந்துக்கள் சுவாசத்தை உள்ளே வாங்கும்போது இந்த மிச்ரவாயுவை உள்ளே கொள்ளுகின்றன. இந்த மிச்ரவாயுவில் உள்ள ஆக்ஸிஜன் (Oxygen) பிராணவாயுவு சுவாசாசயத்தில் அமைந்திருக்கும் இரத்த நாளங்களிலுள்ள இரத்தத்தோடு கலந்து அதைச் சுத்திப்படுத்தி சுவாசத்தை வெளியில்விடும்போது, ஜீவகோடிகளுக்கு உபயோகமற்ற நைட்ரிஜின் (Nitrogen) என்னும் உப்புவாயுவும் தேகத்திலுண்டாகும் விஷத்தன்மையான கரித்திராவகம் போன்ற வாயுவும் வெளியில் வந்துவிடுகின்றது. ஜீவகோடிகளுக்கு உபயோகமற்று வெளியில் வந்துவிடும் இந்தவிஷவாயுவை கந்தமூலங்களாகிய புல், பூண்டு, செடி, மரங்களுக்கு

இன்றியமையாததா யிருக்கின்றது. இந்த விஷவாயுவை சோதிப்போமாகில் இது அடுப்புக்கரி (Carbon) சத்தும், ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் பிராணவாயுவும் கலந்த மிச்ரவாயுவாக இருக்கிறது. இந்த வாயுவிலுள்ள அடுப்புக் கரிச்சத்தை கந்தமூலங்களாகிய தாவரங்கள் கதிரவன் வெளிச்சத்தின் உதவியால் பிரித்து கிரஹித்துக்கொண்டு அதற்கு உபயோகமற்ற ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் பிராணவாயுவைவெளிப்படுத்த, அந்தப் பிராணவாயுவை ஜீவகோடிகள் கிரகித்துக்கொண்டு வாழுகின்றன. ஜீவகோடிகளும் தாவரங்களும் ஆகாயம் என்னும் இந்தப் பூதியத்தை இப்படிப் பிரித்துத் தம்தமக்கு இன்றியமையாத சத்துக்களை கிரஹித்துக்கொண்டு ஒன்றுக்கொன்று உதவிசெய்துக்கொள்வது என்ன ஆச்சரிய அமைப்பு! ஆகாயத்தின் உதவியினால் தான் பூமியில் அருணோதயத்துக்கு முன்னும், அஸ்தமானத்துக்கு பின்னும் படிப்படியாக வெளிச்சமுண்டாகவும், படிப்படியாக வெளிச்சம் குறையவும் ஆகிறது. ஆகாயமில்லாவிடில் ஆதித்தன் அஸ்தமனமான உடனே திடீரென்று இருள் பிரபஞ்சத்தைக் கவிந்துக்கொள்ளும். மேலும் ஆகாயம் அண்டத்தை சூழ்ந்துக்கொண்டிருப்பதால் வெய்யோன் வெப்பத்தினால் குட்டை, குளம், சமுத்திரங்களிலிருக்கும் ஜலமானது ஆவிரூபமாக எழுந்து ஆகாயத்தில் சேர்ந்து நிற்க, அந்த ஆவி குளிர்ச்சியினால் ஜலரூபம் பெற்று மழைத் துளிகளாக பூமியின்மேல் விழுகின்றது. இம்மட்டோ! ஒருவர் பேசும்போது ஆகாயசமுத்திரத்தில் அலைகளுண்டாகி அவ்வலைகள் நமது காதில் மோத நமக்குத் தொனி கேட்கச் செய்கிறது. அது பூமியை அதிகமாகக் குளிர்ந்துபோகாமலும், அதிகமாக உஷ்ணமாகாமலும் ஓர் மெலிந்த துணி போலிருந்து சீத உஷ்ணங்களைச் சமப்படுத்துகின்றது. இந்தப்பூமியில் சேரும் அசுத்தங்களை நீக்கிப் பரிசுத்தமாக்குகின்றது. ஆகாயம் இல்லாவிட்டால் எல்லா ஜீவஜந்துக்களும், தாவரங்களும் பாழ்த்துப்போம். தீயும் விளக்கும் எரியா, கப்பலோடாது, பசு பக்ஷிகளின் ஓசையும் கேட்காது,

கிதவாத்தியங்கள் இருந்தும் பிரயோசனமில்லை. ஆகவே ஆகாயம் நமக்கும் மற்றப்புல் பூண்டு பிராணி சமூஹங்களுக்கும் இன்றியமையாத பதார்த்தம். இப்படிப்பட்ட பெரும் பிரயோசனமுள்ள ஆகாயத்தை அந்த அத்புத புருஷரே படைத்தார். இப்போது நமது பூமியைச்சுற்றிக்கொண்டிருக்கும் ஆகாயமானது 8,983,889,440,000,000,000 பிரஞ்சு ராத்தல் கனமுள்ளதென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே,

பரமாத்துமாவே யாவற்றிற்கும் இரக்ஷகர். இவரே யாவற்றிற்கும் ஆதாரமானவர். இவரை அறியுங்கள், இவருக்குப் புறம்பான வார்த்தைகளை விட்டுவிடுங்கள். இவரைவிட்டு ஒரு வார்த்தையும் சொல்லாதேயுங்கள், இவரைவிட்டு ஒரு விஷயத்தையும் நினையாதேயுங்கள், இவரைவிட்டு ஒரு காரியத்தையும் செய்யாதேயுங்கள்; உண்மையாக இவருடைய சரணையடையுங்கள்; அப்பொழுது உலகபாபதாபமோகங்களிலிருந்து விடுபட்டு அழியாப்பதவியை நீங்களடைவீர்கள். இவர் அழியாப்பதவியை அடைவிக்கும் மார்க்கத்திற்கு சேதுவைப்போன்றவர்.

By Him are sustained the heavens, the earth, the sky, and mind with all the senses. Know Him, the One, and leave all talk. He is the Bridge to Immortality.

---

## (8). முண்டகோபநிஷத்து

2-வது முண்டகம் 1-வது கண்டம் 3-வது வாக்கியம்.

ஏதஸ்மாஜ்ஜாயதேப்ராணோ மநஸ்ஸர்வேந்த்ரியாணிச ।
கம்வாயுர்ஜ்யோதிராப:ப்ருதிவீ விச்வஸ்யதாரிணீ.

பொழிப்புரை.

இவரில் பிராணனும், மநசும், எல்லா இந்திரியங்களும், ஆகாயமும், காற்றும், தீயும், யாவற்றையும் தாங்கிக்கொண்டிருக்கிற பூமியும் உண்டாகின்றன.

## விசேஷ உரை.

பூமியானது ஜலரூபமாக இருந்தகாலத்திலுண்டான ஜலப்பிராணிகளின் தேகக்கூடுகளாகிய கிளிஞ்சில்கள், பல கரைகள், சங்குகள், நத்தையோடுகள், ஞண்டுஓடுகள், பவளத்தண்டுகள், மீன்சப்பட்டைகள் முதலானவைகள் பூமியின் அடியிலும், பாறைகளுக்கு அடியிலும் காணப்படுகின்றன. அந்த ஜலப்பிராணிகள் இக்காலத்து ஜலப்பிராணிகக்கு வேறு ரூபமுடையவைகளாகவும் இருக்கின்றன. அக்காலத்திலிருந்தபிராணிகள் இக்காலத்தில் இல்லை. இக்காலத்திலிருக்கும் பிராணிகளின் ரூபங்கள் வேறு வேறு வகையாக இருக்கின்றன. இவைகளுக்கு கணக்கேகிடையா. தாது ரூபமான பிராணிகள் அநந்தம், தாவரவர்க்கருபமான பிராணிகள் அநந்தம். மண்ணைப்போலவும், கல்லைப்போலவும் இருக்கும் பிராணிகளநந்தம், இலையைப்போலவும், சருகைப்போலவும். காயைப்போலவும், கனியைப்போலவும் இருக்கும் பிராணிகள் அநந்தம். நமது சாதாரணப் பார்வைக்குத்தோன்றுமல் கேவலம் அணுதரிசினி முதலான கண்ணுடிகளினது சகாயத்தினுல் மாத்திரம் பார்க்கக்கூடிய பிராணிகள் அநந்தம். அணுதரிசினி முதலான கண்ணுடிகளுக்கும் அகப்படாமல் அந்தரத்தில் அணுவிலும் அணுவாக இருக்கும் பிராணிகள் அநந்தம். நாய் குடிக்கும் ஜலத்தில் இருக்கும் பிராணிகள் அநந்தம், நாம் சுவாசம் விடும்போது நமக்குள் போவதும் வருவதுமாக இருக்கும் பிராணிகள் அநந்தம். நமது தேகத்தின் வெளியிலும் உள்ளிலும் வதிந்து வரும் பிராணிகள் அநந்தம், ஆகவே, நமது பார்வைக்கு ஜடஜகத்தாய் இருக்கும் இந்த பிரபஞ்சமே ஒரு பெரிய பிராணி என்று சொல்லலாம்.

இதின் எந்தப்பக்கத்திலும் பிராண சத்துக்கள் நிறைந்திருப்பது பிரத்தியக்ஷம். இதன் எந்த அணுவிலும் உயிருள்ள சத்துக்களிருத்தல் பிரத்தியக்ஷம். இதன் ஒவ்வொரு பௌதிக அணு உயிர்கள் தமக்கினமான அணுக்களோடு தாவித்தழுவுதல் பிரத்தியக்ஷம் இதின் ஒவ்வொரு பிராணி

யும் தமக்கினமான வற்றைக்கவர்ந்து தம்மைப்போல ஆக்கிக்கொள்ளுதல்பிரத்தியக்ஷம். பருவதசிகரங்கள் இந்தப்பூமியாகிய பெரிய பிராணியின் சுவாசக்கருவிகளாக இருக்கின்றன. பெரிய ஆறுகள் இரத்தக்குடல்களாக இருக்கின்றன. இதிலிக்கும் செடி, கொடி, விருக்ஷங்கள் ரோமங்களைப்போலிருக்கின்றன. அன்பு நிறைந்த அன்னையானவள் தனது அருமை மக்களைக் கட்டித்தழுவி மார்போடணைத்துப் பால்கொடுத்துப் பாதுகாப்பதுபோல் பிரபஞ்ச பிராணியாகிய தாய் தனது அடிபாகமாகிய உடலில் சகல பொருள்களையும் உற்பத்தியாக்கி அதன் மக்களாகிய அநந்தகோடி தாவர ஜங்கமங்களைப் போஷித்து வருகின்றாள். ஆ! என்ன! ஆச்சரியமான அமைப்பு! இந்தப் பிரபஞ்சத்திலிருக்கும் பிராணிகோடிகளின் கணக்கையும். பேதங்களையும். எண்ணி முடிக்க யாராலாகும்?

## பிராணிகள் உற்பத்தி விபரம்.

ஆதித்தனிடமிருந்து அக்கினி ஜலபிண்டாமாகப் பிரிந்த இந்தப் பிரபஞ்சமானது பல்லாண்டு பல்லாண்டுகளாகப் பல கவர்ச்சிகளினால் பந்தப்பட்டுச் சுழல்வதனால்; இதன்மேலிருந்த பெரும்பாகமான உஷ்ணம் படிப்படியாகத் தணிந்த பிறகு, மேல்புறணி அல்லது மேல்கிட்டம்தோன்றியதாக முன்னமே சொல்லி இருக்கிறோமல்லவா? அதாவது.—

ஒருவெங்காயத்தை எடுத்து அதன்மேல் தோல்களை உரித்துக்கொண்டே போனால், அது பல புரைகளால் மூடப்பட்டிருத்தல் பிரத்தியக்ஷமல்லவா? அதுபோலவே, இந்தப் பூமியும் அக்கினிமய ஸ்வரூபத்திலிருந்து இப்போதிருக்கும் படியான ஸ்திதியை அடைய, பல்லாயிரம்வருஷங்களையும், பல்லாயிரம் கனதியானகிட்டம் அல்லது புறணிகளையும் பெற்றிருக்கிறது.—

இதைப்பற்றியே பூதகதத்துவசாஸ்திரிகள் இந்தப்பூமி, சூரியனைவிட்டுப் பிரிந்த பிறகு, இப்போதிருக்கும்படியான குளிர்ந்ததன்மையை அடைய அநேக காலாவதிகளையும், கிட்

டத்தின் கனதிகளையும் கணித்து கணக்கிட்டிருக்கிறார்கள்—அந்தக் கணக்கின்படி.

இந்தப் பூமியின் (முதல்காலாவதியில் Eozoic) ஆழ்ந்த அடிப் புறணி அல்லது கிட்டம் 70,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (இரண்டாவது காலாவதியில்—Palaeozoic) 42,000 அடியில் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (3-வது காலாவதியில்—Mesozoc) 50,000 அடியில் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (நான்காவது காலாவதியில்-Tertisry) 3,000 அடியில் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (ஐந்தாவது காலாவதியில்—Post Tertiary) 500 அடிகள் கனதியுள்ளதாகவும் படிப்படியாக மாற்றம்பெற்றும்; அப்புறணிகளின் முறையே முதலில் கடற்பஞ்சைப் போன்ற பூண்டுகளையும்; பிறகு, பெரன்சு என்னும் கல்கிளப்பிப்பூண்டுகளையும், பிறகு இலையற்ற செடிவிருக்ஷங்களையும், பிறகு இலைகளோடு கூடிய செடிவிருக்ஷங்களையும் படிப்படியாக விளையும்படி செய்வித்தும்; அவைகளின் சவசத்துக்களைக்கொண்டு, அவ்வவ்பூண்டு பயிர் விருக்ஷங்களுக்கேற்றபடி முறையே முதலில் (மனோரா—Monera) என்ற சூக்ஷ்மரூப ஐந்துக்களையும், பிறகு மச்சங்களையும், பிறகு ஊர்வனகளையும், பிறகு பால் தரும்படியான பிராணிகளையும், பிறகு பசு பக்ஷி மனுஷர்களையும் படைக்கப் பெற்றதாக ஸ்பஷ்டமாகிறது.—(எப்படியெனில்)

ஜீவமூலத்தோடு (Oxygen) ஜலமூலத்தை (Hydrogen) ஓர் அளவாகச்சேர்ப்பதினால், ஜலம் உண்டாகிறதைப்போல்; (சகல ஸ்தாவர ஜங்கமங்களுக்கும் சரீரியாகிய சர்வேசுவரனது சுவாசங்களெனச் சொல்லத்தகும்) மூலகாரண பூதங்களாகிய பிராணவாயுவையும், (Oxygen) கரிமூலவாயுவையும், (Carbon) ஜலவாயுவையும், (Hydrogen) உப்புவாயுவையும் (Nitrogen) பெரும்பாகமாகவும்; அவைகளோடுகந்தகசத்து (Sulphur) பாஸ்கரசத்து (Phosphoius) முதலான மூலகாரணபூதங்களைச் சிறுபான்மையாகவும் சேர்த்து, மூல

பிரகிருதியோடு கலக்க; அவைகள் நாளாவட்டத்தில் திரண்டு, தாது கந்தமூல பிராணிகளாகிய அவற்றின் சவசத்துக்களால் புரோட்டப்ளாசம் (Protoplasm) என்னும் பஞ்சுப்பாசைப்போன்ற பிராணோற்பத்திப்பொருளைத் தோன்றும்படி செய்விக்க, அதிலிருந்து பிராணிகோடிகள் ஜனிக்கின்றன.

அந்த பிராணோற்பத்தி பஞ்சுப் பாசாகிய புரோட்டப்ளாசம் என்னும் ஜலஜல்லிக்குழம்பை, தக்க சூக்ஷ்ம வீக்ஷணி என்னும் (Microscope) அணுதரிசினிக் கண்ணாடியைக்கொண்டு சோதிப்போமாகில்; அதில்கணக்கற்ற கெபிகளையும், அநேக வட்டவடிவான அறைகளையும்காணலாம். அந்தக் கெபி அறைகளும், அவ்வறைகளுக்குள் சூக்ஷ்மாணுக்களாகக் காணுகிறவைகளும் பிராணிகளாம்.

அந்த அறைகளில் அந்த ஸ்திதியில் இருக்கும் பிராணிகளுக்கு மனேரியா (Monera) ஏக சூக்ஷ்மாணுப் பிராணிகளென்று பெயர். அவைகளுக்கு உருவமும் வருணமுமில்லை அவைகளிலிருந்து அமீயேபா (Amaebae) என்னும் (அடிக்கடி மாறுந்தன்மையுள்ள) சுழல் சூக்ஷ்ம ஜீவிகள்தோன்றுகின்றன—அவைகளிலிருந்து புரோடாஜா (Protazoa) என்னும் (உருவமும் வருணமு மற்ற) சூக்ஷ்ம ஜல சரங்கள்தோன்றுகின்றன—அவைகளிலிருந்து ஸ்பாஞ்சி—கடற்பாசியைப்போன்ற பிராணிகள்(Sponges)தோன்றுகின்றன—அவைகளிலிருந்து பவளக்கொடியாக்கும் (Coral Builder) பிராணிகள்தோன்றுகின்றன; அவைகளிலிருந்து வெள்ளிமீன்களும், (Star fish) நத்தை நண்டு புழுபூச்சிகளுந் தோன்றுகின்றன; அவைகளிலிருந்து ஊர்வனகளும், அவைகளிலிருந்து பக்ஷிகளும். வௌவால்களும்; அவைகளிலிருந்து மிருகங்களும்; அவைகளிலிருந்து வானரங்களும்; அவைகளிலிருந்து வாலில்லாக்குரங்குகளும் தோன்றியபிறகு, கடைசியாக—மானவஜாதியாராகிய மநுஷர் தோன்றினர்—ஆ என்ன ஆச்சரியம்! கேவலம் தாதுகந்தமூலத்திலிருந்தும், அநுரூபமான அற்பபிராணிகளிலிருந்தும், பிரபல ஞானப்பொற்புப் பிரகாசிக்கும் பிரஜைகளை (Evolve) தோன்றச்செ

ய்த சர்வேசுரனுடைய சத்தியைவர்ணிக்கயாவரால் முடியும்? இக்கருத்தைக்கொண்டே இந்நாட்டுத் தத்துவஞானிகள் சித்து அசித்துக்களுக்குச் சரீரியான சர்வேசுரன் மச்ச, கூர்ம, வராஹ, நாரசிம்ம, வாமன, இராமாதி அவதாரங்கள் எடுத்து ஜகத்கோடிகளையும், ஜந்துகோடிகளையும் வாழ்விக்கச்செய்கிறார் என்று வர்ணித்து எழுதி இருக்கிறார்கள்;

இதுவரையில் மானிடக் காக்ஷிக்கும், கேள்விக்கும் தெரிந்தும், ஜந்து லக்ஷண சாஸ்திரிகளால் குறிக்கப்பட்ட கணக்கைச் சோதிப்போமாகில், இந்த உலகில் கேவலம் ஜலப்பாசியைப்போல அசைந்து வாழும் பிராணிகளில் 20,000 வித வகுப்புகளும், பால்கொடுத்துப் பாதுகாக்கும் பிராணிகளில் 2,000 விதங்களும்; மீன்களில் 12,000 விதங்களும், அணுரூப ஜந்துக்களில் 10,000 விதங்களும், சமுத்திர கிளிஞ்சல் ரூபமான பிராணிகளில் 6,000 விதங்களும், பூமி நத்தை வகைகளில் 2,000 விதங்களும், சிறுபூச்சி இனங்களில் 70,000 விதங்களும், வண்டு இனங்களில் 35,000 விதங்களும், இரத்தமுள்ள பிராணிகளில் 300,000 விதங்களும். மின்னும் பூச்சிகளில் 10,000 விதங்களும் வண்ணாரப்பூச்சி இனங்களில் 15,000 விதங்களும், பக்ஷி ஜாதிகளில் 6,000 விதங்களும், மிருகஜாதிகளில் 2000 விதங்களும் இருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

மானவ ஜாதியாராகிய நாமும் பிராணிகளே. ஆனால் நாம் மற்றெல்லாப் பிராணிகளைப்பார்க்கிலும் மேன்மையான மனதையுடையவர்களாக படைக்கப்பட்டிருப்பதால், இந்தப் பிரபஞ்ச, பிராண சிருஷ்டியில் மனுஷர் சிறந்தவர்கள்.

---

பிராணன் என்பது இன்னதென்று முன்னமே தெரிவித்தோம். சிலர் பிராணனே. மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆத்துமா என்கிற பலபெயர்களுடையதென்று எண்ணுகிறார்கள். சிலர்: பிராணன் என்பது கேவலம் உயிர் அல்லது ஜீவன் என்றும், அது தன்னைப்பற்றியாவது அல்லது வேறு விஷயத்தைப்பற்றியாவது யோசிக்கும் தசைக்கு மனம்

என்ற பெயரைப்பெறுகிறதாகவும் எண்ணுகிறார்கள். ஆத்து மதத்துவ சாஸ்திரிகளில் சிலர்: மனம் என்றால்=எது தன்னையும் வேறு பதார்த்தங்களையும் பற்றி நினைக்கிறதோ கருதுகிறதோ, எண்ணுகிறதோ, உணருகிறதோ, ஊகிக்கிறதோ சிந்திக்கிறதோ, வெறுக்கிறதோ, விரும்புகிறதோ, நிதானிக்கிறதோ, கவனிக்கிறதோ, சம்மதிக்கிறதோ, இத்தியாதி பலவித பகுத்தறிவுகளுக்கெல்லாம் கருவியாக இருக்கும் சக்தி எதுவோ அதுவே மனது என்று தீர்மானித்தார்கள். மனது என்னும் சேதனம் இல்லாவிடில் பிரபஞ்ச பௌதீக பூதியங்கள் ஒன்றோடொன்று சேரவும், சேர்ந்தவை பிரியவும் முடியா—மற்றத் தாவர ஜங்கம ஜீவிகளும் தம் நிலையைவிட்டு நகரவும் தமக்கு இனமான வேறு பொருள்களைத் தம்மிடம் வருவிக்கவும் முடியா—ஆகவே, இந்தப் பிரபஞ்ச சிருஷ்டிகளுக்கு மனதே முக்கியமானது.

---

தீ.—என்பது இன்னதென்று திட்டமாக அறிந்தவர்கள் அபூர்வம். இரசாயன சாஸ்திரப்படி சோதிப்போமாகில், இந்தப் பிரபஞ்சத்தில் இருக்கும் உஷ்ணம், வெளிச்சம், காந்தம், மின்சாரம் என்னும் நான்கு சூக்ஷ்ம பூதியங்கள் மற்றப் பதார்த்தங்களைத் தம்மயமாக்கிக்கொள்ளும் சக்தியைப் பெற்றிருக்கிறதாம்; ஆகவே, தீயின் சத்து சகல பதார்த்தங்களிலும் அடங்கி இருக்கிறது. அது கேலோரிக் தாபகர தாதுவினாலும், தேய்ப்பு, உரைப்புகளினாலும் வெளியில் வந்து பிரபஞ்சப் பாகுபதார்த்தங்களைக் கெட்டியாக்கியும், கெட்டியான பதார்த்தங்களைப் பாகுபதமாக்கியும் பின்னும் பல நன்மைகளுக்கு இன்றியமையாப் பூதியமாகின்றது.

ஆதியில் அக்கினி ஜ்வல ஆவியாக சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகத்தின் அடியில் கண்ட அக்கினிக் கடல்களில் இருந்தும் பிரதி நிடிஷந்தோறும் கக்கும் உஷ்ணத்தை, பார்த்தியாக்கச் சூரியன் முதலான வேறு கிரஹங்களிலிருந்து அடிக்கடி உஷ்ணம் வராவிட்டால், இந்தப் பிரபஞ்சமே ஓர் பெரிய பனிக்கட்டியாகி விடும்.

நமது பூமியானது ஒரு பனிக்கட்டியாகக்கொண்டு சூரியனிடமிருந்து ஒவ்வொரு வருஷத்திற்குவரும் உஷ்ணத்தை இந்த பூமியின்மேள் பரப்பினால் அந்த உஷ்ணம் 100 கன அடி பனிக்கட்டியை கரைத்து நீராக்கிவிடும்; அல்லது வருஷாந்திரம் சூரியனிடமிருந்து ஒவ்வொரு சதுர அடிக்கு வரும் உஷ்ணம ஒரு கன அடி நிறையுள்ள பனிக்கட்டி 54 ராத்தலானால், 5,400 ராத்தல் பனியைக் கரைத்துவிடும். இந்தச்சூரிய உஷ்ணம் இப்படி இந்தப்பூமிக்கு வராவிட்டால் அது அந்த சூரிய உலகத்தில் 55748 அடி அல்லது பத்தரை மயில் கனதியுள்ள பனிக்கட்டியைக் கரைத்துவிடும். இத்தியாதி கணக்குகளினால் சூரியன் நமது பூமிக்கு வருஷந்தோறும் அதன்மேல் 100 அடி கனமுள்ள பனிக்கட்டியைக் கரைக்கும்படியான உஷ்ணத்தையும்; மற்ற கிரஹங்கள் 85 அடி கனமுள்ள பனிக்கட்டியைக் கரைக்கும்படியான உஷ்ணத்தையும் தருகின்றன. இப்படிப் பெறுவதில் சூரியனிடமிருந்து வரும் உஷ்ணத்தில் நூற்றுக்கு நாற்பது பாகத்தையும், மற்ற கிரஹங்களிலிருந்து வருவதில் நூற்றுக்கு 60 பாகத்தையும் ஆகாயம் கிரகித்துக்கொள்ளுகின்றது. இந்தப் பூமியின் பெரும்பாகமான வெளிச்சமும், உஷ்ணத்தோடே வருகின்றது. வெளிச்சம் ஒரு விநாடிக்கு 190,000 மயில் வேகமாக ஓடக்கூடியதாயினும், பூமிக்கும். சூரியனுக்கும் 9 கோடியே 20 லக்ஷம் மயில் தூரமிருப்பதனால், சூரிய வெளிச்சம் பூமிக்கு வர சுமார் 8 நிமிஷங்களாகும்.

---

மேகம்.—சமுத்திரம், குளங்குட்டைகளில் உள்ள ஜலம் சூரிய உஷ்ணத்தினால் ஆவியாக மேலே எழும்பி ஆகாயத்தில் நிற்பதே மேகமாம். பூமியின்மீதுள்ள சமுத்திரங்களிலிருந்து பிரதி தினமொன்றுக்கு 450 கோடி ராத்தல் நிறையுள்ள ஜலம் ஆவியாகப்போய் ஆகாயத்தில் சேருகின்றது. இப்படி ஆவியாகப் பரிணமிக்கும் ஜலம் நுண்ணிய நீர்த்துளிகளாகவும், அணுக்களாகவும் ஆகாயத்தில் தொங்குகின்றன. இப்படி ஆகாயத்தில் தொங்கும் ஆவிரூபமான மேகங்களின் மேல் சூரியனுடைய பிரகாசம் விழ அவைகள் காலைமாலை

களில் பொன்மலை, வெள்ளிமலைகளைப்போலவும், பின்னும் பலவித வர்ணபர்வதங்களைப்போலவும் பிரகாசிக்கின்றன. இப்படிப் பிரகாசிக்கும் அநேக மேகங்கள் பூமிக்கு இரண்டு மயில்களுக்குள்ளாகவே இருக்கினும், சில ஐந்தாறு மயில்கள் வரையிலிருப்பதாக எண்ணுவோருமுண்டு. பலமான காற்று வீசும்போது மேகங்கள் ஒரு மணிக்கு ஐம்பது அல்லது அறுபது மயில்கள் ஓடும். இப்படி ஆவியாய்ச் சேரும் மேகம் குளிர்ச்சியினால் மறுபடியும் ஜலரூபமடையும்; அந்த ஜலம் ஆகாயத்தைவிடப் பளுவானதாகையால், ஆகாயத்தில் மிதக்கமாட்டாமல் காற்றினால் இங்குமங்கும்கொண்டுபோகப்பட்டு, துளித்துளியாகப் பூமியின்மேல் மழையாகவிழும். இப்படி பூமியின்மேல் ஒரு வருஷத்தில் பெய்யும்மழை ஒரு சதுரகன மயில் அடங்கிய ஓர் தடாகத்தை நிரப்பக்கூடியதாக இருக்குமென்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இப்படிப் பெய்யும் மழைநீரில் சிலபாகம் பூமியில் சுவறியும், சிலபாகம், பயிர், பச்சை, செடி, ஜந்துக்களுக்கு உபயோகமாகியும், பெரும்பாகம் சிற்றாறுகளாகவும் பேராறுகளாகவும்பாய்ந்து சமுத்திரங்களில் விழ, மறுபடியும் சூரிய உஷ்ணத்தினால் ஆவியாக எழுந்து ஆகாயத்திற் கலந்து மேகரூபமாக மாறி, மறுபடியும் மழையாகப் பூமியின்மேல் பெய்து பெருமைப்படுத்துகின்றது. இப்படி மேகமானது மழையாகப்பெய்யும் தண்ணீர் எவ்வளவு அருமையானபேறு பாருங்கள்.

## காற்று.

பூமியின் ஒரு பாகத்திலிருக்கும் ஆகாயமானது உஷ்ணமாகும்போது அது மேலெழும்ப, அயலிலிருக்கிற குளிர்ந்த ஆகாயம் அதன் ஸ்தானத்துக்கு வந்து அதை நிறப்புகிறது—ஆகாயத்தின் இந்த ஓட்டமே காற்று— காற்றுகளில் பலவகைகளும் பலபெயர்களும் உண்டு.

இந்துசமுத்திரத்தின் வடகிழக்கும் தென்மேற்குமாய் மாறி யடிக்கிறகாற்றைப்பருவகாற்றென்றும் பூமத்தியரேகைக்கு இருபக்கத்தில் வருஷமுழுதும் ஒரே திசையாக அடிக்

குமகாற்றுக்கு வர்த்தகக்காற்றென்றும், சிலவேளைகளில ஒரு திசையாயும். சிலவேளைகளில் இன்னமொரு திசையாயும் வீசுகிற காற்றுக்கு மாறு காற்றென்றும். வெவ்வேறு திசையான காற்றுகள் ஒன்றையொன்று சந்தித்து சேர்ந்து சுழல்வதனல் சுழல் காற்றென்றும்? விஸ்தாரமான இடமெல்லாம் சுற்றி வீசும் சுழல்காற்றுக்குப் புயல்காற்றென்றும்பின்னும் பலவகைக்காற்றுகள் பலவகைப் பெயர்களைப் பெற்றிருக்கின்றன. அக்காற்றுகளில சாந்தமானகாற்று மணி ஒன்றுக்கு 7 மயிலும். இளங்தென்றல் 14 மயிலும். சீரான நல்ல காற்று 21 மயில், கடுங்காற்று 40 மயிலும் பெருங்காற்று 60 மயிலும், புயல்காற்று 80 முதல் 150 மயிலும் ஓடும். மணி என்றுக்கு 100 மயில் ஓடும். வேகத்தையுடைய காற்று ஒரு சதுரடியின்மேல் 50 ராத்தல் பாரத்தை யுதைக்கும் சக்தியுள்ளது.

## தண்ணீர்.

அநேக ஆயிரவருஷங்களாக அப்பு என்னும் தண்ணீர் ஓர் தனிச்சரக்கு அல்லது தனிபூதியம் என்று எண்ணப் பட்டிருந்தது அதன் பெருமையைப்பற்றி இருநூறுவருஷங்களுக்குமுன்சோதித்துப்பார்க்கையில்இதில் ஆக்ஸிஜன் என்னும் பிராணவாயும், அதற்கிரண்டத்தனை பாகமுள்ள (Hydrogen) என்னும் ஜலவாயும் கலந்த கலப்பென தெரியவந்தது. இந்த ஜலவாயு எரியும்படியான சரக்கு, பிராணவாயு எரியும்படியான சக்திகளற்றதாக இருக்கினும், எரிகிறதற்கு உதவிசெய்கிறது. தண்ணீரில் இந்த இரண்டு வாயுக்கள் சேர்ந்திருப்பதைப்பரிக்ஷிக்க விரும்பில், மின்தாதுவினல் இந்த இரண்டையும் வாயுவாக பிரித்து மின்தாதுவின சகாயத்தால் மறுபடியும் தண்ணீராக்கிவிடலாம். இப்படி இரண்டு வாயுக்களால் உண்டான தண்ணீரின் பெருமையைச்சொல்லவும் வேண்டுமோ? ஆகவே,

உலகம் படைத்ததற்கு வேண்டிய நீர், காற்று, தீ முதலிய உபகாரணங்களையும் பிராணன் மனசு, மெய், வாய், கண், மூக்கு, செவி முதலான எல்லாப்பொறிகளையும் அந்த எல்லாம் வல்ல பூரண புருஷனே விரும்பிப் படைத்தான்,

By Him are created life, mind, and all the senses, sky, air, light, water and the all containing earth.

---

## (9). பிரஹதாரணியம்

5-வது அத்தியாயம் 8-வது பிராஹ்மணம் 9-வது வாக்கியம்.

*ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸனே கார்கி*
*நிமேஷா முஹூர்த்தா அஹோராத்ராண்யர்த்த*
*மாஸாமாஸா ருதவஸ் ஸம்வத்ஸரா இதி*
*வித்ருதாஸ்திஷ்டந்தி.*

### பொழிப்புரை.

ஓ! கார்க்கி! இவ்வழிவற்ற பொருளினது நியமனத்தினால் நிமிஷங்களும் முகூர்த்தங்களும் அகோராத்திரிகளும் பக்ஷங்களும் மாதங்களும் பருவங்களும் வருஷங்களும் நியமத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன.

### விசேஷ உரை.

### காலம்.

காலமும் இடத்தைப்போல வகுக்கப்படாதது; ஆயினும் ஒவ்வொரு பதார்த்தங்களுக்கு இடையிலிருக்கும் இடத்தைக்கொண்டு அளவை அறிவதைப்போலவே. பதார்த்தங்களின் ஏதாவது இரண்டு இயக்கம் அல்லது சலனத்தினால் கால அளவை அறிந்துக்கொள்கிறோம். இந்தப்பூமி தன்னைத்தானே சுற்றுவதனால்தான் கால அளவை அறிகிறோம்—இந்தப்பூமியைச் சூரியன் சுற்றிவருகிறதாகச் சிலர் எண்ணினார்கள். ஆனால் ஜோதிடசாஸ்திரப்படி சோதிக்கச்சே, அது பிசகென்று கண்டுபிடிக்கப்பட்டது. நமது பூமியானது தன்னைத்தானே சுற்றுவதனால் நாம் சூரியனை கிழக்கில் காணும்பொழுது அதன்பக்கமாக நம்மைத் திருப்புகிறது? பூமி சுற்றிச்சுற்றி தூரத்திற் போவதனால் சூரியன் மேற்கில் இறங்கினிவது போலத் தோன்றுகிறது. அதனால்தான் இராப்பகல் என்ற பேத முண்டாகிறது. இப்படித் தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருக்கும் பூமி சூரியனைச்சுற்றி வருஷத்திற்கு ஒரு

நாம் சுழல்வதனால் பருவகால பேதங்களுண்டாகின்றன. எப்படியெனில், நமது பூமியின் அறுபது அசைவுகள் அல்லது சலனத்தால் ஒரு விநாடியும், அறுபது விநாடி ஒருநாழிகையும், இரண்டரை நாழிகை ஒரு ஹோரையும். மூன்றேமுக்கால் நாழிகை ஒரு முகூர்த்தமும், ஏழரை நாழிகை ஒரு ஜாமமும், எட்டு ஜாமம் ஒருநாளும், ஏழு நாள்கள் ஒரு வாரமும் நான்கு வாரங்கள் ஒரு மாதமும், இரண்டு மாதங்கள் ஒரு பருவமும், ஆறு பருவங்கள் ஒரு வருஷமுமாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

காலத்தை, தத்துவசாஸ்திரிகள் நிலையின் அளவு என்றும், கவிகள் காலம் சாஸ்வதத்தின் ஒரு துண்டு என்றும் சொன்னார்கள். காலபேதம் இல்லாவிட்டால் உலகவியாபாரம் விருத்தியாகாது. காரணகாரியங்களை அறிவது கஷ்டம்; ஆகவே, அந்தந்த, காலங்களில் இயற்கையாக உண்டாகிற சகல காரியங்களும் அவரது நியமத்தினாலேயே உண்டாகின்றன. அவரது கடக்கக்கூடாத நியமங்களுக்குப் புறம்பாகச்சிறிது காரியமும் சம்பவிக்கமாட்டாது.

It is through His Rule, Nimishas, Muhurthas, Days and Nights, Fortnights and Months Seasons and years are upheld.

---

## (10). பிருஹதாரணிய உபநிஷத்து

5-வது அத்தியாயம் 8-வது பிராம்மணம் 9-வது வாக்கியம்.

ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி ! ப்ராச்யோந்யா நத்யஸ்யந்தந்தெ ச்வேதேப்யஹ பர்வதேப்யஹப்ர தீச்யோந்யா.

பொழிப்புரை.

இவ்வழிவற்ற பொருளினது நியமத்தினால் ஓ! கார்க்கி! கிழக்குத் திக்கை நோக்கி ஓடுகிற வேறு ஆறுகளும், மேற்றிசையை நோக்கி ஓடுகிற வேறு ஆறுகளும் பனியினால் வெண்மையாயிருக்கின்ற மலைகளிலிருந்து பெருகுகின்றன.

## விசேஷ உரை.

நமது பூமியின் மேல்பாகத்தைக் கவிந்துக்கொண்டிருக்கும் ஆகாயசமுத்திரத்தின் அமைப்பு ஆச்சரியப்படத்தக்கதெனில், நமது பூமியின் அடியிலிருக்கும் அக்கினி சமுத்திரத்தின் அமைப்பு அதிலும் ஆச்சரியப்படத்தக்கதாயிருக்கிறது. நமது பூமியின் மூன்று மயில் ஆழததில் இருக்கிற உஷ்ணம் வெந்நீர் காங்கைக்குச் சரியானாலும், நாற்பது மயில் ஆழம் வரையில் வெட்டிப் பார்க்கில் 4,000° டிக்ரி உஷ்ணமிருப்பதால், அங்கு அணையா அக்கினி ஜலசமுத்திரம் இருப்பது பிரத்தியக்ஷமாகிறது. இப்படி பூமியின் அடிவயிற்றிலிருக்கும் அக்கினி மேல் நோக்கி வராதபடி அநேக மயில் திண்ணங்கொண்ட கெட்டியான பாறைகளையும் மண், கல், ஜலம் முதலானவைகளையும் அடுக்கடுக்காக வைத்து மூடப்பட்டிருப்பது பிரத்தியக்ஷம்.

## பூகம்பம்.

அப்படி மூடப்பட்டிருக்கும் அக்கினியானது சில சமயங்களில் பற்றி எரிந்து பூமியின்மேல் ஓடை உடைகிறபடியினால் பூகம்பம் உண்டாகிறது. பூமியின் வயிற்றிலிருக்கும் அக்கினி இப்படி எரிந்து எழும்பிவரும்போது முதலில் பயங்கரமான பல இடி சப்தங்களைப்போல் கர்ஜனையுண்டாகும். மேற்கிந்திய தீவுகளுக்கடுத்த செண்டுவின்சென்டு தீவில் பூகம்பம் சம்பவித்தபோது உண்டான பூமத்திய சப்தம் 632 மயில்கள் தூரம் கேட்டது. இந்த சப்தம் 5,000 மயில் விஸ்திரணமுள்ள நாடுகளுக்கும் கேட்டதாம். விசூவியஸ் மலைபடிவாரத்திலுண்டான சப்தம் லண்டன் பட்டணத்தாருக்கும் கேட்டதாம் கோட்டபாகஸி என்றும் எரிமலைக்குகிலுண்டான சப்தம் 463 மயில்கள் தூரம் கேட்டதாம்.

1774-ஸூம் மெகிஸிக்கோவுக்கு அடுத்தகுறைக்வாட்டோ என்னு பட்டணத்தில் பூமியதிர்ச்சி சம்பவித்தபோது உண்டான சப்தம் ஒரு மாத காலம் வரையில் பூமிக்குள்ளாகவே பல பீரங்கி வெடிகளைப்போன்ற கர்ஜனைகளுண்டாகி,

குடிகளெல்லாம் பயந்து ஓடிவிட்டார்கள். 1822-ஆம் தென் ஆப்பிரிகாவின் மேல் கரையில் 1,200மயில்கள் தூரத்துக்கு பூகம்பமுண்டாகி தரையை பல அடி உயரத்திற்கு எழுப்பிவி ட்டது. 1855—ஆம் லிஸ்பன் பட்டணத்தில் பூகம்பமுண் டாகி ஊரையே பாழாக்கிவிட்டது. 1819-ஆம் இந்தியா வில் உண்டான பூகம்பத்தினால் குச்சு நாட்டில் 70 மயில் நீளமும் 16 மயில் அகலமான பூமி பத்தடி எழும்பிவிட்டது. பூகம்பங்களினால் சிலசமயங்களில் மண்ணுலகத்துக்கு மஹாத்தான கஷ்டங்களுண்டாகினும், அவைகளால் மானிடருக்கு அபூர்வமான லோகங்களும் பூமியை வளமாக்கும் எருவுங் கிட்டுகின்றன.

## அக்கினிமலைகள்.

சில சமயங்களில் பூமியின்மேலிருக்கும் தண்ணீர் அதன் வயிற்றுக்குள்போய் நீராவியாகி உருகிநிற்கும் பாறை முதலான வஸ்துக்களைக் கொப்பளிக்கச் செய்கிறதினால் உருகிநிற்கும் பாறையும் பூமியின்மேல்தோட்டின் மெலிந்த பாகத்தையும் உடைத்துக்கொண்டு வெளியே பீறிக்கொண்டு வரும். அப்படி உள்ளே இருக்கும் அக்கினி வெளியே பீறிக் கொண்வரும் துவாரங்களே அக்கினி மலைகளாம்.

இதற்கு திருஷ்டாந்தமாகப் பெரும்பான்மையான அக்கினிமலைகள் கடலுக்குச் சமீபத்திலிருக்கின்றன. இப்படிக் கடலுக்குச் சமீபத்திலிருக்கும் சில அக்கினிமலைகள் சிலவேளைகளில் கடலுக்குக் கீழே புடைத்து புதுத் தீவுகளை உண்டாக்கியதும் பிரத்தியக்ஷம்.

இப்போது நமது பூமியில் முன்னூறு அக்கினிமலைகள் வரையிலிருக்கின்றன. இவைகளில் எல்லாம் உன்னதமானது அமெரிக்கா கண்டத்தில் இருக்கும் கோட்டபாகிவி என்பதுவே,—சாந்துவிச் தீவிலிருக்கும் கிளவுயேய அக்கினி மலை எல்லா எரிமலைகளிலும் பெரியது.

ஐரோப்பாக்கண்டத்தில் எத்னு ஹெக்லா. விசூவியசு என்ற அக்கினிமலைகள் இருக்கின்றன.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு இந்த வெசூவி யஸ் மலையுச்சியின்மேல் ஆச்சரியமான பருமனும் வடிவுமுள்ள பயங்கர மேகம் கவிந்து நிற்பதாகத் தோன்றியது; உடனே சாம்பலும், கல்லும் கலந்த நீராவிஸ்தம்பம் 1,200 அடி உயரத்துக்கு பீறிட்டுக்கொண்டு எழுந்து அதன் சுற்றுப்பக்கம் அநேக மயில் விசாலத்தில் பரவ; உஷ்ண ,கல்லுகளும், சேறும், சாம்பலும்சோனு மாரியாகப்பெய்துமூன்று பெரிய பட்டணங்களையும் அங்குள்ள முப்பதடி உயரமுள்ள கட்டிடங்களையும் மூடிவிட்டது. ஆசியாகண்டத்திற்கு அடுத்த சுமேதிரா, ஜாவா என்னும் தீபங்களுக்கு இடையிலிருக்கும் சுண்டாவாய்க்காலில் பயங்கரமான திக்குத்தலும், பூகம்பமும் சம்பவித்தது. கரகத்தோவா என்னும் அக்கினி மலையின் பெரும்பாகம் சமுத்திரத்துக்குள் முழுகிவிட்டது. அதனாலுண்டான கடலலை அநேகமாயிரம் மயில்தூரத்திற்கு எட்டினது. காற்றலை உலக முழுவதும் சுற்றிப்போனது. அந்த வெடியின் சப்தம் அநேகமாயிரம் மயில் தூரம் கேட்டது. சில கற்கள் 30 மயில் உயரத்திற்கு எறியுண்டுபோயின.

## சேற்றெரிமலைகள்.

அக்கினிமலைகள் அக்கினியினால் உருகிய வஸ்துக்களை ஆறுகக்கொட்டிவிடும் கக்கங்களினால் இந்த பூமியைச் செழிப்பாக்குகின்றன. ஆனால் தண்ணீரையும், சேற்றையும் மாத்திரம் தள்ளுகிற வேறு சில மலைகளுமுண்டு. இவை பூமியின் அகட்டிலுள்ள கிணறுகளிலிருந்து உண்டாகிறதாகத் தோன்றுகின்றன. தென் அமெரிக்காவில் கார்த்தஜீனவுக்கருகே சுமார் 20 சேற்றெறி மலைகளிருக்கின்றன. சிசிலித் தீவில் 150 அடி உயரமான மலை இருக்கின்றது. அம்மலைகள் ஒவ்வொன்றிலும் கருஞ்சேறு எப்போதும் தளும்பிக்கொண்டும் ஓயாமல் குமிழ்விட்டு வடிந்துகொண்டுமிருக்கின்றன. சில சமயங்களில் பூமி யதிர்ச்சியும், இடி சப்தம்போன்ற உட்சத்தமும் உண்டாகி கருஞ்சேறும் கல்லும் வேகமாய் பீறிட்டு இருநூறு முன்னூறு அடி உயரம்

ஆகாயத்தில் எழுந்து விழுந்து சேற்றோடைகளாகவும் பாய்ந்ததுமுண்டு. இப்படி அக்கினி மலைகளும், சேற்றெறி மலைகளும் இருக்கிற விடங்களில் வெந்நீர் ஊற்றுகளிருப்பது சாதாரணம். பூமியின் வயிற்றிலிருக்கும் அக்கினியினால் தாக்கப்பட்ட பாறைகளிலிருந்து சுரந்து வரும் ஜலமே வெந்நீர் ஊற்றுகளுக்குக் காரணம்.

ஐஸ்லாந்துதீவில்அநேகவெந்நீர் ஊற்றுகளுண்டு; அங்கு 15 அடி உயரமான வெந்நீர் ஊற்றாகிய பெரிய வெந்நீரூற்று 66 அடி விட்டமுடையதாயும், அதன் மத்தியில் 8 அடி விசாலமான ஒரு துவாரம் பூமிக்குள் போகிறதாயும் காணப்படுகிறது. அந்த துவாரத்தில் இருந்து ஓயாமல் வெந்நீர் பீறிக்கொண்டுவருகிறது. சில சமயங்களில் இருநூறு முன்னூறு அடி உயரத்துக்கு காலணைகளோடும் நீராவிப்படலங்களோடும் பீறிக்கொண்டுவந்து ஸ்தம்பமாக ஏறிவிடும். இப்படிப்பட்ட அநந்த வெந்நீர் ஊற்றுகளும் நீராவிகளும் ஐக்கிய நாடுகளிலும், நேபில்சுக்கு அடுத்த சொல்வடார் என்னும் இடத்திலும், இந்தியாவில் மங்கிருக்குச் சமீபத்திலும், கங்கோத்தர்க்குச் சமீபத்திலும் இருக்கின்றன. ஆகவே, பூமியின் வயிற்றிலிருக்கும் அக்கினி சமுத்திரத்தினால், அக்கினிமலை, சேற்றெறிமலை, வெந்நீர் ஊற்றுகளுண்டாகிறதென்றும் இவைகளின் அக்கினிச்சூடானது நாளாவட்டத்தில் மாறி, குளிர்ந்த கேவலம் அவற்றின் கக்கலாகிய கல்லும் மண்ணும்கூடி உன்னத மேடாக நிற்பவையே பருவதங்களாம்.

## மலைகள்.

பருவதங்கள் பிரபஞ்சத்தின் பெரும் செல்வங்கள் அவைகள பிரபஞ்சத்தின் பிராணி கோடிகளுக்கும், முக்கியமாக பிரபஞ்சத்தின் மக்களாகிய மானவ ஜாதியாருக்கும் இயற்கைக் காப்புகள். இப்பூவுலகில் பருவதங்கள் இல்லாவிடில் பெரும்பாகமான பூபிரதேசங்களும், தாது கந்தமூல கிருமி கீடகபிராணி சமூகங்களும் பயங்கரமான காற்றுகளினாலும், கடல் அலைகளினாலும் அடிக்கப்பட்டும் இடிக்கப்

பட்டும் பாழ்த்துப்போய்விடும். பருவத பிரதேசங்களின்மேல் பனிபெய்து அவைகள் கட்டியாக உறைந்துபோக, அதன்மேல் பிரபாகரனுடைய பிரகாசம் படும்போது காணும் காக்ஷியை கிரந்தங்களில் எழுதிமுடியுமோ; அந்தப்பனிக்கட்டிகள் உருகி நீராகமாறி, பேராறுகளாகி, பூபிரதேசங்களின் மீதுபாய்ந்தோடிக் கணக்கற்றகந்தமூல கிரமி கீடகப்பிராணி சமூகங்களைப் பாதுகாத்தும், பிறகு பெருங்கடலில் புகுந்து கலந்து மறுபடியும் சூரிய உஷ்ணத்தினுல் ஆவிரூபமாகமாறி மேகங்களாகியும்; விசேஷமாக உயர்ந்திருக்கும் உன்னத மலைகளின் மரம், விருக்ஷம் முதலான பச்சை பயிர்களின் கவர்ச்சிகளால் இழுக்கப்பட்டுப்போய் மழையாக வருஷிக்கச்செய்யும் விந்தையை என்னென்று விவரிப்பாம். இவ்வுலகத்தின் தாது கந்தமூல கிருமி கீடாதி பிராணிகளின் பிழைப்புக்கு இன்றியமையாத ஜலத்தின் பெரும்பாகம் பருவதப் பனிக்கட்டிகளினுலும், பருவத விருக்ஷாதி செடிகளால் இழுக்கப்பட்டு பெய்யும் மழைகளினுலும் உண்டாவதனுல், அப்பருவதங்களின்மேல் மானிடர் எதேச்சையாகப் போய்க் கெடுக்காவண்ணம், சிங்கம், புலி, கரடி யானை, பாம்பு, அட்டை முதலான இயற்கைக்காப்புகளை வைத்துக் காக்கப்பட்டிருக்கின்றன.

இவைகளில் இந்துதேசத்தின் வட எல்லையிலிருக்கும் ஹிமாசலமலை 27,000 அடி அல்லது ஐந்து மயில் உயரமுள்ளதாயும்; அமெரிக்காவிலிருக்கும் ஆண்டீசுமலை நாலாயிரம் மயில் நீளமும், 20,600 அடி அல்லது சுமார் நான்கு மயில் உயரமுள்ளதாயும்; ஐரோப்பாவில் ஆல்பஸ்மலை 15,217 அடி மயில்கள் உயரமுள்ளதாயும், இந்துகுஷ்மலை 20,000 அடி மயில் உயரமுள்ளதாயும், அராராத்துமலை 17,230 அடி, மயில் உயரமுள்ளதாயும், இன்னும் அநேக மலைகள் அநேக ஆயிரம் அடி மயில்கள் உயரமுள்ளவைகளாகவும் இருக்கின்றன.

இப்படி இந்தப் பிரபஞ்சத்தின்மீது பிரபஞ்சாண்டப் பருமனுடைய பருவதங்களிருக்கிறதனுல், இவ்வளவு பளுவையுடைய பிரபஞ்சம் எப்படி அந்தரத்தில் அசைந்தாடக்கூடும

என்று சிலர் சந்தேகிக்கக்கூடும். ஆனால் பூமியையும் அதன் பருவதங்களையும் சாஸ்திரோக்தமாகச் சோதிக்கையில், பூமியிலிருக்கும் பிரம்மாண்ட மலையானது பூமியின் பளுவை 1,600 பாகமாக்கில், அதில் ஒரு பாகத்தின் பளுவுகூட பிரபஞ்சத்தின் எந்தப் பெரிய பருவதமும் இல்லையென்று தோன்றும். அதாவது ஒரு பெரிய கிச்சிலிப்பழத்தின்மேல் ஒரு சிறு மணல் அணுவை வைத்தால் எவ்வளவாகுமோ அவ்வளவேதான் உலகத்தின் உன்னத உயர்ந்தமலை இருக்கும் ஸ்திதி என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

## நதிகள்.

இப்படிப் பெரும்பாகமான பருவதங்களிலிருந்து உற்பத்தியாகிவரும் நதிகளால் நமக்கு உண்டாகும் நன்மைகளைச் சொல்லவும் வேண்டுமோ; நதிகள் பிரபஞ்ச கந்தமூல கிருமிகீடக பிராணி கோடிகளின் உயிருக்கு இன்றியமையாதனவாய் இருப்பதன்றி, ஜனசமூஹத்தாருடைய சம்பத்தை விருத்தியாக்கவும்; வேளாண்மை நாவிகா வர்த்தகம் முதலானவைகளை விருத்தியாக்கவும் சிறந்த சாதனங்களாக இருக்கின்றன. இவைகளின் அமெரிக்காக் கண்டத்திலோடும் மிசிஸிபிநதி 4,194 மயில் நீளமும் ஆப்பிரிக்காவிலுள்ள நைலிநதி 4,020 மயிலும், சீனாவிலுள்ள யாங்டிஸ்கியாங் 3,158 மயிலும், அமூர் 2,920 மயிலும், ஒபி 2,700 மயிலும் வால்கா 2,400 மயிலும், ஓஆங்கோ 2,500 மயிலும், தானியூப் 2,000 மயிலும், சிந்துநதி 1,800 மயிலும, கங்கை 1,570 மயில் நீளமும் பின்னும் அநேக நதிகள் அநேக ஆயிரம் மயில் நீளமும் தக்க அகலமும் உள்ளவைகளாக இருக்கின்றன. இந்த நதிகளால்தான் அகண்ட சமுத்திரங்கள் அழகாக இருக்கின்றன.

## சமுத்திரங்கள்.

இந்த பிரபஞ்சத்தின் பெரும்பாகம் அகண்ட சமுத்திரத்தினால் மூடப்பட்டிருக்கினும், அது அந்தந்த இடத்துக்கும் ஸ்திதிக்கும் தக்க பெயர்களையும், ஆழ அகலங்களையும் பெற்றிருக்கின்றன. இவைகளுக்கு முறையே, பாஸிபிக்கு

அத்திலாந்திக்கு இந்தியா சமுத்திரங்களென்றும், வடதென் சமுத்திரங்களென்றும் பெயர். இவைகளில் பாஸிபிக்கு சமுத்திரம் கிழமேலாக 11,000 மயிலும், 8,000 மயில் அகலமும், 78,000,000 சதுரமயில் சுற்றளவுமுள்ளது. அத்திலாந்திக்கு 8,600 மயில் நீளமும் 5,000 மயில் அகலமும், 25,000,000 சதுரமயில் சுற்றளவுமுள்ளது, இந்து சமுத்திரம் 4,500 மயில் நீளமும் அகலமும், 14,000,000 சதுரமயில் சுற்றளவுமுள்ளது. வடதென் சமுத்திரம் 9,000 மயில் நீள அகலமும், 30,000,000 சதுரமயில் சுற்றளவுமுள்ளது. இவைகளில் சில 5,000 பாதம் அல்லது 30,000 அடி அல்லது ஆறுமுதல் ஏழுமயில்கள் ஆழமுள்ளவைகளாக இருக்கிறதன்றி இவைகளுக்குள் அநேக உன்னத பருவதங்களும் தாது கந்தமூல கிருமிகீடக பிராணிகளும் இருக்கின்றன இந்த சமுத்திர ஜலம் கெட்டுப்போகாதபடி அதில் அநேக வித பூதியங்களிருக்கினும் 3,051,342 கன மயில் பருமன் அல்லது இமயமலையின் மூன்றில் ஒரு பாக முடையதான சாதாரண உப்புகலந்து இருக்கிறது.

ஆகவே மிகுந்த நன்மையே வடிவாகக்கொண்ட கடவுளினது நியமிக்கினால் விரைவாக ஓடுகிற ஆறுகளனைத்தும உயர்ந்த மலைகளினின்றும் வெள்ளமாகப்பெருகி எண்ணிறந்த உயிர்களுக்கு மிகுந்த உபகாரம் செய்வனவாயும், நன்மையைத்தருவனவாயும் இருக்கின்றன. பார்வைக்குப் புறம்பாகி அறியப்படாத யாதொரு மலையின் தெரியாத யாதொரு இடத்தில் சேருகிற நீர்த்திரளை நாம் அதினின்று அநேக யோசனை தூரத்திலிருந்தும் ஆயாசமின்றி அடைகிறோம்.

It is through His Rule, Rivers that run East and West, flew from the Eternal snow of the mountains.

---

## (11). சுவேதாசுவதர உபநிஷத்து

### 3-வது அத்தியாயம் 7-வது வாக்கியம்.

ததஃபரம் ப்ரஹ்மபரம் ப்ருஹந்தம் யதாநிகாயம் ஸர்வபூதேஷுகூடம்; விச்வஸ்யைகம் [ந்தி. பரிவேஷ்டிதாரமீசம் தம்ஞாத்வா அம்ருதாபவ

பொழிப்புரை.

சகல காரியங்களுக்கும் காரணராகிய பரப்பிருமம் யாவற்றிற்கும் பெரியவர், அவர் சகல பூதங்களிலும் உடலுக்கிடையில் மறைந்திருப்பவர். இவ்வுலகத்தைச் சூழ்ந்திருக்கிற ஒருவராகியஅவ் வீசனை அறிந்து உலகத்தார் அழிவற்றபதவியைப் பெறுகின்றனர்.

விசேஷ உரை.

இந்தச் சுருதிவாக்கியத்தில் பரமாத்துமா சகல பூதங்களிலும் உடலுக்கிடையில் மறைந்திருப்பவர் என்றும், இவ்வுலகத்தைச் சூழ்ந்திருப்பவர் என்றும் சொல்லியிருப்பதால் சிலர் பரமாத்துமாவே ஜீவனுயும், ஜடஜகத்தாயும் பரிணமித்திருக்கிறூர் என்றும்; ஆகவே ஜகமும், ஜீவனும் பரமாத்துமாவைவிட வேறல்லவென்றும் சந்தேகிக்கக்கூடும், அவ்வித சந்தேகம் நீங்கவே—

பிருஹதாரணியம் 5—7—3—முதல்.

யஹபிருதிவ்யாம் திஷ்டந் பிருதிவ்யா அந்தரோ ப்ருதிவீநவேத யஸ்யபிருதிவீசரீரம் யஹ [யம் ப்ருதிவீமந்தரோயமயத்யேஷத ஆத்மாந்தரி யாமயம்ருதஹ.

யார் பிருதுவியில் இருந்தும் பிருதுவியிலும் வேறாக விருக்கின்றாரோ,—யாரைப் பிருதுவி அறியவில்லையோ,—யாருக்குப் பிருதுவி சரீரமோ,—யார் அந்தர் வர்த்தியாயிருந்து பிருதுவியை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வருப பரமாத்துமாவே உனது அந்தரியாமியாயுமிருக்கின்றார் என்றும்.

யோப்சுதிஷ்டந் நத்ப்யோந்தரோய மாபோனவிதுரயஸ்யாபஹ சரீரம்யயோமந்த மயத்யேஷத ஆத்மாந்தாயாமயம்ருதஹ. [ரோய

யார் ஜலத்திலிருந்தும் ஜலத்திலும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை ஜலம் அறியவில்லையோ,—யாருக்கு ஜலம் சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து ஜலத்தை நியமிக்

கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கிறார் என்றும்.

யோக்நௌ திஷ்டந்நக்நே ரந்தரோ யமக்நிர் ந வேதய நாக்நிச்சரீரம் யோக்நிமந்தரோ யமயத் ஆத்மாந்தர்யாம்யம்ருதஹ. [யேஷத

யார் அக்கினியிலிருந்தும் அக்கினியினும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை அக்கினி அறியவில்லையோ,—யாருக்கு அக்கினி சரீரமோ,— யார் அந்தர்வர்த்தியாயிருந்து அக்கினியை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயும் இருக்கிறார் என்றும்,

யோந்தரிக்ஷே திஷ்டந்நந்தரிக்ஷாதந்தரோய மந்தரிக்ஷம்நவேதய ஸ்யாந்தரிக்ஷக் சரீரம் யோந்தரிக்ஷ மந்தரோயமயத்யேஷ ஆத்மாந்தாயாம்யம்ருதஹ.

யார் அந்தரிக்ஷத்திலிருந்தும் அந்தரிக்ஷத்திலும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை அந்தரிக்ஷம் அறியவில்லையோ,—யாருக்கு அந்தரிக்ஷம் சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து அந்தரிக்ஷத்தை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தர்யாமியாயுமிருக்கிறார் என்றும்.

யோவாயௌ திஷ்டன்வாயோ ரந்தரோயம் வாயுர்நவேதயஸ்யவாயுச்சரீரம் யோவாயமந்த மயத்யேஷத ஆத்மாந்தர்யாம்யம்ருதஹ. [ரோய

யார் வாயுவிலிருந்தும் வாயுவினும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை வாயு அறியவில்லையோ,—யாருக்கு வாயு சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து வாயுவை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தர்யாமியாயுமிருக்கிறார் என்றும்.

யோதிவிதிஷ்டந்தி வோந்தரோயம் த்யௌர் வேதயஸ்ய த்யௌச் சரீரம் யோதிவ மந்தரோய மயத்யேஷத் ஆத்மாந்தர்யாம் யம்ருதஹ.

யார் சொர்க்கத்திலிருந்தும் சொர்க்கத்திலும் வேருக விருக்கின்ருரோ,—யாரை சொர்க்கம் அறியவில்லையோ,—யாருக்குச் சொர்க்கம் சரீரமோ,—யார் அந்தர் வர்த்தியாயிருந்து சொர்க்கத்தைநியமிக்கின்ருரோ அந்த அமிருத ஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயு மிருக்கிருர் என்றும்.

யஆதித்யே திஷ்டந்நாதி த்யாதந்தரோய மாதித்யோ, நவேதய ஸ்யாதித்யஹசரீரம் யஆதித்ய, மந்தரோய மயத்யேஷ்த ஆத்மாந்தர்யாம் யம்ருதஹ.

யார் ஆதித்தியனிலிருந்தும் ஆதித்தியனிலும் வேருக விருக்கின்ருரோ,—யாரை ஆதித்தியன் அறியவில்லையோ,—யாருக்கு ஆதித்தியன் சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து ஆதித்தியனை நியமிக்கின்ருரோ? அந்த அமிருத ஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கிருர் என்றும்.

யோதிக்ஷு திஷ்டந்தி க்ப்யோ யந்தரோயம் திசோனவிதுர்ய ஸ்யதிக்சரீரம் யோதிசோந்த மயத்யேஷ்த ஆத்மாந்தர்யாம் யம்ருதஹ. [ரோய

யார் திக்குகளிலிருந்தும் திக்குகளிலும் வேருகவிருக்கின்ருரோ,—யாரை திக்குகள் அறியவில்லையோ,—யாருக்கு திககுகள் சரீரமோ,—யார் அந்தர் வர்த்தியாயிருந்து திக்குகளை நியமிக்கின்ருரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கிருர் என்றும்.

யச்சந்திர தாரகேதிஷ்டக் ஸ்ச்சந்திர தாரகாதந்த்ரோயம் சந்திர தாரகம்நவேதயஸ்ய சந்திரதாரகச்சரீரம்யச்சந்திரதார கமந்தரோய மயத்யேஷ்த ஆத்மாந்தர்யாம்யம்ருதஹ.

யார் சந்திர தாரக ங்களிலிருந்தும் சந்திர தாரக ங்களிலும் வேருக விருக்கின்ருரோ,—யாரை சந்திர தாரகங்கள் அறியவில்லையோ,—யாருக்குச் சந்திர தாரகங்கள்சரீரமோ

—யார் அந்தர்வர்த்தியாயிருந்து சந்திர தாரகங்களை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தர்யாமியாயுமிருக்கிறார் என்றும்,

**யஆகாசேதிஷ்டந்நாகாசாந்தரோ மாகாசோ நவேதயஸ்யாகாசச்சரீரம் யஆகாச மந்தரோய மயத்யேஷத ஆத்மாந்தர்யாம் யம்ருதஹ.**

யார் ஆகாசத்திலிருந்தும் ஆகாசத்திலும் வேறாக விருக்கின்றாரோ,—யாரை ஆகாசம் அறியவில்லையோ,—யாருக்கு ஆகாசம் சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து ஆகாசத்தை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தர்யாமியாயுமிருக்கிறார் என்றும்,

**யஸ்தமஸிதிஷ்டக்ஸ்தமஸோந்தரோயம் தமோ நவேதயஸ்யதமச்சரீரம் யஸ்தமோந்தரோய மயத்யேஷதஆத்மாந்தர்யாம்யம்ருதஹ.**

யார் இருட்டிலிருந்தும் இருட்டிலும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை இருட்டு அறியவில்லையோ,—யாருக்கு இருட்டு சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து இருட்டை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கிறார் என்றும்,

**யஸ்தேஜஸிதிஷ்டக்ஸ்தேஜசோந்தரோயம் தேஜோநவேத யஸ்யதேஜஸ்ச்சரீரமயஸ்தேஜோந்தரோயம்யத்யேஷத் ஆத்மாந்தர்யம்யம்ரு இத்யதிதைவதமதாதிபூதம். [த**

யார் வெளிச்சத்திலிருந்தும் வெளிச்சத்திலும் வேறாக விருக்கின்றாரோ,—யாரை வெளிச்சம் அறியவில்லையோ யாருக்கு வெளிச்சம் சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து வெளிச்சத்தை நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கிறார் என்றும்,

யஸ்ஸர்வேஷுபூதேஷுதிஷ்டந்ஸர்வேப்யோ
பூதேப்யோந்தரோய ஸ்ஸர்வாணிபூதானி
நவிதுர்யஸ்ய ஸர்வாணி பூதானி சரீரம்
யஸ்ஸர்வாணிபூதான்யந்தரோய மயத்யேஷத
ஆத்மாந்தர்யாம்யம்ருத இத்யநிபூதமதாதியாத்
[மம்.]

யார் எல்லாப்பூதங்களிலிருந்தும்எல்லாப்பூதங்களிலும் வேறாகவிருக்கின்றாரோ,—யாரை எல்லாப்பூதங்களும் அறியவில்லையோ,—யாருக்குளெல்லாப்பூதங்களும்சரீரமோ,—யார் அந்தர்வர்த்தியாயிருந்து எல்லாப்பூதங்களையும் நியமிக்கின்றாரோ? அந்த அமிருதஸ்வரூப பரமாத்துமா உனது அந்தரியாமியாயுமிருக்கின்றார் என்றும் சொல்லப்பட்டன.

மேல் கண்ட சுருதி வாக்கியங்களினால் பிரபஞ்சமுதலான சகல ஜடபதார்த்தங்களெல்லாம் பரமாத்துமாவினாலே நியமிக்கப் படுகின்றனவென்றும், அவர் அவைகளில் வியாபகனாய் நியமிக்கிறபடியால், அவைகளெல்லாம் அவருக்குச் சரீரம்போலிருக்கின்றனவென்றும்; அப்படிக்கிருந்தும், அவர் அவைகளிலும் வேறானவராக இருக்கிறார் என்றும்; எப்படி ஜீவாத்துமா சரீரத்தில் வியாப்தனாய் அதை நியமிக்கிறதுபோலவே, பூமி சூரியன் சந்திராதி அண்டபிண்டாண்டங்களில்வியாப்தரூகப்பிரேரேபிப்பவர் ஒன்றானபரமாத்துமாவே என்றும்; ஆகவே அவருக்கு எல்லாப்பூதங்களும் சரீரமாகச்சொல்லப்பட்டன. உண்மையில் அவருக்கு எவ்வித சரீரமும் இல்லை. அன்றியும் சிலர் (சந்தேகிப்பதைப்போல) அவர் பூதங்கள் ஒவ்வொன்றிலும் வெவ்வேறு ஆத்மாவாகவும் இராமல், எல்லாவற்றிலும் வியாப்தசேதனனாக இருந்து அவைகளை நியமிப்பவர். அவைகள் அவரை உள்ளபடி அறியா; அவர் அவைகளை எல்லாம் ஆளுபவர். அவைகள் ஆளப்படுகின்றவைகள். அவர் கேவலம் ஜடவஸ்துக்களை மாத்திரமல்ல ஜீவாத்துமாக்களையும் நியமித்து அவைகளுக்குள் அந்தரியாமியாயும் இருக்கிறார். ஆகவே,

*அவரால் இவ்வுலகமெல்லாம் படைக்கப்பட்டது. அவர் எல்லாக்காரியங்களுக்கும் காரணர், மேலும் பெரியவர் அவர் உள்ளும் புறமும் எல்லா இடங்களிலும் எப்பொழுதும் இருக்கிறார். அப்படியிருக்கும் அவரை யாரும் கண்களால் பார்க்கமுடியாது. காரணமென்னவெனில், அவர் ஞானமேவடிவாக உடையவர்; ஞானத்தை வடிவாக உடையவரை ஞானத்தினல் மாத்திரம் அறியலாகும். யார் இவரை ஞானத்தால் அறிகின்றனரோ அவர்கள் அவருடன் நித்திய வாழ்க்கையைப் பெறுகின்றனர்.*

Knowing HIM, WHO is the CAUSE, the BEING, snpreme the GREAT, the HIDDEN, in the bodies of all beings, the GOVERNOR and Sole COMPOSER of the Uuiverse, they beeome Immortal.

---

## (12). *பிரஹதாரணிய உபநிஷத்து*

*6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 22-வதுவாக்கியம்.*

*ஏஷஸாவேஸ்வர ஏஷ பூதாதிபதி*
*ரேஷபூதபால ஏஷவேஸுர்விதரண*
*ஏஷாம் லோகானு மஸம்பேதாய*

பொழிப்புரை.

இவர் யாவற்றிற்கும் ஈச்வரர், இவர் எல்லாப்பொருள்களுக்கும் தலைவர், இவர் எல்லாப் பொருள்களையும் காப்பவர், இவர் இவ்வுலகங்கள் தன்னிலைவிட்டுமாறாதபடி சேதுவைப்போல யாவற்றையுந் தாங்கிக்கொண்டிருக்கிறார்.

### *பிராகிருத பிரளயம்.*

*இனி இந்தப்பூமத்தியிலிருக்கும் அக்கினியினல் எத்தனை யோசக்கங்கள் பிண்டங்களாகப் பிறிக்கொண்டுபோகக்கூடும். அப்படி பிறிக்கொண்டுபோகப்போக பூமியின் பலபக்கங்களில் பயங்கரமான பூகம்பங்களுண்டாகி, அவற்றால் பூமி பிளவுபட்டுப்போக, பூமியின்மேலிருக்கும் மலைகளும், விருக்ஷங்களும் வீடுவாசல்களும் இடிந்து முறிந்து சின்னபின்னமாகி விழ; அவைகளில் வாழ்ந்துக்கொண்டிருக்கும்*

பிராணிகோடிகள் பாழ்த்துப்போம்—அப்படியாவதே பிரா கிருதபிரளயம் என்று சொல்லப்பெறும்.

## ஜல பிரளயம்.

ஒருவேளை அப்படிப்பட்ட பல பூசம்பங்களினால் பூமைய த்தில் எரித்துக்கொண்டிருக்கும் பெரும்பாகமான அக்கினி சக்தியும், அதன் உஷ்ணமும் தணிந்துபோக; பூமியின்மேல் பெய்யும் பனியினாலும், மழையினாலும், ஜலபாகம் அதிகரி த்து சமுத்திராண்டமாகிவிட; ஜந்துகோடிகள் அந்த ஜலத் தில் மூழ்கிபாழ்த்ததுப்போம், அப்படியாவதற்கே ஜலபிர ளயம் என்று சொல்லப்பெறும்.

## அக்கினி பிரளயம்.

ஒருவேளை பூமையத்திலிருக்கும் அக்கினிசக்தியினாலும், காற்றினாலும், பூமியின் ஜலபாகம் தினே தினே சுண்டிப் போக, பூமியானது சுத்தமாகக்குளிர்ந்து தக்கைபோலாகிக் கவர்ச்சி சக்திகளற்றுப்போவதனால்; பிராணகோடிகள் பா ழ்த்தும், இந்தபூமி மறுபடியும் சூரியனிடம்போய்ச்சேர்ந்து அக்கினிமய பிண்டமாகக்கூடும். அப்படியாவதற்கே அக் கினிபிரளயம் என்று சொல்லப்பெறும்.

அத்தன்மையான பிரளயங்கள் எத்தனையோ சம்பவித் தன ; இனி எத்தனையோ சம்பவிக்கக்கூடும். இத்தியாதி களுக்குக் காரண கர்த்தாவாகிய ஜகதீசுவரனுடைய சக் தியைஅறியவல்லார்யாவர் ?

## விசேஷ உரை.

இந்த மண்ணுலகத்திற்கு அடியிலிருக்கும் அக்கினி ஜுவாலா சமுத்திரங்களினால் அநேக ஆபத்துகள் உண்டா கக்கூடியதாய் இருக்கினும், மண்ணுலகத்தின்மேலும் அ நேக ஆபத்துக்கள் உண்டாகும்படியான பொருள்களிருக் கின்றன. அவைகளில் சில விண் வீழ்கொள்ளிகளும், அம்பு போலப்பாயும் நக்ஷத்திரங்களுமாம்.

## விண்வீழ்கொள்ளி அல்லது ஆகாசக்கற்கள்

சில காலங்களில் சிறிதும் பெரிதுமானகற்கள் ஆகாய த்திலிருந்து பயங்கரகர்ஜனையுடன் பூமியின்மேல் விழுவதை

அநேகர் பார்த்திருக்கிறார்கள். இப்படி ஆகாயத்திலிருந்து விழும்கற்களைத் தக்கபடி பரிசோதிப்போமாகில்; இதில் இரும்புபாகம் அதிகமாக இருப்பதாகவும்; நிகிலம், கொபாலதம், மக்கினிஸ்காந்தம் குரோமியம், செம்பு, பாஷாணம், தகரசத்து, பொட்டாசியம், சோடாகந்தகம் பாஸ்பரஸம், கார்பன் என்றுதி பதார்த்தங்களால் எரிந்து ஒருவித கருத்தவருணம்பெற்று ஆகாயக்கற்களாகத் தோன்றுகின்றன. பூமியிலிருக்கும்படியான திரவ வஸ்துக்கள் சூரிய உஷ்ணத்தினுல் இழுத்து எடுக்கப்பட்டு, ஆகாயத்தில் ஒன்றோடொன்று உராய்கிறதினுல் நெருப்புப்பற்றி எரிந்து அதன் திரசசத்துக்கள் உருகி கக்கமாக, அக்கக்கமே இக்கற்களாக பூமியின்மேல் விழுகின்றனவோ; அல்லது பூமியின் பலவிடங்களிலிருக்கும் அக்கினி மலைகளிலிருந்து திரசபதார்த்த கக்கம் பீறிட்டுக் கிளம்பி ஆகாயசமுத்திரத்தில் குளிர்ந்து பிறகு பூமியின் மீது விழுகின்றனவோ; அல்லது பூமியானது சூரியனைச் சுற்றி வருவதினுல் இழுப்புக்கவற்சிகளினுல் பூமியின் கற்கள் ஆகாயத்தில் இழுக்கப்பட்டுத் தங்கிவிழுகின்றனவோ; அல்லது நமது சந்திரனுலகத்திலிருக்கும் அக்கினிமலைகளில் கக்கப்பட்ட கக்கம் பீறிட்டு எழும்பி இந்தப் பூமியின் மீது விழுகின்றனவோ; உண்மைவியக்தமாகத் தெரியவில்லை. இந்த ஆகாசகற்களில் சாகிரடீஸ்பிறந்த காலத்தில் எய்கோ பட்டணத்தில் விழுந்தவை இரண்டு இயந்திரக்கற்கள் பருமனும், ஒரு புகைவண்டிப் பளுவுமுள்ளதாயும்; பத்தாம் நூற்றாண்டில் நாரணி நதியில் விழுந்தபயங்கரக்கல் ஆற்றில் முழுகி பூமிமட்டத்துக்கு நான்கடி உயர்ந்திருந்தது. மேற்குசீனு மஞ்சளாற்றில் விழுந்த ஒரு கல் நாற்பதடி உயரமிருந்தது. பாரீசுபட்டணத்தின் காண்காகூழி சாலையிலிருக்கும் ஆகாசக்கல் 20 மணங்கு நிறைகொண்டது.

## அக்கினி பிண்டங்கள்.

சில சமயங்களில் இந்த விண்வீழ்க்கொள்ளிகளே பயங்கர அக்கினிப் பிண்டங்களாகப் பூமியில் கர்ஜித்துக்கொண்டு விழுந்து சுற்றித்திரிவதுமுண்டு. 1807-ம் வருடு டிசம்

பர்மீ 14உ அமெரிக்காவைச்சார்ந்த கானிக்டிகட்டுக்கு அடுத்த வெஷ்டன் பட்டணத்தில் 500 முதல் 2,600 அடி சுற்றளவுள்ள பயங்கர அக்கினிப் பிண்டங்கள் ஆகாயத்தி லிருந்து விழுந்து சுற்றிச்சுற்றி அடுத்திருந்த அநேகப் பொ ருள்களைப் பஸ்மமாக்கியதாம். 1771-ம்௵ ஜூலை-மீ 10உ விழுந்த ஆகாய அக்கினிப் பிண்டம் 1,000 அடி சுற்றளவுள் ளதாயிருந்தது. 1713-ம்௵ ஜனவரி-மீ 18-ம்உ விழுந்த அக்கினி உருண்டை 2,600 அடி சுற்றளவுள்ளதாயிருந்தது இம்மட்டோ! வானத்தில் மப்பு மந்தாரமற்ற சில சமயங்க ளில் அம்புபோல் பூமின்மேல் பாயும் விண்வீழ் நக்ஷத்திரங் கள் அநந்தம். இவைகள் முப்பத்து மூன்றரை வருஷத்திற்கு ஒருமுறை பெரு நக்ஷத்திர மழையாகப் பொழிந்தாலும்; ஒவ்வொரு வருஷமும் ஆகஸ்டு பத்தாந்தேதிக்கு முன் பின் னுள தினங்களிலும், நவம்பர் பதின்மூன்றும் தேதிக்குப் பின்னும் விசேஷமாகத்தோன்றும். 1799-ம்௵ கிரீன்லாந் திலும், 1833-ம்௵ அமெரிக்காக் கண்டத்திலும், 1866-ம்௵ லண்டன் பட்டணத்திலும் நக்ஷத்திர மழை பெய்து பிரஜைகளுக்கு பெரும் பயத்தை யுண்டாக்கியது. இந்த பிரபஞ்சத்துக்கு மேலிருக்கும் ஆகாயக்கற்களும், அக் கினிபிண்டங்களும், அண்டகோளங்களின் கற்களும் அடிக் கடி அநேக விடங்களில் கர்ஜித்துக்கொண்டு விழுந்தால் இந்த விநோதமான உலகம் என்ன கதியையடையும், பாழ்த் துப்போகாதா?

ஆகவே, பிரஜாபாலகராகிய பரமேச்வரர் ஒருவிதத்தி லும் ஒருகாரியமும் அவரை மீறிநடந்து உலகம் ஒரு கெட் டநிலையை யடையாவண்ணம் உறுதியான நியமங்களை ஏற்படு த்தி இவ்வுலகராஜ்யத்தைக் காத்துவருகிறார். உலகம் தன் னிலைவிட்டுமாறிக் கெடாதவண்ணம் ஸேதுவைப்போல இவையாவற்றையுந் தாங்கிக்கொண்டிருக்கிறார்.

This BEING is the SUPREME SOVEREIGN over all. HE is the King. HE is the PRESERVER. He is the Upholder, the Barrier against the disruption of these wonderful worlds.

## (13). சாந்தோக்கிய உபநிஷத்து

8-வது பிரபாடகம 4-வது கண்டம் 1-வது வாக்கியம்

ஸஸேதுர் வித்ருதி ரேஷாம் லோகாநா மஸம்
நைதக்ம்ஸேது மஹோராத்ரே தரதோ[பேதாய
யநஜரா நம்ருத்யுர் ந ஶோகஹ.

### பொழிப்புரை.

அவர் உலகத்தின் பங்கநிவாரணத்தின் பொருட்டு ஸேதுஸ்வ ரூபியாகி யாவற்றையும் தாங்கிக்கொண்டிருக்கிறர். இந்த ஸேது ஸ்வரூபி இராப்பகலகளுக்தும், மூப்பு மரணம் துயரம் இவைகளுக் தும் உள்ளானவரன்று.

### விசேஷ உரை.

நமது தலைக்குமேல் காணும் நக்ஷத்திரங்களில் சிலவற் றிற்கு விநோதவால்களிருக்கின்றன. அவைகளுக்கு வால் நக்ஷத்திரம், அல்லது தூமகேது என்றுதி பல பெயர்களைவ ழங்குகிறோம், இவைகளில், சில சில காலங்களில் கண்களுக் குத் தோன்றியும், சில காலங்களில் காணமலும்போகும் உத்பாதபிண்டங்களே. கிரஹங்கள் யாவும் சூரியனைச்சுற்றி விருத்தமாய் யோடுகின்றன. வால்நக்ஷத்திரங்களோ சில சமயங்களில் சூரியனைக்கிட்டி நெருங்கியும், சில சமயங்க ளில் சூரியனை விட்டு வெகு தூரத்துக்கு ஓடிப்போய்விடுகின் றன. கிரஹங்கள் மேற்கிலிருந்து கிழக்கு முகமாய் உருளுகி ன்றன. சில வால்நக்ஷத்திரங்கள் கிழக்கிலிருந்து மேற்கு மு கமாய் ஓடுகின்றன. மேலும், கிரகங்கள் வானமண்டலத்தின் ஒரு நியமன பாகத்துக்குள்ளேயே யடங்கிச் செல்லுகின் றன. வால்நக்ஷத்திரங்களோ வானமண்டல வீதி விஸ்தாரத் தில் எத்திக்கிலும் யதேச்சையாகச் சஞ்சரிக்கின்றன. இது வரையில் கண்டறிந்த வால்நக்ஷத்திரங்கள்பல.

### வால்நக்ஷத்திரங்களில்.

ஹாலி, எனிக், பியாலா, பெயிலி, பிராஸன, வின்னகஸ், பேட்டல் என்பவை சிறந்தவைகள். இவைகளில் ஹாலி என்னும் வால்நக்ஷத்திரத்தை 1682-ம் வருஷம் சோதிக்கை

யில் அது சூரியனைச் சுற்றிவர 76 வருஷங்களாகிறதாகத் தோன்றியது. இந்த கணிதத்தின்படி அது 1759 வருஷமும், 1835 வருஷமும் தோன்றியது. இது சூரியனுக்கு ஐந்து கோடி மயில் தூரத்தில் போய், பின்னும் 300 கோடி மயில் தூரத்துக்கு வக்ரித்து, பின்வாங்கி யோடியது. இந்தக் கணக்கின்படி அது 1911-ம்௵ நமக்குக் காணப்படும். எனிக் என்னும் வால்நக்ஷத்திரம் மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை சூரியனைச்சுற்றிவருகிறது. சில ஐந்து வருஷங்களுக்கு ஒரு தரம் சுற்றி வரும். இப்படிப்பட்ட அநேக வால்நக்ஷத்திரங்கள் நமது வெறுங்கண்களுக்குத் தோன்றாமல் கோடி கோடி மயில்கள் தூரத்தில் சுகமாக சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. இவ் வால்நக்ஷத்திரங்கள் அரிதாகவும், எதிர்பாராதகாலத்திலும், திடீரென்று தோன்றி மற்ற கிரஹங்களைப்போல் கட்டுபாடுகளுக்கு அடங்காமல் தம் இஷ்டப்படி யதேச்சையாய் சஞ்சரித்துத் திரிவதனால்; சில சமயங்களில் நமது பூமியின்மீதாவது; மற்ற சூரியன் முதலான கிரஹங்களின் மீதாவது தாக்கில், கிரஹாண்டங்கள் கண்டதுண்டமாக அடிபட்டு இடிபட்டு நாசமாக விடக்கூடுமென்று தொன்றுதொட்டு அநேக புத்திமான்களும் பயந்து வந்தார்கள். ஆனால் நமது பூமியின் பிரகிருதி பாகத்தையும். சூரிய பூமியின் பிரகிருதி பாகத்தையும், வால்நக்ஷத்திரங்களின் பிரகிருதி பாகத்தையும் பரிக்ஷிக்கையில் அவைகள் ஒன்றோடொன்று சேர்ந்து தீப்பற்றி எரியாதபடியான பதார்த்தங்களுடனும், ஒன்றோடொன்று வந்து மோதாப் பதார்த்தங்களுடனும் படைக்கப்பட்டிருப்பதாக பிரத்தியக்ஷமாகியது. ஆகவே.

உலகங்களெல்லாம் பொடியாகிப் போகாதவண்ணம். அவர் இவைகளனைத்தையும் தாங்கிக்கொண்டிருக்கிறார் அவர் நித்தியப்பொருள்; அவர் இன்னநாளில் உண்டானார், இத்தனைநாள் வரையிலிருப்பார், இவ்விதமாக இராப்பகல்கள் மூலமாக அவரை அளக்கமுடியாது. அவர் நிர்விகாரர்; ஆனதால் மூப்பும் துயரமும் அவரை அதிகாரம் செய்யமுடி

யாது. யார் காலத்தைப் படைத்தவரோ, அதற்கிருப்பிடமானவரோ, அதன்நியந்தாவோ யாருடைய சரணமடைந்தால் மூப்பு, சாவு, துயரம் இவைகளைவிட்டுநீங்கி காப்பைப்பெறுவோமோ அந்த அமிருதஸ்வரூபனை ஜராமரணங்கள் எவ்விதமாக அதிகரிக்கும்.

He is the Upholder, the Barrier against the disruption of these worlds. This Barrier neither day and night can cross. *nor* decay ; *nor* death, *nor* sorrow.

---

## (14). கடோபநிஷந்து

6-வது வல்லி 3-வது வாக்கியம்.

பயா தஸ்யாக்நி ஸ்தபதி பயா த்தபதி ஸூர்யஹ;
பயாதிந்தரச்ச வாயுச்ச ம்ருத்யுர் தாவதி பஞ்சம [ஹ.

### பொழிப்புரை.

இவரது பயத்தினாலே தீ வெப்பத்தைத்தருகின்றது. இவரது பயத்தினால் சூரியன் ஒளியைத்தருகிறான். இவரது பயத்தினால் மேகமும் காற்றும் ஐந்தாவதான மரணமும் சஞ்சரிக்கின்றன.

### விசேஷ உரை.

இந்தப் பிரபஞ்ச வியாபாரத்துக்குக் காற்று, மேகம், சூரியன், தீ முதலியவைகள் இன்றியமையாதவைகளாக இருப்பனபோலவே மரணமும் இன்றியமையாததாயிருக்கிறது. மரணம் என்பது இல்லாவிடில், இந்த பிரபஞ்சம் இப்போது அநந்தகோடி தாது கந்தமூல கிரமி கீடக ஜீவபிராணிகள் சுகமாக குடியிருக்கும்படியான வீடாகாது. மரணத்தின் சகாயத்தினால்தான் முன்னொருகால் அக்கினி ஜலபிண்டமாக இருந்த இந்த உலகம் இப்போதிருக்கும்படியான மண்ணுலகமாக மாறியது. மண்பாகத்தின் பெரும்பாகம், முன்கந்தமூல கிரமி கீடக ஜீவிகளாகவிருந்து மரணமடைந்தவைகளின் சத்துக்களே.

### மரணம்.

சிறியோர் இருட்டுக்கு அஞ்சுவதைப்போல இவ்வளவு உபயோகமுள்ள மரணத்தைச் சாதாரண ஜனங்கள் கண்டு

பயப்படுகிறார்கள். மரணகாலத்திலுண்டாகிற பெருமூச்சு சன்னி, முகவிகாரம், உற்றோர் பெற்றோரின் அழுகை, இழவுச் சடங்கு, பிரேதத்தின் கோரமான கோலம் முதலானவைகளால் மரணம்பயங்கரமானதாகத் தோன்றினும், புத்திமான்கள் மரணத்தருவாயில் பூரணசந்தோஷம்கொள்ளுதல் பிரத்தியக்ஷம். ஏனெனில், மரணமானது குடிசையைவிட்டு அரண்மனையில் பிரவேசிப்பதைப் போலவும், கந்தைத்துணியைத்தள்ளிப் புதுவஸ்திரம் தரித்துக்கொள்வதைப் போலவும், பள்ளிக்கூடத்தைவிட்ட பிள்ளைகள் தம் சொந்த வீட்டுக்குப்போவதைப்போலவும்—எப்பக்கங்களிலும் சங்கடங்கள் நிறைந்த இவ்வுலகத்தைவிட்டு, எப்பக்கங்களிலும் சந்தோஷம் நிறைந்த சர்வேசுவரருடைய சாயுஜ்யபதவியடைய வழியாக இருக்கிறது. அது இயற்கைக்குச் செலுத்தவேண்டிய கடனாக இருப்பதால் அதைப்பற்றி அஞ்சுவது பாவியத்தன்மையும் பலவீனமுமே; ஆனதுபற்றியே, மரணமானது குரோதத்துக்குக் கம்பீரம், அன்பிற்கு ஒரு துரும்பு, கீர்த்தி அதை நாடுகிறது, விசாரம் அதைக்கண்டு ஓடுகிறது, பயம் அதைக் குடிக்கொள்ளச்செய்கிறது என்று ஓர் சிறந்த ஞானியும் சொன்னார்.

மரணம் எப்போதும் மானிடருடைய சிரசின்மேல் குடிகொண்டிருக்கிறது. ஆகவே, மரணத்தைத் துருக்கி தேசத்தார் தமது தலைப்பாகை மூடுதிரையைப்போல் பாவித்து எப்போதும் நினைவுகூரும்படி அணிவார்களாம். துக்கங்கொண்டாடுதல் பல தேசத்தாருக்குப் பலவகையாயிருக்கின்றன. ஐரோப்பியர் மரணத்தைக் காட்டும் இருட்டான கருப்பு நிறத்தையும்-மரித்தவர்கள் சுத்த இடத்திற்குப் போனார்களென்று காட்ட சீனாவில் வெண்மை நிறத்தையும்-மரம், புஷ்பம் இவைகளின் பழுதாகு தலைக் காட்ட எகிப்தில் மஞ்சள் நிறத்தையும் மண்ணிலிருந்தெடுக்கப்பட்டவன் மண்ணுக்கே திரும்புகிறானென்று காட்ட எத்தியோப்பியாவில் கபில நிறத்தையும் மரித்தவர்கள் ஆகாயத்திற்குப் போனார்களென்று துர்க்கியின் சில பாகங்களில் நீல நிறத்தையும் மற்ற பாக

ங்களில் ஒரு பக்கத்தில் துன்பமும் மறுபக்கத்தில் நம்பிக்கையுங்காட்ட கறுப்பும் நீலமும் சேர்ந்த இந்திரநீல நிற வஸ்திரத்தையும், மரணத்தினால் மானிடர் தேஜோரூபமான பிரம்மத்தைச்சார்ந்தார்கள் என்று காட்ட வட இந்தியாவில் அனேகர் செங்காவி வஸ்திரங்களை தரித்தலும், மானிடரின் பிரபஞ்ச கர்மங்களும் பாழ்த்தனவென்று காட்ட தென்தேசத்தில் அநேகர் தலைமயிர் மீசை தாடிகளை சிரைத்துக்கொள்ளுதலும், இறந்தவர்கள் தமது பாகமாகிய இருளுடம்பை புடத்தில் வைத்துச் சுத்த சைதன்னியரானார்களென்று காட்ட விபூதியையும் வெள்ளைநாமத்தையும் தரித்தலும், மற்றும் அநேகர் அநேகவித மரணக்குறிகளை அணிதல் பிரத்தியக்ஷம்.

மனிதருடைய ஆசாபாசங்களையும், அகங்கார மமகாரங்களையும், அக்கிரம எண்ணங்களையும், தொழில்களையும் அடக்குவதற்கு வேண்டிய புத்திமதிகளை மரணத்தைபோல அவ்வளவு பக்குவமாய்ச்சொல்ல எவரானும் எவற்றாலும் முடியாது. மரணமென்னும் பெரும்பயம் இல்லாவிடில் அநேகர் தர்மாநுஷ்டானங்களையும் தேவ பக்தியையும்விட்டு நீரீசுவரகர்விகளாகி உலகத்தாருக்கு அநேகவித கஷ்ட நிஷ்டூரங்களை விளைவிப்பார்கள். ஆகவே, முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் எப்படிப்பட்ட சுத்த வீரர்களாக இருக்கினும் மரணம் என்ற மாத்திரத்தில் மதிமயங்குவது சஹஜம். அது அழையாத விருந்தாளியைப்போல சடுதியில் வந்து சஞ்சலப்படுத்திவிடும். மானிடரின் ஒவ்வொரு சுவாசமும் அவர்களது கடை சிச்சுவாசமாக முடியினுமுடியும். இழவுக்குறியைக் காட்டும் டண் டண் என்னும் பறையானது மரணம் எல்லாருக்கும் உண்டு உண்டென்றும், இனியடிக்கும் பறை உனக்கு உனக்கு என்று விளம்புகின்றது. மானிடர் (மரணத்துக்கு) பயந்து சத்காரியங்களினும், சுவாமி பக்தியினும் பிரவேசிக்க இந்த உலகத்துக்கே ஒரு உத்தம உபாத்தியாயனைப் போலவும் இருக்கிறது அதுவே.

யாவற்றையும் நடத்துபவராகிய பரமேச்வரரது கருத்தின்படி தீவெப்பத்தைத் தருகின்றது; சூரியபிம்பம்ஒளியை

த்தருகின்றது; மேகம் மழை பெய்கின்றது; காற்று அசைகின்றது; மரணம் உண்டாகின்றது. ஒரு பொருளும் அவரது கருத்தையும் அவரது நியமத்தையும் மீறமாட்டாது, சந்திரன் சூரியன் முதலிய கிரக நக்ஷத்திரங்கள், நீர், காற்று இவை ஜடப்பொருள்களாயிருந்தும் அவருக் கஞ்சின சித்துப்பொருள்களைப்போல தன் தன் செய்கைகளில் சென்றுகொண்டிருக்கின்றன. நன்மையையே வடிவாகக்கொண்ட இவ்வழிவற்ற புருஷனது நியமத்தினால் இவை யாவும் இவ்வுலகத்திற்கு உபகார சாதனமான காரியங்களில் நியமிதமாகப் பிரவர்த்திக்கின்றன.

It is through awe of Him, fire flameth; it is through awe of Him the sun shineth; it is through awe of Him clouds, wind (filthly) death are in motion.

---

## (15). சுவேதாசுவதர உபநிஷத்து

### 6-வது அத்தியாயம் 16-வது வாக்கியம்.

ஸவ்ருக்ஷகாலாக்ருதிபிஷிபரோ அந்யோய ஸ்மாத், பரபஞ்சஸ்றபரிவர்ததேயம்; தர்மாவஹம்பாபநுதம், பகேஸமஜ்ஞாத்வாத்மஸ்மமருதம்விச்வாதம், விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா, சிவம் சாந்திமத்யந்தமேதி.

பொழிப்புரை.

யாரில் இந்தப் பிரபஞ்சம் சுழன்றுகொண்டிருக்கிறதோ அவர் உலகம் காலம் உருவமுடைய பொருள்கள் இவையெல்லாவற்றையும் விடச் சிறந்தவர், வேறானவர். அவர் தருமத்துக்கு மூலமானவர், பாபத்தைப் போக்குகிறவர், செல்வத்திற்குத் தலைவர். அவர் எல்லா உயிர்களுக்கும் உள்ளேயிருப்பவர், அழிவற்றவர், உலகத்திற்காதாரமானவர், அவர் நன்மையையே வடிவாகவுடையவர், உலகத்தைச் சூழ்ந்திருக்கிற ஒருவர். இவரை அறிந்து உயிர்கள் மிகச்சாந்தியை பெறுகின்றன.

விசேஷ உரை.

இவ்வுலக ஸம்ஸாரத்தில் எவ்வளவு சிறிது பொருள்கள் இருக்கின்றனவோ, அவற்றில் ஒன்றைப்போலாவது

அவர் இருக்கவில்லை; அவர் வெளி விஷயங்களைப்போல இருக்கவில்லை, அவர் உள்ளேயிருக்கிற சித்துப்பொருள் போலவும் இருக்கவில்லை. அவர் அசித்துப்பொருள் சித்துப்பொருள் இரண்டையும் சிருஷ்டித்தவர்; ஆனதால் அவர் எல்லாவற்றிற்கும் மேலானவர், மேலும் எல்லாவற்றிற்கும் வேறானவர். அவர் ஸத்தியஸ்வரூபி, ஞானஸ்வரூபி; அநந்தஸ்வரூபி, அவருக்கு ஒப்பானவர் ஒருவருமில்லை. அவர் எப்படி இந்த ஆகாசத்தில் இருந்துகொண்டு நியந்தாவாக எல்லா ஜடஜகத்தையும் பசுப்பிரகிருதியையும் நியமத்தில் வைத்துக்கொண்டிருக்கிறாரோ, அதுபோல அவர் மனித ஆன்மாக்களில் தருமத்திற்குக் காரணராகவிருந்துக்கொண்டு ஒவ்வொரு நிமிஷத்திற்கும் நற்புத்தியைத் தருகிறார். ஜடஜகத்தும் பசுபக்ஷிகளும் நியம மறியாமலே நியம பலத்தில் கட்டுப்பட்டுக் காரியங்களைச் செய்கின்றன. ஆன்மாகடமைகளில் உணர்ச்சியாகிய ஒளியினால் தருமத்தின் நியமத்தை யறிந்து ஸ்வாதீநத்தன்மையுடன் தருமகாரியங்களைப் புரிகிறது. எப்பொழுது ஆன்மா மாநவிகப் பிரவிருத்திகளுக்குள்ளாகி தருமநியமமான கடமை யுணர்ச்சியினது கட்டளையை அசட்டை செய்து பாபத்தினால் கவரப்படுகிறதோ, அப்பொழுது அது ஸ்வாதீனத்தன்மையைவிட்டு பிரஷ்டத்துவத்தைப்பெற்று, மிருத்தியு என்னும் பாசத்தால் கட்டப்பட்டு ஆந்தரிகமான பொறுத்து முடியாத மனவருத்தத்தை யனுபவித்துக்கொண்டிருக்கிறது. அப்பொழுது பாபத்தைப் போக்கத்தக்க ஈச்வரனன்றி அதற்கு வேறுகதியில்லை. அப்பொழுது பாபத்தினால் கவரப்பட்ட ஆன்மா இயற்கையான துயரத்தினால் எரிக்கப்பட்டு இவ்விதமாக இனிச் செய்யேனென்று அவரைச் சரணடைகின்றது, அப்பொழுது அவரதை பாபத்திலிருந்து விடுவித்து மறுபடியும் தனது ஸன்மார்க்கத்தில் விருத்தியடையச்செய்கிறார். இது அவரது மகிமை, இது அவரது கருணை, பாபத்தையும் துயரத்தையும் வடிவாக உடைய இந்த ஸம்ஸாரத்திற்கு வேறானவரும். பரிசுத்தரும், பாபமற்றவரும், அழிவற்றவருமான ஈச்வரனை நமது உள்ளத்தின் வழியாகவடைந்து மேலும் அவரைப் பாபத்தைப்போக்கு

கிறவராகவும். அழிவற்ற முத்தியைத் தருபவராகவும் அறிந்து ஆன்மா மிகச் சாந்தியைப்பெறுகின்றது.

He is Superior to and different from the universe, time and objects having form through Whom the world revolveth. Knowing Him, the Fountain-head of righteousness, the Remover of transgressions, the Lord of all riches, the Immortal, and the All Good, who dwelleth in the souls of creatures and is the dwelling place of the universe and its sole Encompasser, one attaineth great peace.

---

## (16). பிரசிேஞாபநிஷத்து – 4 - 7.

ஸயதாஸௌம்ய வயாம்ஸிவாஸோ வ்ருக்ஷம்
ஸம்ப்ரதிஷ்டந்தே ஏவம்ஹவைதத்
ஸர்வம் பர ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டதே.

### பொழிப்புரை.

ஓ ஸௌம்மிய! பக்ஷிகள் எப்படி விருக்ஷங்களைத் தமதுவா ச்ஸ்தானமாகச் செய்துகொண்டு அதில் வசிக்கின்றனவோ அப்படியே சராசரமான ஜகத்தெல்லாம் பரமாத்மாவில் வசிக்கின்றன.

### விசேஷ உரை.

பிரபஞ்ச ஆகாயத்தில் பக்ஷிகளைப்போல அதிகவேகமாகவும், உயரமாகவும் பறக்கும்படியான சக்தி வேறு பிராணிகளுக்கு இல்லை. பக்ஷிகளின் பறக்கும் வேகத்தைப்பற்றி பரிக்ஷித்தவர்கள், ஊர்க்குருவிகள் ஒரு மணிநேரத்தில் 140 மைல்தூரம் அல்லது ஒரு விநாடிக்கு 190 அடி தூரமும், புறாக்கள் ஒருமணி நேரத்தில் 35 மைல் அல்லது ஒரு விநாடிக்கு 50 அடியும் மார்ட்டின் பக்ஷிகள் ஒரு விநாடிக்கு 55 அடியும், வானம்பாடி ஒரு விநாடிக்கு 80 அடியும், சில பக்ஷிகள் இன்னும் அதிகவேகமாகப் பறக்கும்படியான சக்தி உண்டு. இந்து பறவைகளின் இயற்கை லக்ஷணம்; அப்படிப் பறக்கும் பக்ஷிகளும் கடைசியில் தம் வாசஸ்தானத்துக்கு விருக்ஷங்களையே விசேஷமாகக் கொண்டிருக்கின்றன. அது போல, சராசரமான ஜகத்துக்கெல்லாம் அநேக கோடானு

கோடி மயில்கள்தூரத்திலும் அந்தரத்திலும் பறந்தாலும் அவைகள் யாவும் கற்பகவிருக்ஷத்தைப் போன்ற கடவுளைத் தம் வாஸஸ்தானமாகக் கொண்டிருக்கின்றன.

O! Soumiah! As the birds of the air live on trees having them as their residence so all the heavens and the earth live in Him.

## (17). சுவேதாசுவதர உபநிஷத்து

### 6-வது அத்தியாயம் 1-வது வாக்கியம்.

**ஸ்வபாவமேகே கவயோவதந்திகாலாந்ததாந்யே பரிமுஹ்யமாநாஹ தேவஸ்யேஷ மஹிமாது லோகேயேநதம் பிராம்யதே பிரஹ்மசக்கிரம்.**

பொழிப்புரை.

இந்த ஜகத்து சுற்றுவது ஸ்வபாவமென்று சில வித்வான்கள் சொல்லுகின்றார்கள். காலத்தால் இது நடக்கிறது என்று அறிவில்லாத மற்றும் சிலர் சொல்லுகின்றார்கள். ஆனால் ஜகத்தில் இந்த மகிமை பரமேசுவரனது. அவரால் இந்த ஜகத்சக்கிரம் சுழலுகின்றது.

விசேஷ உரை.

சுபாவம் அல்லது இயற்கை எனறால்பரமாத்துமாவுக்கு இருக்கும் பலபெயர்களில் இதுவும் ஓர் சிறந்த பெயர். சிலர் இப்படிப்பொருள்செய்யக்கூடாதென்று ஆக்ஷேபிக்கில் அப்போது சுபாவம் என்பதுதானென்ன அது ஒரு வஸ்துவா? அல்லது வெறும் வார்த்தையா? வஸ்துவென்றால் அதுவே பரமாத்துமா; வஸ்துவல்லவென்றால் அது வெறும் வார்த்தையே; ஆகவே வெறும் வார்த்தை என்னத்தைச் செய்யும். சுபாவம் என்னும் பதம் ஒரு காரியம் எப்படிச் சம்பவித்தது, எப்படி சம்பவிக்கிறது, என்பதைக் குறிக்குமேயன்றி; அக்காரியம் சம்பவிக்கிறதற்காக வேண்டிய காரணத்தையும், கருத்தாவையும குறிக்காது. ஆகவே சுபாவமென்னும் வித்தாந்தம் சுத்தப் பிசகானதே. சிலர் காலத்தால் நடக்கிறதென்று சந்தேகிக்கிறார்கள். காலம் என்றால் என்ன?

இதுவும் கடவுளுக்கு ஒருபெயரா? கடவுளுக்கு ஒரு பெயரென்றால் ஆக்ஷேபிப்பார் இல்லை. அப்படியல்ல வென்றால் இதுவும் ஒரு வார்த்தையாகி மேல் சொன்னபடி முடியும்.

Some Pandits say that the rotation of the earth is by *nature* and the ignorant think that it is by *time*. Nature is a word, what does it mean? To say nature or Law is merely describing how it happened but does not bring you a single step nearer to the *cause* or *power*. The earth rolls on by His force and power.

---

(18). சுவேதாசுவதர உபநிஷத்து

17-வது அத்தியாயம் 16-வாக்கியம்.

ஸ்தந் மயோஹ்யம் ருத ஈஶ ஸம்ஸ்தோஜ்ஞ
ஸாவகோபுவனஸ்யாஸ்ய கோபதா: ய ஈஶே
அஸ்ய ஜகதோநிய மேவநாந்தியோ ஹேதுர்வி [த்யத்
ஈநாய: தம்ஹதேவமாத்ம புத்திப்ரகாஶம்
மூமுக்ஷுர் வைஸரண மஹம்ப்ரபத்யே.

பொழிப்புரை.

அவர் ஞானஸ்வரூபி, அழிவற்றவர், யாவற்றிற்கும் தலைவராகி நன்றாகவிருப்பவர், ஞானமுடையவர், எல்லாவிடத்திலும் போகிறவர். இவ்வுலகத்தினது பாலகர். யார் இவ்வுலகத்தை எப்பொழுதும் நியமத்தில் வைத்திருக்கிறரோ அவர் தவிர இவ்வுலக நியமத்திற்கு வேறுகாரண மில்லை. முமுக்ஷுவாகி ஆத்துமபுத்திப் பிரகாசனுகிய அப்பரமேச்வரனைச் சரணடைகிறேன்.

விசேஷ உரை.

அவர் நமது உள்ளங்களில் நமது கடமைகளின் ஞானத்தையும், தருமபுத்தியையும் விளங்கச் செய்கிறார். அரசன் எப்படித்தனது குடிகளுக்கு ஸ்வாதீனத்தைத்தந்து அரசின் நியமங்களைத்தையும வெளிப்படுத்தி யிருக்கிறரோ தருமத்திற்குக் காரணராகிய கடவுள் அவ்விதமாக மனித ஆன்மாக்களுக்கு ஸ்வாதீனத்தைத்தந்து அவைகளினது உள்ளங்களில் தருமநியமங்களைத்தையும் பதித்துவைத் திருக்கி

றோர். நாம் நற்புத்தியுள்ள ஆலோசனையினால் நமது கடமைகள் இன்னவை என்னும் ஞானஒளியால் ஆன்மாவென்னும் படத்தில் தொன்று தொட்டுப் பதித்துவைத் திருக்கின்ற தருமநியமங்களனைத்தையும் படிக்கிறோம், மேலும் அதன்படி ஆசரித்து நல்லவர்களாகிறோம், ஸாதுக்களாகிறோம், வினயமுள்ளவர்களாகிறோம், நல்லசீலமுள்ளவர்களாகிறோம், கடவுளிடத் தன்புள்ளவர்களாகிறோம். தருமானுஷ்டானத்தினால் புண்ணியமாகிய ஒளியில் உள்ளம் தூய்மையுடையதானல் நாம் அதிபரிசுத்தமாகிய ஆத்துமானந்தத்தைப் பெறுகிறோம், மேலும் அந்த ஆத்துமானந்தத்தினால் நமது கருத்திலுள்ள துயரங்களனைத்தும் நசித்துப்போகின்றது. நாம் தருமத்தினது கட்டளையின்படி கருத்தினது தீயநோக்கங்களுக்கும் உள்ளத்தினது கெட்டவிருப்பங்களுக்கும் மாறுகச் சென்று ஆத்துமாநந்தத்தை எவ்வளவு விருத்தி செய்துக் கொள்ளுகிறோமோ எவ்வளவு பரிசுத்தப்படுத்திக் கொள்ளுகிறோமோ அவ்வளவுக்கும் அந்தப் பவித்திர ஸ்வரூபனிடத்தில் நமது விருப்பம் செல்லுகிறது. மேலும் அவரையடையும் நிமித்தம் ஸம்ஸாரத்தினது மரணமாகிய பாசத்திலிருந்து நீங்கி முத்திவிருப்ப முடையவர்களாகி அவரது சரணடைகிறோம்.

Full of intelligence is this Immortal Being, Who existeth as the Lord of all. He is All traversing, Wise, and the Preserver of the world. This universe is ever under His rule. No other Cause there is of its government. So this Being the Giver of religious knowledge, do I commit myself with the desire of Life Eternal.

---

சுருதிகளில் சில, குணார்த்தவாதமாயும், சில பூதார்த்தவாதமாயும் இருக்கின்றன. பூதார்த்தவாதமென்றால் உள்ளது உள்ளபடியும் நடந்தது நடந்தபடியும் காட்டுவதாம்; குணார்த்தமோவெனில் ஒரு பொருளை அல்லது காரியத்தை மகிமைப்படுத்தி அதன் தத்துவத்தை வர்ணித்துக் காட்டுவதாம். உலக சிருஷ்டியைப்பற்றி வர்ணித்துக் காட்டும் உபநிஷத்துக்களில் இரண்டை இதனடியில்பதிப்பித்திருக்கிறோம்.

## (19). இருக்கு வேதத்தைச் சார்ந்த ஐதரேய உபநிஷைத்து.

முதலில் இவர் (பிரமம்) ஒருவர்மாத்திரம் ஆத்மாவாக விருந்தார். அசைவுள்ள வேறுயாதொன்றுமில்லை. உலகங்களைசிருஷ்டிப்போமென்று அவர் எண்ணி, ஜலம், தேஜஸ், மரணம், அப்புகள், இந்த உலகங்களை சிருஷ்டித்தார். ஆகாசத்துக்குமேல் ஜலம், ஆகாசம் ஸ்தானம், நடுமண்டலத்தில் தேஜஸும், பிரதிவியில் மரணம், அதற்குக்கீழ் அப்புகள், இதுகள்தான் உலகம் (இனி) லோகபாலர்களை சிருஷ்டிப்போமென்று அவர் எண்ணினர். ஜலத்திலிருந்தே புருஷனை யெடுத்து அவர் உண்டாக்கினர். அவனை அபிதபித்தார். அப்படி அபிதபிக்கப்பட்டவனுக்கு முட்டைபோல் வாய்மலர்ந்து, வாயினின்று வாக்கும், வாக்கினின்று அக்கினியும் (உண்டாயிற்று) மூக்குகள் மலர்ந்து, மூக்குகளினின்று சுவாசமும், சுவாசத்தினின்று வாயுவும் (உண்டாயிற்று) கண்கள் மலர்ந்து கண்களினின்று பார்வையும், பார்வையினின்று ஆதித்தியனும் (உண்டாயிற்று) காதுகள் மலர்ந்து, காதுகளினின்று கேள்வியும் கேள்வியினின்று திக்குகளும் (உண்டாயிற்று) துவக் உண்டாகி, துவக்கினின்று மயிர்களும், மயிர்களினின்று பூண்டுகளும், செடிகளும் (உண்டாயிற்று) ஹிருதயம் உண்டாகி, ஹிருதயத்தினின்று மனதும், மனதினின்று சந்திரனும் (உண்டாயிற்று) நாபிமலர்ந்து, நாபினின்று அபானமும் அபானத்தினின்று மிருத்தியுவும் (உண்டாயிற்று) சிருஷ்டிக்கருவியுண்டாகி, சிருஷ்டிக்கருவியினின்று ரேதஸும், ரேதஸினின்று ஜலமும் (உண்டாயிற்று).

இப்படி சிருஷ்டிக்கப்பட்ட இந்த தேவதைகள் இந்த சமுத்திரத்தில் விழுந்தன. அவனுக்கு (புருஷனுக்கு) பசிதாபங்களை யுண்டாக்கினர் அந்த தேவதைகள் தாங்களிருந்துண்ணும்படி நிலையிடத்தைக் காட்டவேண்டுமென்று கேட்டார்கள். அவர் பசுவைக் கொண்டுவந்தார், எங்களுக்கு இது போதாதென்றார்கள். அவர் அவர்களுக்குப் புருஷ

ளைக் கொண்டுவந்தார். "நன்ருய் செய்யப்பட்டதல்லவா" என்று அவர்கள் சொன்ஞர்கள்; ஆகையால் புருஷன்தான் நன்ருய் செய்யப்பட்டவன். அவரவர் ஸ்தானத்தில் பிரவே சியுங்களென்று சொன்ஞர் அக்கினி வாக்காகி வாயில்பிரவே சித்தது. வாயு சுவாசமாகி, மூக்குகளில் பிரவேசித்தது. ஆதித்தியன் பார்வையாகி, கண்களில் பிரவேசித்தது. திக் குகள் கேள்வியாகி, காதுகளில் பிரவேசித்தது. பூண்டு மரங்களில் மயிர்களாகி துவக்கில் பிரவேசித்தது. சந்திரன் மனதாகி, ஹிருதயத்தில் பிரவேசித்தது. மரணம் அபான மாகி, நாபியில் பிரவேசித்தது. ஜலம் ரேதஸ்ஸாகி, சிருஷ் டிக்கருவிகளில் பிரவேசித்தது. பசிதாகங்கள் அவரைப்பார் த்து (இடம்) காட்டுமென்றன. நானுங்களை இந்தத் தேவ தைகளுடன் சேர்த்து அதுகளில் உங்களைப் பங்குடையவ ராக்குகின்றேனென்ருர். ஆகையால் எந்த தேவதைகளுக் காக ஹவிஸு எடுத்தபோதிலும் பசிதாகங்கள் பங்குடை யதாக விருக்கின்றதுகள். அவர் இதுகள் லோகங்களும் லோகபாலர்களும் (இனி) இதுகளுக்கு அன்னத்தை உண் டாக்குவோமென்று எண்ணிஞர்கள். அவர் ஜலத்தை அபி தபித்தார். அப்படி அபிதபிக்கப்பட்ட ஜலத்தினின்றும் மூர் த்தியுண்டாயிற்று. அதுவே அன்னம். சிருஷ்டியானவுடனே அது ஓட விரும்பியது. அதை யவன் வாக்கால் பிடிக்க விரு ம்பிஞன்; அதை வாக்கால் கிரகிக்கக்கூடவில்லை. அதை வாக் கிஞல் கிரகித்திருப்பானேயாகில், அன்னத்தை உச்சரிப்பத ஞலே திருப்தியுண்டாகும். சுவாசத்திஞல் அதை கிரகிக்க இச்சித்தான். அதை சுவாசத்திஞல் கிரகிக்கக்கூடவில்லை. அதை சுவாசத்திஞல் கிரகித்திருப்பாஞகில், அன்னத்தை முகருவதஞலேயே திருப்தியுண்டாகும். அதை பார்வையி ஞல் கிரகிக்க இச்சித்தான். அதை பார்வையிஞல் கிரகிக்கக் கூடவில்லை. அதை பார்வையிஞல் பிடித்திருப்பாஞகில், அதைப் பார்ப்பதிஞலே திருப்தியுண்டாய்விடும். அதைக்கே ள்வியிஞல் பிடிக்க விரும்பிஞன். அதைக்கேள்வியிஞல் பிடி க்கக்கூடவில்லை, அதைக் கேள்வியிஞல் கிரகித்திருப்பாஞ கில், அன்னத்தைக் கேட்பதிஞலே திருப்தி யுண்டாகும்.

அதை துவக்கினால் கிரகிக்க விச்சித்தான் அதை துவக்கி னால் கிரகிக்ககூடவில்லை. அதை துவக்கினால் கிரகித்திருப் பானாகில், அன்னத்தைத் தொடுவதினாலேயே திருப்தியுண் டாகும். அதை மனதினால் பிடிக்க விச்சித்தான்; அதை மன தினால் பிடிக்கக்கூடவில்லை. அதை மனதினால் பிடித்திருப்பா னாகில், அன்னத்தை நினைப்பதினால் திருப்தி யுண்டாகும். அதை அபானத்தினால் கிரகிக்க விரும்பினான்; அதை கிரகித் தான். வாயுவானது தான் அன்னத்தை கிரகிக்கிறது; ஏனெ னறால் வாயுதானுக்கும் அன்னத்தை ஜரிப்பிக்கிறது. நானில் லாவிட்டால் இது (மூர்த்தி) எப்படியிருக்குமென்று அவன் த்யானித்தான். அதை நான் எந்தவழியாய் அடைவேனெ ன்று எண்ணினான் பேச்சுவாக்கினாலும். சுவசித்தல் சுவா சத்தினாலும், பார்வை கண்ணினாலும், கேள்வி காதினாலும், ஸ்பர்சம் துவக்கினாலும், நினைவு மனதினாலும், அபானம் அபானத்தினாலும், விஸர்ஜனம் சிருஷ்டிக் கருவிகளாலும் ஆகும்பக்ஷத்தில், நான் யாரென்று யோசித்தான். அவனிந்த ஸமானத்தைத் தானே பிளந்து அந்த வழியாய்த்தானே பிர வேசித்தான். அந்த வழிக்கு விவிருதியென்று பெயர். அது தான் ஆனந்த ஸ்தானம்.

1. There was not non-existent nor existent: there was no realm of air, no sky beyond it.
   What covered in, and where? and what give shelter? Was water there, unfathomed depth of water?

2. Death was not then, nor was there aught immortal: no sign was there, the day's and night's divider.
   That One Thing, breathless, breathed by its own nature: apart from it was nothiug whotsoever.

3. Darkness there was: at first concealed in darkness this All was indiscriminated chaos.
   All that existed then was void and formless: by the greate power of Warmth was born that Unit.

4. Thereafter rose Desire in the begining, Desire, the primal seed and germ of Spirit.
   Sages who searched with their heart's thought discovered the existent's kinship in the non-existent.

5. Transversely was there severing love extended: what was above it then, and what below it?
   There were begetters, there were mighty forces, free action here and energy up yonder.
6. Who verily knows and who can here declare it, whence it was born and whence comes this creation?
   The Gods are later than this world's production. Who knows then whence it first came into being?
7. He, the first origin of this creation, whether he fromed it ali or did not from it.
   Whose eye controls this world in highest heaven, he verily knows it, or perhaps he knows not.

## (20). பிருஹதாரணிய உபநிஷத்து

4-வது அத்தியாயம் 5-வது பிராம்மணம் 15-வது வாக்கியம்.

*தத்யதார தநாபௌச ரதநே மௌசாராஹ ஸர்வே ஸமர்பிதாஹ; ஏவமேவாஸ்மிந்நாத்மநி ஸர்வாணி பூதாநி ஸர்வே தேவாஹ ஸர்வே லோகாஹ ஸர்வேபராணாஹ ஸர்வே ஏத ஆத்மாநஹ சமாபிதாஹ.*

பொழிப்புரை.

எப்படி சக்கிரத்தின் நடத்திலும் வட்டைச் சுற்றிலும் எல்லா ஆரைக்கால்களும் வகைப்பட்டிருக்கின்றனவோ? அதுபோலவே பரமாத்துமாவினிடத்தில் சகலபொருள்களும் சகல தேவர்களும் சகல உலகங்களும் சகல அசைவுசெய்கைகளும்' இவ்வுயிர்களனைத்தும் வைக்கப்பட்டிருக்கின்றன.

விசேஷ உரை.

*நீர், காற்று, தீ முதலிய பொருள்களனைத்தும்; வேறு உலகங்களில் வாழ்கின்றனவர்களும் மனிதர்களைவிட மேலானவர்களுமான தரும ஜீவிகளாகிய உயிர்களனைவரும்: சூரியன், சந்திரன், கிரகம், நக்ஷத்திரம், பூமி முதலிய உலகங்களனைத்தும், உயிர்களினது காற்று சம்பந்தமாகிய செய்கைகளனைத்தும் மேலும் எண்ணிறந்த உலகங்களிலிருக்*

கும் எண்ணிக்கையற்ற ஆன்மாக்களனைத்தும் இந்தப் பரமாத்துமாவைப் பற்றிக்கொண்டிருக்கின்றன.

As the spokes of a wheel depend on its nave and circumference, so on this Being do depend all things, all Gods, all worlds, all lives and all these souls.

---

(21). புருஷ சூக்தம்.

ஓம் ஸஹஸ்ர சீர்ஷா புருஷஹ
ஸஹஸ் ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்
ஸபூமிம் விச்வதோ விருத்வா
அத்தியதிஷ்டத் தஸாங்குலம்.

புருஷன் என்பவன் ஆயிரம் சிரசு-ஆயிரங்கண்-ஆயிரம் பாதம் இவைகளையுடையவன்; அவன் பூமியை எங்கும் வியாபித்துத் தசாங்குலம் என்னும் அனந்தயோசனை தூரம் கடந்து நிற்கிறான்.

புருஷ ஏவேதகம் ஸர்வம்
யத்பூதம் யச்ச பவ்யம்
உதாம்ருதத்வ ஸ்யேஸாநஹ
யதந்நே நாதிரோஹதி.

சென்றதும் இருக்கிறதும் வருகிறதுமான இவை எல்லாம் புருஷன் என்பவனுக்குள்ளே அடங்கியிருக்கின்றன: (அதாவது அப்புருஷனை விட்டுத் தனித்திருக்குதல், தனித்தறிதல், இல்லாமை என்பதாம்.) மேலும் மோக்ஷத்திற்கும் காரிய காரண ரூபமாகிய ஜகத்துக்கும் அவனே ஈசன்.

ஏதாவா நஸ்யமஹிமா
அதோ ஜ்யாயாக்ம்ச்ச புருஷஹ
பாதோஸ்ய விஸ்வா பூதாநி
திரிபாதஸ்யா மிருதம்திவி.

மேற் சொல்லியவைகள் அவனுடைய மகத்துவமாம். இம்மஹத்துவத்தைப் பார்க்கிலும் அப்புருஷன் என்பவனை

மிகவும் பெரியவன். இங்குகாணும் சிருஷ்டிகள் யாவும் அவ னுடைய ஓர் அம்சமாயும், பரமாகாசத்தில் நித்தியமாய் விள ங்குகின்றவைகள் பலவம்சம் ஆகவுமிருப்பதினாலே பிரபஞ் சத்தில் காணும் மகத்துவத்துக்கு மிஞ்சின மகத்துவமுடை யவனென விளங்கும்.

திரிபாதூர்த்வ உதைத் புருஷஹ
பாதோஸ்யெஹா பவாத் புநஹ
ததொவிஷ்வங் வ்யக்ராமத்
ஸாசநா நசனே அபி.

மேலுரைத்த அவனுடைய பலவம்சம் மேலேயே வியா பித்திருக்கிறது. ஆகிலும் அவன் ஓர் அம்சத்தினாலே மாத்தி ரப் இங்கெங்கும் விஸ்தாரமாக வியாபித்துச் சராசரங்களைச் சிருஷ்டிக்க வியாபரித்தான்.

தஸ்மாத் விராட ஜாயத
விராஜோ அதி புருஷஹ
ஸஜாதோ அத்யரிச்யத
பஸ்சாத்பூமி மதோபுரஹ.

புருஷனிடத்திலிருந்து மூலப்பிரகிருதி யுண்டானபின், பிரம்மா உண்டாகி உடனே பூமியெங்கும் வியாபிக்கும்படி வளர்ந்தான்.

யத்புருஷேண ஹவிஷா
தேவா யக்ஞ மதந்வத
வஸந்தோ அஸ்யாஸீ தாஜ்யம்
கிரீஷ்ம மித்ம ஸ்ஸரத்தவிஹி.

பரமபுருஷன் விராட்டைச் சிருஷ்டித்தபின், பிரம்மா வைப் படைக்க; அவன் மௌனமாயிருக்க ஏது காரணமெ ன்றப் புருஷன் வினவ, அதற்கு அஞ்ஞானத்தாலென்றவனு ரைக்க, ஆகில் நீ உன்னிந்திரியங்களைக் கர்த்தாவாக்கி மான தமான ஆராதனையில் உன் ஆத்மத்தைச் செலுத்தி நெய் முத லியவைகள் விஸ்தாரமாக வுண்டாகும் காலங்களை ஓம சாமக்

கிரிகைகளாகப் பாவித்து உன் ஆத்மாவை நான் என்னும் அக்கினியில் செலுத்துவாயாகில் (பரிதிவோயாகில்) உனக்கு ஞானமுண்டாகிச் சிருஷ்டிக்கும் சக்தியுண்டாமென அச்சதுர்முகனும் அவ்வாறே ஆத்மாவைப் பரிதியிட்டான்.

> ஸப்தா ஸ்யாஸன் பரிதயஹ
> திரிஸ் ஸப்த ஸமிதஹ க்ருதாஹ
> தேவா யத்யஜ்ஞம்தன் வாநாஹ
> அபத்நன் புருஷம் பசும்.

பிரம்மாவின் இந்திரியங்கள் தியானமாகிய யக்கியத்தைச் செய்யவிரும்பித் தங்களுக் கிருப்பிடமாகிய பிரம்மாவைப் பசுவாகப் பாவித்தபோது பிரம்மா தேகத்திலிருக்கின்ற தத்துவங்கள் பிரிதிவி அப்பு. தேயு, வாயு, ஆகாசம், அகங்காரம், புத்தி என்னும் இத்தத்துவங்கள் அப்பூஜையில் சுற்றியிருக்கும் பரிதிகளாயும், அப்படியே பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவைகளின் ஸ்தூலமும் சூட்சுமமும் கண், நா, மூக்கு, செவி, உருவு, இவ்வைந்தாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், அந்தக்கரணமும் ஆக தத்துவங்கள் இருபத்தொன்றும் சமித் என்னும் எரிகருவிகளாயின.

> தம் யஜ்ஞம் பர்ஹிஷி ப்ரௌக்ஷந்
> புருஷம் ஜாதமக்ரதஹ
> தேன தேவா அயஜந்த
> ஸாத்யா ரிஷயஶ்சயே.

பதார்த்தங்களிருந்த விடமேபோய்க் கிரகித்தும் தான் சூட்சுமமாயிருப்பதால் அவ்வழிவைக்கொண்டு சாதிக்கத்தக்கவையா யிருந்தும் இந்திரியங்கள் ஆராதனைக்கு யோக்கியமாக முன்னிற்கும் அச்சதுர்முக புருஷனை அவன் தேகத்தோடு சேர்த்து புரௌக்ஷணத்தினால் சுத்திகரித்துப் பின் அவனைப் பரம புருஷனாகிய அக்கினியில் வைத்ததாய்ப் பாவிக்கின்றனர்.

> தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுதஹ
> ஸம்பரதம் ப்ரஷதாஜ்யம்

பசூக்ம்ஸ்தாக்ம்ச்சக்ரே வாயவ்யான்
ஆரண்யான் க்ராம்யாச்சயே.

நான் என்னும் அகங்காரம், எனது என்னும் மமகாரம் இவை யெல்லாவற்றையும் போக்கிச் சர்வப்பிரகாரத்தினு அம், அப்பரம புருஷனிடத்தில் ஆராதனை ரூபமாகச் செலுத்தப்பட்ட அச்சதுர்முக புருஷனிடத்திலிருந்து முன் அப்பரம புருஷன் படைத்த விராட் என்னும் மூலப்பிரகிருதி ஜகத் ரூபமாகி மாறும்படியான சக்தியுடன் தோன்றிற்று. பின் அதைக்கொண்டு அச்சதுர்முக புருஷன் உபயோகமுள்ள பசுக்களையும் பட்சிகளையும் வன விலங்குகளையும் நாடுலாவும் ஜந்துக்களையும் படைத்தான்.

தஸ்மா யஜ்ஞாத் ஸர்வஹுதஹ
ரிசஸ் ஸாமானி ஜஜ்ஞிரே
சந்தாம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத்
யஜுஸ் தஸ்மாதஜாயத.

அகங்காரம் மமகங்காரங்களை விட்டுப் பரமபுருஷனிடம் எல்லாவற்றையுஞ் செலுத்தி நிற்கின்ற பிரம்மாவினிடத்திலிருந்து வேதங்கள் முதலிய ஞானங்கள் எல்லாந் தோன்றினவாம்.

தஸ்மா தஸ்வா அஜாயந்த
யேகேசோ பயாததஹ
காவோஹஜஜ்ஞிரே தஸ்மாத்
தஸ்மாஜ்ஜா தா அஜாவயஹ.

பிரம்மாவினிடத்திலிருந்து குதிரை கழுதை ஒட்டகம் எருது ஆடு முதலிய பிராணிகள் யாவும் தோன்றின.

யத்புருஷம் வ்யததுஹ
கதிதா வ்யகல்பயன்
முகம் கிமஸ்ய கௌபாஹ
காவூரு பாதாவுச்யேதே.

பரமபுருஷனிடத்தில் பிரம்மனை இந்திரியங்கள் அபிக்கமாக்கி விட்டபோது அவனுடைய அவயவங்களாகிய

முகம், புஜங்கள், தொடைகள், பாதங்கள், எவைகளென்று தியானிக்கப்பட்டிருப்பன வென்பதாம்.

ப்ராம்மணோஸ் முகமாவஸீத்
பாஹூ ராஜந்யஹ்க்ருதஹ
ஊரூததஸ்ய யத்வைஸ்யஹ
பத்ப்யாகம் சூத்ரோ அஜாயத.

பிர்ம்மாவுக்குப் பிராமணன் முகமாயும், க்ஷத்திரியன் புஜமாயும். வைசியன் தொடையாயும், சூத்திரன் பாதமாயுமானார்கள் என்பதாம்.

சந்த்ரமா மநஸோ ஜாதா
சக்ஷோ ஸூர்யோ அஜாயத
முகாதிந்த்ரச்ச் சாக்நிச்ச
ப்ராணாத் வாயுரஜாயத.

மனசுக்காகச் சந்திரனும், கண்ணுக்காகச் சூரியனும், முகத்துக்காக இந்திரனும் அக்கினியும், பிராணனுக்குவாயுவுமுண்டாயின.

நாப்யா ஆஸீதந்தரிக்ஷம்
சீர்ஷ்ணோத் யௌஸ்ஸமவர்த்தத
பத்ப்யாம் பூமிர் திஸஸ்ரோத்ராத்
ததாலோகா குமகல் பயன்.

பரமபுருஷனுக்கு உலங்களும், உலகத்தில் உள்ள வஸ்துக்கள் யாவும் அவயவங்களாயின வென்பதாம்.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்யவர்ணம் தமஸஸ்துபாரே
ஸர்வாணிரூபாணி விசித்யதிரஹ
நாமானி கிருத்வா அபிவதன் யதாஸ்தே.

பரமபுருஷன் உலகத்திலுள்ள வஸ்துக்களை ரூபமாக்கி அவைகளுக்குப் பேருமிட்டு விவரிக்கும்படி செய்து மூலப்பிரகிருதிக் கப்பால் ஆதித்திய பிரகாசனாக விருக்கிறான். இப்புருஷன் மஹாமகிமை பொருந்தியவன்.

தாதா புரஸ்தா த்யமுதாஜஹார
சக்ர ப்ரவித்வான் பிரதிஶச் சதஸ்ரஹ
தமேவம்வித்வா நமிருத இஹ பகவதி
நாந்யப்பந்தா அயநாய வித்யதே.

பிரம்மாவும் இந்திரனும் அப்பரமபுருஷனை உள்ளபடி அறிந்து தன்னிஷ்டத்தைப் பெற்றதுபோல் இந்த உலகத்தில் மனிதனும் அவ்வாறே அவனை அறிந்தே எல்லாம் பெற வேண்டுமென்பதாம்.

யஜ்ஞேந யஞ்ய மயஞ்ந்த தேவாஹ
தாநி தர்மாணி ப்ரதமான்யா ஸன்தேஹநாகம்
மஹிமாநஸ்ஸ சந்தே
யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவாஹ.

பிரம்மா தன்னுடைய சிருஷ்டி ஞானத்துக்காகப் பரம புருஷனுரைத்த முறையே தன்னை அவிசாக அவரிடஞ்செலுத்தத் தன்னிந்திரியங்கள் இசைந்தன. இவ்வாறு மானசாராதனமே மோக்ஷத்துக்கு முக்கியமாம். இவ்விதஞ் செய்கிறவர்கள் சாயுஜ்யபதவி அடைவார்கள். முன்னோர்களும் இக்கிரியையினாலேயே மேற்சொன்ன பதவியைப் பெற்றிருக்கின்றார்கள்.

விசேஷ உரை.

சுருதிகளில் முக்கியமா யிருக்கிறதும், அதி விசேஷமானதும் "புருஷ சூக்தம்" தான். இந்தப் புருஷசூக்தம் என்ற வாக்கியம் புருஷனைப்பற்றி நன்றாகச் சொல்லப்பட்டது என்னும் அருத்தத்தைக் காட்டுகின்றது. புருஷன் என்பவர் யாரெனில் "பூர்ணத்வாத் புருஷஹ" என்றபடி பூரண மூர்த்தியா யிருப்பதால் புருஷன் எனக் கடவுளுக்கே பரியாய நாமமாக விளங்கலாயிற்று.

இப்பிரபஞ்சத்தின் சம்பூதி, விபூதி, பரிபூதி என்னும் சிருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களை நடாத்தி வருவதற்குக் காரணராகியவரே புருஷன்; இவருடைய மகத்துவத்தையும், பிரபஞ்ச சிருஷ்டியையும், முக்தியடையும்

மார்க்கத்தையும், காட்டுவதே இப்புருஷ சூக்தத்தின் கருத்தாம்.

இந்தப் புருஷ சூக்தம் கிருஷ்ண யஜுர்வேதத்தில் கஅ ரிக்குகளாகவும், சுக்கில எஜுர்வேதத்தில் ௰-ரிக்குகளில் அடங்கியும், இருக்கு வேதத்தில் கசு-ரிக்குகளாகச் சமைந்தும், சாம அதர்வண வேதங்களில் எ-ரிக்குகளாக முடிந்தும் இருக்கின்றன. இவைகளில் இந்தப் புருஷன் வரலாற்றைக்குறித்து கஅ-ரிக்குகளாக கிருஷ்ண யஜுர்வேதத்தில் பூரணமாய்க் கூறியிருக்கின்றமையால் அவைகளையே இங்கு எடுத்துக்காட்டி யிருக்கின்றோம். முதல் க௫-ரிக்குகளாகிய கவி "அனுஷ்டுப்" அடிகளாலும், பின்வரும் மூன்று ரிக்குகளாகிய கவி "திருஷ்டுப்" அடிகளாலும் பாடப்பட்டிருக்கின்றன.

முதல் ரிக்கில் பரமபுருஷன் எல்லாத் திசைகளிலும்; 2-ம் ரிக்கில் எல்லாக்காலங்களிலும் இருக்கின்றனரெனவும்; 3-ம் ரிக்கில் இகபர சுகார்த்தங்களுக்கு அவரே ஈசன் எனவும்; 4-ம் ரிக்கில் அவருடைய மகத்துவத்தை பிரஸ்தாபித்தும்; 5-முதல் 15-ரிக்குகள் வரையிலும் அவருடைய பலஅம்சமானது பரமாகாசத்தில் வியாபித்திருப்பதாகவும்; வஸ்துக்களின் சிருஷ்டியைப் பற்றியும், லோக சம்ரக்ஷணை நடாத்திவரும் விவரங்களைக் குறித்தும், 15-லிருந்து 18-வரையுள்ள ரிக்குகளில் அப்பரமபுருஷனை அறியும் ஞானமே மோக்ஷம் பெறும் வழியெனவும் கூறியிருக்கின்றது.

இந்தப் புருஷ சூக்தத்தினால் பரமாத்துமாவுக்குச் சரீரமுண்டென்றும்; அந்தச் சரீரத்தின் அவயவங்களினின்று, பிராம்மணாதி சதுர் வருணத்தாரும், இந்திராதி தேவர்களும் உண்டானார்களென்றும் இத்தேசத்தாரில் சிலர் சந்தேகிக்கவும், ஏனைய மதஸ்தர்களிற் சிலர் விபரீதமாக எண்ணவும் கூடும். இப்படிச் சந்தேகித்து விபரீதார்த்தங்கொள்வதற்குக் காரணம் அறியாமையே. பிராம்மணாதி சதுர்வருணத்தாரும் இந்திராதி தேவதைகளும் யாருடைய அவயவங்களில் இரு

ந்து உண்டானதாகச் சொல்லப்படுகிறதோ, அந்தப்புருஷன் மனுஷியரூபமாக உத்பிரேக்ஷிக்கப்பட்ட பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறல்லவென்று ஸ்பஷ்டமாய்ஏற்படும். இந்தப்புருஷசூக்தத்துக்கு ஸ்ரீசங்கரர், இராமாநுஜர், மத்துவாசாரியர், மஹீதரர், வித்தியாரணியர், தயாநந்தர் முதலான மஹான்கள் பாஷியம் செய்திருக்கின்றனர். இவர்களில் வித்தியாரணியர் இந்தச் சொல்லுக்கு செய்திருக்கிற பாஷியத்தைச் சற்று கவனிப்போம்.

அதில் "அதினின்றும்" விராட்டு உண்டாயிற்றென்னும் போது, எதை யெல்லாம் (பாதம்) கடந்ததென்று சொல்லப்பட்டதோ அதுவே பிரபஞ்சம். அதினின்றும்—ஆதிபுருஷனிடத்தினின்றும், விராட்டுண்டாயிற்று—பிரும்மாண்டமாகிய பிரபஞ்சமாகிய தேகமுண்டாயிற்று." என்று வித்தியாரணியர் பொருள் செய்திருக்கிறார். மஹீதர பாஷியமும் இதற்கு இசைந்தே யிருக்கிறது. "சகலத்தையும் கடந்ததென்று எது சொல்லப்பட்டதோ, அதுவே பிரபஞ்சமாகிறது. அதினின்றும்—ஆதி—புருஷனிடத்தினின்றும், விராட்டு—பிரம்மாண்ட தேகம், ஜனித்தது—உண்டாயிற்று. எதினிடத்தில் பொருள்கள் பலவிதமாய் விளங்குகின்றனவோ, அதுவே விராட்டு" என்று மஹீதரர் பாஷியம் செய்திருக்கிறார். இதில் பிரதிபாதிக்கப்பட்ட யக்கியமும் மானசயக்கியமே என்று எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. மானசயக்கியமென்றால் உண்மையாய் நடந்த யக்கியமல்லவென்றும் கேவலம் மனதினால் கற்பிக்கப்பட்டதென்றும் பொருள். இது தான் உண்மையான கொள்கை யென்பதற்கு, இந்தச் சுருதி வாக்கியத்திலேயே போதுமான நிதர்சனங்களிருக்கின்றன. இந்த யக்கியத்துக்கு விராட் புருஷனே ஆஹுதியாகவும்—சோறுகவும், வசந்தருதுவே நெய்யாகவும், கிரீஷ்மருதுவே சமித்தாகவும், இன்னு மிவ்விதமாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதை வாஸ்தவமாகக்கொள்ளும் பக்ஷத்தில்; கேவலம் காலரூபமாகிய ருதுக்களை அவை சிருஷ்டியாவதற்கு முன் எப்படி நீயிலெடுத்து விடக்

கூடுமோ அதைச் சற்று யோசிக்கவேண்டும். இவை எல்லாம் நாம் கேவலம் அனுமானத்தால் செய்த பொருளென்று நினைக்கவேண்டாம். அன்றியும்.

> பிராஹ்மணோஸ்ய முகமாஸீத்
> பாஹூரா ஜந்யக்ருதஹ
> ஊரூதஸ்ய யதவைஸ்யஹ
> பத்ப்யாக்ம சூத்ரோ அஜாயத.

என்னும் இந்த ரிக்கின் முதல் வாக்கியத்தில் 'ஆஸீத்' என்னும் வினையையும்; இரண்டாவது வாக்கியத்திலிருக்கும் "கிருதஹ" என்னும் வினையையும், மூன்றாவது வாக்கியத்தில் தொக்கியிருக்கும் அல்லது தோன்று, வினையையும்நான்காவது வாக்கியத்திலிருக்கும் 'அஜாயத' என்ற வினையையும் பற்றி யோசிப்போமாகில், ஆஸீத் என்றால் "ஆகியது" என்றும்—கிருதஹ என்றால் செய்யப்பட்டது என்றும்; "அஜாயத" என்றால் பிறந்தது என்றும் அருத்தமாகிறது.

ஆகவே விராட்டு என்னும் பிரபஞ்சத்துக்குப் "பிராம்மணன் முகமானான், க்ஷத்திரியன் தோள்களாக்கப்பட்டான், வைசியன் என்பது எதுவோ அதுவேதொடைகள்" என்று சொல்லியிருப்பதில், இவர்களை முகமாகவும், புஜங்களாகவும், தொடைகளாகவும், உத்பிரேக்ஷித்திருப்பதாகக் கருத்தேயன்றி, அந்தந்த அவயவங்களினின்றும், அவர்களானார்களென்பதன்று. இந்த உத்பிரேக்ஷைக்கு ஹேதுவில்லாமற் போகவில்லை. புத்திக்குக் குறியாகிய முகத்தைக்கல்வித்திறத்தால் விளையும் ஞானத்தைக் குறியாகக்கொண்டிருக்கும் பிராம்மணனும்; பலத்துக்கு ஸ்தானமாகிய புஜத்தை, ராஜ்ய ஸம்ரக்ஷணார்த்தம் உதவும் பலத்தைக் குறியாகவுடைய க்ஷத்திரியனும்; சஞ்சாரத்துக்குச் சாதனமான தொடைகளை, வர்த்தகத்துக்கு இன்றியமையாக கருவியாகிய சஞ்சாரமுடைய வைசியனும்; விளக்கியிருக்கின்றது. இந்த வர்ணனையில் கடைசி வாக்கியத்தில் "பதங்களினின்றும் சூத்திரன் உண்டானான்" என்று சொல்லியிருக்கிறபடியால், அவ்

விடத்தில் 'உண்டாதல்' என்பதற்கு உத்பிரேக்ஷித்தல் என்பது தவிர வேறு பொருளேற்படுத்துவதற்கு வழியில்லை. இந்த வினைக்களுக்கு வித்தியாரணியர் செய்திருக்கிற பாஷியமே போதுமானதாகும். இம்மாதிரியாகவே வேதத்தில் பிறவினைக்குத் தன்வினையும், பன்மைக்கு ஒருமையும் வழங்கி வருவது அருமையல்லவென்று சுவல்ப அனுபவமுடையவர்களுக்கும் விளங்குமாகிலும், யாஸ்கநிருத்தி அவதாரிகையில் இந்த வினைக்கே இருப்புப்பொருளும் 'உண்டாக்கல்' என்கிற பிறவினைப் பொருளும் செய்யப்பட்டிருக்கிறது பிரத்தியக்ஷமாகும்.

1 A thousand heads had Purusha, a thousand eyes, a thousand feet.
He covered earth on every side, and spread ten fingers' breadth beyond.

This Purusha is all that yet bath been and all that is to be;
The lord of immortality which waxes greater still by food.

3 So mighty is his greatness; yea, greater than this is Purusha.
All creatures are one-fourth of him, three-fourths eternal life in heaven.

4 With three-fourths Purasha went up: one fourth of him again was here.
Thence he strode out to every side over what eats not and what eats.

5 From him Viraja was born; again Purusha from Viraja was born.
As soon as he born has spaced eastward and westward o'er the earth.

6 When Gods prepared the sacrifice with Purusha as their offering,
Its oil was spring, the holy gift was autnmn; summer was the wood.

7 They balmed as victim on the grass Purusha born in earliest time.

With him the deities and all Sadhyas and Rishis sacrificed.

8 From that great general sacrifice the dripping fat was gathered up.

Hé fromed the creatures of the air, and animals both wild and time.

9 From that great general sacrifice Richas and Soma-hymns were born:

Therefrom the metres were produced, the Yajus, had its birth from it.

10 From it were horses born, from it all creatures with two rows of teeth:

From it were generated kine, from it the goats and sheep were born.

11 When they divided Purusha how many portions did they make?

What do they call his mouth, his arms? What do they call his thighs and feet?

12 The Brahman was his mouth, of both his arms was the Rajauya made.

His thighs became the Vaisya from his feet the Sudra was produced.

13 The moon was gendered from his mind, and from his eye the sun had birth.

Indra and Agni from his mouth were born, and Vayu from his breath.

14 Forth from his navel came mld air; the sky was fashioned from his head;

Earth from his feet, and from his ear the regions. Thus they formed the worlds.

15 Seven fencing-logs had he, thrice seven layers of fuel were prepared.

When the Gods' offering socrifice, bound, as their victim Purnsha.

16 Gods, sacrificing, sacrified the victim: these were the earliest holy ordinances.

The mighty ones attained the height of heaven, there were the Sadhyas, Gods of old, are dwelling.

## (22). சுவேதாசுவதர உபநிஷத்து.

4-வது அத்தியாயம் 13-வது வாக்கியம்

யோதேவாநா மதிபோயஸ்மின் லோகா அதிஷ்டிதாஷ்; யஈசேஸ்ய த்விபதஸ்ச துஷ்பத ஹஸவா ஏஷ மஹாநஜ ஆத்மா.

### பொழிப்புரை.

யார் தேவதைகளுக் கதிபதியோ, யாரிடத்தில் உலகங்கள் நிலைபெற் றிருக்கின்றனவோ, யார் இரண்டுகால் ஜந்துக்களையும் நான்கு கால் ஜந்துக்களையும் நியமத்தில் வைத்துக்கொண்டிருக்கி றரோ அவர் பிறப்பற்ற இந்த மஹாத்துமா.

### விசேஷ உரை.

யார் கண்ணுக்குப் புலப்படாத கிடாணுக்கள் முதல், லோகாந்தரத்திலுள்ள தேவதைகள் ஈறாகச் சகல உயிர்களுக் கும் ஒன்றான ஆச்சிரயஸ்தானமும் அதிபதியுமோ, யாரு டைய நியமங்களுக் குள்ளாகி மனிதர்கள் பசுக்கள் முதலி யவை யாவும் எப்பொழுதும் காப்பாற்றப் படுகின்றனவோ அவர் பிறப்பற்ற இந்த மஹாத்துமா.

## குரங்கு ஜன்மத்திலிருந்து மநுஷ னுனன் என்னும் சித்தாந்தம்.

மண்ணுலகில் மனுஷன் எப்போது ஜனித்தான், என் னமாக ஜனித்தான் மனுஷன் ஆதியில் ஜனிக்கும்போதே மனுஷனாக ஜனித்தானு; அல்லது புல்லாகிப் பூழுவாகிப் பின் னும் பலபிராணிகளாகிக் கடைசியில் இப்போதிருக்கும் படி யான மனுஷனாக மாறினனு என்ற விவரத்தை அறிய அநேக பூதத்துவசாஸ்திரிகளும். பிராணதத்துவ சாஸ்திரிக ளும் பல வருஷங்களாக பலவித பரிசைஷகளைச் செய்துவரு கிறார்கள்; செய்துவந்துமென்ன ? மிருக மானுஷிக தத்துவ த்தை திருப்திகரமாகக் கண்டுபிடித்தார்கள் இல்லை; ஆயினும்,

மஹாதத்துவ சிரோமணிகளென்று மண்ணுலக மெங்கும் மங்காதபுகழ்பெற்ற (Huxley) ஹக்ஸிலி, (Spencer) ஸ்பென்ஸர், (Lamark) லாமார்க்கு, (Wallice) வாலிஸ், (Lyell) லையெல், (Vogt) ஓக்ட், (Lubbock) லபக்கு, (Buchnoor) பக்னியர், (Rolli) ரோலி, (Huckel) ஹக்கில், (Burnard Davis) பர்னர்டு டேவிஸ், (Bradley) பிராட்லே, (Wood) உட்டு, (Charles Darwin) சார்லஸ் டார்வின் என்றுதி பூதத்துவ பிராணத்துவ சாஸ்திரிகளின் ஆராய்ச்சினால்,

இந்த உலகம் அக்கினி ஜலபிண்டமாய் அநேக நூற்றாண்டுகளாக அசைந் தாடிக்கொண்டிருந்த காலத்தில் ஒருவித அக்கினி ஜுவல ரூபமான பிராணிகள் தோன்றி அநேக ஆயிரம் வருஷங்களாக வதிந்து மாண்டுபோக,அப்பிராணிகளின் சவ சத்துக்களால் பூமியின்மேல் ஒருவித பிரகிருதி உண்டாகியதாகவும்; அந்த பிரகிருதியில் ஒருவித தாது தாவர கிருமி கீடகங்களுண்டாகி அநேக ஆயிர வருஷங்களிருந்து மாண்டுபோக; அவைகளின் சவ சத்துக்களால் பூமியில் கொஞ்சபாகம் பிரகிருதியும், பெரும்பாகம் அகன்ற ஜல சமுத்திரங்களாக, அதில் பிரகிருதி பாகத்திலிருந்த பிராணசத்துக்கள் புரண்டு உருண்டு விழ அவைகள் பலவித பிரம்மாண்ட மீன்களானதாகவும்; இந்த மீன்கள் பல்லாயிரவருஷங்களாக பலவித ரூபங்களுடன் பிராண லக்ஷணத்திற்கேற்ற சில பொறிபுலன்களைப் பெற்று பிரகாசிக்க ; அப்போது பிரபஞ்சத்தில் பிராணி என்று சொல்லத் தக்கவை மீன்களே என்றும்; ஆகவே, மீன் ஜன்மந்தான் மனுஷனுக்கு முதல் ஜன்மமென்றும்; இந்த மீன்கள் (Evolution) (மஹாமாற்றம் என்னும் தருமத்தின்படி) அநேக ஆயிரம் வருஷங்களான பிறகு ஆமைகளாக மாறினதாகவும், இந்த ஆமைகளும் அநேக ஆயிரம் வருஷங்களான பிறகு கடற்கரையோரங்களில் அலைகளால் ஒதுக்ககபட்டுந் தரையில் தங்கி மிருகங்களாக மாறியதாகவும், இந்த மிருகங்களும் அநேக ஆயிரம் வருஷக்களானபிறகு குரங்குகளாக மாறியதாகவும், இந்தக் குரங்குகளே அநேக ஆயிரம் வருஷங்க

ளானபிறகு மனுஷர்களாக மாறியதாகவும், இப்படி மனுஷன் குரங்கு ஜன்மத்திலிருந்து மனுஷனுக மண்ணுலகில் தோன்றிக் குறைந்தபக்ஷம் 2,50,000(இரண்டுலக்ஷத்து ஐம்பதினுயிரம்) வருஷங்களாகிறதென்றும்; இந்த உண்மையை ஸ்தாபிக்க பூமியில் 2,24,000 (இரண்டு லக்ஷத்து இருபத்து நாலாயிரம்) வருஷங்களுக்குமுன் மானிடதேக எலும்புகளும், அக்காலத்தில் அவர்கள் உபயோகப்படுத்திய கல், கொம்பு, தந்தம், முதலான முரட்டுத்தனமான கருவிகள் பல, அநேக குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டு (Geology) பூதத்துவ சாஸ்திரோக்தமாக (Vide the Pre Historic Anthropology by Mano Gabril de Martillet நிரூபிக்கிற தன்றியில், இப்படித் தோன்றிய மனுஷன் 2,00,000 இரண்டுலக்ஷம் வருஷகாலம் மிருகங்களோடு திரிந்தும்; பிறகு 30,000 முப்பதினுயிரம் வருஷகாலமாக வேட்டையாடி மீன்பிடித்துத் தின்று காலங்கழித்தும், பிறகு கிழங்கு காய் கனிகளைத் தின்றும், வேளாண்மை, நாகரீகம், கல்வி, கடவுள்நம்பிக்கைமுதலானவைகளற்றுக் கேவலம் திருவாண பிராணிகளாகத் திரிந்துவந்ததாகவும்; இப்படி அநேக ஆயிரம் வருஷங்களான பிறகு மழை வெயிலுக்குத்தங்க மரக்கிளைகளில் கேவலமான குடிசைகளைக் கட்டிக்கொண்டும்; வயிற்றின் ஆகாரத்துக்காக பலவிடங்களில் வருந்தி திரிந்தபோது உரைப்பு தேய்ப்புகளில் தம் வால்களும் கரைந்தும், மேலிருந்த மயிர்களும் உதிர்ந்துவிடவே, குளிருக்காக மரப்பட்டை நார் கொடிகளைப் போர்வைகளாகவும், ஆகாரத்துக்காக அடிக்கடி அநேக இடங்களில் போய் அலைந்து நொந்து முடியாமல் நீர்வளம் நிலவளமுள்ள ஓரிடத்தில் தங்கி காய், கனி, பயிர் பச்சைகளைப் பயிர்செய்து குடியானவர்களாகி விட்டதாகவும் சொல்லி இருக்கின்றனர்.

இதற் காதாரமாக, பிரபஞ்சத்தில் பிரபலமான சில தேசத்தார்கள் அநேக ஆயிரம வருஷங்களாக அரசாக்ஷி செய்து ஜோதிசாஸ்திரத்தைக் கணித்துவந்திருக்கிறதாகவும், அவர்களில் இந்துதேசத்தாருடைய கணக்கின்படி பிரம்ஹ

ணகல்பாதிகதாப்பதம் 1,972,948,997 கோடி வருஷங்களாகிறதென்றும், சிருஷ்டியாதி கதாப்பதம் 1,955,884,997 வருஷங்களாகிறதென்றும், முதல் சுவயம்பு மநுகதாப்தம் 1971,220,997 வருஷங்களாகிறதென்றும்: வாத்தமான வைவஸ்வத மநுகதாப்தம் 3,892,997 வருஷங்களாகிறதன்றியில்; கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகங்களில்அநேக மநுமாந்தாதி சக்கிரவர்த்திகள் அநேக ஆயிரம் வருஷகாலங்களாகஅரசுபுரிந்திருக்கிறதாகவும் இப்போது (1898-க்கு) கலியுகம் பிறந்து 4,998 வருஷங்களாகிறதென்றும் பஞ்சாங்கத்தில் கணித்திருப்பதாகவும்.

மேலும், பாபிலோன் தேசத்தில் 4,20,000 நான்குலக்ஷத்து இருபதினாயிரம் வருஷங்களுக்குமுன் பஞ்சாங்கம் கணிக்கப்பட்டும், அவர்களது முதலரசன் 4,67,581 சிங்காதனமேறியதாகவும்; அவனது ஏழுசந்ததிகளில் பத்து இராஜாக்கள் 4,32,000-ஷை ஆண்டதாகவும்; வேறு 86 இராஜாக்கள் 34,080 வருஷங்களாண்டதாகவும், சீனதேசத்துப் பஞ்சாங்கம், 15,000 பதினையாயிரம் வருஷங்களுக்கு முன்பே கணிக்கப்பட்டதாகவும், எகிப்த்து தேசத்தார் சரித்திரம் 11,500 பதினோராயிரத்து ஐந்நூறு வருஷங்களுக்கு முன் கணிக்கப்பட்டதாகவும், அதன் முதல்இராஜன் 12,000 பன்னீராயிரம் வருஷங்களுக்குமுன் சிங்காசனமேறியதாகவும், அவ்விடத்திய உன்னதகோபுரம் 10,000 பத்தாயிரம் வருஷங்களுக்கு முன்பாகவே கட்டப்பட்டதாகவும் ஹிரோடாடஸ் (Herodatus) பன்சன் (Baron Bunsen) முதலானவர்கள் எழுதியிருப்பதால், உலக சிருஷ்டியாகிய 6000 ஆறுயிரம் வருஷமாகிறதென்று சொல்வது சாஸ்திர சரித்திர சம்மதமாகாதென்றும் சொல்லியிருக்கின்றனர்.

அன்றியும் ஆப்பிரிக்காக்கண்டத்தின் சில பாகங்களில் இப்போதிருக்கும் Orangoutang) அவுரங்கடாங்கு Gorilla) கரில்லா, (Chimpanzee) சிம்பன்ஜி முதலான குரங்குகளில் அநேகம் ஐந்தடி ஆறடி உயரமுள்ளதாகவும், மனுஷனைப்போல பருமனும், மயிரற்றும் இருப்பதால், இந்த ஆப்

பிரிக்காக்கண்டத்திலிருந்த குரங்கே ஆதியில் மனுஷனாக மாறி இருக்கவேண்டுமென்றும், அவ்விடத்திய குரங்குகளைக்கொன்று அறுத்துப் பரிசோதித்தவர்கள் அவற்றின் தோல், சதை; நிணம், நரம்பு, இரத்தம் எலும்பு முதலானவைகளை மனுஷனுடைய இரத்த நரம்புகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கச்சே யாதொரு வித்தியாசமு மில்லாமலிருப்பதாகவும்; அவைகளின் பாஷையை உற்றுக்கேட்டதில் அவைகள் மனுஷன் தன் சுக சந்தோஷங்களை அறிவிக்கும் பாஷையைப்போலவே இருக்கிறதாகவும்,

மனுஷன் அழகுள்ள ஸ்திரீகளையே நாடித் தேடி கூடிக்குலாவ விரும்புவதைப்போலவே, அக்குரங்குகளும் தம் மனதுக்குகந்த பெண் குரங்குகளுக்காக பலவித சண்டை சச்சரவுகளைச்செய்தும், எதிரிகளை ஜயித்தும், சில சமயங்களில் சில பெரிய குரங்குகளுடன் மத்தியஸ்தம்பேசியும் சில சமயங்களில் தந்திர இந்திர ஜாலங்களால் மதிமயக்கி வசமாக்கிக் கொள்வதாகவும்; சில, தின்பண்டங்களைத்தேடிப்பெண் குரங்குகளுக்கும், குட்டிகளுக்கும் பாதுகாப்பதாகவும்; சிலகுரங்குகள் ஆணும் பெண்ணுங்கூடி தம் குட்டிகளுக்குப் பால் கொடுக்கும் வாடிக்கை ஆதியில் ஸ்திரீ, புருஷர் இருவருக்கும் இருந்ததென்றும்; ஆனால் ஆண்தன்மையுள்ள மனுஷன் அடிக்கடி வெளியில்போய் சஞ்சாரம் செய்யவேண்டி வந்ததில், அதில் கவனம் செலுத்தாமல் விட்டுவிட, அவனது மார்பில் பால் சுரந்து வடியாமல் அவன் ஸ்தனியம் சுருங்கிவிட்டதாகவும், அதேமாதிரியாகவே ஆதியில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் தாடி, மீசை முதலான மயிர்கள் ஒரேவிதமாக இருந்தும்; ஸ்திரீகள் அழகைக்கருதி சில ஆயிர வருஷங்களுக்குமுன் பிடுங்கி வரவே நாளாவட்டத்தில் பெண்களுக்கு மீசை, தாடி முளையாமல் போய்விட்டதாகவும்; குரங்குகளின் கை கால்களில் மனுஷனுக்கிருப்பதைப்போலவே ரேகைகளும், மடிப்புகளும், மற்ற அங்க சின்னங்களும் இருக்கிறதாகவும். மேலும் மனுஷனுக்கு உருசியுள்ள காப்பி, தேயிலைநீர், மது, மாமிசம், உடுப்புகள்

முதலானதுகளில் குரங்குகளுக்கும் ஆசை இருப்பதாகவும். சிலகுரங்குகள் ஒன்றுகூடிபெரிய கற்களையும், மரம்முதலான துகளையும் தூக்கி புரட்டி எறிந்து, அடியில் அகப்படும் இரையை எல்லாக் குரங்குகளுக்கும் சமமாகப் பங்கிட்டுக்கொள்கின்றனவாம். சில குரங்குகள் சில போஜனபீடங்களில், சர்க்கரை, சாதம், உப்பு முதலானவைகளை எங்கெந்த இடங்களில் வைக்கவேண்டுமோ அந்தந்த விடங்களைத் தெரிந்து வைப்பதாகவும்; சில குரங்குகள் மனுஷர்களைப்போல உடைகளைத் தரித்துக்கொள்வதாகவும், பாதரக்ஷைகளை மாட்டிக்கொள்வதாகவும்.

தன் எஜமானுடன் சரிசமானமாக வெளியில் உலாத்தி அனேக வேலைகளையும் செய்து வருகின்றன்வாம். சில குரங்குகள் தம் எஜமானர் பேசும் வார்த்தைகளையும் சைகைகளையும் செவ்வையாகத் தெரிந்துகொள்வதாகவும்; சிலகுரங்குகள், நாடகம் கூத்துகளைப்பார்க்க அதிக விருப்பத்தைக் காட்டுவதாகவும்; சில குரங்குகள் பல பெண் குரங்குகளுடன் கூடிக் குலாவாமல், ஏகபத்தினி விருதத்தை அனுசரிப்பதாகவும்; சில குரங்குகள் தம்மினத்துக்குள் ஏழை, எளிது நொண்டி, மொண்டுகளுக்கு வேண்டிய உதவி செய்வதாகவும்; சில குரங்குகள் சங்கீத இனியராகங்களை விருப்பமுடன் பாடி, கோயில்களுக்குப் போகும்போது மனுஷரைப் போலவே போய்க் கண்களைமூடி முழந்தாளிட்டு மனோராஜ்யம் செய்வதாகவும்; நியூகினியா, போர்னியா ஆஸ்திரேலியாமுதலான விடங்களில் இருக்கும் சில குரங்குகள் அநேக கஷ்டமான வேலைகளைச் செய்வதனுல் அவற்றின் வால்கள் தேய்ப்பு உரைப்புகளால் கரைந்துபோகவே, அக்குரங்குகள் மனுஷனைப்போல நிமிர்ந்து நின்று நடப்பதாகவும்; ஆகவே மனுஷன் குரங்கு ஜன்மத்திலிருந்து மாறியதேயன்றி ஆதம் ஏவாளைப்போல ஆதியில் மனுஷன், மனுஷியாக ஜனிக்கவில்லையென்றும் பல பிரபல நியாயங்களைக் கொண்டு சொல்லுகின்றனர். இதற்காதாரமாக நமது இந்துதேசத்தாரும், மச்ச, கூர்ம, வராக நரசிங்காதி அவதாரங்களும் இந்தஜ

கோட்பாட்டையே அனுசரித்து எழுதியதாகத் தோன்று கிறது.

## குரங்கு ஜனனம் வேறு, மனுஷ ஜனனம் வேறு என்னும் சித்தாந்தம்

கிறிஸ்து முதலான மதானுசாரிகளில் பெரும்பாலார் இந்த உலக சிருஷ்டியைப்பற்றி பைபில் முதலான சில சரித்திரங்களில் சொல்லியபடி சிருஷ்டிஆகி சுமார் ஆறுயிரம் வருஷங்கள்தானுகிறதென்றும்; சரித்திரங்களின் ஆதாரத்தைக்கொண்டு ஸ்தாபிக்கும் சித்தாந்தமே சிறந்த சித்தாந்தமென்னும்; இந்தியா, சீனு, பாபிலோன், எகிப்பது முதலான சில புராதன நாடுகளின் பூர்வ சரித்திரக் கணக்குகள் கேவலம் வர்ணனையும் கட்டுக்கதைகளுமே யென்றும்; செப்டியூஜெண்டு (Sept-uagent) கணிதத்தின்படி உலகம் சிருஷ்டியாகி 7517 வருஷங்களாகிறதென்றும். டாக்டர் ஹேல்ஸ் (Dr· Hales) கணிதத்தின்படி 7294 வருஷங்களாகிறதென்றும், டாக்டர் வால்காட் (Dr. Volgute) கணிதத்தின்படி 6067 வருஷங்க ளாகிறதென்றும், பிஷப்யுஷர் (Bishop Usher) கணிதப்படி 5967 வருஷங்களாகிறதென்றும, பின்னும் பலர் பலவிதமாகக் கணித்து வருவதினுல் சரித்திராதாரத்தையே நம்பிச் சித்தாந்தப்படுத்துவதே சிரேஷ்டமானதென்றும் சொல்வதன்றியில்:—

மனுஷன் ஆதியில் பிறக்கும்போதே ஆதம் ஏவாளைப்போல் மனுஷ ஜனனமாக பிறந்தாரேயன்றி குரங்கு ஜன்மத்திலிருந்து மனுஷராக மாறினுர் என்பது பொய் சித்தாந்தமென்றும்; இதற்கு திருஷ்டாந்தமாக; மனுஷன் நிமிர்ந்து நின்று நடக்கும்படியான இடுப்பும் கை கால் முதலான அங்கங்களை உடையவனென்றும்; குரங்கு குனிந்து நடக்கும்படியான இடுப்பும், மரங்களைத் தாவி ஏறும்படியான கை கால்களை உடைய ஓர்மிருகமென்றும்; மனுஷன் சமயோசிதமாகப் பேசவும், படிக்கவும், பாடவும் புத்தியைப்பெற்றிருப்பதாகவும், இந்தப்புத்திக்கு இருப்பிடமான மண்டைமூளை குரங்கு

ஜாதிகளைப்பார்க்கிலும் மனுஷனுக்குப் பெரிதும், வித்தியாச முடையதுமாக இருக்கின்றனவென்றும் சொல்லுகிறார்கள். எப்படியெனில்,—

மானுஷீக மண்டை மூளையை யறிவிக்கும் (Craniology) கபால லக்ஷண சாஸ்திரப்படி மனுஷனுடைய மண்டையை (1) நீண்ட கபாலபேதம் (Dolichocephals), (2) நடுத்தரக் கபாலபேதம் (Mesocephals), (3) குறுகிய கபாலபேதம் (Brachycephals) என்று சாஸ்திரிகள் வகுத்திருப்பதாகவும்; இப்படி வகுத்ததில (1) முதல்தர மண்டையோடு 100-க்கு 70-74 அங்குலமும், (2) இரண்டாந்தரம் 100-க்கு 75-79. அங்குலமும், (3) மூன்றாம்தர மண்டையோடு 100-க்கு 80 முதல் 95 அங்குலமும் இருக்கவேண்டியதென்றும்; இந்த கணக்கின்படி பரிசோதிக்கச்சே ஐரோப்பியருக்கு 92-3 அங்குலமும், ஆசியாக்கண்டத்தாருக்கு 87-1 அங்குலமும், அமெரிக்காக் கண்டத்தாருக்கு 87-5 அங்குலமும், ஆஸ்திரேலியருக்கு 81-9 அங்குலமுமாக இருப்பதன்றியில், 1426-ம் வருஷம் பிராஞ்சுதேசத்தில் இடிந்துபோன இடுகாட்டுக்குழியில் எடுத்த மண்டையோடுகளையும்; 1484-ம் வருஷம் லந்தன் நகரில் இடிந்துபோன இடுகாட்டுக்குழியில் அகப்பட்ட மண்டையோடுகளையும் பரிசோதிக்கச்சே, அவற்றின் மண்டையோடுகள் முன்சொன்ன கணக்குக்குச் சரிப்பட்டிருக்கிறதென்றும்; ஆனால் உருவிலும், உயரத்திலும், வயதிலும் பெருமைபெற்ற (கரிலா) குரங்கின் மண்டையோட்டைப் பரிசோதிக்கையில் 36-51 அங்குலமும் செப்பன்சி குரங்கின் மண்டையோடு 25-45 அங்குலமும், அவுரங்கிட்டாங்கு குரங்கின் மண்டையோடு 27-34 அங்குலமும் தான் இருப்பதனால், இவை கேவலமான சிறு குழந்தைகளின் மண்டையோட்டிலும் சிறுத்திருக்கிறதென்றும்; அன்றியும் குரங்கிலிருந்து மனுஷ ஜனனமானதென்றால் இப்போது உலகில் இருக்கும் குரங்குகள் அநேக வருஷங்களாக மனுஷ ரூபமாக மாறாமல் இன்னமும் குரங்கு ஸ்வரூபமாகவும், குரங்கு புத்தியை மாத்திரம் உடைத்தாயிருப்பதற்கு யாது காரணமென்

றும்; மேலும் பேசும்பாஷை, பகுத்தறிவு, பொதுநலம், பரோபகாரம், பச்சாத்தாபம், பரிசுத்தம், பெருந்தன்மை, பகவத் பக்தி முதலான குணபாவங்கள் குரங்குகளிடத்தில் இல்லாமையால், குரங்குகள் கேவலம் மிருகஜாதியென்றும்; ஆகவே மனுஷன் மாத்திரம மனது என்னும் சிறந்த சாதனத்தை உடையவனாக இருப்பதால். அவன் ஆதியில் ஜனிக்கும்போதே மனுஷனாகவே ஜனித்தது சுருதியுக்தி யனுபவத்துக்கு சம்மதமானதென்றும் சொல்லுகிறார்கள். நிற்க,—

## மனுஷ ஜனன விநோதம்.

இப்படி மனுஷ ஜனனத்தைப்பற்றிப் பலர் பலவிதமாக பரிக்ஷித்துச் சித்தாந்தப்படுத்தினும்; மனுஷ ஜன்மம் மண்ணுலகிலுள்ள மற்றெல்லா ஜந்துகோடிகளிலும் சிறந்த ஜன்மமென்பதற் கையமில்லை. மனுஷனுக்கு பக்ஷிகளைப்போலப் பறக்கும்படியான இரக்கைகள் இல்லை; ஆயினும், ஆகாயத்தின் அதிக உயரத்தில் பறக்கும்படியான பக்ஷிகளை எல்லாம் தன் பாதத்துக்கடியில் வருவித்துப் பணிவிடை செய்விக்கும்படியான புத்தி இருக்கிறது. பெரிய உருவமுடைய யானை காண்டாமிருகாதிகளுக்கு இருக்கும்படியான பலமும் மனுஷனுக்கு இல்லை; ஆயினும் அப்படிப்பட்ட பெரிய உருவமும் பலமுமுள்ள மிருகங்களை யெல்லாம் அவன் காலுக்கடியில் வந்து நின்று அவன்காலாலிடும் கட்டளைகளைத்தலைகுனிந்து செய்யும்படி செய்விக்கச் சக்தி இருக்கின்றது. பயங்கரமான புலி, சிங்கம், பாம்பு முதலான கொடிய ஜந்துக்களுக்கு இருக்கும்படியான நகம், பற்கள், விஷம் முதலானதுகள் இல்லை. ஆயினும், பயங்கரப் புலி, சிங்கம், பாம்பு முதலாது ஜந்துக்களெல்லாம் மனுஷனுடைய மனோராச்சியத்தின்படி அவனிடம் வந்து ஆடி அடங்கி இருக்கச் செய்யும் சக்தி இருக்கின்றது. இம்மட்டோ! மனுஷன் தனது உபயோகத்திற்காக, பூமியும் ஆகாசமும் நடுங்க இடி முழக்கம்போன்ற பேரொலியோடு இரவும் பகலும் ஓயாமல் வாயுவுக்கும் விசேஷித்த வேகத்துடன் ஓடி, தூரமென்பதில்லாமல் அநேக காதங்க

ளில் பிரிக்கப்பட்டிருப்பவர்களை அற்பகாலத்தில் கூடிக்குலா வும்படிச் செய்யும் புகைவண்டி எலக்டிரிக் வண்டிகளையும்; மலைபோலெழுந்து மதிமயங்கச்செய்யும் பேரலைகளுக்கும், பெருமழைக்கும், சண்டமாருதத்திற்கும் அஞ்சாமல் பய மின்றி வருகிற அலைகளைச் சக்கரம் போலக் கண்ட துண்ட மாக்கிக் கம்பீரமாய்ப் போய்வரும் புகைக்கப்பல்களையும், நொடியில் ககனமார்க்கமாய்ப் பறந்து பூகோள ககோளங்க ளின் அநேக பாகங்களை ஒரேகாலத்தில் பார்த்ததிசயிக்கச் செய்யும் பெலூன் என்னும் ஆகாயக் கப்பல் புகைக்கூண்டு களையும்; வாயுவேகத்தையும் மனோவேகத்தையும் வெட்கச் செய்து பதினாயிரம் மயில்தூரத்தைப் பத்து நிமிஷத்தில் கட ந்து கஷ்ட இஷ்ட நிஷ்டூரங்களையும் சுக சந்தோஷங்களையும் வெளிப்படுத்த மின்தாது தந்தித்தபாலையும், அபார சமுத்திர ங்களைக் கடக்கும்படி இருப்புப்பாலங்களையும் ஆச்சரியமான தண்ணீர்க் குழாய்களையும், ஒரே பிந்துஜலத்தில் அனந்த கோடி பிராணிகளைப் பார்க்கக்கூடிய சூக்ஷ்மவீக்ஷணிக் கருவி யையும், அநேக யோசனை கோடி மயில்களில் சுழலாநிற்கும் அண்டகோளாதி தூமகேதுக்களையும், சுமார் ஆயிரம்வருஷ ங்களுக்குப் பிறகு நடக்கும் கிரகணங்களையும் அரைநொடி யில் கண்டுகணிக்க உதவும் தூரவீக்ஷணி என்னும் கருவி யையும், அணு ரூபமானவைகளை அகண்ட ரூபமாக்கிக் காட்டக்கூடிய அணுதரிசினிக் கருவியையும், க்ஷணத் தில் தன்னைப்போல ஒளிச் சித்திர பிம்பத்தைக் காட்டும் பொடகிராப் என்னும் கருவியையும், கணப்பொழுதில் கணக்கற்ற கிரந்தங்களையும், பத்திரிகைகளையும் பதிப்பிக் கத்தக்க அச்சியந்திரங்களையும், நிமிஷத்திற்குள் காலவித்தி யாசத்தை யறியக்கூடிய அனிலோர்ப்பனித, ரசசுரக் குழாய் களையும்; அகத்தி லடக்கத்தக்க அழகிய துப்பாக்கிகளையும், பிஸ்டல்களையும், வெடிமீன்களையும், உத்தம வயித்தியத்திற் கேற்ற கத்திமுதலான விசித்திரக் கருவிகளையும் பின்னும் அநேகமான அற்புதக்கருவிகளையும் அமைக்கும்படியான அறிவைப் பெற்றிருப்பதால்; இந்த பிரபஞ்சப் படிப்பில்பெ ருமைபெற்ற படிப்பு, மனுஷனுடைய தத்துவத்தை அறியும்

படிப்பே என்று பெரியோர் அநேகர் சொல்லியிருக்கிறார்கள் ஆகையால் இந்த மானிட ஜன்மத்தின் அமைப்பைப் பற்றி அடுத்து விசாரிப்போம்.

He is the Great and Unborn Being, Who is the Sovereign of Gods, Who governeth man & beasts, and by Whom are all worlds supported,

---

## ஆரியர் சத்திய வேதத்தில் சிருஷ்டி விஷயமாக இந்த முதலத்தியாயத்தில் கண்ட உபநிஷத்துகளின் கருத்துரை.

ஆதியில் அத்துவதியர் ஒருவர்தவிர வேறு ஒருவருமில்லை. வேறொன்றுமில்லை. அவர் சிருஷ்டிக்கும் விஷயமாக ஆலோசனை செய்துக்கொண்டே இந்த மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் சிருஷ்டித்தார். இப்படி சிருஷ்டிக்கப் பட்ட இந்த மண்ணுலகம் முதலில் அக்கினி ஜலபிண்டமாக அந்தரத்தில் அசைந்தாடிக்கொண்டிருந்தது. பயங்கர அந்தகாரத்தோடு அந்தரத்தில் அசைந்தாடிக்கொண்டிருந்த இந்த உலகத்துக்கு வெளிச்சத்தையும், உஷ்ணத்தையும் ஆகர்ஷணத்தையும் கொடுத்து உதவிசெய்யச் சூரியன், சந்திராங்காரகாதி விண்ணுலகத்தையும் படைத்தார். இப்படி மண்ணுலகமும், விண்ணுலகமும் ஒன்றையொன்று இழுப்புக்கவர்ச்சி ஓட்டக்கவர்ச்சிகளால் பந்தப்பட்டு ஆட ஆரந்த முண்டாக்க; முதலில் இந்த உலகத்தில் அக்கினி ஜுவாலரூபமான தாதுகந்த மூல கிரமி கீடகங்களைச் சிருஷ்டித்தும், அவற்றின் சவ சத்துக்களால் மண்ணுலகில் கிட்டங்தோன்றச் செய்வித்தும், அதனிடத்திலும் அநேககோடி, தாதுகந்தமூல கிருமி கீடங்களைப்படைத்தும், அவற்றின் சவ சத்துக்களால் பிரபஞ்ச பிரகிருதிபாகத்தையும், பெரும் சமுத்திரத்தையும் உண்டாக்கியும், இவ்விருபாகங்களிலும் சுகமாக வசிக்க அநந்தகோடி தாது கந்தமூல ஜீவபிராணிகளை சிருஷ்டித்தார்.

அவற்றின் தேய்ப்பு உரைப்புகளாலும், சவ சத்துக்களாலும் மண்ணுலகத்தை கெட்டியாச்கியும், அதை மூடிக்

கொண்டிருந்த பயங்கரமான பனிக்கட்டியினால் அபாயமுண்டாகாதபடிக்கு அண்டத்தின் அடிவயிற்றில் அகன்ற அக்கினிக் கடல்களையும், அந்த அக்கினிக்கடல்களிலிருந்து அடிக்கடி அக்கினி சிருங்கங்கள் கொக்கரித்து எழுந்து வந்து நேமியில் நெருப்புமலைகளாகப் பிரகாசித்துப் பயங்கரமான பனியைப் பக்ஷிக்கவும்; மண்ணுலகத்தின்மேலிருக்கும் அகன்ற ஜலசமுத்திரங்களால் பூமியின்மேல் உஷ்ணத்தைத் தணிக்க நியமித்தும், பூமியின்மேல் புல், பூண்டு, பசு, பக்ஷி, மனுஷர் முதலானவர்களுக்கு இன்றியமையாத பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாகிய பஞ்சபூதங்களையும் உன்னத பருவதங்களையும், பள்ளத்தாக்குகளையும், நதிகளையும் படைத்தும், இப்பிரபஞ்சத்தை பிராணிகோடிகள் சுகமாக வாழும்படியான ஸ்திதிக்கு மாற்றிய பிறகே அநேககோடி கணக்கான கந்தமூல ராசிகளையும், கிருமி கீடகங்களையும், பற்பலவிதமான பக்ஷி கோடிகளையும், மனோகீதமான மிருகங்களையும் இந்தப் பிராணிகள் யாவற்றிற்கும் இடையில் அதி அற்புதமான சிறந்த பிராணியாக மனுஷனையும் படைத்தார். ஆ! மனுஷனுடைய உபயோகத்திற்கு மஹா மகிமைபெற்ற வீடாக இருக்கும் இந்த மண்ணுலகத்தின் அமைப்பு என்ன?

இந்தப் பிரபஞ்சமாகிய பூமி,சகல சராசர பதார்த்தங்களடங்கிய பாண்டாகாரமாக இருக்கிறதன்றியில், கிருஷிசெய்யுங் குடியானவனைப்போல் நவதானியங்களையும், இதரபோஜன பதார்த்தங்களையும் நமக்காக முளைப்பித்துத்தருகின்றது. அப்பு, ஜலத்தைக்கொண்டுவந்து தருபவனைப்போல நமது ஸ்நானபானங்களுக் குதவிசெய்கின்றது. அக்கினி, சமையற்காரனைப்போல நளபாகஞ்செய்ய உதவுகின்றது. வாயுவு, வெளியிற் சாமரம்போல வீசுகின்றது. ஆகாயம், விளக்கேற்றுபவனைப்போற் சோம சூரிய நக்ஷத்திராதி ஜோதிகோடிகளைத் தரித்துக்கொண்டிருக்கிறது. மேகங்கள், ஜலத்தைச் சுமந்கொண்டு வந்திறங்கும் ஸ்திரீகளுக்குச் சமானமாகவிருக்கின்றன. நதி பிரவாகம், குளம் முதலியவைகள்

தண்ணீர் வைத்திறங்குங் கொப்பரைகளைப் போலிருக்கின்றன. விருக்ஷஜாதிகள், (சவிய) தானியங்கள் முதலான பல சரக்குகளை வைத்துக்கொண்டிருக்கும் கடைக்காரர்களைப் போல இலைகள், புஷ்பங்கள், பிஞ்சுகள், காய்கனிகள், கிழங்குகள், தானியங்கள் முதலாகிய பலவித சம்பாரங்களைத் தருகின்றன. பருத்திச்செடி, பட்டுப்பூச்சி முதலானவைகள் நமக்கு வஸ்திர வியாபாரிகளாகவும்; நாய், ஆடு, புலி, கரடி முதலியவைகள் சால்வைகள், பச்சடங்கள், கம்பளங்கள் முததானவைகளைத் தரும் வர்த்தகர்களாவும் இருக்கின்றன. பருவதங்கள், சமுத்திரங்கள், ரத்தினவியாபாரிகளைப்போல நவரத்தின முதலான விவித திரவியங்களைத் தருகின்றன. பூஞ்செடிகள், புஷ்பமாலிகைகளைப்போ லிருக்கின்றன. நானாவித மூலிகைகள், அவுஷதங்களைத்தரும் வைத்தியர்களாக விருக்கின்றன. பூந்தோட்டங்கள், நடன சாலைகளுக்குச் சமானமாக விருக்கின்றன. மயில், அன்னம், புறா, வான்கோழி, கொக்கு முதலிய பக்ஷிகள் நடனஸ்திரீகளைப்போல நடனஞ் செய்கின்றன. கோகிலம், கிளி, நாகணவாய் முதலான பக்ஷிகள் பாடகர்களைப்போல கீதங்களைப்பாடுகின்றன. காகம், கழு, வல்லூறு, கோழி முதலான பக்ஷிகளும், பாம்பு, பல்லி, அரணை முதலானவைகளும், வீடுகளைச் சுத்தி செய்யும் ஜாடமாலிகளைப் போல பல கிருமி கீடங்களையும், செத்த ஜந்துக்களாதி உச்சிட்டங்களையும் பக்ஷிக்கின்றன. தேனீக்கள் தேனைத் தருகின்றன. எருமை. ஆடு மாடு முதலியவைகள் இடையர்களைப்போல நமக்குப் பாலைத்தருகின்றன. எருமைக்கிடா, யானை குதிரை ஒட்டக முதலியவைகள் நமக்கு வாகனங்களாகிச் சுமப்பதன்றியில் பின்னும் பலவித பாரங்களைச் சுமப்பதற்குங்கூட பிரயோஜனப் படுகின்றன. புல் முதலானவைகளோ அம்மிருகங்களுக் காகாரமாக விருக்கின்றன. எறும்பு முதலானவைகள், வீடுகளைச் சுத்திசெய்வோரைப்போல் சிந்திக்கிடக்கும் பல வஸ்துக்களைப் புசித்துக் கிரகங்களைச் சுத்தமாக்குகின்றன. நாய்கள், காவலாளிகளைப்போல வீடு முதலானவைகளைக் காக்கின்றன. கழுதைகள் நமக்காகப் பல பாரங்களைச் சுமக்கின்றன.

சேவல், காகம், குருவி முதலியன நமக்குத்தினகரனாகிய சூரியனுதிக்கிறுனென்று தெரியப்படுத்தத் தட்டியெழுப்புங் கரங்களைப்போ லாகின்றன. சிங்கம், புலி, கரடி, முதலான துஷ்ட மிருகங்களும், பாம்பு தேள் முதலிய விஷ சந்துக்களுந் தெய்வ பயத்தைப் போதிக்கும் ஆசாரியருக்குச் சமானமாக விருக்கின்றன. ஆஹா! மனுஷன் சுகமாக வாழ்வதற்கு சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகத்தின் விந்தையான அமைப்பு என்ன?

முதல் அத்தியாயம் முற்றிற்று.

# இரண்டாவது அத்தியாயம்

## ஜீவாத்ம லக்ஷணம்.

### (23) ஈசோபநிஷத்து

8-வது அத்தியாயம் 2-வது வாக்கியம் 1. 3.

தஸ்மாச்சதேவ பஹுதாஸம் ப்ரஸூதாஹ
ஸாத்யாமநுஷ்யஹ பசவோவயாம்ஸி
ப்ராணாபானௌ வ்ரீகாயவௌத பஸ்ச்சிர
த்தாஸத்யம் பிர்மசர்யம் விதிச்ச.

பொழிப்புரை.

அவரிடமிருந்து அநேக விதமான தேவதைகளும், சாத்தியர்களும், மனிதர்களும், மிருகங்களும், பக்ஷிகளும், பிராணனும், அபானனும், தானியங்களும், யவையென்கிற தானியமும், தபசும், சிரத்தையும், சத்தியமும், பிரம்மசரியமும், விதியும் உண்டாயின.

விசேஷ உரை.

மானிடதேக விநோதக்காக்ஷி.

மனிதன் உருவம் மற்ற எல்லாப் பிராணிகளின் உருவத்திலும் விந்தையானது. அதன் ஒவ்வொரு உறுப்பும் இன்றியமையாதவைகளாகப் படைக்கப்பட்டிருக்கின்றன. அதன் விவரத்தை இங்குச்சற்று சங்கிரகமாக எழுதுவது அவசியம்

மானிட சரீரத்துக்கு, எலும்புகள் ஓர் வித அஸ்திவாரமாய் இருந்து மூளை இருதயம், நுரையீரல் முதலிய மிருதுவான உறுப்புகளுக்கு, அபாயம் வரவொட்டாமல் காத்து மாமிஸங்கள் ஒட்டிக்கொள்ள இடத்தைத் தருகின்றன. எலும்புகளை யதாஸ்தானத்தில் சேர்த்து, தந்திகளால் கட்டுவதற்கு, எலும்பு கோர்வை (Skeleton) என்று பேர்.

## மானிட தேகத்தின்
## எலும்புக் கோர்வை முதல் பாகம்.

கருப்பிண்டத்தில் எலும்புகள் மிருதுவாய் இருக்கின்றது; அதற்கு குருத்தெலும்பு என்று பேர் (Cartilage); பிறகு வயது விருத்தியாக, அவைகளில் இருக்கிற சுண்ணும்பு படிப்படியாய் அதிகரித்து உறுதிப்படும். தேகத்தில் பல ரூபமான எலும்புகளுண்டு; தலை, இடுப்பு இவைகளின் எலும்புகள் தட்டையாயும்—புஜம், முன்கை, தொடை, கால் இவைகளின் எலும்புகள் நீண்டும் முள்ளந்தண்டு கணுக்கை, கணுக்கால் இவைகளின் எலும்புகள் விரூபமாயும இருக்கின்றன.

சிரசில் 8,—காதுக்குள் 6,—முகத்தில் 14,—பறகள் 32,—முள்ளந்தண்டில் 26,—நாக்கில் 1,—மார்பில் 1,—விலாவில் 24,—கைகளில் 64,—கால்களில் 62,—கைகால் பெருவிரல்களின் குளச்சுகளில் இருக்கிற சிறிய எலும்புகள் 8. ஆக மனிததேகத்தில், 246 எலும்புகள் இருக்கின்றன.

முள்ளந்தண்டில் இருக்கிற ஒவ்வொருஎலும்புக்கு முன்னேலும்பு என்று பெயர். அதில்ஒரு பெரிய துவாரமுண்டு; அந்தத் துவாரங்கள் ஒன்றாய்ச்சேர்ந்து முள்ளந்தண்டு மத்தியில் நெடிய துவாரம் ஒன்று காணப்படும்; அதில் மூளையின் கொடிஅடங்கியிருக்கிறது. முள்ளந்தண்டுக்கு அடியில் முக்கோணவடிவாய் ஒரு எலும்பு உண்டு. அதற்கு, திரிகஸ்தான எலும்பு (Sacrum) என்று பெயர். அதனை குண்டி எலும்பு என்றும் சொல்வதுண்டு. குழந்தையில் அந்த எலும்பு 5-துண்டுகளாய் இருக்கும். அந்த எலும்பின் முன்பக்கத்து

மேல் புறம், முன்னுக்குப் பிதுங்கியிருக்கும்; அந்தப் பிதுக்கம், ஸ்திரீகளுக்கு அதிகப்பட்டு இருந்தால், பிரஸவகாலத்தில், சிசுவின் தலை கீழ்க்கு இறங்க இடமில்லாமல், தலை சிக்கிக்கொண்டு, தாயாருக்கு அதிக வேதனையை உண்டாக்கும் கருப்பையிலிருக்கிற குழந்தையில், தலையெலும்புகள் வெவ்வேறாய் இருக்கும்; ஏனென்றால், பிரஸவ காலத்தில் சிசுவு, தாயின் கருப்பையை விட்டு இடைக்குழியில் இறங்கி வெளிப்படுகிறபோது, அந்தந்த ஸ்தானங்களுக்குத் தக்கபடி, சிரசு பொருந்தவேண்டியது. எலும்புகள் சேர்ந்து அசையாமல் இருந்தால், தக்கபடி சிரசு ஒடுங்கி அமையாமல், சிக்கிக்கொண்டு சிசுவுக்கும் தாய்க்கும் அபாயம் நேரிடும். மேலும் தலை ஒரே எலும்பாய் இருந்தால், பலம் குறைச்சலென்று, பல எலும்புகளாய் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. சிரசில் எலும்புகள் ஒன்றோடொன்று ஏறுகிற இடங்களில், தையலைப்போல் காணப்படுகிறவைகளுக்கு, ரேகைகள் என்று பேர் (Sutures) அவைகளை பிரமனெழுத்து என்று சொல்லுவது வழக்கம் அடிபட்டுத் தலையெலும்பில் வெடிவு கண்டால், அது அதிகமாய்ப் பரவவொட்டாமல், காபல ரேகைகள் தடுக்கின்றன. குழந்தை உச்சியில் இரண்டு ரந்திரங்கள் இருக்கின்றன; அவைகளுக்குப் பிரமரந்திரம், உச்சித்துவாரம் என்று பேர். அந்தத்துவாரங்களால், தலையோடுகள் ஒன்றின்மேலொன்று ஏறி பிரஸவ காலத்தில், சிரசு சிறுத்து அடங்கி விடுகின்றது.

மோவாய்க்கட்டை எலும்பானது, காதெலும்போடு சேர்ந்து, வாயை மூடவும் திறக்கவும் செய்கின்றது. இந்த மூட்டு விலகிவிட்டால், திறந்த வாயை மூடக்கூடாமலிருக்கும்.

கண் குழியில்; விழி, அதற்குடைய சதைகள், ரத்த நரம்புகள், ஸ்பரிசநரம்புகள், கண்ணீரைச் சுரப்பிக்கிற கோளங்கள், இவை முதலியவைகள் அமைந்திருக்கின்றன.

நாசித்துவாரத்துக்கு மத்தியில் இருப்பதற்கு, தண்டு என்று பேர். நாசித்துவாரங்களுக்கும், கண் குழிகளுக்கும்

சம்பந்தமான துவாரங்களுண்டு, அவைகளின் வழியாய்க் கண்ணீர் மூக்குக்கு இறங்குகின்றது.

## மானிட தேகத்தின் எலும்புக் கோர்வை இரண்டாம் பாகம்.

புஜ எலும்பு நீண்டு சிகரம் உருளையாய், தோள்பட்டை எலும்போடும், கீழ்முனை தட்டையாய் முன்கை எலும்புகளோடும் சேர்ந்திருக்கின்றது. முன்கையில் 2-எலும்புகளுண்டு, உட்புறமாய் இருப்பதற்கு, இரத்தினிஎலும்பென்றும், (Ulna)—வெளிப்புறமாய் இருப்பதற்கு, ஆரைஎலும்பென்றும் (Radius). இடுகுறிப்பெயர். மணிக்கட்டில் 8-எலும்புகளிருக்கின்றன. அவைகள் வரிசைக்கு 4-ஆக இரண்டு வரிசைகளாக இருக்கின்றன. உள்ளங்கையில், 5-எலும்புகளும், ஒவ்வொரு விரலுக்கு மும்மூன்றாக, 4-விரல்களில் 12-ம் பெருவிரலில் 2-ம் ஆக 14-எலும்புகளுண்டு.

சரீரத்தின் கீழ்ப்புரத்தில், 4—எலும்புகள்சேர்ந்து, குழியாய் இருக்கிறதற்கு இடைக்குழி (Pelvis) என்று பேர். இந்த இடைக்குழியின் பக்கமாய் இருப்பவைகளுக்கு, இடுப்பெலும்புகளென்றும்; பின்புறமாய் இருப்பவைகளுக்கு திரிகஸ்தான எலும்பு, குயில் மூக்கெலும்பு, என்றும் பேர்.

பற்கள். முதலில்முளைக்கிற பற்களுக்கு,பாற்பற்கள் என்றும், அவைகள் விழுந்து இரண்டாந்தரம் முளைத்து விருத்தாப்பியம் வரையில் இருப்பவைகளுக்கு, ஸ்திரப்பற்கள் என்றும் பேர். குழந்தைகளுக்கு இருக்கிற பால்பற்கள் 20, அவைகளாவன:—முன்பற்கள் 8,—கோரைப்பற்கள் 4,—கடவாய்ப்பற்கள் 8. ஆக 20—தாம். ஸ்திரப்பற்கள் 32—அவைகளாவன:—முன்பற்கள் 8-கோரைப்பற்கள் 4,—கடைவாய்ச்சிறியபற்கள் 8,—கடைவாய்ப் பெரியபற்கள் 12 ஆக 32-ஆம், ஈறுக்கு வெளியிலிருப்பதற்கு பற்சிகரமென்றும, உள்ளே மறைந்திருப்பதற்கு வேர் என்றும் சொல்லப்படும் சாப்பிடுகிற பதார்த்தங்களை பற்கள் நசுக்கி மெதுவு படுத்துகின்றன; நாம் பேசும்போது, காற்றை உள்ளடக்கி சொற்களை தெளிவு படுத்துகின்றன. முன்பற்கள் இழந்தவர்கள்

சில எழுத்துகளைத் தெளிவாய் உச்சரிப்பது கடினம். பற்கள் ஒழுங்காயும் லக்ஷணமாயும் இருந்தால் முகத்துக்கு அலங்காரம்.

நெஞ்சறையில், முன்பக்கம் மத்தியத்திலிருக்கிற எலும்புக்கு, மார்க்கண்ட எலும்பு (Sternum) என்றும், பக்கத்துக்கு 12-ஆக இருக்கிற எலும்புகளுக்கு பழு எலும்புகள் (Ribs) என்றும்சொல்லுவர். 7-விலா எலும்புகளும், மார்க்கண்ட எலும்புடன் சேர்ந்திருக்கும்; 3-ஒன்றின்மேல்ஒன்று படிந்திருக்கும்,மற்ற இரண்டும் அந்தரமாய் இருக்கின்றன. நெஞ்சறைமேல் குறுக்காய், ஒரு முனை மார்க்கண்ட எலும்போடும் மற்றொரு முனை தோள்பட்டை எலும்போடும் கூடியிருப்பதற்கு காறை எலும்பு (Clavicle) என்றும், நெஞ்சறைமேல் பின்புறமாய் இருக்கிற தட்டை எலும்புக்கு, தோள்பட்டை எலும்பு (Scapula) என்றும் பெயர்.

இடுப்பெலும்பு குழந்தையில் மூன்று துண்டுகளாய் இருக்கும். ஆணுக்கும், பெண்ணுக்கும் இடைக்குழியில் வித்தியாசமுண்டு. பெண்ணின் எலும்புகள் லேசாயும், இடுப்பெலும்புகள் அகன்றும், பள்ளமானது விசாலமாயும், அதிக ஆழமில்லாமலும் அடிப்புறத்தில் எலும்புகள் தூரமாயும், முன்புறத்திலிருக்கிற வளைவு பெரிதாயும் இருக்கும். தேகத் தெலும்புகளுக்குள், தொடை எலும்பு நீண்டது, அதன் சிகரம் உருண்டு பந்தைப்போல், இடுப்பெலும்போடு சேர்ந்து, சரீரத்தைத் தாங்கிக்கொண்டு இருக்கின்றது. கீழ் முனை இரண்டு பிரிவாகிக் காலெலும்போடு கூடிஇருக்கும். முழங்காலில் தனியாய் உருண்டை ஒரு எலும்பு இருக்கும்; அதற்கு முழங்கால் சிப்பி என்று பெயர். காலில் 2-எலும்புகளுண்டு; உட்புறமாய் இருக்கிற பெரிய எலும்புக்குக் குதிரைமுக எலும்பு (Tibia) என்றும், வெளிப்புறமாய் இருப்பதற்கு சரலெலும்பு (Fibula) என்றும் இடுகுறிப் பேர். ஒவ்வொரு பாதத்தில் 26-எலும்புகளிருக்கின்றன. குதிக்காலில் 7-ம் உள்ளங்காலில் 5-ம் கால்விரல்களில் 14-ம் ஆம். இப்படி மானிடதேகத்தில் சுமார் 14 பவுன் எலும்புகளிருக்கின்றன.

2—முட்டுகள், (ஜாய்ன்ட்ஸ்-Joints)

எலும்புகளின் முனையை, ஒன்றோடொன்று சேர்த்துக் கட்டிவைத்திருக்கிற, பலமுள்ள வெள்ளையான சவ்வுக்கு சந்திபந்தனம் லிகெமென்ட் (Ligament) என்று பெயர். எலும்பு மூட்டுகளில் சிலது அசையாமலும், சிலது கொஞ்சமாய் அசைந்து கொண்டும் இருக்கும். முழங்கை, மணிக்கட்டு, விரல்கள், முழங்கால், கணுக்கால் ஆகிய இவைகள் பெட்டிக்கீல்களைப் போல் முன்னுக்கும் பின்னுக்குமாத்திரம் அசைவு கொடுக்கும்,

இனி மானிட தேகத்தின் மாமிசாதிகளைப்பற்றி விசாரிப்போம்.

3—மாமிசம் பிளஷ். (Flesh)

மாமிசங்கள், எலும்புகளை ஆடச்செய்து தேகசலனங்களை உண்டாக்குகின்றன. சிவந்தநிறமான மாமிசங்கள், அடுக்கடுக்காய் அமைந்திருக்கும்; அவைகளில் சிலது, அகலமாயும், சிலது நீண்டும் இருக்கும். எலும்போடு ஒட்டிக்கொண்டு இருக்கிற மாமிச முனைகள், சிலது நரம்புகளைப்போல் நீண்டும், சிலது அகலமாயும் இருக்கும். நீண்டிருப்பவைகளுக்கு, மாமிச தந்திகள் (Tendon) என்று பெயர். மாமிசங்கள் சரீரத்துக்கு நாநாவித ரூபங்களைக் கொடுத்து, வித்தியாசத்தைஉண்டாக்குகின்றன.சரீரத்தில்இரண்டுஜாதிச்சதைகளுண்டு: ஒன்று மனதுக்கு அயிக்கமானதாயும் மற்றொன்று, மனதுக்கு அயிக்கப்படாததாயு மிருக்கும்.

4—கண்கள். பார்வை. (ஐஸ். ஸயிட். The Eyes Sight)

கண்களைக் கொழுப்பும் சதைகளும் சுற்றிக்கொண்டிருக்கின்றன. சதைகள் கண்களை தேவையானபடி திருப்புகின்றன. விழியில் 3-புரைகள் உண்டு; வெளிப்புரை உறுதியாயும், வெள்ளையாயு மிருக்கும்: அதற்கு வெள்விழி என்று பேர். இரண்டாம் புரை கருத்திருக்கும். பார்வை நரம்பு மலர்ந்து மூன்றாம்புரை ஏற்படுகின்றது; அதற்கு ரூப உற்பத்தி ஜவ்வு (ரெடினா Retina) என்று பேர். விழியில் முன்புறமாய் வளைந்து, வெள்ளையாய் இருக்கிற பாகத்துக்கு,

சுக்குல மண்டலம் என்று பேர். இதற்குப்பின், கறுத்த ஜவ்வு இருப்பதால், இதுவும் கறுப்பாகவே காணப்படும். அந்தக் கருத்த ஜவ்வை கிருஷ்ணமண்டலம் என்றுசொல்லு வது வழக்கம். கருவிழியில் காணப்படுகிற துவாரத்துக்கு கண்தாரை என்று பேர் (கிருஷ்ணமண்டலதுவாரம்) அந்தத் தாரையானது வெளிச்சத்தில் சிறிதாகும்; இருளில் பெரிதா கும். கண்தாரைக்குப் பின்னால் யானைக் குண்டுமணியைப் போல் ரூபத்தைப்போன்று அதிக வெள்ளைக் கட்டியாய் ஒரு மணியிருக்கும், அதற்கு கிருஷ்ணமணி (Lens) என்று பேர். அது மீன்களில் உருண்டு இருக்கும், வயது தளர்ந்த வர்களுக்கு, இது மங்கலாகிவிட்டால், பார்வை தெரியாது முட்டையின் வெள்ளைக்கருவைப்போல் குழகுழப்பான ஓர் வித நீர் கண்ணுக்குள் நிறைந்திருக்கும். அதனால், ஜவ்வுக ளும் மலர்ந்து விரிந்திருக்கின்றன; நாம் பார்க்கிற பொருள் களின் நிழல், கண்தாரை வழியாகச் சென்று, ரூப உற்பத்தி ஜவ்வின்மேல் படுக்கின்றது; அந்த உணர்ச்சி, பார்வை நரம்பு வழியாய் மூளைக்குச்சென்று, மூளை மனதுக்குத் தெரிவிக்க, மனது இன்ன வஸ்துவென்று தெரிந்து கொள்கின்றது.

5—மூக்கு-வாசனை. (நோஸ், ஸ்மெல். The Nose Smell.)

பதார்த்தங்களுடைய வாசனையைத் தெரிந்துகொள்ளு கிற புலன், நாசியிலிருக்கின்றது. நாசித்துவாரங்களை அணை ந்து இருக்கிற ஜவ்விலிருந்து சளி சுரக்கின்றது. சளி குறை ந்து நாசித்துவாரங்கள் வரண்டுபோனால், வாசனை செவ்வை யாய்ப் புலப்படாது, நாசியில் வேதனையுங்காணும். சுவாசம் உட்கொள்ளும்போது, தூசி, கிருமி முதலியவைகள் உள் ளே பிரவேசிக்கவொட்டாமல், நாசி ரோமங்கள் தடுக்கின் றன. பதார்த்தங்களுடைய வாசனை அணுக்கள் ஆக்கிராண நரம்புகளின்மேல் உறுத்த, அந்த உணர்ச்சியை நரம்புகள் மூளைக்குக்கொண்டுபோக மூளை புத்திக்குத்தெரிவிக்கின்றது.

6—காதுகள் கேழ்வி. (இயர்ஸ். ஹியரிங். Ears. Hearing.)

விரிந்திருக்கிற காதின் மடலானது சப்தமாகிக்காற்றை க்கூட்டிக் காது துவாரம் வழியாய் செவிக்குள் பிரவேசிக்கச்

செய்கின்றது. காதுக்குள் அண்டவடிவாய், சன்ன சவ்வு, காணைத்தடுத்திருக்கும். அந்த ஜவ்வுக்கு உட்புறத்தில் 3-எலும்புகள் கோர்வையாய்ச்சேர்ந்து சவ்வுக்கும் எலும்புக்கும் தொடர்பாய் இருக்கின்றன. காதிலிருக்கிற ரோமங்களும், குறும்பியும், தூசி கிருமி முதலியவைகளைக் காதுக்குள் பிரவேசிக்க வொட்டாமல் தடுக்கும். காதுக்குள் எலும்பில் அறைகளுண்டு, அவ்வறைகளில் ஜலம் நிறைந்திருக்கும், அந்த ஜலத்தில் கேள்வி நரம்புகளுடைய இழைகள், விரிந்து மிதந்துகொண்டிருக்கின்றன. அசைவு கொண்ட காற்றாகிய சப்தமானது, மேளத்தைப்போலொற்றக்காதினுடைய சவ்வில் மோதும்; அந்த அதிர்ச்சி சிறிய எலும்புக்கோவையின் வழியாகச்சென்று உட்காதில் ஜலத்தின்மேல் படர்ந்து மிதந்து கொண்டிருக்கிற கேழ்வி நரம்புகளில்பட; அவைகள் மூளைக்குக் கொண்டுபோக, மூளை மனதுக்குத் தெரிவிக்கின்றது.

## 7—நாக்கு. உருசி. (டங், The Tongue.)

நாக்கு சதைகளால் ஏற்பட்டிருக்கின்றது. நாக்குமேல் இருக்கிற முள்ளுகளுக்கு நாக்கடு என்று பேர் அடிநாக்கு மேல் இருக்கிறவைகள் பெரிதாய் இருக்கும். சுரம் முதலிய வியாதிகளில், அவைகள் நீண்டிருக்கும். அதை நாக்கில் முள்ளுண்டாகி, தோஷித்துவிட்டதென்று சொல்வது வழக்கம், அந்த முள்ளுகளில் சுவை நரம்புகளின் கிளைகள் இருக்கின்றன. நாம் வாயிலிடுகிற பதார்த்தங்களுடைய உருசி இந்த பதார்த்தங்களுக்குப் பட்டு, அவைகள் மூளைக்குகொண்டு போக, மூளை மனதுக்குத் தெரிவிக்கின்றது.

## 8—சருமம். ஸ்பரிசம். (ஸ்கின். The Skin, Touch.)

சரீரத்தை மூடிக்கொண்டிருக்கிற சருமத்துக்கு 2-புரைகளுண்டு; அவைகளுக்கு மத்தியில், ஓர்விதப் பசையிருக்கும்; கறுத்திருந்தால், தேகம் கறுத்த நிறமாயும், வெளுத்திருந்தால், தேகம் வெளுத்தும் இருக்கும். தோலின் மேல் புரைக்கு பீத்தோல் என்று பேர். இது ஓர்வித கலசம்

போல், அடித்தோலை மூடிக்கொண்டு, பத்திரப்படுத்துகின்றது. இந்தத்தோல் நீங்கியவிடத்தில், பாஷாணம் முதலிய விஷபதார்த்தங்களைப் போட்டால் சரும நரம்புகள் அவைகளைக் கிரகித்து, ரத்தத்துக்குக் கொண்டுபோக, தேகத்துக்குக் கெடுதிநேரிடும். ரோமமும், நகமும், மேற்தோலிலிருந்து உண்டாகின்றன. தோலுக்கடியிலிருக்கிற கோளங்களிலிருந்து வியர்வை பிறந்து சரும துவாரங்களின் வழியாய் வெளிப்படுகின்றது. ஊசிமுனைதைக்க அவ்வளவு இடமில்லாமல், ரத்த நரம்புகள் தேகமெங்கும் பரவி இருப்பதால், ஊசிதைத்த நரம்புகளில் இருந்து ரத்தம்வடியும். சருமத்தின் பிரயோஜனமாவது 1-வது தேகத்திலிருக்கிற அப் பிரயோஜனப் பொருள்களை வியர்வையால் வெளிப்படுத்திவிடுகின்றது 2-வது உடம்பின்மேல் படுகிற பொருள்களை, கிரகித்துக்கொள்ளுகின்றது.

## 9—நெஞ்சறை. (தோராக்ஸ். Thorax.)

நெஞ்சறையானது, அடிவிரிந்தும், நுனி குவிந்தும் இருக்கிறது; முன்புறமாய், மார்பெலும்பும். பக்கத்தில் பழுவெலும்புகளும், அடியில் ஈரல்தாங்கி என்னும் சதையும் இருக்கின்றன. நெஞ்சறைக்குள் இருக்கிற உறுப்புகளாவன.—இருதயம், நுரையீரல்கள், அன்னவாகி, பெருநரம்புகள் ஆகிய இவைகளாம்.

## 10.—இருதயம். (ஹார்ட். The Heart.)

தாமரை மொக்குபோல் இருக்கிற இருதயமானது, இரண்டு நுரையீரல்களுக்கு நடுவில் சாய்ந்து, அடியானது வலது புஜத்தை நோக்கியும், நுனியானது கீழுக்கு இறங்கியும், இடதுபக்கம், 5-6-வது பழுவெலும்புகளுக்கு மத்தியமாய் ஈரல்தாங்கி என்னும் சதைமேல் அமைந்தும் இருக்கிறது. இருதயத்தை மூடிக்கொண்டு பையைப்போல் இருக்கிற சவ்வுக்கு, இருதயகோசமென்று பேர். இருதயத்தில் 4-அறைகளுண்டு; மேல் அறைகளுக்கு, சிரவங்கள் (Auricles) என்றும்,—கீழ் அறைகளுக்கு சடாரங்கள் (Ventricles) என்றும் பேர். இந்த அறைகளில் இருக்கிற திரையைப்போ

லொத்த சவ்வுகளுக்கு, கபாடங்கள் (Valves) என்று பேர். இவைகள் ரத்தம் பின்னிட்டு ஓடாமல் தடுக்கின்றன. இருதயத்தின் இடதுபக்கத்தில் சிவந்த ரத்தமும், வலதுபக்கத்தில் கறுத்தரத்தமும், இருக்கிறது. இருதயத்தில் இடதுபக்கத்திலிருந்து ஜனிக்கிற நாடிக்கு பெருநாடி (Aorta) என்று பேர். அதிலிருந்து அநேக நாடிகள் கிளைத்து தேகமெங்கும் வியாபித்து இருக்கின்றன. நாடிகளில் ஓடும் ரத்தம், இக்திரகோபம்போல் சிவந்திருக்கும். நாடிகள் போகப்போகச் சன்னமாகி, நாளங்களில் முடியும். (Veins) நாளங்களில் கறுத்த ரத்தம் ஓடும். சன்னமாய் இருக்கிற நாளங்கள் ஒன்றோடு ஒன்றுசேர்ந்து, பெருத்து வரவர மெத்தப்பெரிதாகி முதலில் ஒன்று மேலாகவும், ஒன்று கீழாகவும் இருதயத்தின் வலது பக்கத்துச் சென்று முடிகின்றன. இருதயத்துக்கு விரிந்து, சுருங்குகிற தொழில் உண்டு. விரியும்போது, ரத்தம் உள்ளே பிரவேசிக்கும், சுருங்கும்போது ரத்தம் வெளிப்பட்டு நாடிகளுக்குப் போகும். அதைப்போலவே நாடிகளுக்கும் விரிந்து குவியும் தன்மை இருக்கிறது. நாடிநடை இருதயத்துக்கு ஒத்திருக்கும்; இருதயநடை, தேகஸ்திதிக்கு ஒத்திருக்கும். தேகம் சவுக்கியமாய் இருக்கும்போது ஒருமினிட்டுக்கு சராசரி 70-முதல் 80 தரம் நாடி நடக்கும். குழந்தைகளுக்கு 120-முதல் 140-வரையில் ஓடும்.

### 11—நுரையீரல்கள். (லங்க்ஸ், The Lungs.)

இவைகள், மார்பில் இரண்டு பக்கமாய், இருதயத்தைத் தழுவிக்கொண்டு இருக்கின்றன. ஈரல் தாங்கியின்மேல் படிந்திருக்கும். வெள்ளையும் சிவப்புங்கலந்த நிறமாய் மேலே புள்ளி புள்ளியாய்த் தோன்றும். இவைகள் நீர்ப்பஞ்சியைப்போல் இருக்கும்; இதில் ஓர்வித சவ்வு இருக்கின்றது. நெஞ்சிலிருக்கிற குரல்வளை, சுவாசக்குழலில் முடியும். அந்தச் சுவாசக்குழல், கழுக்கிறங்கி மார்புக்குள் சென்று, இரண்டு கிளைகளாய்ப் பிரிந்து, பக்கத்துக்கொன்றாய் நுரையீரலுக்குள் போய், அநேக கிளைகளாய்ப் பிரிந்து முடிவில் மெத்த சன்னமாய் முடிந்து விடும். நுரையீரல் சுவாசத்தை நடப்பிக்கிற உறுப்பு.

## 12—ரத்த ஓட்டம். (Circulation of the Blood.)

இருதயத்தின் இடது பக்கத்திலிருக்கிற சிவந்த ரத்தமானது, நாடி நரம்புகளின் வழிவாகச்சென்று, தேகமெங்கும் வியாபித்து, உறுப்புகளைப் போஷித்த பிறகு கறுத்து விடும்; அந்தக் கெட்ட ரத்தமானது, நாளங்களின் வழியாய்ச்சென்று. இருதயத்தின் வலது பக்கத்துக்குப்போகும்; அங்கிருந்து நுரையீரலுக்குச் செல்லும்; நுரையீரலில், உசுவாஸ நிசுவாசத்தால், ரத்தத்திலிருக்கிற தோஷம் நீங்கி, சிவந்து விடும்; அந்தச் சிவந்தரத்தம், இருதயத்தின் இடதுபக்கத்துக்கு ஓடும்; அங்கிருந்து மறுபடியும் நாடிநரம்புகளின் வழியாய்ச் சென்று தேகமெங்கும் பரவும். பிண்டம் கருப்பையில் இருக்கும்போதே, இவ்விதமாய ஓட ஏற்பட்ட ரத்தம் எப்பொது நிற்கின்றதோ, அப்போதே பிராணன் போய் விடும். ரத்தத்தில் சிவந்த அணுக்கள் இருக்கின்றன; மானிடதேகத்தில் சுமார் 25-அல்லது 30-பவுன் ரத்தமாமிசமும் 116-பவுன் ஜலமும் இருக்கின்றது.

## 13—சுவாசம். (ரஸ்பைரேஷன், Respiration.)

சுவாசம் உட்கொள்ளும்போது, காற்றுபரிசுத்தமாய் இருக்கும். வெளியில்வருவது கார்போனிக் ஆஸிட் என்கிறவாயு சேர்ந்து கெட்டு இருக்கும். சுவாசத்தால் நுரை யீரலில் இருக்கிற கெட்ட கறுத்த ரத்தம், சிவந்து நல்ல ரத்தமாகி விடுகின்றது. நாசி, வாய் இவைகளின்வழியாய், காற்று நுரையீரலுக்குள் போகவும், வெளிக்கு வரவும் செய்து கொண்டிருக்கிற தொழிலுக்கு சுவாஸம் என்று பேர்.

## 14—வயிறு (பெல்லி. Belly.)

வயிற்றுக்கு முன்புறம் சதைகளும், மேலே ஈரல்தாங்கியும் இருக்கின்றன. வயிற்றுக்குக் கீழிருக்கிற பள்ளத்துக்கு, இடைக்குழி என்று பேர். தொப்புளுக்கு மேல் நடுவயிற்றில் பள்ளமாய் இருக்கிற ஸ்தானத்துக்கு, ஈரற்குழி என்றும், அதற்கு வலதுபக்கமாய் இருப்பதற்கு, யகிர்த்கண்டஸ்தானம் என்றும். இடதுபக்கமாய் இருப்பதற்கு, பிலீக

ஸ்தானம் என்றும் பேர். வயிற்றிலிருக்கிற உறுப்புகளா வன:—மேல்வயிற்றில் தீனிப்பை, கல்லீரல், மண்ணீரல், ஆகிய இவைகளும்,—நடுவயிற்றில் நாபிஸ்தானத்தில் சிறு குடலும், நாபிக்கு இருபுறமாய்ப் பெருங்குடலும், மூத்திர குண்டிக்காய்களும், அடிவயிற்றில் சிறுகுடலும் இருக்கின் றன. மேல்கண்ட உறுப்புகளை ஓர்வித சவ்வு மூடிக்கொண் டு, பையைப்போல் இருக்கும்.

## 15.—ஜீரணம். (டைஜெஸ்ஷன். Digestion.)

ஆகாரம் வாய்க்குட் சென்றபிறகு, பற்களால் மெல்லப் படும்; அதை மெல்லும்போது, வாய்நீர் அதிகமாய்ச்சுரந்து அதனோடு சேர்ந்து மிருதுவாகும்; பிறகு அது விழுங்கப் படும். அந்தக் கவளமானது, அன்னவாகிவழியாய்க் கீழ்க் கிறங்கி தீனிப்பையில் போய் விழுகின்றது. இவ்விதமாய் ஒருவேளைசாப்பிடுகிற அன்னபானாதிகளெல்லாம், தீனிப்பை யில் போய்ச்சேர்ந்த பிறகு தீனிப்பையானது அதைப் பிசை ந்து நன்றாய் மசியும்படிச் செய்கின்றது. சாப்பிட்ட பதார் த்தங்கள் மசிந்துகொண்டிருக்கும்போதே, ஜாடராக்கினி (Gastric juice) என்னும் ரசமானது, தீனிப்பையில் ஜனி த்து ஷை பதார்த்தங்களுடன் மிச்ரமித்து, ஓர்வித மொத் தையாகும். அந்த மொத்தைக்கு அன்னப்பாகு (Chyme) என்று பேர். அந்த அன்னப்பாகு, பிறகு சிறு குடலில் இறங்கும்; அத்தருணத்தில் கல்லீரலில் ஜனிக்கிற பித்தநீர் (Bile) வந்துசேரும், சேர்ந்த பிறகு அன்னப்பாகானது ரசம்வேறு, திப்பி வேறாய்ப்பிரிந்துவிடும். போஜனம் ஜீர ணமாக 3-4-மணி நேரஞ் செல்லும்.

## 16—Brain &c. மூளை. ஸ்பரிச நரம்புகள். அவைகளின் தொழில்.

மனிதரின் மண்டை ஓட்டுக்குள் நிறைந்து இருக்கிற பிசைந்து வைத்த மாவைப்போலிருக்கும் மூளையின் நிறம், வெளிப்புறம் கருகிய ஒருவித சாம்பல் ஊதாவாயும், உள்ளே வெள்ளையாயும் அதன்மேல் இரத்த கோளங்களென்னும் சிறிய செந்துளிகள் படர்ந்து இருக்கும். மேல் பாகத்தைப்

பெரிய மூளை என்றும், அடிப்புறத்தைச் சின்னமூளை என்றும் சொல்லப்படும். மூளையை மூன்று விதமான சவ்வுகள் மூடிக்கொண்டிருக்கின்றன. புருஷர்களுக்கு மூளை கனமாயும், ஸ்திரீகளுக்கு கனம் குறைந்தும் இருக்கும். வித்துவான்களின் மூளை அதிக பளுவாய் இருக்கும். பெரிய மூளை இரண்டாகப் பிளந்திருக்கும். அதின் அடியில் இருக்கிற மூளைக்குச் சின்னமூளை என்று பேர். அதுவும் இரண்டாய்ப் பிளந்திருக்கின்றது. மூளையைத்தொடர்ந்து, கீழுக்கு ஓடுகிற கொடிக்கு, முள்ளந்தண்டுக்கொடி என்றுபேர். அதன் முனை அநேக நரம்புகளாய்ப் பிரிந்திருக்கின்றது. மூளையிலிருந்து ஜனிக்கிற நரம்புகள் 9-சதை. அவைகளில், கண் மூக்கு செவி, நாக்கு இவைகளுக்குப் போகிற 4-சதை தவிர, மற்றவைகள் சருமத்துக்கும் சதைகளுக்கும் போய்ப் பரவுகின்றன. முள்ளந்தண்டுக் கொடியிலிருந்து, 31 சதை நரம்புகள் ஜனித்து, தேகமெங்கும் வியாபித்து, சதைகளுக்கும், சருமத்துக்கும் போய்ப் பரவுகின்றன. நரம்புகளுக்கு ஸ்பர்சமும், சலனமுங் கொடுக்கிற குணங்களுண்டு. ஆகையால் ஸ்பரிச நரமபுகள், சலன நரம்புகள் என நரம்புகள் இரண்டு வகைப்படும்.

தேகத்திலிருக்கிற சதைகளுடைய சலனத்தைக் கிரமப்படுத்துகிற சக்திசின்ன மூளையில் இருக்கின்றது.சரீரத்தில் எந்த இடத்திலாவது உண்டாகிற உணர்ச்சியை ஸ்பரிசநரம்புகளால், மூளை தெரிந்துகொள்ளுகின்றது: அவைகளுக்கு வியாதிகண்டு உணர்ச்சியைக் கொடுக்கிற தன்மை அற்றுப்போவதே, "திமிர்" என்று சொல்லப்படும். நம்மைச்சூழ்ந்திருக்கிற பொருள்களின் காரியத்தை ஐம்புலன்கள் தெரிந்துகொண்டு, மூளைக்குத் தெரிவிக்க, அது மனதுக்குத் தெரிவிக்கும். மனதினுடைய தோற்றத்தை, மூளை தெரிந்துகொண்டு, நரம்புகள் மூலமாய் சதைகளுந்தூண்ட, சலனம் உண்டாகும். சதைகள் மனதுக்கேற்றபடி இணங்கி இருக்கின்றன. மூளையானது, ஒரு அரசனையும், நரம்புகளானவை தூதர்களாயும், மற்றஉறுப்புகள் உக்கிராணக்காரர்களாயும் உவமானித்துச் சொல்வார்களுமுண்டு.

## GENERATION.—ஜனனம்.

மண்ணுலகத்தில் மனுஷன் பிறக்கும் ஜனன உறுப்புகளின் விநோதம் சாதாரண ஜனங்களுக்கும் செவ்வைபாகத் தெரிந்த விஷயமாகையால், அவைகளைப்பற்றி இங்கு விவரிப்பது அனுவசியம்; ஆயினும், ஜனன ஸ்தானத்தின் நிலைமுதலானதுகளை ஒருவாறு சங்கிரகமாகச் சொல்வது அவசியம். இவ்வுலகிலுள்ள பிரதி ஸ்திரியின் இடைக்குழியில் மூத்திரப்பையும், மலக்குடலும் இருக்குமிடத்தில் கருப்பையுமிருக்கின்றது. இந்தக் கருப்பையின் கழுத்தைச்சவ்வுச்சதைகள் சுற்றிக்கொண்டு, சுமார் ஐந்து ஆறு அங்குல நீளமுள்ள நீண்ட குழல் இருக்கிறது. அதுவே (Vagina) சிசுப்பாதையாம். கருப்பையானது மூன்றங்குல நீளம், இரண்டங்குல அகலத்தோடு தட்டையாயிருக்கிறது. அதன் கீழ்ப்புரத்தில் ஒரு துவாரமுண்டு, அந்தப்பையைப்பிளந்து பார்த்தால், உள்ளே முக்கோண வடிவமான ஒரு பள்ளமிருக்கிறது. அதுவே கருக்குழி. அதிலிருந்து சூதகம் சுரக்கின்றது. கருப்பையானது பூரண கர்ப்பத்தில் அதிகம் பெரிதாகி, பிள்ளை பிறந்த பிறகு பந்துபோல் சுருங்கிச் சிறிதாகிவிடும். மேலும் கருப்பையின் இரண்டு பக்கங்களிலும் இலுப்பைக்கொட்டைகளைப்போலச் சினைப்பைகளும், அச்சினைப்பைகளுக்குள் முட்டைகளும் உண்டு, அவைகள் பருத்து மாதந்தோறும் கருப்பையில் வந்துவிழும். அப்போது ரத்தம் சுரந்து வெளியாகும். இந்த ரத்தமே சுரோணிதம்; இந்த முட்டையே நாதம் (Ovum). இந்த நாதம் மாதம் மாதம் சுரோணிதம் உண்டாகிறபோது ஜீரணித்துப்போகாமல் கருக்குழியில் வந்திறங்கில்,பருத்துப்பிண்டமாகிப்படிப்படியாகரூபங்களைப் பெறும். இப்படி ரூபங்களைப்பெற்ற பிண்டம் கருக்குழியில் தலைகீழாகவிருக்கும்.

முதலில் சுவாசத்தையும், பிறகு தாயின் ரத்தபோஷணையையும் பெற்று வளர்ந்து 280 நாள் அல்லது பத்துமாதங்களுக்குப்பிறகு பிரபஞ்சத்தில் பிள்ளையாகப் பிறக்கின்றது

பிறகு பால்குடிக்கக் குடிக்கச்சரீரம் படிப்படியாக வளரும். கண், காது முதலான உறுப்புகள் பிரபஞ்சப்பொருள்களை அடிக்கடிப் பார்த்தும் கேட்டும், முகர்ந்தும், தொட்டும்,தம் தம் சக்தியைப்பெறுகின்றன. ஏழெட்டு மாதம் பால்குடித்த பிறகு, பாலும், கஞ்சியும், சாதமும், உணவாகி, ஆ! ஊ! என்ற சப்தங்களைச் செய்தும், புன்சிரிப்பால் சந்தோஷத் தைத் தெரிவித்தும், பிறகு அம்மா! அப்பா! என்று படிப் படியாய் பேசவும்; கால், கைகளை முதலில் உதறிப் பலம்பெ ற்ற பிறகு நாளாவட்டத்தில் திடனைப்பெற்று உலகவாழ்க் கையில் பிரவேசிக்கிறது. அப்படி பிரவேசிக்கச்சே ஆணு னல் மீசையும் தாடி முதலானதுகளும்,பெண்ணுனல் மார்பு பெருத்துத்தோள்களும்இடையும்விசாலமாகிய யவ்வனதசை க்கு வந்து விவகாரமாடியும், உன் பொருள் என் பொருளெ ன்று வாதாட்டங்கள் செய்துக்கொண்டே ஐம்பது அறுபது வயது வரையில் ஆடிப் பாடி அநேக காரியங்களைச் செய்த, பிறகு தேகம் க்ஷீணகதிக்குவரத் தாதுக்கள் தளரும். பிறகு கிழமுகமாகி, மயிர் நரைத்து, பற்கள் பலனற்று ஒன்றொன் ருக விழ, தீபனம் குறைந்து, நாடி தளர்ந்து இந்திரியங்கள் கெட, பார்வை பாழ்த்தும், கேழ்விகெட்டும், கரசரணதிகள் நடுங்க, நடை மெதுவாகி, தடியூன்றி நடக்கவும், தொனியும் வார்த்தையும் தாழ்ந்து,வாய்குளறி, மதலை வார்த்தைகளாகி ஒடுக்கத்தில் வர, வருஷாவருஷம் தேகம் க்ஷீணித்து, சுவா சமும் நாடியும் அற்றுக், கடைசியாக இறந்துமண்ணுகிமறை ந்து விடுதல் பிரத்தியக்ஷம். இப்படி மண்ணுலகில் ஜனித்த மானிடர்களின் சராசரி வயது 33. அதாவது:—ஒன்றில் கால்வரிசைப் பெயர் 7-வயதிலும், பாதிப் பெயர் 17-வயதி லும் சாகிறார்கள். மேலும் 1000-ல் ஒருவர் 100-வயதும் 100-க்கு 6-பெயர் 65-வயதும், 500-க்கு ஒருவர் 80-வயது வரையிலும் வாழ்வதாக கணிக்கப்பட்டிருக்கிறது. மேலும் இப்போது உலகில் சுமார் 10,00,00,00,000 ஆயிரங்கோடி மநுஷர்கள் இருக்கிறார்கள். இவர்களில் வருஷம் ஒன்றுக்கு 3,33,33,33,333 மனுஷர்களும்; பிரதி தினமொன்றுக்கு 9,13,240 மனுஷர்களும், ஒருமணிநேரத்துக்கு 37300 மநு

ஷர்களும். ஒருவினடிக்கு 600 மநுஷர்களுமாக மரணமடை வதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

## மனுஷதேக சத்துக்களின் சோதனை.

இப்படி விநோதமாக அமைக்கப்பட்டிருக்கிற மாநுஷ தேகத்தில் 14-பவுன் எலும்பும், 30-பவுன் இரத்தமும் தசை யும். 116-பவுன் ஜலமுங் கூடியிருக்கின்றன. மனுஷனுக்கி ருக்கும் 30-பவுன் ரத்தத்தில் 15-பங்கு ஜலமும், 5-பங்கு தேகபோஷக சத்தும் இருக்கின்றன. இந்த மாநுஷ எலும் புகளைச் சோதிக்கும்போது அதில் சுண்ணும்பு பாகமும், பிர கிருதி பாகமும், காலண்டைன் என்ற சத்துபாகமும் கலந் திருக்கிறது. இந்த காலண்டைன் பாகத்தில் அடுப்புக்கரி சத்தைப்போன்ற கார்பனும் கொஞ்சபாகமும் சாதாரண ஜலமும் வாயுவும் கலந்திருக்கிறது. இதனால் மனுஷதேகத்தி லிருக்கும் 14-பவுன் எலும்பில் 10-பவுன் சுண்ணும்பும், 2-பவுன் அடுப்புக்கரி பாகமும், 2-பவுன் வாயுவு பாகமும் கலந்திருப்பது ஸ்பஷ்டமாகும். இதே மாதிரியாகவே, மனு ஷதேக மாமிசத்தையும் இரத்தத்தையும் சோதிப்போமா கில் இவை 30-பவுனும், இதில் 15-பவுன் அடுப்புக்கரி சத் தும், 15-பவுன் வாயுசத்துக்களும் இருத்தல் ஸ்பஷ்டமா கும். ஆகவே மனுஷதேகத்தில் ரசாயன சாஸ்திரப்படி சோ திப்போமாகில் 116-பவுன் ஜலத்தில் 10-பவுன் அடுப்புக்கரி சத்தும், 10-பவுன் சுண்ணும்பு கலந்தும். பிராணவாயு அமி லவாயு ஜலவாயுவு பாகங்கள் 14-பவுனும் கலந்திருப்பது பிரத்தியக்ஷமாகும். இப்படிக்கேவலம் மண், சுண்ணும்பு ஜலம், வாயு முதலான பிரகிருதி பாகங்கள் கலந்துண்டாக் கப் பட்ட இந்தப் பிண்டம் சமயோசிதமாக உணரவும், நினை க்கவும் நிதானிக்கவும், தர்க்கிக்கவும், பேசவும் கூடும்படி செய்யும் சக்தி எதுவோ அது இன்னதென்று இதுவரையில் கண்டுபிடித்தவர்கள் இல்லை. காவிண்டிஷ் (Cavendish) என் பவர் ஜல தத்துவத்தையும், ரூதர்போர்டு (Rutherford) அமிலவாயுவின் தத்துவத்தையும், லோவைஸர் (Lovoiser) பிராணவாயுவின் தத்துவத்தையும்கண்டுபிடித்தார்கள். ஆனல்

மானிட தேகத்திலிருக்கும் பிராணன் அல்லது மநதின் தத்துவத்தைக் கண்டுபிடித்தவர்கள் இது வரையிலும் இல்லை. மேலும்,

## மண்டை மூளையின் சோதனை.

மனுஷனுடைய மூளையை நூறு பாகமாகக்கொண்டு இரசாயன சாஸ்திரப்படி சோதிப்போமாகில், அதில் எண்பது பாகம் அல்லது ஐந்தில் நான்கு பாகம் ஜலசத்தும், 5-பாகம் கொழுப்பைப்போன்ற சதைச்சத்தும், 7-பாகம்,அல்புமென் என்னும் முட்டையின் வெள்ளைக்கருவைப்போன்ற சத்தும், ஒரு பாகம் ஒஸ்மஸும் என்னும் சிண அணு சத்தும், ஒன்றரை பாகம் பாஸ்பரஸ் என்னும் தீக்குச்சிசெய்வதற்கேற்ற சத்தும், மற்ற ஐந்தரை பாகம் பலவித புளிப்பு, உப்புச் சத்துக்களின் பாகமும் என்றும் தெரியவரும். இந்த சோதனை இறந்த மனுஷனுடைய மூளையை அறுத்துச் சோதித்த விஷயம். உயிரோடிருக்கும் மனுஷனுடைய மூளையில் இன்னும் என்னென்ன சத்துக்களிருக்குமோ தெரியவில்லை. மேலும், மூளையின் எந்தெந்தச் சத்துக்கள் நினைக்கவும்,யோசிக்கவும், மனோராச்சியம் செய்யும்படி செய்கிறதோ அதையும், இதுவரையிலும கண்டுபிடித்தவர்கள் இல்லையாகையால்; பூததத்துவவாதிகளில் சிலர் ஒரு பிரகிருதி சத்து எப்போதும் பஞ்சபூதங்களில் இருக்கிறதென்றும், அது

வெற்றிலை பாக்குடன் சுண்ணாம்பும் சேர்வதனால் எப்படி, சிவப்பு வர்ணமாகின்றதோ; அதுபோலவே, பஞ்ச பூதங்களைத் தேகரூபமெடுக்கும்படி செய்தும், அந்த தேகத்தின் முக்கிய ஸ்தானமாகிய மூளையில் (அந்தசத்தே) மனம் புத்தி சித்தம ஜீவன் என்றுதிபெயர்களுடன் தோன்றித் தேகேந்திரியங்களைத் தம்தம் தொழில்களைச்செய்யும்படி தூண்டியும்; அந்தத் தேகம் மூப்புவியாதிகளால் தளர்ந்து இறந்து பழையபடி பஞ்சபூதங்களில் கலந்துபோகும்போது, அந்தப் பிரகிருதி சத்தும் அந்தப் பூதங்களுடன் கலந்து போகிறதென்றும்; ஆகவே, மானிடதேகத்தில் பிராணன் அல்லது ஆத்மா என்னும் சூக்ஷுமத் தனிப்பொருள் இல்லை என்றும்,

மனுஷனுடைய மரணமே மோக்ஷமென்றும் சொல்லுகிறார்கள்.

ஆனால் ஆஸ்திகராகிய ஆத்தும தத்துவவாதிகளுடைய கருத்தோ வேறு. அதாவது மண்ணுலகத்தில் ஜனித்த மானிடதேகம் மண்ணுலகத்திலேயே மடிந்து மறைந்துவிடுவது உண்மையானாலும், இந்த மண்ணுலகில் ஜனித்த மற்றெல்லாப்பிறப்புகளினும் சிறந்த பிறப்பைப்பெற்ற மனுஷனுக்குள் மநம், மதி, புத்தி என்றாதி பல பெயர்களுடைய ஆத்துமா என்ற சத்து ஒன்றிருக்கின்றதென்றும்; அது மண்ணுலக சம்பந்தமான மானிட தேகம் இறந்தவுடன் குடிதவிட்டுப் பிரிந்து வேறு ரூபத்தைபெற்று அதைப் படைத்த தலைவனிடம் போய்ச் சேர்ந்து சுகம் பெற்றுய்கிறதென்றும் சித்தாந்தம் செய்திருக்கிறபடியால், அதைப்பற்றி இந்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

(24). சுவேதாசுவதரம் 4—7—ல்

ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ அநீஶயா [யதயந்ய
யாஶோசதி முஹ்யமாநஹ; ஜுஷ்டம் யதாபஶ்
யத்யந்யமீஶமஸ்ய மஹிமாநமிதிவீதஶோகஹ.

பொழிப்புரை.

ஜீவாத்துமா சரீரத்தி லிருந்துகொண்டு தீனத்தன்மையில் மூழ்கியதாகித் துயரப்படுகின்றது ; ஆனால் எப்பொழுது யாவராலுந்தொழப்பட்ட ஈசனையும், அவரது மகிமையையும் பார்க்கின்றதோ அப்பொழுது துய்ரமற்றதாகின்றது.

விசேஷ உரை.

எது வரையில் நாம் பரமேசுவரனை மறந்து கேவலம் விஷய சுகத்தை அடையும் நிமித்தம் சம்ஸாரத்தில் மூழ்கியிருக்கின்றோமோ, அது வரையில் நடக்கடிக்கடி துயரமுண்டாகும்: அனால் அன்புடன் எப்பொழுது யாவராலும் தொழப்படும் பரமேசுவரரையும், அவரது மகிமையையுங் கண்டுமேலும், அவரால் நியமிக்கப்பட்ட தருமத்தைச் சிரத்தையு

டன் முடிக்க விருக்கிறோமோ அப்பொழுது ஒரு துயரமும் உண்டாவதில்லை, பேராநந்தம் உண்டாகின்றது.

Living in one common tree, the soul is immersed in desire, through tribulation grieveth senseless. but when it seeth Him and His Glory who is the served of all, it becometh sorrowless.

---

ஆத்துமா சரீரத்தில் இந்த இடத்தில் இன்னவிதமாக இருக்கிற தென்பதற்கு

(25). உத்தர நாராயணம்.

ஹிருதயம் தத்விஜாநீயா த்விஸ்வஸ்யாய தநம் [மஹத் | ஸந்ததக்ம்ஸிராபிஸ்துலம்பத்யாகோசஸந்நிபம் | தஸ்யாந்தே சுஷிரக்ம், தஸ்மிந் ஸர்வம் பரதிஷ்டிதம் தஸ்யமத்யே வந்ஹிசிகா [ணீயோர்த்வா வ்யவஸ்திதஹ | நீலதோ யதமத்யஸ்தா வித்யுல்லேகே பாஸ்வரா | நீவாரசூ கவத்தந்வி பீதாபாஸ்யாத்தநூபமா தஸ்யாஸ்ஸிகாயாமத்யே பரமாத்மா வ்யவஸ்தி [தஹ.

பொழிப்புரை.

எது சகலத்திற்கும் மஹாஸ்தானமோ அது ஹிருதய மென்றறி. அது நரம்புகளால் சூழப்பட்ட ஒருபையைப்போ லும். அதில் ஒரு சிறிய துளையுண்டு. அதில் சகலமும் வைக்கப்பட் டிருக்கிறது. அதின் மத்தியில் மேல்நோக்கிய வெகு சூக்ஷ்ம மான ஒரு அக்கினிசிகை வைக்கப்பட்டிருக்கிறது. அந்தசிகையா னது கருமேகத்தின் நடுவிலுள்ள மின்னல் கோடியைப்போலப் பிரகாசிக்கின்றது. செந்நெல் நுனியைப்போல் சூக்ஷ்மமாயும், சிவந்த நிறமுடையதாயும், உள்ளது. அந்தச்சிகையின்மத்தியில் ஆத்மா இருக்கிறார்.

விசேஷ உரை.

ஆத்மா, என்கிற பதத்திற்கு அநேகர் அநேகவிதமாக அருத்தஞ் செய்திருக்கிறார்கள். அமரம் பிரதமகாண்டம்.

காலவர்கம் 137-வது சுலோகத்தில், க்ஷேத்திரக்யாதி சப்தங்கள் மூன்றென்றும், சாங்கியத்தில், ஜீவனுடைய பெயர்களென்றும்; க்ஷேத்திரமென்றால்=சரீரம்; அதை அறிந்தவன் என்றும், சம்சாரத்திலேயே ஜ்வலிப்பவனென்றும்; சுவகர்ம பலத்தைப் பக்ஷிக்கப்பட்டவன் என்றும்;—புரமென்றால் சரீரம்—அதிலிருப்பவனாகையால் புருஷன் என்றும்; சரீரத்தி லிருக்கப்பட்டவனென்றும்;—அதே அமரம். திருதீயகாண்டம், நானார்த்த நாந்த்வர்க்கம் 226 - வது சுலோகத்தில், ஆத்மன் என்ற சப்தம்; யத்தினத்திற்கும், தைரியத்திற்கும், புத்திக்கும், சுபாவத்திற்கும், பரமாத்மாவுக்கும், தேகத்திற்கும், "ச" காரத்தினால் ஜீவனுக்கும் சொல்லாமென்றும்; இடைவிடாமல் சஞ்சரிப்பது என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பரதகண்டத்தின் பூர்வபாஷா பிரபாகரராகப் பிரகாசித்த, ஸ்ரீமத் ஜீவாநந்த வித்தியாசாகரர்; தாராநாத தர்க்காலங்கார வாசஸ்பதியிவர்களுடைய பெரு முயற்சியால் வெளியாகிய "ஸமஸ்கிரதாபிதானம்" என்னும் அகராதியில் "ஆத்மா" என்னும் பதத்திற்கு அத+மநிண்=ஆத்மன். என்றும்,—சுவரூபம், யத்நம், தேகம், மனது, வியாபாரம், விருத்தி, சூரியன், அக்கினி, வாய்வு, ஜீவன், பிரம்மம் முதலானவைகளுக்குச் சொல்லலாமென்றும் செப்பியிருக்கின்றது.

"ஆத்மாவின்" பொருளைப்பற்றித் தமிழ்க் கிரந்தங்களைப்பரிசோதிப்போமாகில், அதற்குப் பிராணன், ஜீவன், ஆன்மா, நாயகன், அதிகாரி, பிரதானி, உயிர், கூற்றன் முதலானவைகளால் வழங்கப்பட்டு வருகிறதாகத் தெரியவருகின்றது. இதைப்பற்றியே; "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம்போடுயிரிடை நட்பு,"—என்று திருவள்ளுவர்சொன்னதன்றியில்; "தோற்பையுள் நின்று தொழிலறச்செய்தூட்டுங் கூத்தன் புறப்பட்டக்கால்," என்று நாலடியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. பொதுவாக வேதாந்த நூல்களிலேவெனில், "அகங்காரம் முதல் ஸ்தூலதேக பரியந்தமான காரிய காரண சங்கவாதத்துக்கெல்லாம் அதிஷ்டான

மாய் இருதய கமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக்கொண்டிருக்கிற பிரத்தியகாத்ம சைதந்யமே ஆத்மாவென்றும் சொல்லியிருக்கின்றனர்.

ஆங்கிலேயபாஷையில் ஆத்மாவிற்கு (Soul=ஸோல்) என்றும்; அதாவது, மனிதனில் அழியாத அறிவுள்ள ஆவியைப்போன்ற தேகமென்றும்; மனிதனை யூகிக்கவும், நியாயக் கட்டுப்பாட்டிற் குட்படுத்தவும் செய்யும் நாயகமென்றும், மனிதனுடைய மஹோன்னதச்சுபாவம், அல்லது சக்தியென்றும்; பிராணாத்மா அல்லது உயிர் நிலையென்றும்; அறிவு ஆண்மைக்கு மீறிய பகிரிந்திரியப் பிரிய காரணமாகும் மாயாரூபமென்றும்; மனோமங்கலமென்றும், மானுஷீக மனோமயமேன்மையென்றும்; மானத உணர்ச்சியின் உறைவிடமென்றும், மானத ரூபமென்றும், அறிவென்றும், உணர்ச்சியென்றும், பேதத்தையறியும் புத்தியென்றும், பரம்பொருள் என்றும், இன்னும் பலவிதமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது.

---

## (26). சாந்தோக்கிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 12-13-14-வது கண்டங்களில்

ந்யக்ரோத பலமத ஆஹரேதி;இதம் பகவ இதி
பிந்தி: பிந்நம்பகவ இதி; கிமத்ரபஶ்யஸீதி;
அண்வ்ய இவேமாதாநா பகவ இதி;
ஆஸாமங்கைகாம் பிந்தி; பிந்நா பகவ இதி;
கிமத்ர பஶ்யஸீதி; நகிஞ்சந பகவ இதி;
தக்ஹோவாச; யம்வைஸோம்யைத மணிமாநம் நநிபாலயஸ.
ஏதஸ்யவைகிலஸோம்யைஷோணிம்நஏவம் மஹாந்யக்ரோதஸ்திஷ்டதி;
ஶ்ரத்தத்ஸ்வ ஸோம்யேதி ஸயஏஷோணிமைததாத்ம்யமிதக்ம் ஸர்வம் தத்ஸத்யக்ம்,
ஸஆத்மா, தத்வமஸி ஶ்வேதகேதோ இதி.

பூயஏவமா பகவான் விஜ்ஞாபயத்விதி;
ததாஸோம்யேதி ஹொவாச; லவணமேதது தகே
வதாயாதமா பராதருபஸீ ததா இதி; ஸஹத
[தாசகார.
தகம்ஹொவாச: யத்தோஷா லவணமுதகேவாதா
[அங்கததாஹரெதி,
தத்தாவம்ருஶ்யநவிவேதயதாவிலீநமெவாங்க
அஸ்யாந்தா தாசாமெதி; கதமிதி; லவணமிதி:
மத்யாதாசாமேதி கதமிதி லவணமிதி:
அந்தாதாசாமெதி; கதமிதி; லவணமிதி;
அபிபராஸ்யை தததமேபஸீததாஇதி: தத்தத
[தாசகார
தச்சஸ்வச்சம் வர்ததெ தக்ம்ஹொவாசா [வேதி.-
த்ரவாவகிலஸத்ஸொம்யநநிபாலய ஸெத்ரைவகி
ஸயஏஷோணி மைததாத்ம்ய மிதக்ம் ஸர்வம்
தத்ஸத்யக்ம் ஸஆத்மா தத்வமஸி ஶ்வேதகே
[தோ இதி

பொழிப்புரை.

உத்தாலகர்: புத்திரனைப்பார்த்து, இந்த நியக்ரோத (ஆல) மா த்தின் பழம் கொண்டுவாவென்றார். (புத்திரன்) இதோகொண்டு வந்தேன் பகவானே என்றார். பிதா உடையென்றார். புத்திரன் உடைத்தேன் பகவானே என்றார். பிதா அதில் என்ன காணப்படு கிறதென்றார். புத்திரன் ஒரு சிறிய வித்து காணப்படுகிறதென்றார். பிதா அன்புள்ளவனே அதை உடை யென்றார். புத்திரன் பகவா னே இதோ உடைத்தேனென்றார். பிதா அதில் என்ன காண்கிற யென்றார். புத்திரன் ஒன்றுமில்லை பகவானே என்றார். பிதா எதில் உனக்கு ஒன்றும் காணப்படவில்லையோ, அதில் ஒரு பெரிய நியக் ரோத (ஆல) மரமிருக்கின்றது. அன்புள்ளவனே ! அதை கவனிப் பாயாக, இவற்றிற்கெல்லாம் ஆத்மாவாகிய அணு சத்தியம்; அது ஜகத்துக்கெல்லாம் ஆத்மா. நீயதுவாயிருக்கிறாய் சுவேதகேதுவே என்றார். புத்திரன் அதை மறுபடியும் விளக்குவீராக என்று கே ட்கப் பிதா அப்படியேயென்றார்.

பிதா: இந்த உப்பை அந்த ஜலத்தில் கரைத்துவிட்டு நாளைக் காலமே என்னிடம் வா என்ருர். புத்திரன் அப்படியே செய்தார். பிதா குழந்தாய் நேற்றிராத்திரி நீ இந்த நீரில் கரைத்த உப்பை எடு என்ருர்.உப்பு கரைந்துபோனபடியால் விளங்கவில்லை என, பிதா அந்த நீரில் மேல்புறத்தில் கொஞ்சமெடுத் தாசமனம் செய்யென்ருர், புத்திரன் அப்படியே செய்தான். பிதா அதெப்படி இருக்கிறதென்ருர். புத்திரன் அது உப்புகரிக்கிறதென்ருன். பிதா,நடுவில் கொஞ்சம்எடுத்து ஆசமனம்செய், எப்படியிருக்கிறதென்ருர். புத்திரன், அது உப்புக்கரிக்கிறதென்ருன். பிதாஅடியில் கொஞ்சமெடுத்து ஆசமனம் செய் அதெப்படி இருக்கிறதென்ருர். புத்திரன் அது உப்பு கரிக்கிறதென்ருன். பிதா ஆனல் அதைக் கொட்டிவிட்டு உன் வாயைக் கழுவிவிட்டு, சோதிக்காமலிரு என்ருர். அவனப்படிச்செய்துவிட்டு, நான்நீரில்கலந்த உப்பு எப்போது மிருக்கிறதென்ருன். பிதா சத்தியமும் அப்படியே குழந்தாய், நீ அதைக்காணுவிடிலும் அது இந்த தேகமெங்கும் வியாபித்திருக்கிறது. இதற்கெல்லாம் ஆத்மாவாகிய அணு சத்தியம். அது ஜெகத்துக்கெல்லாம் ஆத்மா. நீ அதுவாயிருக்கிருய் சுவேதகேதுவே என்ருர்.

விசேஷ உரை.

*ஆத்மா என்ற பதத்துக்கு பற்பல பெயர்கள் இருப்பதால், நமது வேத பாஷியக்காரர்கள் சில உபநிஷத்துகளுக்குப் பாஷியம் செய்தபோது தம் தம் கல்வி கேள்வி அநுபவங்களுக்குத் தக்கபடி பாஷியங்களைச் செய்யப் போய் நம் நாட்டில் அநேக சித்தாந்தங்கள் உண்டாயின.*

*திருஷ்டாந்தமாக.—இந்தச் சாந்தோக்கிய உபநிஷத்திலிருக்கும் நியகிரோத* (ஆலம்) பழத்தை=பிரகிருத உலகத்திற்கும், *அதிலிருக்கிற சிறிய* விதையை=ஆத்மாவுக்கும் *உபமான உபமேயமாக்கிக் காட்டியதில்; அணு ரூபமாகிய (சிறு* விதைக் *கொப்பான* ஆத்துமாவிஞலேயே *மரமும், பழமுமுண்டாகிறபடியால்; அது ஒன்றே சத்தியமாயும், சகலத்துக்கும் சக்தியாயும் இருக்கிறதென்றும்; அதுவே* பிரம்மம் *என்றும்* "தத்துவமசி" *என்ற வாக்கியத்திஞல்நீ* அதுவாயிருக்கிருய் *என்றும், மற்ற* உலகமெல்லாம் *கேவலம் தோற்றமென்றும், பொய்யென்றும் அத்துவைத பரமாகச் சிலர் பாஷியம்*

செய்திருக்கின்றனர். இதே பதங்களுக்கும், வாக்கியங்களுக்கும், துவைத விஶிஷ்டாத்துவைதிகள் தம் தம் கருத்தின்படி வேறு விதங்களாகப் பாஷியங்களைச் செய்கின்றனர். எப்படியெனில்,

இந்த உபநிஷத்தில் காணும் நியக்ரோத (ஆலம்) பழத்தை=பிரகிருதி ஸ்வரூபமாகிய ஜடம் அல்லது ஜகம் அல்லது அசித்தென்னும் பஞ்சபூதமென்றும்; இதில் காணும் அணுரூபமான (சிறு விதை) ஆத்மா அல்லது ஜீவாத்மா என்றும்;—அந்தச் சிறுவிதையை உடைத்துப்பார்த்தால், அதற்குள் ஒரு சிறு முளை இருப்பது பிரத்தியக்ஷ மாகையால், அதுவே பரமாத்துமா அல்லது ஈசுவர னென்றும்; ஆகவே, பழமாகியஜடம் அல்லது அசித்தும்; விதை என்ற ஜீவனாகிய சித்தும்; முளையாகிய ஈசுவரனுமாக மூன்று பதார்த்தங்கள் இருப்பன பிரதியக்ஷமென்றும்; தத்துவமஸி என்னும்வாக்கியத்துக்கு அத்துவைதிகள் சொல்லும் பொருள் பொருந்தாதென்றும், அதை இலக்கண ரீதியாகப் பொருள்செய்தால் அதத்+துவம்+அஸி=அது (பிரம்மம்) நீ அல்ல என்று பொருளாகுமென்றும், பாஷியம்செய்திருக்கின்றனர். இந்த மூன்றுவித சித்தாந்தங்களே இந்நாட்டில் அதிக பிரபலமாக இருக்கிறபடியால்; அம்மூன்று சித்தாந்தங்களையும், அவைகளைப் பிரபலப்படுத்திய சித்தாந்திகளுடைய சரித்திரங்களையும் விஷயவிடையாக எழுதி இப்புத்தகத்தின் கடைசியில் அநுபந்தமாகச் சேர்த்திருக்கின்றனம்.

---

## (27). பிருஹதாரணிய உபநிஷத்து

ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம்
ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே; சாயாதபௌ
ப்ரம்மவிதோவதந்தி பஞ்சாக்நயோ
யேசத்ருணா சிகேதாஹ.

பொழிப்புரை.

ஜடசரீரத்தில் சிறந்தவிடத்தில் இருவர் (ஜீவாத்மா பரமாத்மா) இருக்கின்றனர். அவர்களில் ஒருவர் (ஜீவாத்மா) தமது

செய்கைகளுக்குரிய பயனை அனுபவிக்கிறர். மற்றெருவர் (பரமாத்துமா) பலன்களைக் கொடுக்கிறர். பிரமஞானிகளும், ஐந்து அக்கினிகளைவளர்ப்பவர்களும்,திரிணசிகேதர்களும் அவர்களைநிழலும் ஒளியும்போல பரஸ்பரம் அதி சமீப சம்பந்த முடையவர்களென்றும், வேறுவேறனவர்க ளென்றும் உரைக்கின்றனர்.

விசேஷ உரை.

*ஜீவாத்துமாவும் அதற்கு ஆச்சிரயஸ்தானமாகிய பரமாத்மாவும் இரண்டும் அசித்தாகிய சரீரத்துக்குள்ளே இருக்கின்றன. அவைகளிரண்டும் ஐயமற்ற புத்தி பூர்வமாக அடையப்படுகின்றன. நிழலும் ஒளியும் எப்படி ஒன்றுக்கொன்று வேறானபொருளோ, அப்படியே ஜீவாத்மா பரமாத்துமாக்களும் வேறுவேறான பொருள்கள். எப்படி ஒளியின்றி நிழலிருக்க முடியாததோ; அதுபோல, பரமாத்துமாவின்சம்பந்தமில்லாமல் ஜீவாத்துமா இருத்தல்கூடாது. பரமாத்துமா உயிர்களுக்கு அவரவரது செய்கைகளுக்குத் தக்க பலன்களைத்தருகின்றார். ஜீவாத்துமா அந்தப்பலன்களை அனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருக்கின்றது. கேவலம் தத்துவதரிசிகளாகிய பிரமஞானிகள் மாத்திரம் (ஜீவாத்துமா பரமாத்துமா) இரண்டையும் இவ்விதமாக வேறு இயற்கையை உடையனவாக நிச்சயஞ்செய்திருக்கிறார்களென்பதில்லை. அக்கினிஹோத்திரம் செய்பவர்களும் இவ்விதமாக உரைத்துக்கொண்டிருக்கின்றனர்.*

There are two Beings (God and Soul) residing in the inmost recess, which is in the most superior part of the body. One of them enjoying the fruits of actions in this world and the other awarding the same. The knowers of God represent them to be as light and shadow. So also they represent who pay oblations to the five sorts of fire, and they who have thrice ignited Nachiketic fires.

---

(28) முண்டகோபநிஷத்து

3-வது முண்டகம் 1-வது காண்டம் முதல் வாக்கியம்.

த்வாசுபர்ணா ஸயுஜாஸகாயா ஸமாநம்
வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே ; தயோர்ன்யஹ

*பிப்பலம் ஸாத்வத்ய நஸநஸ் நன்யோ அபிசாக*
*[ஶீதி.*

## பொழிப்புரை.

இரண்டு அழகான பறவைகள் இரட்டையாகவும், தோழமை யுடனும் குடியிருக்கின்றன, அவைகளுள் ஒன்று செய்கைகளின் பயன்களை யனுபவிக்கின்றது. மற்றொன்று புசிக்காமல் பார்த் துக்கொண்டு மாத்திரம் இருக்கின்றது.

## விசேஷ உரை

*இரண்டு அழகிய பறவைகள்=பரமாத்துமாவும், ஜீவாத் துமாவும்; பரமாத்மாவினது அழகின்விளக்கத்தைப்பெற்று ஜீவாத்மாவும் அழகுடையதா யிருக்கின்றது. ஜீவாத்துமா அதற்குள் ளேயிருக்கிற பரமாத்துமாவுடன் எப்பொழுதும் ஒன்றாய்ச்சேர்ந்திருக்கின்றது, அவற்றிற்கிடையில் சிறிதிட மும் இல்லை.அவை இரண்டும் ஒருடலின்கண்ணே இருக்கின் றன;மேலும், அவை இரண்டும் தோழமையாயிருக்கின்றன. பரமாத்துமா ஜீவாத்துமாவினிடத்தில் சாக்ஷிரூபமாயிருந்து கொண்டு அதனது செய்கைக் குரிய பயன்களைக்கொடுத்துக் கொண்டிருக்கிறது. ஜீவாத்மா அதைப் பெற்றனுபவிக்கின் றது. பரமாத்துமா அன்புவைத்து ஜீவாத்துமாவைக் காத்து வருகின்றது. ஜீவாத்துமா இம்மையிலிருந்துகொண்டு பர மாத்துமாவினிடத்தில் பிரீதியுடன் அதற்குப்பிரீதியாகிய காரியங்களைச் செய்துகொண் டிருக்கின்றது. பரமாத்துமா படைப்பது, ஜீவாத்துமா படைக்கப்பட்டது; பரமாத்துமா நியமிப்பது, ஜீவாத்துமா நியமத்துக்குள்ளடங்கியது; பரமா த்மா செய்கைக்குரிய பயனைத் தருவது, ஜீவாத்துமா அதை யனுபவிப்பது; பரமாத்மா ஒன்றே நமக்குத்துணை. நாம் அவ ரது அருளால் விஷயசுகங்களையும், ஆத்ம சுகத்தையும், பே ரின்பத்தையும், அனுபவிக்கின்றனம். ஜீவாத்துமா இவ்வுட லாகிய கூட்டின்கண்ணே இருந்துகொண்டும், அனைத்திற்கும் அன்னைபோன்ற பரமாத்துமாவினது அருளாகிய மார்பினி டத்துப் போஷிக்கப்பட்டுப் பருவம் வந்தபொழுது இவ்வுட லைவிட்டு நீங்கி அவரைப்பின்பற்றி அவருடன் எப்பொழு தும் சஞ்சரிக்கும்.*

Two *beautiful birds* (1) cohabitants and friends, live in one common tree. (2) One among them enjoyeth the fruits thereof; the *other* fasting only witnesseth. (1) *God* and the soul. (2) The body.

இரண்டாவது காண்டம் முற்றிற்று.

---

# மூன்றாவது அத்தியாயம்.

## பிரம்ம இலக்ஷணம்.

---

### (29). சாந்தோக்கிய உபநிஷத்து

உ-வது பிரபாடகம், உசவது-வது கண்டம்; முதல்வாக்கியம்.

**ஓம் ப்ரம்மவாதி நோ வதந்தி.**

பொழிப் புரை.

பிரம்மவாதிகளுரைக்கின்றனர்.

விசேஷ உரை.

பிரமஞானமென்னும் மேன்மையாகிய தீ அனைவருடைய உள்ளங்களிலும் வைக்கப்பட்டிருக்கின்றது. எல்லோருடைய கருத்திலும் பிரமத்தின் அளவற்ற அருளுடைமை, அழிவற்ற எழுத்துகளால் எழுதப்பட்டிருக்கின்றது. உலகப்படைப்பாகிய காரியத்தின் ஆலோசனையினால் அந்தத் தீயை எழச்செய்தாற்றான், அளவற்ற அருளையே திருமேனியாக உடைய அந்த வள்ளலினது தரிசனம் கிடைக்கும். அவர் தனது மிகத்தூய்மையான அருள்வடிவத்தை மனிதனுக்குப்புறம்பாகிய சிருஷ்டியிலும், மனிதனது மானஸபடத்திலும் பதித்து வைத்திருக்கின்றார். யார் அந்தப் பிரம்மத்தின் இருப்பை உண்மையாக நம்பி, அவரது கருத்திற்கிசைந்த லோகோபகாரமான ஸத்கருமங்களைச் செய்கின்றனரோ அவர்கள் அனைவரும் பிரம்மவித்துக்கள்.

இப்பிரம்ம வித்துக்களில் யார் பிரபஞ்சத்தில் பூபாலனம், வர்த்தகம், கைத்தொழில் முதலான எத்தொழில்களில்

அமர்ந்து இருக்கினும்; அவைகளைச் சத்தியமாகச் செய்தும், கல்விச்செருக்கு செல்வச்செருக்குகளை விட்டொழித்தும்; காமாதி இச்சைகளைக் கணத்திற்கண்டித்தும்; எப்போதும் எவ்விடத்திலும் நற்புத்தியுடையவர்களாகியும், சதா பாபமில்லாச் செயலுடையவர்களாகியும், எந்த மஹாத்துமாக்கள் அந்தப் பிரம்மத்தை எக்காலத்திலும், எப்பொருளினும், எக்காரியத்திலும் அறியவல்லவராகின்றனரோ, அந்தப்பாக்கியவான்களனைவருமே பிர்ம்ம ஞானிகள்.

யார் இவ்விதமாக அறிந்து, தம்மைப்போலவே அனைவரும் பிர்ம்மஞானிகளாகவேண்டுமென்னும் இச்சைகொண்டும், பொருள்வரப், பேரவாக்களைவிட்டும் "சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல்" என்னும் முறையை நாடி வேதாந்த தத்துவங்களை உண்மையாக உபதேசிக்கின்றனரோ அவர்கள் அனைவருமே பிர்ம்ம வாதிகள்.

இப்படிப் பிறருக்கு உபதேசிக்கிறபடியே தாமும் அநுஷ்டித்தும், உலக ஆசாபாசங்களை முற்றும் விட்டொழித்து; உடல், பொருள் ஆவியைப் பரமாத்துமாவின் சன்னிதானத்தில் சமர்ப்பித்தும்; அவரிடம் சதா ஆநந்தத்தை அடைபவர்கள் அனைவருமே பிர்ம்மாநந்தர்கள்,

பிரம்மவித்துக்களும், பிரம்மஞானிகளும், பிரம்மவாதிகளும், பிரம்மாநந்தர்களும் ஆகிறவர்கள், இன்னதேசத்திலாவது, இன்னகாலத்திலாவது, இன்றஜாதியிலாவது பிறந்தவர்களாயிருக்கவேண்டுமென்னும் நியமமில்லை. எந்நாட்டுப் பிரம்மவாதிகளுக்கும், பிரம்மவிஷயமான உபதேசந்தருவதற்கு அதிகாரமுண்டு. பாரத வருஷத்தின் (ஹிந்துதேசத்தின்) முற்காலத்திய பிரம்மவாதிகளாகிய மஹா இரிஷிகள் பிரம்மவிஷயமாய் எந்த உண்மையான தத்துவங்களையும், ஆத்மபிரவித்தமான ஸத்தியங்களையும் உபதேசித்துச் சென்றனரோ, அவைகளனைத்துமே இந்த அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகையினாற்றான் ஆரம்பத்தில் "பிரம்மவாதிகளுரைக்கின்றனர்" என்று சொல்லப்பட்டது.

The Preachers on Brahmam (God) Say.

(30). நாராயண உபநிஷத்து

உ-வது அநுவாகம்.

காயத்திரி

ஓம் பூர் புவஃ ஸுவஃஓம்தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹி தியோயோநஃ பிரசோதயாத்.

பொழிப்புரை.

சிருஷ்டி ஸ்திதி லய காரண பூதனும், திரிலோக வியாபியாயு எமது மனோவிருத்திகளைப் பிரேரேபிக்கநின்றஒபரமாத்துமாவே! உன்னைத்தியானிப்போமாக.

எவன் யாவற்றையும் விளங்கச்செய்கிறனே, எவன் எல்லா வற்றையும் ரக்ஷிக்கிறனே, எவனிடத்தினின்று யாவும் ஜனிக்கின்றனவோ, எவனிடத்து யாவும் மீண்டு லயிக்கின்றனவோ, எவன் மோக்ஷத்தின்பொருட்டு எம்மனோ விருத்திகளைச் சன்மார்கத்தில் பிரவர்த்திக்கும்படி உதவுகின்றனே, அப்படிப்பட்ட திவ்யஸவிதா வாகிய தேசோமயனே! உன்னை மேன்மேலும் கொண்டாடித் தொழுவோமாக.

விசேஷ உரை.

ஆரியர் ரிக்வேதம் மூன்றாவது மண்டலம் 62-11-லும் பிரஹதாரணிய உபநிஷத்து 5-வது அத்தியாயம் 14-வது பிரிவிலும் சொல்லப்பட்டிருக்கும் காயத்திரியானது சூரியனைநாடிச்செய்யும் பிரார்த்தனை என்று சிலர் சந்தேகப்படுகிறார்கள். அதிலிருக்கும் ஸவித்ரு என்னும் பதத்திற்கு சூரியன் என்னும் பொருளானாலும், பரப்பிரம்மத்துக்கு இடப்பட்ட பல பெயர்களில் அதுவும் ஒன்றேயாம், அதாவது சவித்ரு நாமமுடையவன் என்பதாம்.

பிராகிருத சூரியன் பிரகாசித்தால் பிரபஞ்சத்தின் இருள்நீங்குவதுபோல, அப்பிராகிருதமாகியஜீவாத்மாவைமூடும் அஞ்ஞானமென்னும் இருளை நீக்க அப்பிராகிருத சூரியனாகும் சவித்ரு நாமமுடைய பரமாத்துமா என்றும், ஸர்வ ஜீவகோ

டிகளுக்குள்ளும், சூரிய பிம்பத்துக்குள்ளும் பிரவேசித்து யிருகின்ற பரமாத்துமா என்றும்; சூரியன் முதல்நரர்வரை ஆறுள்ளவர்களேயும் அரசுசெய்யும் பரமாத்துமா என்றும் பொருள். இதைப்பற்றியே, சாந்தோக்கிய உபநிஷத்தில் "எவன் சூரிய பிம்பத்துக்குள் பிரவேசித்து அரசுசெய்கிறுனே அந்தப்பரமாத்துமாவே உனதுஉள்ளத்திலும்புகுந்து அரசுசெய்கிறுன்" என்றும், 'பரமாத்துமா எல்லாப்பிராணிகளுடைய ஹிருதயங்களிலும் வஷிக்கின்றுர் என்று, பகவத்கீதையிலும் சொல்லப்பட்டது.

We meditate on the CAUSE of all, PERVADING all, and internally RULING all material objects, from the sun down to us and others.

"Let us adore the supremacy of THAT DIVINE SUN, "the God-head WHO illuminates all, WHO recreates all, from "WHOM all proceed, to WHOM all must return, WHOM w "invoke to direct our understadings aright in our progress to ward his holy seat."

---

## (31). தைத்திரீய உபநிஷத்து

### சிக்ஷாவல்லி.

ஓ மிதிப்ரஹ்மஸர்வே ஸ்மைதேவா பலிமாஹரந்தி; மத்யேவாமநமாஸீநம் விஸ்வேதா உபாஸதே.

### பொழிப்புரை.

ஓம் என்கிற எழுத்திறுல் விளங்குகிறதெதுவோ அது பிரம்மம். சகல தேவதைகளும் அதைப் பூஜிக்கின்றனர். பிரபஞ்சத்தினிடையேயிருக்கும் பூஜிக்கப்படத்தக்க பரமாத்துமாவை எல்லா தேவதைகளும் நியதமாக உபாசிக்கின்றனர்.

### விசேஷ உரை.

ஓம் என்னும் பிரணவாக்ஷரம் பார்வைக்கும் கேள்விக்கும் ஒரே அக்ஷரமாகத்தோன்றினும், அதில், அ - உ - ம் என்னும் மூன்று எழுத்துக்கள் அடங்கியிருக்கின்றன. இம்மூன்று எழுத்துக்களுக்குள் உலகத்தில் வழங்கும் சகலஎழு

த்துக்களும், சகல காரண காரியங்களும் அடங்கியிருக்கின் றன.எழுத்துக்களில் (யாதொரு உதவியன்றி) இயற்கையாக உச்சரிக்கப்படும் எழுத்துக்களுக்கு உயிரெழுத்துக்களென் றும்; உயிரெழுத்துக்களின் உதவியால்உச்சரிக்கப்படும் எழு த்துக்களுக்கு உயிர்மெய் எழுத்துக்களென்றும் சொல்லுகி ரேம். உயிரெழுத்துக்களாகிய அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்னும் எழுத்துக்களைத் தக்கபடி பரிசோதிப் போமாகில், அவற்றில் அ, ஆ. இ. ஈ, எ, ஏ, ஐ ஆகிய ஏழு எழுத்துகளும் அகர எழுத்தின் திரிபாகும். உ. ஊ, ஒ, ஓ ஔ என்ற ஐந்துஎழுத்துக்களும் உகரஎழுத்தின் திரிபாகும்; ஆகவே இந்த அ, உ என்னும் எழுத்துக்களுடன், உயிரைப் போல்துவனிக்கும் அநுஸ்வாரமாகியபுள்ளி=ο=ம்,சேர்க்க அ, உ, ம்=ஓம், என்ருகிறது. இவ்வமைப்பு கேவலம் இந்நா ட்டுக்குரிய, கீர்வாணம், ஆந்திரம், தமிழ், கன்னடம், துளு வம், இந்துஸ்தானி, வங்கம், குஜராத்தி,மஹாராஷ்டிரம்,மலை யாளமுதலான பாஷைகளில்மாத்திரமல்ல; அரபுபாஷையின் முதல் எழுத்தாகிய (*Hamza*) அம்ஸா என்பதும்; பாரசீக பாஷையின் முதல் எழுத்தாகிய (*Alf*) அலிப் என்பதும், ஆங்கிலேயபாஷையின் முதல் எழுத்தாகிய *A* ஏ என்பதும் அகர உயிரின் திரிபேயாகும்; இப்படி உலகத்திலுள்ள சகல பாஷைகளின் உயிரெழுத்துக்களை எல்லாம் தக்கபடி பரி சோதிப்போமாகில் அவைகள் யாவும் "அகரமுதலவெழுத் தெல்லாமாதிபகவன்முதற்றேயுலகு" என்னும் திருக்குறள் மொழிப்படியாகும் ஆகவே,

### ஓங்காரமே பிரஜைகளின் பாஷை.

இப்பிரபஞ்சத்தில் பகுத்தறிவோடு பேசும் பாஷைக் குரிய பிராணிகளாகும் நம்மானவஜாதியின் மக்கள், ஜகத் தில் ஜனித்த உடனே யாதொரு உபாத்தியாயருடைய உதவி யில்லாமல் இயற்கையாக உச்சரிக்கும் எழுத்துக்கள் அ-உ- உங் என்பவைகளே. பிள்ளைகள் பசித்தபோது அழும் சப்த மும் உ ங் க ா! ஊங்கா என்னும் ஓங்கார சப்தமேயாம். தம் மை விட்டுப் பிரிந்து தூரத்திலிருக்கும் மாதாமுதலானவர்

களை அழைக்க அ உ ஓ! ஓ! ஓம் என்னும் எழுத்துக்களேயே திரிபாக உச்சரிக்கின்றன, அவைகளுக்கு வியாதி, வருத்தம் உண்டாகும்போது அம் உம் அஹூம் ஓம் என்றே உச்சரிக்கின்றன, சுக சந்தோஷமுண்டாகும்போது ஆஹாஹாஹா ஊஹூ என்பனவும் ஓம் என்பதின் திரிபான உச்சரிப்புகளே. கஷ்டங்கள் சம்பவித்து வருந்தும் உலகத்தாரனைவரும் கடவுளை ஓங்! ஓங்! கடவுளே என்று கதறி அழைப்பது பிரத்தியக்ஷம்; ஆகவே, மானவஜாதியார் பிறந்தது முதல் இறக்கும் வரையில் உச்சரிக்கும் வார்த்தைகள் ஓங்காரமே. கால தேச வர்த்தமானங்களினால் இந்த ஓங்காரசப்தத்தை வேறு வேறு விதமாக உச்சரித்து வந்தாலும் அதன் பெருமை பிரபஞ்ச வெளிப்பொருள்களிலும் பிரத்தியக்ஷம். ஆகவே,

ஓங்காரமே பஞ்சபூதாதி பிராணிகளின் பாஷை:

பூததேகம்பூண்ட வெண்கலம், இரும்பு வெள்ளி முதலானவைகள் ஒன்றோடொன்றுதாக்குப்போது உண்டாகும் சப்தத்தை கவனித்தால் அதுவும் ஓங்காரத்தின் சப்தமாகும். பெருங்கடல்களிலிருந்து பெரும் பர்வதங்களைப்போல எழும்பும்பேரலைகளின் சப்தத்தைக் கவனிப்போமாகில்அதுவும் ஓங்காரசப்தமாகும். சண்டமாருதம் வீசும் சப்தத்தைக் கவனித்துக்கேட்போமாகில் அதுவும் ஓங்கார சப்தமேயாகும்; பற்பல விருக்ஷங்கள் காற்றிலசைந்து சப்திக்கும் சப்தத்தையும், பற்பலவித கட்டைகள் தீயிற்கலந்து எரியும் போதுண்டாகும் சப்தத்தையும், கவனிப்போமாகில் அவைகளும் ஓங்காரசப்தமேயாகும். பற்பலவிதப்பூச்சிகள் வண்டுகள், பக்ஷிகள், மிருகங்களின் சப்தங்களைக் கவனிப்போமாகில் அவைகள்யாவும் ஓங்காரசப்தத்தின் திரிபான சப்தங்களாகும். சகல ஜந்துகோடிகளுக்கும் ஆநந்தத்தை விளைவிக்கும் சங்கிதத்தின் உற்பத்தியைப்பற்றிப் பரிக்ஷிப்போமாகில், அதுவும் ஓங்காரத்திலிருந்தே ஜனித்தில் ஸ்பஷ்டமாகும். ஆகவே,

ஓங்காரமாகிய

| அ | —உ | —ம் | என்னும் 3 எழுத்துகளிலிருந்தே |
|---|---|---|---|
| ஸ்தூல | —சூக்ஷும | —காரணம் | என்னும் 3 தேகங்களும் |

ஆண் —பெண் —அலி என்னும் 3 பால்களும்
வாலிபம் —யவ்வனம் —மூதுமை என்னும் 3 தசைகளும்
ஜாக்கிரதை —ஸ்வப்பனம்—ஸுஷுப்தி என்னும்3அவஸ்தைகளும்
ஆத்யாத்மிகம் —ஆதிதைவிகம் —ஆதிபௌதிகம் என்னும் 3 தாபத்திரயங்களும்
விஷயாநந்தம்—வாஸனாநந்தம்—பிரம்மாநந்தம் என்னும்3சுகங்களும்
புண்ணியம் —பாவம் —மிஸ்ரம் என்னும் 3 கர்மங்களும்
ஜீவ —ஈசுவர —பிரதியுக்தம் என்னும்3கர்த்தத்துவங்களும்
ஸாத்விக —ராஸஜ —தாமசம் என்னும் 3 புத்திகளும்
இருக்கு —எஜுர் —சாமம் என்னும் 3 வேதங்களும்
பெயர் —வினை —உரி என்னும் 3 சொல்லுகளும்
தன்மை —முன்னிலை—படர்க்கை என்னும் 3 இடங்களும்
ஒருமை —இருமை —பன்மை என்னும் 3 எண்களும்
குரு —சாஸ்திர —நிஷ்டை என்னும் 3 விசுவாசங்களும்
இச்சை —ஞானம் —கிரியை என்னும் 3 சக்திகளும்
பூதம் —பவுஷியம் —வர்த்தமானம் என்னும் 3 காலங்களும்
சுவர்க்க —மத்திய —பாதாளம் என்னும் 3 உலகங்களும்
அசுரர் —ருத்திரர் —ஆதித்தியர் என்னும் 3 தேவர்களும்
பிரம்மா —ருத்திரர் —விஷ்ணு என்னும் 3 மூர்த்திகளும்
சாந்தம் —கோரம் —மூடம் என்னும் 3 விருத்திகளும்
நாபி —ஹிருதயம்—ப்ரூமத்தியம் என்னும் 3 ஸ்தானங்களும்
விசுவன் —தைஜஸன்—பிராக்ஞன் என்னும் 3 ஜீவர்களும்
விராட்டு—ஹிரண்யகர்ப்பன்-அவியாகிருதன்என்னும்3ஈசுவரர்களும்
ஐஹிகம் —ஆமுஷ்மிகம்—வைராக்கியம் என்னும் 3 விரக்திகளும்
பாஹியம் —அநந்நியம் —ஏகாந்தம் என்னும் 3 பக்திகளும்
திருக்கு —வாக்கு —ஸ்பரிசம் என்னும் 3 தீக்ஷைகளும்
வாம —தக்ஷிண —நாஸாக்ரம் என்னும் 3 நேத்திரங்களும்
அந்தரம் —மத்தியம் —பாஹியம் என்னும் 3 லக்ஷியங்களும்
ஸம்ஞானம்—விக்ஞானம்—பிரக்ஞானம் என்னும் 3 ஞானங்களும்
ஸோமன் —சூரியன் —அக்கினி என்னும் 3 மண்டலங்களும்
சுவாதிஷ்டான—பூரண —துரியம் என்னும் 3 நிலைகளும்
கிரமமுக்தி —ஜீவன்முக்தி—விதேஹமுக்தி என்னும் 3 முக்திகளும்

ஆக இத்தொண்ணூற்றாறையும், (96) இவைகளுக்கு இனமானவைகளையும் இவைகளுக்குட்பட்ட திரிவர்ணகமானவைகளையும் எங்கும் காணலாம்.

### ஓங்காரத்தின் திரிவர்ணகங்களின் ஜனன விவரம்.

இந்த திரிவர்ணகமானவைகளில் சில (1) பஞ்சேந்திரியங்களால் அறியக்கூடியவைகளாகவும் (2) சில மனதினுல் மாத்திரம் அறியக்கூடியவைகளாகவும் (3)சில மனதினுலும் அறிய முடியாமல் கேவலம் சஹஜஞானத்தினுல் மாத்திரம் அறியக்கூடியவைகளாகவும் இருத்தல் பிரத்தியக்ஷம். இவற்றில் பஞ்சேந்திரியங்களால் கிரஹிக்கக்கூடிய ஜடஜகபதார்த்தங்கள் ஓங்காரத்தின் முதல் எழுத்தாகிய அ காரத்தையும், பஞ்சேந்திரியங்களுக்கு கோசரமாகாமல் மனதினுல் மாத்திரம் கிரஹிக்கக்கூடியவை, ஓங்காரத்தின் இரண்டாவதெழுத்தாகிய உகாரத்தையும், மனதினுலும் கிரஹிக்கமுடியாமல் கேவலம் சஹஜஞானத்தினுல் மாத்திரம் ஊஹித்தறியக்கூடியவைகள் ஓங்காரத்தின் மூன்முவது எழுத்தாகிய இம் என்னும் அநுஸ்வாரம் சேர்ப்பதனுல் மாத்திரம் சப்திக்கும் ம காரத்தையும் சார்ந்ததாகும்.

### ஓங்காரம் திரிவர்ணகமானவைகளுக்குக் காரணம்.

இப்படி எங்கும் எப்போதும் திரிவர்ணகமானவைகள் இருத்தல் பிரத்தியக்ஷம். இவைகள் உண்டாவதற்குக் காரணம் யாது ? சர்வ சூனியத்திலிருந்து ஒன்றும் உண்டாகாதே. ஆகவே, இவைகளை யாதாவது ஒரு பொருள் சிருஷ்டித்திருக்கவேண்டும். இப்படி சிருஷ்டித்த பொருள் மேலே சொன்ன (96) தொண்ணூற்றாறு திரிவர்ணகமான பொருள்களில் தோன்றுமையால்; இத்திரிவர்ணகமானவைகளாவது தம்மைத்தாம் சிருஷ்டித்துக்கொண்டிருக்கவேண்டும். அப்படிச் சிருஷ்டித்துக்கொண்டதாகில், அவைகள் சுவதந்திரமும் பூரணமுமானவைகளாக இருக்கவேண்டும்; இத்திரிவர்ணகமானவைகளோ பரதந்திரமும் அபூர்ணமுமானவைகளாக இருத்தல் பிரத்தியக்ஷம்; ஆனதால் அவைகளே சிருஷ்டித்துக்கொள்ளும் சக்தியுடையவைகளல்ல ; அல்லாமற்போகவே, இத்திரிவர்ணகமானவைகளுக்கு ஆதாரமாகிய அ கா ர, உ கா ர, ம கா ர ம் என்னும் எழுத்துக்களாவது சிருஷ்டித்திருக்கவேண்டும் ; இந்த ஓங்காரத்தின் எழு

த்துக்களை கடிதம் முதலானதுகளின்மேல் எழுதிப்பார்க்கில், அதில், இந்த ஓங்காரத்தைச்சார்ந்த அ கா ர உ கா ர மகார எழுத்துக்களைத்தவிர வேறு எழுத்துக்கள் தோன்றவில்லை. அல்லது அந்த ஓங்கார சப்தத்தைக்கேட்கும்போதும் அத்துடன் வேறு சப்தமுங்கேட்கவில்லை. அன்றியும் இந்த அகார உகார மகார எழுத்துக்களுக்கும் ரூப சப்த மாத்திரைகள் இருப்பதால் இவைகளும் பரதந்திரமும் அபூரணமுமானவைகளாகவே தோன்றும்; அப்படித் தோன்றினும், இந்த அகார உகார மகார மயமாக எங்கும் எப்போதும் தோன்றி இருக்கும் பரதந்திரமும் அபூரணமுமான பொருள்களின் இருப்பின் நம்பிக்கையினுல் அதற்குள் பூரணமும், சுதந்திரமுமான ஒரு பொருள் இருக்கிறதென சஹஜ ஞானம் நம்பும்படிசெய்கின்றது.

இந்த நம்பிக்கை தானுகவே உள்ளது; இதுவே இயற்கை யறிவு அல்லது ஸஹஜ ஞானம். இாத ஸஹஜஞானத்தைக்கொண்டு ரூபம், சப்தம், மாத்திரைகளையுடைய அகார உகார மகார மயமான ஓங்காரத்தைப் பரிக்ஷிப்போமாகில், அதற்குள் மாத்திரை முதலானதுகளில்லாமலும், அது சத்தியமாக இருக்கிறது என்னும் பொருள் படும். தத்ஸத்=அது சத்தியமாக இருக்கிறது, என்னும் பொருள் அடங்கி இருக்கிறது. ஆகவே ஓங்காரத்தை நான்கு வகுப்புகளாக வகுத்து, அதில் மாத்திரைகளையுடைய அகார உகார மகார எழுத்துக்களை மூன்றுவகுப்புகளாக்கி, அவைகளின் இருப்புக்கு ஆதாரமானதும், அமாத்ரையானதும், அதுவே தத்ஸத் என்னும் பொருள் என்றும்; அதுவே மேலேசொன்ன தொண்ணூற்றாறு திரிவர்ணகமானவைகளின் ஆதாரமான ஓங்காரத்துள் நடுநாயகமாக இருக்கிறது என்றும்; ஆகவே, ஓங்காரம் என்பதற்கு அது சத்தியமாய் இருக்கிறது=(Beness) என்றும் பிரம்மவாதிகளுரைக்கின்றனர்.

ஆனதுபற்றியே ஓம்—தத்—ஸத் என்பதில்

ஓம், என்றால்=(பிராகிருத அபபிராகிருதமான சகல

பதார்த்தங்களையும் படைத்து அழித்து ஆக்கவல்ல) முதற் காரணம் (ஆகியதெதுவோ)

தத், என்றால் (ஆண் பெண் அலியற்றதாகிய)= அது
ஸத், என்றால் (எப்போதும் சத்தியமாக)= இருக்கிறது
இதையே, சத், சித், ஆநந்தம்கூடிய சச்சிதாநந்த ஹரி.

என்றுசொல்லப்படுகிறது.

இந்த ஓங்காரத்தின் மகிமை இப்படிப்பட்டதாகையால்,

### மாண்டூகிய உபநிஷத்தில்.

ஓங்காரமே பிரபஞ்சமயமாக இருக்கிறது. பிரபஞ்சத்தை விகஸிக்கச் செய்வதும் ஓங்காரமே. இந்தவெளியில் முன் எவை இருந்தனவோ, இப்போது எவை இருக்கின்றனவோ, இனி எவை இருக்குமோ இவைகள்யாவும் ஓங்காரமயமே. முக்காலத்துக்கும் மேலானதெதுவோ அதுவும் ஓங்காரமே என்றும்,

### சுவேதாஶ்வதரம்

முதல் அத்தியாயம் 13–வது சுருதியில்.

தீ, கட்டைகளுக்குள் மறைந்திருக்கும்போது தெரியாவிட்டாலும், அக்கட்டையை உரைப்பதனால் அத்தீயின் ஸ்வரூபம் வெளியாவதுபோல, பரமாத்துமாவானது ஓங்காரத்துக்குள் மறைந்திருக்கிறது. ஜீவாத்துமாவை கீழ்கட்டையாகவும், பரமாத்துமாவை மேல் கட்டையாகவும் பாவித்து தியானமென்னும் உரைப்பைக்கொண்டு உரைத்தால்தேஜோமயமான பிரம்மம் பிரகாஶிக்கும் என்றும்,

### தைத்திரீய உபநிஷத்து

ஶிக்ஷாவல்லி நான்காவது அநுவாகத்தில்.

ஓங்காரஸ்வரூபனாகிய தேவாதிதேவன் வேதஸ்வரூபனே, ஞானஸ்வரூபனே எனக்குப்பாரமார்த்திக ஞானத்தை அருள்வாய், எனது மெய், வாய், கண், மூக்கு முதலானவைகளை ஓங்கார (பிரணவ)த்தால் புனிதமாக்குவாய் என்றும்,

## முண்டகோபநிஷத்து

இரண்டாம் பாகம் இரண்டாவது பிரிவு 3—4—6-ல்

ஓங்காரமென்னும் பிரணவத்தை வில்லாகவும், ஜீவாத்துவாவை அம்பாகவும், பிரம்மத்தைக்குறியாகவுங்கொண்டு சலனமற்ற பக்தியுடன் எய்தால் பிரம்மாநந்தத்தை அடையலாம் என்றும்,

## கட உபநிஷத்து

இரண்டாவது வல்லி 15—16-வது வாக்கியங்களில்.

எந்த இடம் அல்லது வார்த்தையைப்பற்றி எல்லா வேதங்களும் கொண்டாடுகின்றனவோ, எந்த வார்த்தையைப்பற்றி யாக யக்கிய மந்திர ஜபங்கள் கொண்டாடுகின்றனவோ, பிரம்மசாரிகள் எந்த இடத்தை அடைய விரும்புகின்றனரோ, அதுவே ஓங்காரம்.

## பிரச்ஞே உபநிஷத்து

5-வது பிரஸ்னம் 1-முதல் 7-வரையிம்.

ஓங்கார சப்தத்தை உள்ளநாள் உள்ளவரையில் உச்சரித்தால் அவனுக்கு எந்த உலகம் கிடைக்கும் என்று சத்தியகாமன் கேட்க, ஆசாரியர்சொல்லுகிறார் ஓ சத்தியகாமனே, மேலானதாகிய பரமும், தாழ்ந்ததான அபரமும், ஓங்காரத்துக்குள் அடங்கியவை என்றும்,

ஓங்காரத்தைச்சார்ந்த பிரணவாக்ஷரங்களை சதாதியானிக்கிறவர்கள், ஸர்ப்ப மானது தன்சட்டையை உரிப்பதுப்போல், பாவமென்னும் சட்டையை உரித்தெறிந்து புனிதராகிறார்கள், அவர்கள் சாமவேத மந்திரங்களால்பிரம்மலோகத்துக்குக் கொண்டுபோகப் படுகிறார்கள் என்றார் என்றும்,

## பிரஹதாரணியக உபநிஷத்து

5-வது அத்தியாயம் முதல் பிராம்மணத்தில்.

ஓம் என்பது, ஆகாயம், அதுவே பிரம்மம், அதுவே வேதம், இந்தவார்த்தையினாலேயே அறியவேண்டியவைகளெல்லாவற்றையும் அறியலாம் என்றும்,

சாந்தோக்கிய உபநிஷத்து

முதல் அத்தியாயம் முதல் பிரிவில்.

ஓம் என்ற பிரணவமே உத்கீதம், அதைப்பாடி ஆராதிக்கவேண்டும் என்றும்,

பின்னும் பலவாறாக புகழ்ந்திருப்பதன்றியில்,

பகவத்கீதை

7-வது அத்தியாயம் 8-வது சுலோகத்தில்.

"எல்லா வேதங்களிலும் நானே ஓங்காரமாக இருக்கிறேன்" என்று கிருஷ்ணன்சொன்னான். அனதுபற்றியே பரமாத்துமாவை ஓம், தத்ஸத் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

மேலும், இந்நாட்டிலிருக்கும் ஸ்மிருதி சாஸ்திர புராணங்களேயும் பக்தசிரோன்மணிகளுடைய காவியங்களேயும் சோதிப்போமாகில், அவைகள் இந்த ஓங்காரத்தையே ஆதாரமாகக்கொண்டிருக்கின்றன.

மநுதர்ம சாஸ்திரம்

2-வது அத்தியாயம் 74-முதல் 85-வது வாக்கியங்கள் வரையில்.

ஓங்காரத்திலிருந்து பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் உண்டாயிற்று என்றும்,

பிராம்மணர்கள்வேதபாடங்களே ஆரம்பிக்கும்போதும், முடிக்கும்போதும் ஓம்என்றபிரணவத்தை யுச்சரிக்கவேண்டும். அப்படி உச்சரிக்காவிட்டால அவனுடைய படிப்பு பாழ்த்துப்போம் என்றும்,

உபாத்தியாயன், வீரன், வர்த்தகன் மற்றெவனுகினும் இந்த ஓங்காரத்தை உச்சரிக்காமல் செய்யும் விரதங்கள் நிந்திதமானதுகளே என்றும், வேதங்களேயறிந்த புரோஹிதன் மூன்று எழுத்துக்களால் உண்டான ஓங்காரமென்னும் பிரணவத்தைக் காலேமாலேகளில் உச்சரித்தால் வேதாப்பியாசத்தினுலுண்டாகும் பலனே யடைகிருன் என்றும்,

இந்த ஓம் பிரணவத்தை மூன்றுவருஷம் விடாமல் உச்சரிக்கிறவர்கள் பரமாத்துமாவின் சன்னிதானத்தை நாடி புனிதராகிப் பரலோகத்தை அனுபவிப்பார்கள் என்றும் பின்னும் பலவிதமாகவும் வர்ணித்தார்.

இம்மட்டோ! இவ்வுலகிலுள்ள சமய நூல்களையும் சமயாசாரக்கருத்துகளையும், சுவாமிகளின் பெயர் களையும் சாஸ்திரோக்தமாகச் சோதிப்போமாகில் அவைகள்யாவும் ஓங்கார சப்தத்திற்குட்பட்ட தாகவே பிரத்யக்ஷமாகும். எப்படியெனில்,

பார்ஸீகருடைய பிரதம தேவனுடைய ஜந்து பாஷையில் (Ahurmuzd=அஹுர்மஸ்ட் என்பதாம்; இந்த வார்த்தையிலுள்ள A. U. M. அ உ ம் எழுத்துக்களும் ஓங்காரத்தையே காட்டும்.

சீனு, ஜப்பான், திபேத்து முதலான பவுத்தலாமாக்களின் துவஜம்மனி பத்மி ஹோம் Mani Padmi Hom என்பதாம். இந்த மஹாவாக்கியத்திலும் அ - உ - ம் என்னும் ஓங்காரத்தைச்சார்ந்த பிரணவாக்ஷரங்கள் இருப்பன பிரத்தியக்ஷம்

யூதமதஸ்தர்களுடைய கடவுளின்பெயர் Jehova = இஹோவா இந்த இஹோவா என்னும் பதத்துக்கு (Hebrne) ஹிபுரு பாஷையில் இருக்கிறேன் என்று பொருள். இந்தப்பொருளுள்ள இஹோவா (Jehova) என்னும் பதத்திலுள்ள E A O இ, எ, ஒ அல்லது A W O அ உ ஒ என்ற உயிர்கள் ஓங்காரத்தின் பொருளாம். இந்த இஹோவா என்ற பதத்தை கிரேக்கு பாஷையின்படி பரிக்ஷிப்போமாகில் ஓம் ᴱப"நான் இருக்கிறேன்" என்றும் ᴱப H I என்ற வினையால் To Be=இருத்தல் என்றும் (Septugent) செபடுயூஜண்டில் ஓம் என்பதைப்போன்ற (ᴱப=*Ever Existing God*)=பதத்திற்கு எப்போதும் இருக்கும் ஈசன் அல்லது நான் இருக்கிறேன் என்று பொருளாகும்.

கிறிஸ்து மதத்தார் கடவுளுக்குச் சாதாரணமாக வழங்கும் ஏஹோவா என்றுஇ பதங்களையும், ஆமேன் என்ற பதத்

தையும் சோதிப்போமாகில் அவைகளில் அ-உ-ம் என்னும் பிரணவாக்ஷரங்கள் அடங்கி இருத்தல் பிரத்தியக்ஷம் இதைப்பற்றியே In the Gospel of John the Apostle in Chapter I Verses 1—5. யோவான் எழுதிய சுவிசேஷம் அதிகாரம்1—5-ல் In the beginning was the *Word* and the *Word* was with God, and the *Word* was God= ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்தவார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தையே தேவனுய் இருந்தது; என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வார்த்தையே ஓங்காரமாகிய வார்த்தை. இந்த வார்த்தைக்குள்ளிருந்தே, பிதா குமாரன் பரிசுத்த ஆவி என்ற திரியேகத்துவம் உண்டாகியதாம்.

மகம்மது மதஸ்தருடைய குருனில் கடவுளை ஸ்துதிக்கும் அலிப்-லாம்-மிம் A. L. M. என்பவைகளை மகாமகிமையுள்ளவைகளாக முதலில் உபயோகப்படுத்தப்பட்டுவருவது பிரத்தியக்ஷம். அரபுபாஷையில் Karam - al - din காரம் அல்—டீன் என்பதில் Alip=அலீபுக்கு முன் உச்சரிக்கும் போது ல எழுத்து Karam - ud - pin காரம்உடீன் என்று உகரமாக உச்சரிப்பது சஹஜமாகையால் இந்த அலிப்-லாம் மிம் என்னும் வார்த்தையிலிருக்கும் லகரம் உகரமாகமாற அ-உ-ம் என்னும் ஓங்காரத்தைக் காட்டும். மேலும் மகம்மதியருடைய (Kalima) = கலிமா = பரிசுத்த வார்த்தையாகி La-ilaha - il - lal - lahu - wa Mahammed - ur-Rasul-ulla=லா-இல்லல்லாஹு - வா - மஹமத் உர் - ரசூல் உல்லா என்ருல் There is no deity bnt God and Mahamud is the Apostle of Goi = அல்லாவாகிய ஆண்டவர் ஒருவர் தவிர வேறு கடவுள் இல்லை, மஹமமது அவரால் அங்கீகரிக்கப்பட்ட நபிநாயகமாவார் என்பதாம். இந்தக்கலிமாவில் லா என்பதிலுள்ள அகரமும், ஹு என்பதிலுள்ள உகரமும், மஹம்மத் என்பதிலுள்ள மகரமும் ஓம் என்னும் ஓங்காரத்தையே காட்டும். இப்படி இவ்வுலக சமயங்களிலெல்லாம் மறைந்து நிற்பது ஓங்காரமே. ஆகையால் மகா பக்த சிகாமணியாகிய,

நம்மாழ்வார் இயற்றியருளிய தமிழ்வேதத்தில்

(2) உ யர்வற உயர்நல முடையவ னெவ னவன்
(3) ம யர்வற மதிநல மருளின னெவ னவன்
(1) அ யர்வறு மமரர்க ளதிபதி யெவ னவன்
(4) து யரறு சுடரடி தொழு தெழன் மனனே.

என்னும் பாட்டில்

1, 2, 3 இலக்கமிட்ட வரிகளிலுள்ள (1) அகர, (2) உகர, (3) மகரமாகிய ஷை வரிகளின் முதல் எழுத்துக்கள் ஓங்காரத்தைச்சார்ந்தவைபாகவும், நான்காவது வரியின் (4) முதலெழுத்தாகிய து என்பது ஷை ஓங்காரத்தின் இருப்பை ஸ்தாபிக்க தத், ஸத் என்பதைக்காட்ட நிற்பது பிரத்தியக்ஷம்.

Om (AUM) when considered as one letter uttered by the help nf one articnlation, is the slmbol of the Supreme Spirit. It is derived from the radical அ, உ, to preserve, with the affixம.

* "Om" implies the Being on whom all objects, either visible or invisible, depend in their formation, continuance, and change.

† "Tut" implies the beidg that can be described only by the demonstrative pronoun "that, and not by any particular definition.

‡ "Sat" implies what "truly exists" in one condition independent of others. These three terms collecriviy imply, that the object contemplated through "Om" can be described only "that" which "is *existiug*."

The first torm "Om" bears a striking similarity, both in sound and application, to the participle of the verb *to be* io Greek: & it is therefore not very improbaple that one mlght have had its origin from the other. As to the similariity in sound. it is too obvions to require illustration ; and a reference to the Septnagint will shew that like "Om" is applied to Jehova the ever *existing* God. Exodus, iii, 14.

(Om) is the emblem of "the Most High"—*Munoo*, II. 83, "This one letter, Om, is the emblem "of the Supreme Being".—*Bhagavudgeeta*. It is true that this emblem conveys two soudns,

that of *o* and of *m* nevertheless it is held to be one letter in teh above sense ; and we meet with instances even in the ancient and modern languagos of Europe that can justify such préviles-ges, such as Ξ (Xi) and *ψ* (Psi) reckoned single letters in Greek, and Q, W, X, in English and others. But when considered as s triliteral word consisting of அ உ ம் Om implies the three Vedas, the three states of human nature, the three divisions of the universe, and the ihree deities, Brahma Vishnu and Shiva, ageuts is the creation, preservation, and destruetron of this world; or, properly speaking, the three principal attributes of the Supreme Being personified as Brahma, Vishnoo and Shiva. In this sense it implies in fact, the Universe controlled by the Supreme Spirit.

---

## (32.) முண்டகோபநிஷத்து

உ-வது முண்டகம் உ-வது கண்டம் சு-வது வாக்கியட.

*ஓ மித்யேவம் த்யாயத ஆத்மாநம் ஸ்வஸ்திவ: பராய தமஸ: பரஸ்தாத்; ஓம் காரேணைவ யத நேநாந் வேதி வித்வான் யத்தச் சாந்த மஜர மம்ருதமபயம் பரஞ்ச.* [ருத

பொழிப்புரை.

ஓங்காரப் பிரதிபாத்தியமான பிரமத்தைத் தியானியுங்கள், அஞ்ஞான இருளினின்று நீங்குவதில் உங்களுக்கு நிர்விக்கின முண்டாவதாக. ஞானி ஓங்கார சாதனத்தைக்கொண்டே அந்த சாந்தநும், மூப்பற்றவநும், சாவற்றவநும், பயம் நீங்கியவநும், நிரதிசயநுமானவனை அடைகின்றார்.

விசேஷ உரை.

*ஓங்காரமந்திரத்துக்குத் தேவதை அக்னி என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். தேவதையென்றால் "யாதேநோச்யதே யாதேவா" என்று லக்ஷணம் இந்த மந்திரத்தாற் சொல்லப்பட்டவன் அக்னி. அக்னியில் பிராகிருத அக்னி, அப்பிராகிருத அக்கினி என இருவகையாம். இங்குக் காட்டியிருக்கும் அக்னி, பிராகிருத அக்கினியோ, அப்பிராகிருத அக்னியோ என்று சிலர் சந்தேஹிக்கக்கூடும். அந்தச்சந்தே*

கத்தை ஸ்ரீசங்கராசாரியரும், ஸ்ரீகிருஷ்ணபண்டிதரும் ஸ்பஷ்டமாக நீக்கியிருக்கிறார்கள். எப்படியெனில் "அஸ்ய பிரணவஸ்ய அக்னிஹி பரமாத்மாதேவதா" என்றுசொல்லி "தது க்தம் சங்கர பகவத்பாதைஹி என்று எழுதியிருக்கிறார்கள். "பிரணவே பிரஹ்மரிஷி: ப்ரோக்த: சந்தோ காயத்ர முச்யதே பரமாத்மா தேவதாயா மோக்ஷாய விநியுஜ்யதே இதி அதயேவாக்னிபதஸ்ய பரமாத்ம பரத்வம் வியாக்கியாதம்" என்று சொல்லி இருப்பதால் இங்கு அக்கினி பதத்திற்கு பரமாத்மா என்றே கொள்ளவேண்டும். இதற்கு காயத்திரி சந்தசு என ஸாமான்யமாக சொல்லப்பட்டது. காயத்திரிக்கு சாமானியமாக 24 எழுத்துக்கள் இருந்தாலும், இதில் எட்டு விதங்களுண்டு. அதில் தேவிகாயத்திரிக்கு ஏகாக்ஷரம் இதைப்பற்றியே ரிக்வேதிகள் ரிஷிபிரஹ்மம் பிரணவஸ்ய பரமேஷ்டி பிரஜாபதி: சந்தஸ தேவிகாயத்திரி, பிரம்மமே தேவதை என்று சொல்லுகிறார்கள்.

இந்த மந்திரத்தின் பொருள், சந்தசு முதலானதுகள் சுருதியிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில்,

"ஓமித்யேகாக்ஷரம் பிரம்ஹ அக்னிர்தேவதா பிரஹ்ம இத்யார்ஷம் காயத்ரிசந்தம் பரமாத்மம் ஸ்வரூபம் சாயுஜ்யம் விநியோகம்" என்றால், ஓம் என்றால் ஏகாக்ஷரம் - பிரஹ்ம வாசகம் பரமாத்மா தேவதை பரமாத்மாவே ரிஷி - காயத்திரியே சந்தசு இந்த மந்திரத்தை - உச்சரிப்பதின் பிரயோஜனம் பரமாத்மாவை அடைவதேயாம். ஆகவே, அவர் ஓம் என்னும் சொல்லிற்கும் விஷயர், யார் படைத்தளிக்கவல்ல பொருளோ; அவரே ஈச்வரர். அவரே பிரமம். அவரே ஓங்காரத்தினால் விளக்கப்படுகிற மஹாபுருஷர், பூமியைவிட அதிகமேலான உலகங்களில் வாழ்கிற தேவதைகள் நியதமாக அவரை ஆராதனைசெய்கின்றனர். நாம் பெருமையானதும் மேலானதுமான பதவியை விரும்பின், நாமும் அந்த தேவதைகளைப்போல அந்த விசுத்த மங்களஸ்வரூபருக்கு எப்பொழுதும் ஆதீனமாகி, அவரைப்பற்றிக்கொண்டு, அவரிடத்திலுள்ள அன்பைவிருத்திபண்ணி விகஸிக்கவும்செய்து அவரது உபாஸனையில் விருப்பமுடனிருத்தல் வேண்டும்.

தூய்மையும் எழுச்சியுமுடைய ஞானத்தினால் அந்த ஓங்காரப்பிரதிபாத்திமான பிரமத்தைத்தியானியுங்கள்; அப்பொழுது நிச்சயமாக நீங்கள் ஸம்ஸாரத்தின் அஞ்ஞானவிருளிலிருந்து நீங்குவீர்கள்; மேலும் சாந்தரும், மூப்பற்றவரும், பயமற்றவரும், சாவற்றவரும், நிரதிசயருமான பிரமத்தையடைவீர்கள்.

## (33.) கேனோபநிஷத்து

கூவது கண்டம ஊவது வாக்கியம்.

யந்மநஸா நமநுதே யெநாஹுர்மநோ மதம்
ததேவ ப்ரஹ்மத்வம் வித்திநேதம் யதித முபா
[ஸதே.

பொழிப்புரை.

பிரமஞானிகளாகிய ஆசாரியர்களுரைக்கின்றனக். எதுமனத்தினால் கருதப்படவில்லையோ, எதனால் மனது கருதப்படுகின்றதோ, அதையே கடவுளென்று நீயறியக்கடவாய்; எதை இதுவென்று உபாசிக்கின்றனரோ அது கடவுளன்று.

விசேஷ உரை.

பரிமிதப்பொருள்களையே கருத்துமுற்றும் சிந்திக்கக் கூடும். ஆனால் அது முடிவற்ற ஞானத்தையே வடிவாக உடைய பிரமத்தை எவ்விதத்தில் முற்றும் சிந்திக்கக்கூடும்? அவர் கருத்திற்கு ஒருபோதும் முற்றும் விஷயமாகமாட்டார். அந்தப்பூரணஸ்வரூபரை ஒருவரும் முற்றும் கருதிமுடியாது. ஆனால் அவர் யாவற்றையும் தன் கருத்திற்கு விஷயமாக்கிக்கொள்ள வல்லார். அவர் நமது எல்லாக் கருத்திற்கும் எல்லா விருப்பத்திற்கும், எல்லாச்செய்கைகளுக்கும் சாக்ஷியாகவிருப்பவர்.

WHOM the mind conceiveth not, but by WHOM, they say, mind is concaived. HE is GOD, know HIM. HE is not any finite object they worship believing, "THIS IS GOD.

## (34.) முண்டகோபநிஷத்து

௩-வது முண்டகம் க-வது கண்டம் அ-வது வாக்கியம்,

நசக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா
நாந்யைர்தேவை ஸ்தபஸா கர்மணாவா;
ஜ்ஞான ப்ரஸாதேந விஶுத்த ஸத்வஸ்தத
ஸ்துதம் பஶ்யதே நிஷ்களம் த்யாயமாநஃ

பொழிப்புரை.

அவர் கண்ணுக்குப் புலப்படார், வாக்குக்கெட்டார். மேலும் வேறு பொறிகளாலும் சிந்திக்கப்படார், தபஸினாலும் வேள்வி முதலிய கருமங்களினாலும் அவரையடையக்கூடா, ஞானத்தினது பயனால் தூய்மையான உள்ளமுடையவர். தியானித்துக்கொண்டே நிரவயவமான அவரை அடைகின்றனர்.

விசேஷ உரை.

*ஞானத்தைக் கருதுவதாலும் தருமத்தை அநுட்டிப்பதாலும் உள்ளம் தூய்மையாயின் அவரை நம்முள்ளத்திலேயே நேராகப் பார்க்கப்பெறுவோம், வேள்விமுதலிய வீண் விரதங்களை யனுட்டித்தல் உணவில்லாமல் தீயினிடையே இருத்தல் முதலிய தவங்களிபற்றுதல் இவற்றினால் அவரை அடையப்போகாது. இப்படிப்பட்ட வழிகள் யாவும் அவரை அடைவதற்குரிய வழிகளன்று. ஞானமாகிய வழியே அவரை அடையும் வழி.*

HIM neither eye reacheth, nor speech, not the otheroenses, nor rites, nor austerities. Only the mind, purified by the grace of wisdom, seeth HIM the formless in mood Meditative.

---

## (35) நாராயணம் முதல் அநுவாகம்

கூ-வது வாக்கியம்.

நைநமூர்த்வம் நதிர்யஞ்சம் நமத்யே பரிஜக்ரபத்;
நதஸ்யப்ரதிமா அஸ்தியஸ்ய நாமமஹத்யச:

பொழிப்புரை.

மேலுலகத்திலும், பக்கமாகிய லோகத்திலும், இடையிலுள்ள லோகத்திலும் இவரைக்கிரகித்து முடியாது. இவருக்குப் பிர

விசேஷ உரை.

மிக உயர்வான மாநஸிக விருத்திகளுடன்கூடிய சிறந்த உயிர்களும், கரையற்ற ஞானக்கடலும், அழிவற்ற தன்மையையுமே வடிவாக உடையவரும் ஆகிய அவரது பெருந்தன்மையை, அளவுபடுத்தியறிய யாரும் சக்தரல்லர்; அவருக்குப் பிரதிமையில்லை, அவருக்கு ஒப்பும் இல்லை, அவரைப்போன்றிருக்கிற ஒருபொருளுங்கிடையாது, சூரியபிம்பத்தினது ஒளி அவரது ஒளிக்கு எவ்விதத்திலும் இணையாகமாட்டாது, வைரத்தினது பலம் அவரது பலத்திற்கு சிறிதும் ஒப்பாகமாட்டாது, தாய்தந்தையரது உண்மையான நட்பும், உள்ளங்கலந்த நேயர்களினது ஸ்வப்பிரஜோனமற்ற அன்பும், கற்புடைய மங்கையரது தூய்மையான பிரேமையும், அவரது நல்ல தனமையின் நிழல்மாத்திரமாக விருக்கிறது. அவருக்கு உடலில்லை; அவர் உடலேபடைப்பவர், அவர் சிற்றறிவினரன்று; சிற்றறிவினரை உண்டுபண்ணுகிறவர் அவரது புகழ் ஆகாயத்தைப்போல எங்கும் வியாபித்திருக்கின்றது. அவரது மகிமை மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலுமுள்ள ஒவ்வொரு அணுவிலும் மிகவும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. ஆனதால் அவர் பெயர் பெரும்புகழினர்.

HIM none among the inhabitants of worlds higher, middle, or lateral, comprehendeth, HE has no *image* whose name is the "*All—renowned.*"

---

## (36) சாந்தோக்கிய உபநிஷத்து

அ-வது பிரபாடகம் – ச-வது கண்டம் - க-வது வாக்கியம்.

ஆகாசோவை நாம நாமரூபயோ நிர்வஹிதா;
தேயதந்தரா தத்ப்ரஹ்மத தம்ருதம்.

பொழிப்புரை.

பிரமத்தின்பெயர் ஆகாயம். அவர், பெயரும், உருவமுமுடைய பொருள்களினுடைய நிர்வாககர். பெயரும் உருவமுமுள்ள பொருள்களைக்காட்டிலும் வேறானவர் யாரோ, அவர் பிரமம். அவர் அழிவற்றவர்.

விசேஷ உரை.

பரமாத்துமாவுக்கு எப்படி எவ்வித ரூபமும் கிடையாதோ, அது போலவே அவருக்கு எவ்வித பெயரும் கிடையாது ; ஆயினும், அவரது அநந்த கல்லியாண குணகர்மங்களைக்கருதி அவரை அநந்தமான பெயர்களால் பிரஜைகள் புகழ்ந்து பிரார்த்தித்து வருகிறார்கள். உண்மை இப்படியிருக்க;

இந்நாட்டு ஆதி ஆரியர்கள் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களைப் பரமாத்துமாவாக பூஜித்துவந்தார்களென்றும்; பிறகு பலகாலஞ் சென்றதன் மேல், பரமாத்துமாவின் யதார்த்த சொரூபத்தையறிந்து கொண்டார்களென்றும் அநேகர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

மேலும் ஆரியர்கள் பலதெய்வங்களைப் பூஜித்தவர்களென்றும், வெகுகாலங்களுக்குப்பின்பு உபநிஷத்துக்களில் ஏகேசுவர பதத்தைக்கற்பித்தார்களென்றும் எண்ணுகின்றார்கள்; இப்படி எண்ணுதலுக்கு வேத ஆராய்ச்சி இல்லாமை காரணமேயாம். ஆதிதொடங்கி ஆரியர்கள் நாமரூப ரகிதமான பரம்பொருள் ஒன்றையே உபாசித்துவந்தார்களென்று, வேதங்களில் தோத்திரக்கப்படும் இந்திரன், மித்திரன், வருணன் முதலியவர்களெல்லாம் அந்தப் பரமாத்துமாவைத்தவிர வேறு தெய்வங்களல்லவென்றும், அப்பரமாத்மாவுக்கே அப்பெயர்கள் வழங்கிவந்தார்களென்றும் ஸ்பஷ்டமாகும்— திருஷ்டாந்தமாக:—

ருக்வேதம் 1 - 6 - 189 - ல்

சன்னோமித்ரஃ சம்வருணஃ சன்னோபவது அர்யமா, சன்ன இந்த்ரோ பிரகஸ்பதிஃ சன்னோ விஷ்ணுஃ உருக்கிரமஃ

(இதன்பொருள்) இரக்ஷகனும் சிரேஷ்டனும் நியாயகாரியாயும் சுவாமியாயும் சர்வவியாபகனும் பராக்கிரமனுமுள்ள பரமேசுவரன் நமக்கு சுகத்தைக்கொடுப்பாராக என்றும்,

ருக்குவேதம் 2 - 3 - 22 - 46 ல்

இந்ரம் மித்ரம் வருணம் அக்னிம் ஆஹு:
அதோ திவ்ய:ஸஸுபர்ணோ கருத்மான் ஏகம்
[ஏகம் ஸத்
விப்ரா பகுதாவதந்தி அக்னிம் யமம் மாதரிஷ்
[வாநயாஹு:

(இதன்பொருள்) ஈசுவரனை இந்திரனென்றும், மித்திரனென்றும், வருணனென்றும், அக்கினியென்றும் சொல்லுகிறார்கள்; மேலும், அவர் அற்புதனும் சுந்தரனும் கம்பீரனுமிருக்கிறார். அவர் ஒருவர், ஆனால் புத்திமான்கள் அவரை அக்கினியென்றும் யமனென்றும் மாதரிஷ்வாவென்றும் அநேகவிதமாய்ச் சொல்லுகின்றார்கள் என்றும்,

ருக்வேதம் 10 - 141 - 4 ல்

இந்த்ரவா பூபிரகஸ்பதிம் ஸுஹவேஹ ஹவா
[மஹே.

(இதன் பொருள்) பூஜ்ஜியனும் ஐசுவரியவானும் பலவானும் பெரியவனும் சுவாமியும் ஆகிரி பரமேசுவரனை ஸ்மரிக்கின்றோம், என்றும்,

நமோ பிரும்மணே நமஸ்தேவாயோ த்வமேவ
ப்ரத்யக்ஷம் பிரும்மாஸி.

(இதன்பொருள்) பரமேசுவரனுக்கு நமஸ்காரம். ஸர்வ சக்திமானாகிய உனக்கு நமஸ்காரம். நீயே உண்மையாக எல்லாவற்றிலும் பெரியவன் என்றும் சொல்லியிருக்கின்றன.

இத்தியாதி சுருதிகளில பரமாத்துமா ஒருவருக்கே இடப்பட்ட பலபெயர்களின் பொருள்களை அறிந்துய்யும் சக்தியற்ற சாதாரண ஜனங்கள் இப்பெயர்களால் பலதேவர்களும் தேவதைகளும் உண்டென்று மனோராச்சியம் செய்கிறார்கள் ; ஆனால்

சம்ஸ்கிருத பாஷையில் அற்புதமான சக்தியையுடைய வராய், வேதங்களுக்குப் பாஷியஞ் செய்திருக்கும் புகழுடம் பினராகிய தயாநந்த ஸரஸ்வதி சுவாமிகள் தமது சத்தியார்த் தப் பிரகாசிகையென்னும் கிரந்தத்தில், அப்பரமேசுவரனு க்கு வேதங்களில் வழங்கிவந்த ஒவ்வொரு பெயருக்கும் சொற்பொருள் இன்னதென்றும், அச்சொற்களின் பகுதிக ளையும், நிருக்தத்தில் (வேத அகராதியில்) அப்பகுதிக்குரிய அருத்தங்கள் இன்னவையென்றும், எடுத்துக்காண்பித் திரு க்கிறார். அதன் கருத்தை அடியில் எழுதுகின்றோம்

## ஆரியர் வேதத்தில் பரமாத்துமாவுக்கு வழங்கும் பலபெயர்களின் விவரம்.

1. விராட்டு, என்றால்=அநேக விதமாக, ஜகத்தைச் செய்பவன்.

2. அக்கினி, என்றால்=ஞானஸ்வரூபனாயும், சர்வக்ஞ னாயும் அடைவதற்கும், அறிவதற்கும், பூஜிப்பதற்கும் தக் கவனாயிருப்பவன்.

3. விசுவன், என்றால்=ஆகாசாதி பூதங்கள் யாரிடத் திலிருந்து பிரவேசிக்கின்றனவோ அவன்.

4. ஹிரண்யகர்ப்பன் என்றால்=சூரியன் முதலியதேஜ ஸுக்களை கர்ப்பத்திலுடையவன்.

5. வாயு, என்றால்=சராசரமான ஜகத்தைப் பிரளயம் செய்பவன் அல்லது தாங்கிக்கொண்டிருப்பவன்; பலவானு க்கெல்லாம் பலவான்.

6. தைஜஸன் என்றால்=தனக்குத்தானே பிரகாச முள்ளவன்; சூரியாதி தேஜஸுக்களைப் பிரகாசிக்கச் செய் பவன்.

7. ஈசுவரன் என்றால்=சத்தியம், ஞானம் முதலியஸம ஸ்த ஐசுவரியத்தையு முடையவன். ஆளுபவன், அரசன்.

8. ஆதித்தன், என்றால்=நசமில்லாதன்.

9. பிராக்கியன், என்றால்=ஞானி; ஞானிகளுக்கெல்லாம் சிரேஷ்டன். எல்லாப்பொருள்களையும் உள்ளபடி அறிகிறவன்.

10. மித்திரன், என்றால்=எல்லாருக்கும் நண்பன்.

11. வருணன், என்றால்=சிஷ்டர்களையும் முமுட்சுக்களையும், தருமாத்துமாக்களையும் ஸ்வீகரிப்பவன்; சிரேஷ்டர்கள் அடையத்தக்கவன்; சிரேஷ்டன்.

12. அரியமா, என்றால்=எல்லாருடையகருமங்களின் உண்மையான வியவஸ்தையை அறிந்து, பாபிகளுக்கும்புண்ணியர்களுக்கும் பலன்களை நியமிப்பவன்.

13. இந்திரன், என்றால்=எல்லா ஐசுவரியத்தோடுங் கூடினவன்.

14. பிரகஸ்பதி, என்றால்=எல்லாரினும் பெரியவனும், ஆகாசாதிகளுக்கும் பிரம்மாதிகளுக்கும் குருவாயும் அதிபதியாயும் இருப்பவன்.

15. பிரஜாபதி, என்றால்=சமஸ்தப் பிராணிகளுக்கும் யஜமானன்.

16. விஷ்ணு, என்றால்=சராசரமாகிய ஜகத்தெல்லாம் வியாபித்திருப்பவன்.

17. உருக்கிரமன், என்றால்=மிகுந்த பராக்கிரமத்தையுடையவன்.

18. பிரம்மா, என்றால்=எல்லாவற்றினும் பிரகாசித்துக்கொண்டு எல்லாவற்றிற்கும் பெரியவனாயிருப்பவன்.

19. குபேரன், என்றால்=ஆகாசாதிகளுக்கு ஆச்சாதிகன்.

20. ஆத்மா, என்றால்=எல்லா ஜகத்திலும் வியாபித்திருப்பவன்.

21. பரமாத்மா வென்றால்=ஜீவாத்மாக்களிலெல்லாம் சிரேஷ்டன்.

22. பரமேசுவரன், என்றால்=ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரன். ஐசுவரியத்தை யுடையவர்களெல்லாரிலும் உயர்ந்தவன்.

23. ஸவிதா, என்றால்=சமஸ்தமான ஜகத்தையும் உற்பத்திபண்ணுகிறவன்.

## தேவன் என்னும் பதத்தின்பொருள்.

24. தேவன் என்றால் (1) ஸ்வயம் பிரகாசனாய், எல்லா ஜகத்தையும் ஜீவிக்கச் செய்கிறவன். (2) தனது ஆனந்தத்தில் கிரீடிக்கிறவன் அல்லது ஜகத்தைக் கிரீடையாகச் சிருஷ்டித்தவன். அல்லது ஜகத்தின் கிரீடைக்கு ஆதாரமாயிருப்பவன். (3) எல்லாரையும் ஜயிப்பவன்; யாராலும் ஜயிக்கப்படாதவன். (4) பாபபுண்ணியவியவகாரங்களை உபதேசிக்கின்றவன். (5) எல்லாப் பிரகாசத்துக்கும் ஆதாரனாயிருப்பவன். (6) எல்லாராலும் துதிக்கப்படத்தக்கவன். (7) ஆநந்தஸ்வரூபனாய் எல்லாரையும் ஆனந்திப்பிப்பவன். (8) சந்தோஷிப்பவன். (9) பிரளயத்தில் எல்லாரையும் அவ்வியக்கத்தில் ஒடுக்குபவன். (10) சர்வாபீஷ்டங்களும் நிறைந்தவனாய் சிஷ்டர்களால் விரும்பப்பட தகுந்தவன். (11) எல்லோரையும் அடைந்து எல்லோராலும் அடையவும் அறியவும் தக்கவன்.

## பஞ்சபூத தேவதையின் பொருள்.

25 பிருதிவி, என்றால்=ஆகாசதிகளிலெல்லாம் விஸ்தரித்திருப்பவன்.

26. ஜலம், என்றால் அவ்வியக்தத்தினின்றும் பரமாணுக்களை ஒன்றொன்றாய் சேர்க்கவும்; பிரளயத்தில் அவைகளைப்பிரிக்கவும சக்தியுள்ளவன். அல்லது ஜ=என்பதினால் எல்லரவற்றையும் உண்டாக்குபவன்; ல=என்பதினால் எல்லாவற்றையும் தாங்குபவன்.

27. ஆகாசம், என்றால்=எல்லாவிடத்திலும், எக்காலத்திலும், எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவன்.

28. அன்னம், என்றால்=சராசரமான ஜகத்தைப் பட்சித்து ஜீரணிப்பவன்.

29. அன்னாதன், என்றால்=சராசரமான ஜகத்தைக் கிரகிப்பவன். அத்தா என்பதற்கும் அதே பொருள்.

30. வசு என்றால்=ஆகாசாதி பூதங்கள் வசிப்பதற்கு இடமானவன்; எல்லாப் பூதங்களிலும் வசிப்பவன்.

31. ருத்திரன், என்றால்=துஷ்ட காரியங்களைச் செய்பவர்களை அழச்செய்பவன்.

## சந்தியாவந்தன தேவதையின் பொருள்.

32. நாராயணன், என்றால்=எல்லாப் பிராணிகளும் வசிக்கும் ஸ்தானம். எவனிடமிருந்து எல்லாப்பிராணிகளும் ஜனிக்கின்றனவோ; ஜனித்தவை, மறுபடியும் எவனைநாடிச் சேருகின்றனவோ அவனே நாராயணன்.

33. கேசவன், என்றால்=பிரவதிக சுகத்தைவஹிக்கப் பட்டவன்.

34. மாதவன், என்றால்=ஞானத்திற்குப் பிரபுவானவன்.

35. கோவிந்தன், என்றால்=வாக்கினால் ஸ்தோத்திரிக்கப்படுவன் அல்லது ஜீவகோடிகளாகிய பசுக்களைப் பாது காப்பவன்.

36. மதுஸூதனன், என்றால்=ஞானத்தினால் பக்தர்களுடைய கர்மபலாபேக்ஷையை போக்குபவன்.

37. திரிவிக்கிரமன், என்றால்=மூன்று லோகங்களிலும் வியாபித்திருப்பவன்.

38. வாமனன், என்றால்=மங்களஸ்வரூபத்தினால் பிரகாசிப்பவன்.

39. ஸ்ரீதரன், என்றால்=ஸர்வ ஸம்பத்துகளையும் தரித்துக்கொண்டிருப்பவன்.

40. ஹிருஷிகேசன், என்றால் = இந்திரியங்களுக்கு பிரபுவானவன்.

41. பத்மநாபன், என்றால்=ஸர்வ ஜகத்காரண சம்பன்னன்.

42. தாமோதரன், என்றால் = சர்வலோகங்களையும் தனக்குள்ளாக உடையவன்.

43. ஸங்கர்ஷணன், என்றால்=ஸர்வ ஜீவர்களையும் ஆகர்ஷிப்பவன்.

44. வாசுதேவன், என்றால்=ஸர்வ பூதங்களையும் தனக்குள்ளும். தான் ஸர்வபூதங்களுமாக இருப்பவன்.

45. பிரத்யும்னன், என்றால்=அத்தியந்தப் பிரகாச சம்பன்னன்.

46. அநிருத்தன், என்றால்=பக்தர்களால் கிரஹிக்கப் படுபவன்.

47. நரசிம்ஹன், என்றால் = பாவிகளைத் தண்டித்து ஞானிகளுக்கு மோக்ஷம் தருபவன்.

48. அச்சுதன், என்றால்=நாசரகிதமானவன்.

49. ஜநார்த்தனன், என்றால்=ஜனங்களால் புருஷார்த்தத்துக்கு வேண்டப்படத் தக்கவன்.

50. உபேந்திரன், என்றால்=பரமஐஸ்வர்யஸம்பன்னன்.

51. ஹரி, என்றால் = பக்தர்களுடைய பாவங்களைப் போக்கப்பட்டவன்.

## நவக்கிரஹ தேவதையின் பொருள்.

52. சூரியன், என்றால் = சராசரமான ஜகத்துக்கு ஆத்மா.

53. சந்திரன், என்றால்=ஜீவர்களையும் முக்தர்களையும் ஆநந்திப்பிக்கின்றவன்.

54. மங்களன், என்றால்=தான் சுபரூபனாகி எல்லாருக்கும் சுபத்தைக் கொடுப்பவன்.

55. புதன், என்றால்=தான் ஞான (அறிவு) சொரூபனாய் எல்லாருக்கும் அறிவைத்தரக் காரணனாயிருப்பவன்.

56. சுக்கிரன், என்றால்=தான் பரிசுத்தனாகி எல்லாரையும் பரிசுத்தப் படுத்துகிறவன்.

57. சனீசுவரன், என்றால்=தான் தைரியவானாகி உலகத்தின் தைரியத்துக்குக் காரணனாயிருப்பவன்.

58. ராகு, என்றால்=ஏகாந்த சொரூபனாகி எதனுடனும் சேராமல் துறவிகளின் துறவுக்குக் காரணனா யிருப்பவன்.

59. கேது, என்றால்=ஜகத்துக்கு வாசஸ்தானமாகி ரோக ரகிதனாய், முமுட்சுக்களின் ஜனன மரணங்களை நாசப் படுத்துவன்.

## யாகயக்கிய தேவதையின் பெயர்.

60. யக்கியன், என்றால்=பிரம்மாதிகளாலும் பூஜிக்கப்படுகிறவன். யக்கியமென்பது விஷ்ணுவுக்குப் பெயர். விஷ்ணுவென்றால் வியாபகன்; ஆகையால் யக்கியனென்றால் வியாப்பியனென்றும பொருள்.

61. ஹோமன், என்றால்=கொடுக்கவும் வாங்கவும்தக்கவன், உபதேசத்தைக் கொடுப்பதிலும் பக்தியைக் கிரகிப்பதிலும் பரமேசுவரனைவிட உத்தமனில்லையாகையால்; அவனுக்கு ஹோமனென்ற பெயர் வழங்கியது.

62. பந்து, என்றால்=எல்லா உலகங்களையும் ஆக்கினையால் கட்டித் தத்தம் மார்க்கங்களில் சுற்றும்படி நடத்துபவன், உறவினரைப்போல உலகங்கள் ஒன்றுக்கொன்று சகாயகாரியாயிருக்கச் செய்பவன்.

63. பிதா என்றால்=பிரஜைகளைத் தகப்பனைப்போலக் கிருபையுடனும் பிரீதியுடனும் இரட்சிப்பவன்.

64. மாதா, என்றால்=தாயைப்போலப் பிரஜைகளை அபிமானித்து அத்தியந்தம் பிரீதியும் கிருபையும் செய்பவன்.

## தத்துவசாஸ்திரங்களில் வழங்கும் பெயர்கள்.

65. சத்தியன், என்றால்=நித்தியனும் அழிவற்றவனுமாயிருப்பவன்.

66. ஞானன், என்றால்=முக்காலத்தையும் அறிந்தவன்.

67. அநந்தன், என்றால்=தேசகாலவஸ்துக்களால் அபரிச்சின்னன். அகண்டமானவன்.

68. ஆநந்தன், என்றால்=எல்லாம் நிறைந்தவனாய், சந்தோஷ சித்தனாய் முமுட்சுக்களுக்கு நித்தியாநந்தத்தைக் கொடுப்பவன்.

69. சச்சிதானந்தன், என்றால்=சத்தியசொரூபன், ஞானசொரூபன், ஆநந்த சொரூபன்.

70. சுத்தன், என்றால்=தான் சுத்தனாகி, ஜீவர்களின் எல்லாக் குற்றங்களையும் நீக்குபவன்.

71. புத்தன், என்றால்=அறிவுக்கு எல்லையா யிருப்பவன்.

72. முக்தன், என்றால்=தான் முக்தனாகி எல்லாருக்கும் முக்தியைக் கொடுப்பவன்.

73. நித்தியன், என்றால்=என்று முள்ளவன், எவராலும் உண்டாக்கப்படாதவன்.

74. கணேசன், என்றால்=அண்டங்களின் கூட்டங்களுக்கெல்லாம் ஈசன்.

75. விசுவேசுவரன், என்றால்=ஜகத்துக்கெல்லாம் ஈசுவரன்.

76. கூடஸ்தன், என்றால்=யாரிடத்தில் எல்லா வியவகாரங்களும் உண்டாகின்றனவோ, எவன் எல்லா வியவகாரங்களிலும் வியாப்தனாகி அவைகளுக்கு ஆதாரனாயிருக்கின்றானோ எவனுடைய சொரூபத்தில் எவ்வித விகாரமுமில்லையோ அவன்,

## புராண இதிகாச தேவதையின் பொருள்.

77. சக்தி, என்றால்=எல்லாப் பதார்த்தங்களையும் ரசிக்கும் சக்தியுள்ளவன்.

78. லட்சுமி, என்றால்=எல்லா உலகங்களையும் உண்டாக்கிப் பார்க்கின்றவன். ஜகத்தில் அவயவங்களை ஒன்றைப்போல மற்றொன்றில்லாதபடி படைத்துப் பிரகாசிக்கச் செய்பவன். வேதாதி சாஸ்திரங்களை ஞானிகளுடைய தரிசனத்துக்கு ஏற்றவாறு செய்திருப்பவன். சகல சுகங்களையும் தருபவன்.

79. ஸரஸ்வதி, என்றால்=சகலவித ஞானங்கள் விளங்கப்பெற்றவன்.

80. நியாயகாரி, என்றால் = பக்ஷபாதமற்றவன், பாப புண்ணியங்களுக்குத் தக்கபடி பலனை அளிப்பவன்.

81. தயாளு, என்றால்=அபயங்கொடுத்தல், உள்ளபடி குணதோஷங்களை அறிதல், இரட்சித்தல், துஷ்டகர்மங்களைச் செய்வோரைத் தண்டித்தல், எல்லாரிடத்திலும் பிரீதியுடன் கிருபைசெய்தல் ஆகிய குணங்களை யுடையவன்.

82. அந்தரியாமி, என்றால்=ஜகத்தின் உள்ளும்புறமும் எங்கும் வியாபித்து எல்லாவற்றையும் நியமத்தில் வைப்பவன்.

83. தருமராஜன், என்றால்=தருமத்தால் எப்போதும் பிரகாசிப்பவன், தருமத்தைப் பிரகாசிக்கச்செய்பவன்.

84. சிவன், என்றால்=எப்போதும் கல்யாண குணங்களோடு இருப்பவன்.

85. பகவான், என்றால்=ஞானவைராக்கியாதி குணங்களை நித்தியமுமுடையவன்.

86. மனு, என்றால்=ஜகத்தை அறிபவன். வேதாதி சாஸ்திரங்களாலும் சிஷ்டர்களாலும் அறியப்பட்டவன்.

87. விசுவம்பரன், என்றால்=ஜகத்தையெல்லாம் தரித்துப் போஷிப்பவன்.

88. காலன், என்றால்=ஜகத்தின் எண்ணிக்கை அளவு முதலியவற்றை உள்ளபடி அறிபவன்.

89. பிரியன், என்றால்=சிஷ்டர்களையும் முமுட்சுக்களையும் தனது ஆநந்தத்தால் சந்தோஷப்படுத்துகிறவன்.

90. சங்கரன், என்றால்=சுகத்தைக் கொடுப்பவன்.

91. சூட்சுமன், என்றால்=எல்லாவற்றிலும்பெரியவன்.

92. சுயம்பு, என்றால்=சுவயமாக இருப்பவன்.

93. மஹான், என்றால்=எல்லாவற்றிலும்பெரியவன்.

இவ்விதமாய்ப் பரமாத்மாவின் குண கர்ம சுவபாவங்களை அநுசரித்துப் பலநாமங்கள் அவருக்கு வேதங்களில் வழங்கியிருப்பதுமன்றி, பிரபஞ்ச சம்பந்தமான குணங்கள் அவரிடமில்லையென்பதை விளக்குகின்ற பல நாமங்களும் உண்டு.

அவையாவன:

94. அஜன், என்றால்=பிறப்பில்லாதவன்.

95. நிராகாரன், என்றால்=ரூபமில்லாதவன்.

96. நிரஞ்சனன், என்றால்=மாயையும் அவித்தையுமற்றவன்.

97. அத்துவிதீயன், என்றால் = ஒப்புயர்வில்லாதவன். ஸஜாதி விஜாதி ஸ்வகதபேதமற்றவன்.

98. நிர்க்குணன், என்றால்=ஜன்மம் அவித்தை ஸத்துவம் முதலிய ஜகத்தின் குணமற்றவன்.

99. நிர்ப்பயன், என்றால்=யாரிடத்திலும் பயமில்லாதவன்.

100. அநாதி, என்றால்=ஆதியற்றவன் எவற்றிற்கும் ஆதியானவன்.

101. அசிந்தியன், என்றால்=விஷயாசக்தி யுள்ளவர்களால் நினைக்கவும் அறியவும் படாதவன்.

102. அப்பிரமேயன், என்றால்=இவ்வளவு சக்தியுடையவனென்று அளவிட்டுச் சொல்லக்கூடாதவன்.

103. அப்பிரமாதி, என்றால்=பிராந்தியற்றவன்.

104. அகாயன், என்றால்=சரீரமற்றவன்.

105. அவிரணன், என்றால்=புண்ணற்றவன்.

106. அஸ்நாவிரன், என்றால் நாடிநரம்பற்றவன்.

107. அபாபனென்றால்=பாவமற்றவன் பாவனன்.

108. நிர்விகாரன் என்றால் = ஜகத்தின் பதார்த்தங்களைப்போல வளர்ச்சி தேய்வு முதலிய மாறுதலில்லாதவன். இப்படி ஒரே பரமாத்துமாவுக்கு அவரது அநந்த கலியாண குண கர்மங்களைக் கருதி ஆயிரக்கணக்கான பெயர்களிட்டு

அழைத்துவந்தார்கள். இதன் அந்தரங்கமான அருத்தத்தை அறியாதார் ஆரியர் அநேக தேவர்களையும், தேவதைகளையும் வணங்கப்பட்டவர்களென்று எண்ணுகிறார்கள். ஆகவே அதைப்பற்றி இதனடியில் கிஞ்சித்தெழுதுவோம்.

முதலாவது

தேவன் என்னும் சொல்லின் சொற்பொருளை விசாரிப்போமாகில் அது வேதங்களில் பலவிடங்களில் பல அருத்தங்களில் உபயோகப்படும் காரணம் விசிதமாகும். தேவன் என்னும் பதத்தின் பகுதிக்கு=தானங்கொடுத்தல், பிரகாசித்தல், போதித்தல், விளையாடுதல் முதலியன முக்கியமான பொருள்கள். பரமாத்துமா எல்லா உலகங்களையும் படைத்து அவைகளைப் பிராணிகோடிகளின் உபயோகத்திற்குத் தானமாகக் கொடுத்திருப்பதாலும், எல்லாவற்றையும் தனது சக்தியால் ஆதரித்து பிரகாசிக்கச்செய் திருப்பதாலும், சிருஷ்டியின் விமரிசையினாலும், அந்தரியாமித்துவத்தாலும், மனிதர்களுக்கு அவரது ஞானத்தையும், ஆக்கினைகளையும் இடைவிடாமல் போதித்துவருவதாலும், சிருஷ்டி, ஸ்திதி, சங்காராதிகளை ஒரு விளையாட்டாக நடத்திவருவதாலும் தேவனென்ற பெயர் வேதங்களில் பரமாத்துமாவுக்கு பலவிதமாக உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இப்படியிருக்க,

தேவர்கள் அல்லது தேவதைகள் என்ற பெயரை இத்தேசத்தில் இப்போது பலவாறாக வழங்கிவருகிறார்கள், வேதங்களிலும் புராணங்களிலும் இச்சொற்கள் பலவிடங்களில் காணப்படினும், இச்சொற்களின் பொருளின்னதென்பதைப் பெரும்பான்மையோர் நன்குணராமல் பலவித, பொருந்தாத பொருள்களைச் செய்துகொண்டிருப்பதனால், அன்னிய மதஸ்தர்களும் அவைகளின் சொரூபத்தை விசாரியாமலே ஆரியர்கள் பல தெய்வங்களைப பூஜிப்பவர்களென்று பழித்து வருகிறார்கள். இச்சொற்கள் வேதங்களில் வழங்கப்பட்டிருக்கும் பொருளுக்கும், புராணங்களில் வழங்கப்பட்டிருக்கும் பொருளுக்கும் வெகு வித்தியாசமுண்டு. வேதங்களில் யக்

கிய மந்திரங்களையும், யக்கிய முதலிய கருமங்களையும், தேவதைகள் என்று சொல்லியிருந்தாலும் மாதா, பிதா, ஆசாரியன், ஞானிமுதலியவர்களுக்கும் வழங்கப்படும்; பஞ்சேந்திரியங்களையும், மனம் புத்தி முதலிய அந்தக்கரணங்களையும், தேவதைகளென்றும்; சூரியன் முதலிய லோகங்களும் தேவர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்திராதிதேவர்கள் விஷயத்தில் மாத்திரம் வேதங்களில் சொல்லப்பட்டிருப்பதற்கும் புராணங்களில் சொல்லப்பட்டிருப்பதற்கும் பேதமிருப்பதாகக் காணவில்லை. திரிமூர்த்திகளென்று சொல்லப்படும் பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய பெயர்களைக்குறித்து வேதங்களில் ஒருவிதமாயும், புராணங்களில் ஒருவிதமாயும் சொல்லியிருப்பது படித்தவர்களுக்கு ஸ்பஷ்டமாகும்.

வியவகாரத்தில் சொல்லப்படும் தேவதைகள் 33-ஆவர். அவர்களின் விவரம் வசுக்கள்-8, ருத்திரர்-11, ஆதித்தர்-12, இந்திரன்-1, பிரஜாபதி-1. ஆக தேவதைகள்-33. அஷ்டவசுக்களாவன:—1-அக்கினி, 2-பிருதுவி (பூமி), 3-வாயு, 4-அந்தரிக்ஷம் (பூமிக்கும் வானத்திற்கும் இடையிலுள்ள வெளி), 5-ஆதித்தன் (சூரியன்), 6-தியௌ (வானம் அல்லது சொர்க்கம்), 7-சந்திரன், 8-நட்சத்திரம். எல்லாப் பதார்த்தங்களும் இவைகளில் வசிப்பதால் இவைகளுக்கு வசுவென்ற பெயர் வந்தது. ஏகாதசருத்திரர்களாவன:—மனிதனுடைய சரீரத்தில் வியாபித்திராநின்ற பிராண, அபான, வியான, சமான, உதான, நாக, கூர்ம, கிருகர, தேவதத்த, தனஞ்செயனென்று சொல்லப்படும் 10-வாயுக்களும் ஜீவாத்மாவுமாம். இப்பதினொன்றும் மானிடதேகத்தை விட்டுப்பிரியுங்கால் பந்துஜனங்களையெல்லாம் அழும்படி செய்வதால் இவைகளுக்கு ருத்திரரென்ற பெயர்வந்தது. துவாதச ஆதித்தர் ஆவன:—12-மாதங்கள், இவைகள் மனிதனுடைய ஆயுளைக் கிரகித்துக்கொண்டுபோவதால் இவைகளுக்கு ஆதித்தரென்ற பெயர் வழங்கியது. இந்திரனென்பது மேகத்திற்கும் அதில் உண்டாகும் இடிக்கும் பெயர். இந்திரனென்

பதற்கு ஐசுவரியத்தோடுகூடினவன் என்றுபொருள். மேகம் மழைரூபமாய் பூமியில் பிரஜைகளுக்கு ஐசுவரியத்தைக் கொடுப்பதால் மேக இடிகளுக்கு இந்திரனென்ற பெயர் வழங்கியது. பிரஜாபதி என்பது யக்கியத்திற்கும் பசுக்களுக்கும் பெயர். யக்கியத்தால் வாயு மேகம் முதலியவை சுத்தமடைந்து பிரஜைகள் இரக்ஷிக்கப்படுகிறார்கள். பசுக்களால் பிரஜைகள் சுகமாக ஜீவிக்கின்றார்கள். ஆகையால் யக்கியமும் பசுவும் பிரஜைகள் இரக்ஷிக்கப்படுவதற்குக் காரணமாயிருப்பதால் அவைகளுக்குப் பிரஜாபதி என்ற பெயர் வழங்கப்பட்டன.

இங்கு தேவர்களென்று சொல்லப்பட்ட 33-சிருஷ்டிகளும் ஈசுவரசிருஷ்டியில் அடங்கியிருந்தபோதிலும், உலக இரக்ஷணைக்கும் சுகத்துக்கும் மிகுந்தபிரயோஜனகாரிகளாக இருக்கின்றமையால் அவைகளின் குணங்களையும் கருமங்களையும் நோக்கியும், இவைகளில் ஈசுவரருடைய கருணையே குடிகொண்டிருப்பதால் இவைகளைத் தேவதைகளைப்போலப் பாவித்துக்கொண்டும்; இவைகளுடன் இவைகளுக்கு இனமானவைகளையும் கூட்டிப் பெருக்கி முப்பத்து முக்கோடி தேவதைகளாக்கி ஒட்டலங்காரமாக வர்ணித்தார்கள். இந்த வர்ணனையின் தத்துவத்தை அறியாதார், ஆரியர் முப்பத்து முக்கோடி தேவர்களை வணங்கப்பட்டவர்கள் என்று எண்ணுகிறார்கள். இம்முப்பத்துமுக்கோடி தேவதைகளாக வர்ணித்த சிருஷ்டிகள் கேவலம் பரதந்திரமும், அபூர்ணமுமான படைப்புகள். பரமாத்துமா ஒருவரே படைக்கப்படாத பூரணரும் சுதந்திரருமானவர். ஆகவே,

மனது எப்பொழுது அந்தப் பிரமத்தினது முடிவற்ற தன்மையை அனுபவிக்கின்றதோ, அப்பொழுது வாக்கு அவரை வெளியிடச்சென்று அவருக்கு ஆகாயம் என்னும் பெயரைத் தருகின்றது; உண்மையில் அவருக்கு ஒருபெயருமில்லை; மேலும், ஒரு உருவமும் இல்லை; உருவத்துடனும் பெயருடனும் கூடிய எல்லாப் பொருள்களும் அவரால் படைக்கப்பட்டு அவருடைய ஆசிரயத்தில் பாலிக்கப்படுகின்றன என்று இந்த சுருதியில் சொல்லப்பட்டது.

His name is *Omni present*, the Sustainer of all things having name and form. HE, who is different from name and form, is God. HE is Immortal.

## (37.) கேநோபநிஷத்து

*க-வது கண்டம் ரு-வது வாக்கியம்.*

*யத்வாசா நப்யுதிதம் யெநவாகப்யுத்யதே*
*ததேவ ப்ரஹ்மத்வம் வித்திநேதம் யதித முபா*
*ஸதே.*

### பொழிப்புரை.

யார் வாக்கினால் முற்றும் விளங்கப்படாரோ, யாரால் வாக்கு விளக்கப்படுகின்றதோ, அவரே பிரமமென்று நீ யறியக்கடவாய், உலகத்தார் உபாசிக்கும் பரிமிதப்பொருள்கள் ஒருபொழுதும் பிரமமன்று.

### விசேஷ உரை.

*வாக்கு வார்த்தை சொல்லும் சக்தியை யாரால் பெற்றதோ அவர் பிரமம். அவரால்தான் வாக்கு விளங்குகின்றது. ஆனால் அவர்வாக்கினால் விளக்கப்படார், உலகத்தார் இதுவென்றுநிச்சயித்து எந்தப் பரிமிதப்பொருள்களை உபாசிக்கின்றனரோ அவை அவரன்று. சிலர் நீர், காற்று, தீ, கல், மிருகம், பறவை, மரம், கொடி இவைகளை உபாசிக்கின்றனர். சிலர் சந்திரன் சூரியன் முதலிய கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் உபாசிக்கின்றனர். சிலர் தேவர்களையும் தேவிகளையும் மனதினால் கல்பனை செய்துகொண்டு அவற்றிற்கு பிரதிமூர்த்திகளைச்செய்து உபாசிக்கின்றனர்; சிலர் உலகத்தில் விசேஷசக்திபெற்றிருந்த மனிதர்களைக் கடவுளென்று நம்பி வழிபடுகின்றனர்; ஆனால் இவைகளொன்றும் கடவுளன்று. இவற்றின் வழிபாடு கடவுள் வழிபாடாகாது.*

Whom words express not, but through Whom words are expressed, He is God, know Him. He is not any finite object they worship believing this is God.

## (38.) கடோபநிஷத்து

உ-வது வல்லி கஅ-வது வாக்கியம்.

நஜாயதேம்ரியதேவா விபச்சிந்நாயம்
குதச்சிந்நபபூவகச்சித்.

### பொழிப்புரை.

இந்தப் பரமாத்துமாவுக்குப் பிறப்பில்லை, இறப்புமில்லை; இவர் எல்லா மறிந்தவர். இவர் ஒன்றிலிருந் துண்டாவதுமில்லை, ஒன்றுவதுமில்லை.

### விசேஷ உரை.

ஜனனமரணங்களாகிய விகாரங்களற்றவரும், குறைவு குற்றங்களும் இல்லாதவரும், தூய்மையுள்ளவரும், பாபமற்றவருமாகிய பரமாத்துமாவினிடத்திலிருந்து இவை யாவும் உண்டாயிற்று; ஆனால் இவைகளில் தாமொன்றுமல்லர், பால் எப்படித் தயிராகின்றதோ, மண் எப்படி வேறுருவத்தைக் கொண்டு எப்படிக்குடமாகின்றதோ, பொன்வேறு நிலையைப் பெற்று எப்படிக் குண்டலமாகின்றதோ அதுபோல அவர் ஒருபொருளாக பரிணமிக்கிறதில்லை. கயிற்றினிடத்துப் பாம்பென்னுமயக்கமும், கானலினிடத்து நீரென்னு மயக்கமும், முத்துச் சிப்பியினிடத்தில் வெள்ளியென்னு மயக்கமும் எப்படி உண்டாகிறதோ அதுபோல; கடவுளிடத்தில் ஒரு மயக்கம் நமக்குத்தோன்றி இவ்வுலகம் விளக்கத்தைப் பெற்றிருக்கிற தென்பதுமில்லை. அவர் இந்த உலகத்தையெல்லாம் படைத்தார், உலகம் பொருண்மையால் கடவுளினும் வேறானதே. அவர் அசித்துப்பொருளு மன்று, அவர் நமமால் தொழப்படத் தக்கவரும், உபாசிக்கப்படத் தக்கவருமாக இருக்கிறார். நாமனைவருமோ, அவரது சேவகர்களும், உபாசகர்களுமாக விருக்கிறோம்.

This intelligent Being is neither born nor dieth, is not form any, nor did He change Himself into any.

## (39.) கேனோபநிஷத்து

க-வது கண்டம் உ-வது வாக்கியம்.

*ஶ்ரோத்ரஸ்யஶ்ரோத்ரம் மநஸோமநோ*
*யத்வாசோஹவாசம் ஸஉப்ராணஸ்ய*
*ப்ராணச்சக்ஷுஷச்சக்ஷு.*

பொழிப்புரை.

யார் செவிக்குச் செவியும், மனதுக்கு மனதும், வாக்குக்கு வாக்குமோ அவர் பிராணனுக்குப்பிராணன், கண்ணுக்குக்கண்ணு.

விசேஷ உரை.

*பரமேசுவரனிடத்திலிருந்தே கண் காது வாக்கு மனது பிராணன் இவை அதனதன் சக்தியைப் பெறுகின்றன; மேலும், அவரை ஆதாரமாகக்கொண்டே அவை அந்த சக்திகளையெல்லாம் தனது தனது சக்தியுடன் சேர்க்கக் கூடியவையாக இருக்கின்றன; ஆனதினாற்றான், அவர் செவிக்குச் செவியென்றும், மனதிற்கு மனதென்றும், வாக்குக்கு வாக்கென்றும், கண்ணுக்குக் கண்ணென்றும் சொல்லப்பட்டார். அவர் கண்ணுக்குக் கண்ணாயினும் தானே கண்ணல்லர், காதுக்குக் காதாயினும் தானே காதல்லர், மனதிற்கு மனதாயினும் அவர் மனதல்லர், அவர் அபரிமித ஞான ஸ்வரூபி. அவர் யாவற்றிற்கும் காரணர்; மேலும், ஆதாரமானவர்.*

He is the Ear of ear, the Mind of mind, the Speech of speech, the Life of life, the Eye of eye.

---

## (40.) சுவேதாஸ்வதரம்

சு-வது அத்தியாயம் அ-வது வாக்கியம்.

*நதஸ்யகார்யம் கரணஞ்ச வித்யதே*
*நதத்ஸமச்சாப்யதிகச்சத்ருஶ்யதே*
*பராஸ்ய ஶக்திர் விவிதைவஶ்ரூயதே*
*ஸ்வபாவிகி ஜ்ஞாந பலக்ரியாச.*

பொழிப்புரை.

அவருக்கு உடலுமில்லை பொறியுமில்லை; மேலும், அவருக்கு ஒப்பானவரும் மேலானவரும் காணப்படார்; விசித்திரமும் சிறந்ததுமான அவரது வல்லமை எங்கும் கேள்விப்படுகின்றது. அவரது ஞானமும் வல்லமையுமான செய்கைகள் இயற்கையானவை.

விசேஷ உரை.

உடல் ஒருயந்திர விசேஷம்; ஒருவிசேஷமாகிய வேலை; பரமேசுவரர் உடலாகிய ஒரு யந்திரமன்று; உடலைப்போன்ற யந்திரத்தில் கட்டுப்பட்டவரன்று, அவர் யாருடைய காரியமுமன்று. யாவும் அவருடைய காரியமே, அவர் ஒன்றாகிய காரணஸ்வரூபர்; அவருக்கு உடலில்லை, பொறியில்லை, ஆனால் அவர் யாவற்றையும் பார்க்கிறார், அறிகிறார். அவர் ஒருவரே யாவற்றிலும் மேலானவர், அவருக்கு ஒப்பானவர் ஒருவருமில்லை, அவருக்கு மேலானவருமில்லை. அவர் யாவற்றையும் சிருஷ்டித்தவர், எல்லாப் பொருள்களும் அவரது படைப்பு, அவர் இவ்வுலகமாகிய பேரரசுக்கு அரசன், யாவரும் அவரது குடிகள். அவர் நமது சிறந்த தந்தை, நாமனைவரும் அவரது குழந்தைகள், அவர் நமது தலைவர், நாம் அவரது கட்டளைக்குட்பட்ட வேலைக்காரர்கள். யாவும் அவரது நியமத்திற்குட்பட்டிருக்கின்றன; அவரது நியமப்படி உண்டாகி அவரது நியமப்படி அழிகின்றன. ககோளத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற ககோள ஞானமுடையவரென்ன, பூமியினது கருப்பத்திற்குள்ளிருப்பதைத் தேடியறிகிற பூதத்துவவேத்தை என்ன, உடலினது நியமங்களை நிரூபிக்கும் சாரீரிகவிதானவேத்தை என்ன, அசித்துப் பொருள்களினது தத்துவங்களை நிர்ணயிக்கும் அசித்துப்பொருள் நூலில் வல்ல பண்டிதர்களென்ன, ஆத்துமதத்துவத்தைப் பரிசீலிக்கும் நுண்ணிய அறிவுள்ள புத்திமான்களது கூட்டமென்ன, யாவரும் அவரது வியப்பான கருதி முடியாத வல்லமையையே கோஷிக்கின்றனர். அவர்கள் யாவரிடத்திலுமிருந்தே அவரது மேன்மையான வல்லமையின் விரிவுள்ள வர்ணனை எங்கும் கேள்விப்படுகின்றது.

நாம் எப்படிப் பொறிவழியாக ஒன்றையறிந்து சிறுகச் சிறுகப் புத்தியுக்திகளால் பரம்பரைக்கிரமத்தில் ஒவ்வொரு விஷயத்தை ஆராய்கிறேமோ அதுபோலவன்று அவரது பலமென்னும் செய்கை. அவர் இயற்கையாகவே தமது மகிமையால் யாவற்றையு மறிகிறார், மேலும் அவர் தமது ஒரு நினைப்பாகிய பலத்தினால் தமது நல்நோக்கங்களை முடிப்பிக்கிறார். ஒரு விஷயத்தை யறிவதற்காகப் பொறிகள் முதலிய வேறொன்றின் துணை அவருக்கு வேண்டியதில்லை. மேலும் தமது வல்லமையை விளங்கச்செய்யவும் அவருக்கு வேறொரு உபகரணமும் அவசியமில்லை. அவரது ஞானக்கிரியையும், பலக்கிரியையும் இயற்கையானவை. யாரிடத்திலிருந்து ஞானத்துடன்கூடிய இவ்வெண்ணிறந்த உயிர்கள் உண்டாகின்றனவோ, அவரது ஞானம் எவ்வளவு வியக்கத்தக்கது; மேலும் யாரிடத்திலிருந்து இப்பொருள்களெல்லாம் உண்டாகி அததற்குரிய வல்லமையைப் பெறுகின்றனவோ, அவரது வல்லமை எவ்வளவு பெருமையுடையது.

He has neither body nor senses; His equal or superior is not to be seen. His power pre-eminent and manifold is every where to be heard of? All His might and wisdom are self-derived.

---

## (41.) சுவேதாசுவதர உபநிஷத்து

கூ—வது அத்தியாயம் கூ-வது வாக்கியம்.

நதஸ்ய கச்சித் பதிரஸ்திலோகே
நசேசிதா நைவச தஸ்யலிங்கம்;
ஸகாரணம் கரணாதிபாதிபோநசாஸ்ய
கச்சிஜ்ஜநிதா நசாதிப:

போழிப்புரை.

உலகத்தில் அவருக்கு யாதொரு தலைவருமில்லை, நியந்தாவுமில்லை. அவருக்கோரு அவயமும் இல்லை. அவர் யாவற்றிற்கும் காரணர். மனதிற்குத்தலைவர். அவரைப்பெற்றோருமில்லை. அவருக்கதிபதியுமில்லை.

விசேஷ உரை.

*அவர் நித்தியர், நிரவயவர், ஸ்வதந்திரர், பிறப்பற்றவர், மிகப்பெருமையான ஆத்மா; ஆகவே, அவர் பல அவதாரங்கள் எடுத்ததாகவும், அவருக்குத் தாய்தந்தை, சகோதரர், மனைவிமக்கள் இருந்ததாகவும்; பரதந்திரமும் அபூரணமுமான மானவஜாதியாரைப்போலச் சுகதுக்கங்களை அனுபவித்ததாகவும் எண்ண இடமில்லை, அப்படி எண்ணுவது வேதவிரோதமாகும்.*

He is formless and has no master in these worlds, no governor. He is the Cause, He is the Lord of the soul. He has no progenitor, no sovereign.

---

## (42.) சுவேதாசுவதர உபநிஷத்து

*ரு-வது அத்தியாயம் அ-வது வாக்கியம்.*

*ஸர்வா திஸஊர்த்வமதச்சதிர்யக்*
*ப்ரகாசயன் ப்ராஜதே யத்வநத்வாந்;*
*ஏவம் ஸதேவோ பகவான் வரேண்யோ*
*ஸ்வபாவாநதிஷ்டத்யேக: [யோநிঃ*

பொழிப்புரை.

சூரியபிம்பம் மேலுங்கீழும் பக்கத்திலும் எல்லாவிடங்களையும் பிரகாசித்துக் கொண்டே விளங்குகிறதோ, அதுபோலவே ஞான ஒளியையே இயற்கையாக உடையவரும் ஐசுவரியத்தோடு கூடியவரும், தொழத்தக்கவரும், யாவற்றிற்குங் காரணருமானவர் விளங்குகிறர். ஒருவராகவிருந்தும் அவர் எல்லாப் பூதங்களினது இயற்கைகளையும் நியமிக்கிறர்.

விசேஷ உரை.

*சூரியபிம்பம் எப்படி யாவற்றையும் விளக்கிக்கொண்டு தானும் விளங்குகிறதோ, அத்துவிதீயராகிய பரமேசுவரரும் அதுபோல அவருடையதாகிய இப்படைப்புக்கிடையில் விளங்குகிறர். இவரைப்பிரகாசிக்கச் செய்பவரும் ஒருவரில்லை; அவர் ஸ்வயம்பு, அவர் தாமாக விளங்குகிறவர். அவர் காற்றினிடத்தில் ஒலியையும், தீயினிடத்தில் சுடுகையையும், நீரி*

னிடத்தில் தண்மையையும், வைரத்தினிடத்தில் வன்மையை யும், பாதத்தினிடத்தில் நடக்குந்தன்மையையும், எல்லாப் பூதங்களிடத்தும் அவற்றின் ஸ்வபாவங்கள் யாவையும் நிய மித்திருக்கிறார்.

As the sun shineth displaying all regions upper, middle, and lateral, even so manifest is the Being Divine, the Lord of all riches, Adorable, and the Origin of all. He alone regulateth all natures.

---

## (43.) கேனோபநிஷத்து

க-வது கண்டம் ௩-௪-வது வாக்கியங்களில்.

நதத்ர சக்ஷுர்கச்சதி நவாக்கச்சதிநோமநோந
வித்மோநவிஜாநீமோயதைதத நுஸிஷ்யத்
அந்யதேவ தத்விதிதாததோ அவிதிதாததி ;
இதிஸுச்ரும பூர்வேஷாம் யேநஸ்தத்வ்யயாச
சக்ஷிரே॰

### மொழிப்புரை.

அவர் கண்ணுக்கும் வாக்குக்கும் மனதிற்கும் விஷயமாகார். அவரைப்பற்றி நமக்கொன்றும் விசேஷமாகத்தெரியாது ; அவ ரைப்பற்றி இவ்விதமாக உபதேசிக்கின்றதென்றுந்தெரியவில்லை. அவர் தெரிந்த பொருளுக்கும் தெரியாதபொருளுக்கும் வேறானவ ராக விருக்கிறார். பிரமவிஷயமாக நமக்கு உபதேசித்த பூர்வ ஆசாரியர்களால் இவ்விதமாகக் கேள்வியுற்றோம்.

### விசேஷ உரை.

யார் கண்ணுக்குக்கண்ணாயிருந்தும் கண்ணுக்குப்புலப் படாரோ, மனதிற்கு மனதாக விருந்தும் மனதினால் கவரப் படாரோ, அவர் விஷயமாக அவர் நம்மா லறியப்பட்டபொ ருள் அறியப்படாப்பொருள் யாவற்றிற்கும் வேறானவரெ ன்று மாத்திரந்தான் உபதேசஞ் செய்யலாம் ; நமக்கெத் தனை பொருள்கள் விசேஷமாகத் தெரிந்திருக்கின்றனவோ அவற்றில் ஒன்றும் அவரன்று. மேலும் எத்தனை பரிமித மான படைப்புப்பொருள்கள் நமக்குத் தெரியாமலிருக்கின்

றனவோ அவற்றிலும் அவரொன்றுமல்லர். அவர் அறியப்பட்டவும் அவர் அறியப்படாதவுமாகிய எல்லாப் பரிமிதப் பொருள்களையும் படைத்தவர், அவற்றிற்கு ஆதாரத்தைத் தந்தவர், அவற்றை நிர்வகிப்பவர், யாவற்றிற்கும் உள்ளேயிருப்பவர் யாவற்றிற்கும் வேறானவர், ஸ்வதந்திரர். முன்னோராகிய ஆசாரியர்களுடைய உபதேசமும் இதுதான்.

Him, neither eye reacheth nor speech, nor mind. We know Him not, therefore we know not how to teach His nature to others. He is apart from known as well as from unknown objects. This we have heard from them of days gone by who explained Him to us.

## (44). பிரஹதாரணிய உபநிஷத்து

௬-வது அத்தியாயம் ௪-வது பிராம்மணம்

௨௨-வது வாக்கியம்.

ஸஏஷநேதி நேத்யாத்மா க்ருஹ்யோ
நஹிக்ருஹ்யதே.

### பொழிப்புரை.

அப்பரமாத்துமாவை இதுவன்று இதுவன்று என்று நிர்த்தே-
சித்தல் வேண்டும். அவர் ஒரு இந்திரியத்தினாலும் கிரகிக்கப்படத் தக்கவரன்று. அவர் ஒரு இந்திரியத்தினாலும் கிரகிக்கப்பட மாட்டார்.

### விசேஷ உரை.

படைத்தளித்தழிக்கவல்ல பரம்பொருள் யாரோ அவர் படைப்புக்கு அப்புறப்பட்ட பொருள்; இவ்வளவுதான் அவரைப்பற்றி நிர்த்தேசிக்கலாம். கண்ணினால் எதைப்பார்க்கக்கூடுமோ கருத்தினால் எதை முற்றும் கருதக்கூடுமோ அது அவரன்று. அவர் இந்திரியத்தினாலும் மனதினாலும் கிரகிக்கப்படாதவர், கேவலம் பரிசுத்தமான ஞானத்தினால் அந்தச் சத்தியமான புருஷனைப்பார்க்கலாகும்.

Not this, not this is God. He is incomprehensible, therefore, He is not comprehended.

## (45.) பிரஹதாரணிய உபநிஷத்து

ஏ-வது அத்தியாயம் ஏ-வது பிராம்மணம் க-வதுவாக்கியம்.

ஸஏஷஸர்வஸ்யேசாந ஸர்வஸ்யாதிபதி:
ஸர்வமிதம் ப்ரசாஸ்தியதிதம் கிஞ்ச.

பொழிப்புரை.

அப்படிப்பட்ட இப்பரமாத்துமாவே யாவற்றிற்கும் நியந்தை யாவற்றிற்கும் தலைவர்; அவர் இவ்வுலகத்தில் எத்தனை பொருள்களிருக்கின்றனவோ அவையாவற்றையும் நியமத்தில் வைத்துக்கொண்டிருக்கின்றார்.

விசேஷ உரை.

*தேவர், மனிதர், விலங்கு, புள் யாவும் அவரது சாஸனத்திலேயே யிருக்கின்றன. யாரும் அவரது சாஸநத்தைக் கடக்கவல்லவரல்லர்.*

He is the Governor of all, and the Sovereign of all, He it s that ruleth all this whatever is.

---

## (46.) பிரஹதாரணிய உபநிஷத்து

ஈ-வது அத்தியாயம் ச-வது பிராம்மணம்

உ௦-வது வாக்கியம்.

ஏகதைவாநுத்ருஷ்டவ்யமே ததப்ரமேயம் த்ருவ
விரஜ:பர ஆகாசாதஜ ஆத்மாமஹான் த்ருவ:[ம்;

பொழிப்புரை.

ஒப்பற்றவரும் அழிவற்றவருமான கடவுளை ஒருவரேன்று அறியத்தக்கது. அவர் நிருமலமானவர், ஆகாயத்தைவிட சூக்ஷுமமானவர், பிறப்பற்றவர், பரமாத்துமா, பெரியவர், நித்தியமானவர்.

விசேஷ உரை.

*கடவுள் ஒருவர். மேலும் ஒப்பற்றவர்; அவரோடு ஒப்பிடத்தக்க ஒரு பொருளுமில்லை. அவர் எல்லாப்பொருள்களினும் வேறானவர். அவர் ஆகாயத்தைக் கடந்தவர். அவர் ஆகாயத்தினிடையே யிருந்து தனக்குரிய சகல காரியங்களையும் நியமனம் செய்கிறார்.*

He is to be known as the one, without parallel and true. He is pure, unborn, great, eternal, and above all space.

## (47.) சுவேதாசுவதர உபநிஷத்து

ந-ம் அத்தியாயம் கஅ-வது வாக்கியம்.

*அபாணிபாதோ ஜவநோ க்ருஹீதா*
*பச்யத்ய சக்ஷு: ஸச்ருணோத்யகர்ண:*
*ஸவேத்திவேத்யம் நசதஸ்யாஸ்திவேத்தாத*
*மாஹுரக்ரியம் புருஷம் மஹாந்தம்.*

பொழிப்புரை.

அவருக்குக் கையில்லை, ஆயினும் கிரகிக்கிறார்; அவருக்குக் காலில்லை, ஆயினும் நடக்கிறார்; அவருக்குக் கண்ணில்லை, ஆயினும் பார்க்கிறார்; அவர் அறியத்தக்க யாவையும் அறிகிறார்; ஆனால் அவரை முற்றும் அறிந்தவரில்லை; அவரையாவற்றிற்கும் முதன்மையானவரென்றும், பூரணரென்றும், பெரியவரென்றும் உரைக்கின்றனர்.

விசேஷ உரை.

*பரிமிதமாகிய இச்சிற்றுயிர்களுக்கு இருப்பதுபோல அவருக்குக் கைகால் முதலிய ஒரு அவயவமும் இல்லை; ஆனால், கைகால் முதலியவைகளினாலாகவேண்டிய தொழில்கள் அவரது கருதற்கரிய வல்லமையினால் சாதாரணமாக நிறைவேறுகின்றன.*

He runneth without feet, graspeth without hands, seeth without eye and heareth without ear. He knoweth all but none knoweth Him. They say Him to be the First of all, Perfect and Great.

## (48.) பிரஹதாரணியக உபநிஷத்து

*அத்ருஷ்டோத்ரஷ்டா ச்ருத:ச்ரோதா*
*மதோமந்தா விஜ்ஞாதோ விஜ்ஞாதா.*

பொழிப்புரை.

அவர் பார்க்கப்படாதவர், பார்ப்பவர்; அவர் கேழ்க்கப்படாதவர், கேழ்ப்பவர்; அவர் கருதப்படாதவர், கருதுகிறவர்; அவர் அறியப்படாதவர், யாவற்றையும் அறிபவர்.

விசேஷ உரை.

*பூரண புருஷனாகிய பரமேசுவரனுக்குக் கண் காது முதலிய பொறிகளும் இல்லை. ஆனால் நாம் கண் காது முதலியவைகளினால் எவற்றையறியக்கூடியவர்களாக விருக்கின்றோமோ அவ்வனைத்தையும், இந்தச் சருவஞ்ஞராகிய புருஷன் அறிகிறார்; மேலும், எவற்றை நாம் அறியவில்லையோ, அவற்றையும் அவரறிகிறார். அவர் குறைவற யாவருக்குள்ள யாவற்றையும் அறிகிறார்; ஆனால் ஒருவரும் அவரது ஸ்வரூபத்தை முற்றும் அறியவல்லவரல்வர்.*

Being himself unseen, He is the Seer; uuheard, He is the Hearer; Unconceived, He is the Conceiver ; and Unknown, He is the Knower.

---

(49.) ஈசோபநிஷத்து

ச-வது வாக்கியம்.

*அநேஜதேகம் மநஸோஜவீயோநை*
*நத்தேவா ஆப்நுவன்பூர்வமர்ஷத்;*
*தத்தாவதோந்யாநத்யேதி திஷ்ட*
*த்தஸ்மிந்நபோமாதரிஷ்வாததாதி.*

பொழிப்புரை.

கடவுள் ஒருவர். அவர் அசைபவரல்லர். மநதை விட அதிக விரைவாகச் செல்பவர். பொறிகளுக்கு முன்செல்லுகிற இக்கடவுளைப் பொறிகளிலொன்றும் அடையமாட்டாது. அவர் ஸ்திரமாக விருந்தும் விரைவாகச்செல்லுகிற மனமுதலிய பொறிகளைக்கடந்து செல்லுகிறார். காற்று அவரிடத்து இருந்துகொண்டு உயிர்களுக்கு உடல்களினது அசைவைத் தருகின்றது.

விசேஷ உரை.

*ஒருஇடத்திலிருந்துவேறொருஇடத்திற்குப் போதற்கு செல்லல் என்று பெயர். ஒன்றாகிய கடவுள் எவ்விடத்திலும் ஒரேவிதமாக நிறைந்திருக்கிறார். அவரில்லாத இடமில்லை. அதுபற்றி ஒருஇடத்தைவிட்டு வேறொருஇடத்திற்குப் போகிறாரென்று நினைக்கிறதற்கில்லை. ஆகையால் அவர் அசலர்,*

அவர் அசைவதில்லை, அவர் அசலராயிருந்தும் மனதைவிட விரைவாகச்செல்பவர்; மனது அவரை முற்றும் பற்றமாட்டாது. பொறிகளனைத்தும் அவரைக்கிரகிக்கமாட்டா. விரைவாகச்செல்லுகிற மனதும் மற்ற இந்திரியங்களனைத்தும் அவரைப்பற்றுதற்கு எவ்வளவோ முயற்சி செய்கின்றது. அவர் ஸ்திரமாக இருந்தும் இவற்றை எல்லாம் கடந்து செல்லுகிறார். காற்று உயிர்களுக்கு உடல்களினது எல்லா அசைவுகளையுந் தருகின்றது. காற்றில்லாவிடின் உடல்அதிக சிறிது காலத்திற்குள்ளாகவே ஒழுங்கற்று விழுந்துவிடும். ஆனால் காற்று இந்தச் சக்தியை யாரிடத்திலிருந்து பெற்றதோ அவரில்லாவிடின் அதுவேறு யாரிடத்திலிருந்து இந்தச் சக்தியைப்பெற்று அதன் மூலமாக உயிர்களினது உடலைக் காக்கக்கூடியதாக இருக்கிறது; அதினுற்றான் "அவரிடத்திலிருந்துகொண்டு காற்று உயிர்களுக்கு உடலினது அசைவுகளனைத்தையுந் தருகின்றது" என்று சொல்லப்பட்டது.

He, the one, moveth not, yet is He swifter than the mind. The mind with the senses reacheth Him not as He is always in advance of them. He not moving, outstrippeth them. It is through Him, air contributeth to the functious of life.

---

## (50.) ஈசோபநிஷத்து

### ரு-வது வாக்கியம்.

*ததேஜதி தந்நைஜதி தத்தூரே*
*தத்வதந்திகே, ததந்தரஸ்ய ஸர்வஸ்ய*
*தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத:*

### பொழிப்புரை.

அவர் அசைகிறார், அசையவில்லை; அவர் தூரத்திலிருக்கிறார், அவர் ஸமீபத்திலுமிருக்கிறார்; அவர் இந்த யாவற்றிற்கும் உள்ளேயிருக்கிறார், அவர் இந்த யாவற்றிற்கும் வெளியேயு மிருக்கிறார்,

### விசேஷ உரை.

உலகத்தார் வேறொரு இடத்தை அடைவதன் நிமித்தம் சென்றுகொண்டிருக்கின்றனர். அவர் எல்லாவிடங்களி

னும் வியாபித்திருப்பதனால் செல்வதினாலுண்டாகத்தக்கப யன் அவருக்கு ஒரேகாலத்தில் கிடைக்கின்றது. ஆனதால் "அவர் அசைகிறார்" என்று சொல்லப்பட்டது. அதன் பொருள் அவருக்கு அசைவதின் பயன் நிறைவேறியிருக்கிறதென்பதாம். ஆனால் உலகத்தார் எப்படி ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்கின்றனரோ அப்படி அவர் செல்வதில்லை. காரணமென்னை எனின், அவர் எங்கும் நிறைந்த வடிவமுடையவராக இருக்கிறார். அவர் நக்ஷத்திரங்கள் எவ்வளவு தூரத்திலிருக்கின்றனவோ, அவ்விடத்திலுமிருக்கிறார். அவர் கேவலம் தூரத்தில் மாத்திரமில்லை; அவர் நமக்கருகிலுமிருக்கிறார். அவர் நமக்குள்ளாக மிக அருகிலுமிருக்கிறார். அவர் நம்மெல்லோருக்குள்ளும் இருப்பதுபோலவே, நமக்கு வெளியிலுமிருக்கிறார். யாதொரு அரசன் தனது ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்துகொண்டு தனதாணையைச் செலுத்துவதுபோல, அவர் பரிமிதமாகிய ஓரிடத்திலிருப்பவரல்ல. அவர் எல்லா இடங்களிலும் ஒரேவிதமாக இருந்துகொண்டு உலகத்தைக்காத்துவருகிறார்.

He goeth, He goeth not, He is far, He is near, He is within all, He is out of all.

## (51.) சுவேதாசுவதர உபநிஷத்து

ங-வது அத்தியாயம் ௧௬-வது வாக்கியம்.

ஸர்வத:பாணிபாதந்தத்ஸர்வதோக்ஷிசிரோமுகம்;
ஸர்வத:ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்யதிஷ்
[டதி.

பொழிப்புரை.

எங்கும் அவரது கைகால்கள், எங்குமவரது கண் தலை முகம், எங்குமவரது செவி. அவருலகெல்லாம் பரவி இருக்கிறார்.

விசேஷ உரை.

அவரெங்குமிருப்பதை அறிந்து ஓ மானிடர்களாகிய எல்லோரே! நற்செய்கைபுரிதற்குள்ளக்கிளர்ச்சியுடையவர்களாகுங்கள்; மேலும் பாவத்தொழிற்புரிதற்கஞ்சுங்கள்,

Every where are His hands and feet; evey where are His eyes, head ond face; every where are His ears in the world; He existeth outspreading all.

---

(52.) கடோபநிஷத்து

ரு-வது வல்லி அ-வது வாக்கியம்.

*யயேஷஸுப்தேஷு ஜாகர்திகாமம் காமம்*
*புருஷோ நிர்மிமாண:; ததேவ சுக்ரம்*
*தத்ப்ரஹ்ம ததேவாம்ருத முச்யதே;*
*தஸ்மின் லோகாசிரிதா: ஸர்வே*
*ததுநாத்யேதி கச்சந.*

பொழிப்புரை.

எந்தப்பூரணபுருஷர் எல்லா உயிர்களும் உறங்கிக்கொண்டிருக்கையிலும், தான் விழித்துக்கொண்டிருந்து, அவைகளுக்குவேண்டிய யாவற்றையும் படைத்துக்கொண்டிருக்கின்றாரோ அவர் சுத்தர்; அவர் பிரம்மம், அவர் அழிவற்றவரென்று சொல்லப்படுகிறர். யாநும் அவரை அதிக்கிரமிக்கமாட்டார்கள்.

விசேஷ உரை.

*நாம் விழிப்புக்காலத்திலேயும் உறங்கிக்கொண்டிருக்கிறோம்; அவர் எப்பொழுதும் விழிப்பாகவேயிருந்து, நமக்குப் பலவிதமாய்ப் பயன்படத்தக்க யாவற்றையும் பகர்ந்து தருகிறார். நாம், நமக்கு நன்மையானதை முடிக்கும் உழைப்பில் வெறுப்படையும் காலத்தும் அவர் வெறுப்படைவதில்லை. அவர் நமக்கு ஓய்வில்லாமல் நன்மையைச் செய்துகொண்டேயிருக்கிறார்.*

He, the Perfect who, while they sleep, is awoke with rearing up object after objoct af desire: He is the Pure, the Supreme, the Immortal. By Him are all worlds supported; none can transgress Him.

---

## (53.) தைத்திரிய உபநிஷத்து

பிருகுவல்லி கூ-வது அநுவாகம்.

ஆநந்தாத்யேவ கல்விமாநி பூதாநி
ஜாயந்தே ஆநந்தே நஜாதாநி ஜீவந்தி
ஆநந்தம் ப்ரயந்த்யபிஸம் விசந்தி.

மொழிப்புரை.

நிச்சயமாய் இவ்வுயிர்கள் ஆநந்த ரூபனிடத்திலிருந்தே உண்டாகின்றன. உண்டானவை ஆநந்த ரூபனாலேயே நிலைபெற்றிருக்கின்றன. ஆநந்தரூபனையே நோக்கிச்சென்றடைகின்றன.

விசேஷ உரை.

*படைத்தளித்தழிக்கவல்ல பரமேசுவரனுக்கு இடுகுறியாக யாதொரு பெயருமில்லை. முற்காலத்திருந்த பிரமவாதிகள் தமக்குள் நிரதிசயனாகியும் மஹானாகியும், எங்கும் நிறைந்தவனாகியும், ஸர்வகதனாகியும், நன்மையேவடிவாக உடையவனாகியும் இருக்கிற மஹாபுருஷனை ஸாக்ஷாத்தாக அடைந்து அதனாலுண்டான குற்றமற்ற பேரின்பத்தையனுபவித்து, அவரை ஆனந்த ஸ்வரூபனென்று வெளியிட்டனர். நாமும் அவரது அன்பில் மூழ்கினவர்களாகி, நம்மிலும் பேரின்ப ரஸம் பெருகிற்றானால்; அப்பொழுது, நாமும் அவரை ஆநந்தஸ்வரூபனென்று சொல்லுவோம்.*

From Him, the Blissful, do these creatnres received being, through Him, the Blissfnl, they, after receiving being, subsist, and Him, who is Blissful they at last depart unto & enter,

---

## (54.) பிரச்னோபநிஷத்து

*யச்சாயமஸ்மிந்நாகாசே தேஜோமயோ
அம்ருதமய: புருஷ: ஸர்வாநுபூ:;
யச்சாயமஸ்மிந்நாத்மநி தேஜோமயோ
அம்ருதமய: புருஷ: ஸர்வாநுபூ:;
தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி
நாந்ய: பந்தா வித்யதே அயநாய.*

பொழிப்புரை.

இந்தவெளியில் யார் இந்த ஞானவடிவுடையரும், அழிவற்ற தன்மையரும், பூரணரும் யாவற்றையும் அனுபவிக்கிறவருமாக விருக்கிறரோ; யார் இந்த ஆத்துமாவினிடத்தில் இந்த ஞானவடிவரும், அழிவற்றதன்மையரும், பூரணரும் யாவற்றையும் அனுபவிக்கிறவருமாயிருக்கிறரோ அவரையறிந்து சாதகர் மரணத்தைக்கடக்கிறர். அது தவிர முத்திபெறுதற்கு வேறுவழியில்லை.

விசேஷ உரை.

*இவ்வெளி சூனியமாக இருக்கவில்லை, ஞானமயனும் அமிருத மயனுமாகிய புருஷனால் நிறைந்திருக்கிறது. இந்த ஆத்துமாவினிடத்திலும் அவர் பூரணஸ்வரூபராக வீற்றிருக்கிறார். அவர் உள்ளும் புறமும் எல்லா இடங்களிலும் இருந்துகொண்டு யாவற்றையும் அறிகிறார். யார் அந்த ஞானமயனும் அமிருத மயனுமாகிய புருஷனை அறிந்து அவரிடத்தில் நிறைந்த அன்புடையவராகி அவரது நனவேக்கத்துடன் தன்னுடைய நல் விருப்பத்தைச் சேர்ந்து அவரிடத்தில் ஆத்துமாவை ஸமர்ப்பிக்கிறாரோ: அவர் அழிவற்ற அந்தப்புருஷனையடைந்து அழிவுள்ள நிலையைக் கடக்கிறார்.*

Having known Him who is in all space, the Glorious, the Immortal the Perfect, and the All Perceiving; Who is in the soul, the Glorious, the Immortal, the Perfect, and the All Perceiving one avoideth death (Spiritulal death). No other path there is for Salvation.

---

## (55.) சுவேதாசுவதர உபநிஷத்து

*சு-வது அத்தியாயம் கூ-வது வாக்கியம்.*

*தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்*
*தம்தேவதாநாம்பரமம் சதைவதம்;*
*பதிம் பதீநாம் பரமம் பரஸ்தாத்*
*விதாமதேவம் புவநேசமீட்யம்.*

பொழிப்புரை.

எல்லாப் பிரபுக்களுக்கும் சிறந்த பிரபுவும், எல்லாத் தேவதைகளுக்கும் சிறந்த தேவதையும், எல்லாத் தலைவர்களுக்கும் சிறந்த தலைவனும், சிறந்த எல்லாவற்றிலும் சிறந்தவனும், தானுக

விளங்குகிறவனும் உலகங்களுக்கு ஈசனும், துதிக்கப்பட்டத்தக்க வருமானவனை யாமறிவோம்.

### விசேஷ உரை.

*அவர் பிரம்மாண்டத்தினது தலைவர், அரசர்களுக்கெல்லாம் அரசர், யாவருக்கும் ஈசுவரர். அவரது செல்வத்திற்கு எல்லை இல்லை. உலகத்தில் யாருக்கு எவ்வளவு செல்வமிருக்கிறதோ அவையனைத்தும் அவரது செல்வமே, எவ்வளவு செல்வமுடைய பிரபுக்களிருக்கின்றனரோ அவர்களனைவருக்கும் அவர் பிரபு; யாவருக்கும் அவர் மஹேசுவரர். அவர் இந்தப்புவியினது இராஜ்ஜியேச்சுவரர்களுக்கும் ஈசுவரர். மேலும் இம்மண்ணுலகத்தைவிடச் சிறந்த வேறு உலகங்களில் வசிக்கும் தேவதைகளுக்கும் அவர் ஈசுவரர். ஜகத்தினது எந்தப்பாகத்தில் எந்த உலகத்தில் மனிதர்களைவிட ஞானம், தருமம், அன்பு இவைகளினால் உயர்வடைந்து மிகச்சிறந்து விளங்குகிற எத்தனை ஜீவர்களிருக்கின்றனரோ அவர்களனைவருமே தேவ சப்தத்தினால் சொல்லப்படுகிறவர்கள்; அந்த எல்லாத்தேவதைகளைவிட அவர் சிறந்ததேவதை. பரம் பூஜனீயர்; மேலும் நியந்தா, அவர் எல்லாப் பிரதிபாலகர்களுக்கும் பிரதிபாலகர், அவர் சிறந்ததிலும் சிறந்தவர். அவரைவிடச் சிறந்தவர் யாருமில்லை. அவர் நாம் தொழத்தக்கவர், அவர் நாம் துதிக்கத்தக்கவர். அவர் நமது மிகுந்த அன்பிற்கு உரியவர்: நம்மால் மிகவும் பூஜிக்கப்படத்தக்கவர்.*

We know Him who is of sovereigns the highest Sovereign of Gods the greatest God, the Lords of lords, the Most Excellent of all things excellent, the Being Divine and the Governor of these worlds, worthy of homage.

---

## (56.) *முண்டகோபநிஷத்து*

*உ-வது முண்டகம் உ-வது கண்டம் உ-வது வாக்கியம்.*

**யதர்சி மத்யணுப்யோணு யஸ்மின்லோகா
நிஹிதா லோகிநச்ச; ததேதத் ஸத்யம்
ததம்ருதம் தத்வேத்தவ்யம் ஸௌம்யவித்தி.**

பொழிப்புரை.

யார் ஞான ஒளியையே வடிவாக உடையவரோ, யார் அணு விலும் அதிசூக்ஷுமமானவரோ, யாரிடத்தில் உலகங்களும் உலகத் தவரும் நிலைப்படுத்தப் பட்டிருக்கின்றனரோ அவரே, சத்தியஸ்வ ரூபி; அவரே அழிவற்றவர். அவரே ஞானத்தினால் அறியப்படத் தக்கவர். ஓ பிரிய சிஷியனே! நீ அவரை ஞானத்தினால் அறியக் கடவாய்.

விசேஷ உரை.

*ஓ அன்பனே! உனது கருத்தை யாவற்றிற்கும் உள் ளுக்குள்ளாக விருக்கிற பரமாத்துமாவினின்று வேறு செய்ய வேண்டாம், அவரினின்று அதை வேறுபடுத்தித் தாழ்ந்தநி லைக்கு வந்துவிடவேண்டாம்; ஆனால், அதைத் தூய்மைப்படு த்தி அவரது ஸமீபத்திற்குக் கொண்டுபோகக்கடவாய். கரு த்தை ஒருவழிப்படுத்தி அதனால் பரமாத்துமாவை யறியக் கடவாய். மேலும் இந்த அத்தியாத்தும யோகத்தினாலுண் டாகும் பேரானந்தத்தை அனுபவிக்கக் கடவாய்.*

He is glorious and subtler than subtle and in Him are these worlds with their inhabitants placed. This is He who is true. He is Immortal. He should be penetrated into by meditation. O beloved penetrate into Him.

---

## (57.) *பிரஹதாரணிய உபநிஷத்து*

*௪-வது அத்தியாயம் ௪-வது பிராம்மணம்*

*௨௨-வது வாக்கியம்.*

*ஸர்வஸ்யவசீஸர்வஸ்யேசாந:*
*ஸர்வஸ்யாதிபதி:; ஸநஸாதுநாகர்மணாபூ,*
*நோஏவஅஸாதுநாகணீயான். [யான்*

பொழிப்புரை.

யாவும் பரமாத்மாவசமாக விருக்கின்றன. அவர் யாவற்றை யும் நியமிப்பவர்; மேலும், யாவற்றிற்கும் தலைவர். நல்லசெய் கையால் அவருக்குப் பெருமையும், தீயசெய்கையால் அவருக்குச் சிறுமையும் உண்டாவதில்லை.

விசேஷ உரை.

*பரமாத்துமா எதை எந்த நியமத்தில் வைத்தாரோ அது அந்த நியமத்திலேயே யிருக்கின்றது; எதுவும் அவரது நியமத்தைக் கடக்கவல்லதன்று. அவர் ஸர்வேசுவரர், யாவற்றையும் நியமிப்பவர். யாவற்றிற்கும் தலைவர். மனிதர்கள் எப்படி நல்லசெய்கையால் உயர்வும், தீயசெய்கையால் தாழ்வும் பெறுகின்றனரோ, அப்படி அவரது நிலைமாறுவது சுபாவமன்று. அவருடைய ஸ்வரூபம் எதைவிட, சிறந்ததொன்றில்லையோ அவ்வளவு சிறந்ததும்; மேலும் மாறுதலடைந்து தாழ்ந்த நிலைக்கு வரக்கூடாததேதுவோ, அவ்வளவு மாருவியற்கையுடையது மாகவிருக்கின்றது.*

The Subjector of all, the Governor of all and the Sovereign of all, He has neither to become greater by good works nor through has works less.

---

## (58.) பிரச்ஞோபநிஷத்து

*ச-வது பிரசினம் கக-வது வாக்கியம்.*

### விஜ்ஞாநாத்மா ஸஹதேவைச்சஸர்வை
### ப்ராணாபூதாநி ஸம்ப்ரதிஷ்டந்தியத்ர;
### ததக்ஷரம் வேதயஸ்து ஸௌம்ய
### ஸஸர்வஜ்ஞ: ஸர்வமேவா விவேச.

பொழிப்புரை.

ஓ பிரியதரிசனனாகிய சிஷியனே! ஜீவாத்துமா, எல்லா இந்திரியங்கள், பிராணிகள், வேறுபொருள்கள், யாரிடத்தில் நிலைபெற்றிருக்கின்றனவோ, அந்த அழிவற்ற பொருளை யார் அறிகிறாரோ, அவர் யாவற்றையும் அறிந்தவராகி, யாவற்றிலும் பிரவேசிக்கிறார்.

விசேஷ உரை.

*ஜீவாத்துமாவும், இந்திரியங்களும், பிராணனும் வேறு எல்லாப்பொருள்களும் யார்நினைத்தமாத்திரத்தில் உண்டாகின்றனவோ; யாருடைய திருவுள்ளப்படி க்ஷேமமாக இருக்கின்றனவோ; அந்த அழிவற்ற புருஷரை யார் அறிகி*

றாரோ அவருக்கு எல்லா ஐயங்களும் நீங்குகின்றன; மேலும் அவர் யாவற்றிலும் பிரவேசித்து எல்லாப் பொருள்களிடத்தும் அவ்வழிவற்ற மங்கள புருஷனைத் தரிசிக்கிறார்.

He, O beloved, who knoweth Him the imperishable in Whom dwell the soul, the senses, and living beings and things, knoweth all and comprehendeth all.

---

## (59.) கடோபநிஷத்து

கூ-வது வல்லி க௨-வது வாக்கியம்.

நைவவாசா நமநஸாப்ராப்தும்
சக்யோ நசக்ஷுஷா; அஸ்தீதிப்ருவதோ
அந்யத்ரகதம் ததுபலப்யதே.

பொழிப்புரை.

பிரமத்தை யடைவதற்குக் கூடியதாகவிருக்க வாக்கினாலுமில்லை, மனதினாலுமில்லை, கண்ணினாலுமில்லை, கடவுள் உளரென்று சொல்லுகிறவர்களைவிடப் பிறர், அவரை எப்படி அடைவார்கள்.

விசேஷ உரை.

பரமேசுவரரது ஸ்வரூபம் காணப்படாதது. சொல்லிமுடியாதது, கருதிமுடியாதது. அவரைக் கண்ணினாலாவது, வாக்கினாலாவது, கருத்தினாலாவது அறியக்கூடாதது; அவரைக் கேவலம் ஒரு ஆத்துமப் பிரத்தியயத்தினால் மாத்திரம் அடையலாகும் நாம் நம்மைஅபூர்ணரென்றும் பரதந்திரரென்றும் நம்புகிறோம், அதற்குள் பூரணமும் ஸ்வதந்திரமுமான பொருளொன்றுளதென்னும் நம்பிக்கையடங்கியிருக்கின்றது; அந்தக்கரணத்தினால் பூரணமும் ஸ்வதந்திரமுமான பொருளொன்றின்றேல், நம்மை அபூரணரென்றும் பரதந்திரரென்றும் நம்புவதற்கு ஒரு ஆதாரமுமில்லை; பரதந்திரமும், அபூரணமுமான ஒருபொருளின் இருப்பினால், ஒரு ஸ்வதந்திரமாகிய பூரணப்பொருளின் இருப்பு வெளிப்படுகின்றது. இந்த நம்பிக்கை தானாகவுள்ளது; இந்த ஏதுவினால் இதைப்பரீக்ஷிக்கவேண்டிய ஆவசிகமில்லை. பரதந்திர

மும் அபூரணமுமான பொருளைப் படைத்தவரும், அதன் ஆச்ரயருமான ஸ்வதந்திரராகி ஒரு பூரணபுருஷர் இருக்கிறாரென்னும் இயற்கையான ஆத்துமப்பிரத்தியயமானது யாவருடைய உள்ளத்திலுமிருக்கிறது. பிறகு எப்பொழுது இவ் விஷயத்தில் ஐயமுண்டாகிறதோ அப்பொழுதான் யுக்திவிசாரணையுண்டாகிறது; ஆனால் அந்தவிசாரணையின் பின்னரும், வாக்குக்கும் கருத்திற்கும் புலப்படாதவரும் ஞானத்திற்குப் புலப்படுகிறவருமான ஸ்வதந்திரராகி ஒரு பூரண புருஷரிருக்கிறாரென்னும் ஸித்தாந்தமே உண்டாகின்றது. அக்காரணத்தினால் எப்பொழுது நமது நிர்மலமான ஞானத்திற்கு அந்த ஸத்திய சுந்தர மங்கள புருஷர் விளங்குகிறாரோ, அப்பொழுது ஆத்துமப்பிரத்தியயம் அவரது அஸ்தித்துவத்திலுள்ள நம்பிக்கையை ஸ்திரப்படுத்துகின்றது. இந்த ஆத்துமப்பிரத்தியய விஷயாக ஐயப்பட்டால், ஒரேதரத்தில் நியாயத்தின் வேர் அறுத்து விடுகின்றது. மேலும், விசேஷ ஐயமும் திரிபுமான உணர்ச்சி யுண்டாகின்றது. அப்படியாயின் நமது அஸ்தித்துவத்திலும், வெளிப்பொருளின் அஸ்தித்துவத்திலும், காரியகாரணங்களின் அஸ்தித்துவத்திலும்,ஐயமுண்டாகிப் புத்திஒரேதரமாக நாசத்தையடைகின்றது. யார் ஆத்துமப்பிரத்தியயத்தை ஆதாரமாகக்கொள்ளவில்லையோ; அவர் ஒருபொழுதும் ஞானகோசரரான நித்திய ஸத்திய மங்களஸ்வரூபரும், ஸர்வவியாபியும், சர்வாச்ரயரும் எல்லாம் வல்லவருமான பூரண புருஷரை, ஐயமின்றி நம்பக்கூடாதவராக இருக்கிறார். தருக்கதரங்கத்தினாலும் நிச்சயமற்றவராகி ஈச்வர சஹவாசத்தினாலுண்டாகும் அதிநிர்மலமாகிய சாந்தியை அவர் ஒருபொழுதும் அடையக்கூடாதவராக இருப்பார். ஆத்துமப்பிரத்தியயத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு யார் "அவருளர்" என்றுரைக்கிறாரோ அவரன்றி, பிறர் யாராலும் அவர் ஒருபொழுதும் அடையப்படுவதில்லை.

Speach connot describe Him; mind connot comprehend Him; eye cannot See Him. How can others gain God than those who assert that He existeth?

## (60.) சுவேதாசுவதர உபநிஷத்து

சு-வது அத்தியாயம் கூ-வது வாக்கியம்.

மஹான் ப்ரபுர்வைபுருஷ: ஸத்வஸ்யைஷ ப்ரவர்தக:; ஸுநிர்மலாமிமாம்சாந்திம் ஈசாநோஜ்யோதி ரவ்யய:.

பொழிப்புரை.

இந்த மஹாபுருஷர் யாவருக்கும் பிரபு. ஞானத்தையே வடிவாக உடைய ஈச்வரர். இந்த நிருமலமான சாந்தியை நோக்கி தருமத்தின் பிரவர்த்தகரானர்.

விசேஷ உரை.

நன்மையையே வடிவாகக்கொண்ட இந்த மஹாபுருஷன் நமக்குக் கேவலம் இந்திரிய சுகங்களைத்தந்து நம்மைப் பசுக்களைப்போல ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தியிருக்கவில்லை ஆனல் விலையேறப்பெற்றதருமத்தைத்தந்து நம்மை ஸ்வாதீனராக்கி யிருக்கின்றார். அவர் விஷயசுகத்தைவிடஆயிரம்பங்கதிகமான ஆன்மப்பிரசாதத்தை நோக்கியும், நமது அதிநிருமலமாகிய சாந்தியை உத்தேசித்தும் தானே தருமப்பிரவர்த்தகரானர். அவர் நமது உள்ளத்தில் நல்ல புத்தியையும், தருமபலத்தையும் உண்டாக்குகிறார். நாம் அவரது பிரசாதத்தினல் தருமபலத்தினல் ஸ்வாதீனமுள்ளவர்களாகி முத்திக்கு அதிகாரிகளாகிறோம்.

He the Perfect, is the Great, the Lord, He leadeth men *to* righteousness with the view to unsullied peace, He is the Governor, Glorious, Unfading.

---

## (61.) சாந்தோக்கிய உபநிஷத்து

7-வது பிரபாடகம், 25-வது கண்டம், 1-வது வாக்கியம்.

ஸஏவா தஸ்தாத் ஸஉபரிஷ்டாத் ஸபச்சாத் ஸபுரஸ்தாத் ஸதக்ஷிணத: ஸஉத்தரத:; ஈசாஹேபூதபவ்யஸ்ய ஸஏவாத்ய ஸஉச்வ:

பொழிப்புரை.

அவர் அடியிலே, அவர் மேலே; அவர் பின்புறத்திலே, அவர் முன்புறத்திலே; அவர் தென்றிசையிலே, அவர் வடதிசையிலே, அவர் இறந்தகாலத்திற்கும் எதிர்காலத்திற்கும் நியந்தா. அவர் இன்றுமிருக்கிறா, நாளையுமிருப்பார்.

விசேஷ உரை.

*மேலிலென்ன, அடியிலென்ன; பின்புறத்திலென்ன, முன்புறத்திலென்ன; தென்றிசையிலென்ன, வடதிசையிலென்ன; நமக்கு நான்கு திசைகளிலும், அவர் எல்லாவிடங்களிலும், விளங்கிக்கொண்டிருக்கிறார். நாம் மலையின் உச்சியிலேறினும் அவர் அவ்விடத்திலும் விளங்கிக்கொண்டிருக்கிறார். நாம் ஆழமாகிய கடலினுள்ளே செல்லினும் அங்கும் அவர் வீற்றிருக்கிறார். சூரிய பிம்பத்தினது நடுப்பகலிலுள்ள கிரணங்களில் அவரெப்படித் தாமாக விளங்கிக்கொண்டிருக்கிறாரோ; அதுபோல, இருண்ட இரவின் மிகுதியான இருளிலும் மிகவாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். எல்லாவிடங்களிலும் அவரது அரசிருக்கிறது, எல்லாவிடங்களிலும் அவரது பார்வையிருக்கின்றது. எப்படி அவர் எல்லாத்தேசங்களிலும் வியாபித்திருக்கிறாரோ; அப்படி, அவர் எல்லாக் காலங்களிலுமிருக்கிறார். அவரெப்படி இக்காலத்திற்கு நியந்தாவோ, அப்படியே பிற்காலத்திற்கும் நியந்தா. அவர் இன்றுமிருக்கிறார், நாளையுமிருப்பார்.*

He is above ; He is below ; He is before ; He is behind. He is on the right, He is on the left. The Governor of time past and future, He is same today as to-morrow.

---

## (62.) சுவேதாசுவதர உபநிஷத்து

*நான்காவது அத்தியாயம் 1-வது வாக்கியம்.*

*யஏகோ வர்ணோ பஹுதா சக்தியோகாத்*
*வர்ணு நநேகாந்நிஹிதார் தேததாதி;*
*விசைதி சாந்தே விச்வமா தெளஸதேவ:*
*ஸநோபுத் த்யாசு பயாஸம் யுநக்து.*

பொழிப்புரை.

யார் ஒருவரோ, நிறமற்றவரோ, யார் பிரஜைகளின்து பிரயோஜநங்களையறிந்து, பலவிதமான வல்லமையுடன் கூடியவராகப் பலகாமிய வஸ்துக்களைத் தருகிறரோ,எல்லா உலகத்தின் முதலிலும் முடிவிலும் யார் நிறைந்திருக்கிறரோ, அவர் தேவன். அவர் நம்மை நல்ல புத்தியுடன் சேர்ப்பாராக.

விசேஷ உரை.

*பலநிறங்களைப்படைத்த எந்த ஒன்றுகிய கடவுளோ அவர் தான் நிறமற்றவராகவிருந்தும் தூய்யதன்மையையுடைய ஞானிகளுக்கருகில் அவர் மிகவிளக்கமாக விளங்கிக் கொண்டிருக்கிறுர். அவர்கள் அந்தச்சத்தியபுருஷனைத் தருமத்தையும், பொருளையும், சுகசவுக்கியாதிகளையும் கொடுப்பவராகப்பாவித்து அவரை அதி சமீபஸ்தராக அறிகின்றனர். மேலும் இம்மைச் சுகவிருப்பமற்றவராகி உள்ளத்தினிடத்துள்ள அன்புடன் அவரது உபாசனை செய்கின்றனர். அவரிடத்தில் ஒரு பிரார்த்தனையும் இல்லை. கேவலம் அவரை அடைதலின் நிமித்தமே நல்லபுத்தி கொடுக்கவேண்டுமென்னும் பிரார்த்தனைதான்.*

He who is one and colourless, and who knowing the necessities of his greatures, dispenseth through power manifold; many an object of desire to them. He is the Being Divine, pervadingthe world from the beginniug to end. LetHim engage us in salutary thoughts.

---

## (63.) *சுவேதாசுவதர உபநிஷத்து*

*மூன்றுவது அத்தியாயம் 7-வது வாக்கியம்.*

*ஸர்வேந்த்ரிய குணுபாசம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம்; ஸர்வஸ்ய ப்ரபுமீசாநம் ஸர்வஸ்யசரணம் ஸுஹ்ருது.*

பொழிப்புரை.

அவரால்எல்லாப்பொறிகளுடைய பண்புகளும் விளக்கத்தைப்பெறுகின்றன. அவர் எல்லாப் பொறிகளுமற்றவர், அவர் யாவ

ற்றிற்கும் பிரபு, யாவற்றிற்கும் தலைவர், யாவற்றிற்கும் அடைக்கல மானவர், யாவற்றிற்கும் நண்பர்.

விசேஷ உரை.

அவர் நமக்கு ஞானத்தையும், சுகத்தையும், வல்லமை யையும் தரக்கருதி நமது பொறிகளை அததற்குத்தகுந்த பல குணங்களால் அலங்கரித்தார். கண்ணினால் உலகாதிபதியி னது உலக அரசின் அதி வியப்பான அழகையும் நோக்கத் தையும் பார்த்துத்திருப்தியடைகிறோம். காதினால் பறவைக ளினது இன்பமான ஒலி, நல்ல இனிமையான சங்கீதத்தின் ஓசை, பிரமகுணகீர்த்தனம் இவைகளைக்கேட்டு இன்பமடை கிறோம்; நாவினால் உண்டல் தின்றல் நக்கல் பருகல்களுக் குள்ளான பலவித நல்ல உணவுகளைக்கொண்டு சுகிக்கிறோம்; மூக்கினால் பலவிதமான நல்ல மணமுடைய மலர்களின் இன் பமான மணத்தைக் கிரகித்துச் சந்தோஷிக்கிறோம்; எல்லா உறுப்புகளிலும் பரவியிருக்கிற ஸ்பரிச இந்திரியத்தினால் நல்ல குளிர்ச்சிபொருந்திய மந்தமாருதத்தின் வீசுதலினால் குளிர்ச்சியைப்பெற்று நமது சுகமாகிய ஸரீரவரத்தை நிர ப்புகிறோம், எல்லா நன்மைகளுக்கும் இருப்பிடமாகிய பர மேசுவரர் ஒருவரே இவையாவற்றிற்கும் காரணர். அவர் இந்தப்பொறிகளுக்கு எவ்விதமான வல்லமையைத் தந்தா ரோ அதற்குத்தக்கவாறு அதற்குரியவிடங்களனைத்தையும் அவற்றிற்குப்பயன்படும்படி படைத்ததினாலேயே நாம் அவ ரால் அருளப்பட்ட சுகத்தில் சுகிகளாயிருக்கிறோம். நமக்கு அவரால் இரண்டுகைகள் அருளப்பட்டதனால் நாம் கைகளி னால் கிரகிக்கப்படத்தக்க பொருள்களனைத்தையும் பற்ற வல்லமையுள்ளவர்களாகவிருக்கிறோம். அவர் நமக்கு வா கிந்திரியத்தை அருளினதால் நமதுள்ளத்தினது கருத்துகள னைத்தையும் வெளியிட்டுச் சுகிகளாகிறோம். அவர் நமது ஒவ் வொரு இந்திரியத்தையும் சுகத்தின் களஞ்சியத்திற்கு ஒவ் வொரு வாயிலாக ஏற்படுத்தியிருக்கிறார். நமது ஒவ்வொரு ஞானேந்திரியமும், கருமேந்திரியமும் ஒவ்வொரு இன்பவடி வுடைய ஊற்றாகி இடைவிடாமல் இன்பவாரியை வெளியிடு

கிறது; மேலும் எல்லா நன்மைகளுக்கும் ஒன்றான இருப்பிடமாக விளங்குகிறவராகி உலக ரக்ஷகரது அற்புத மகிமையை விளக்குகின்றது.

அவர் உயிர்களினது நன்மையின்பொருட்டே இந்த மிக வியப்பாகிய பொறிகளனைத்தையும் படைத்தார்; மேலும், அவராலேயே இப்பொறிகளின் பண்புகளனைத்தும் விளக்கத்தைப் பெறுகின்றன; அவர் தான் எந்தப்பொறியையும் உடையவரல்லர். அவரது ஞானத்தின்பொருட்டு ஒரு ஞானேந்திரியமும் வேண்டியதில்லை. அவர் கருமத்தின்பொருட்டு ஒரு கருமேந்திரியமும் பயன்படாது; அவர் கண்காதற்றவராயிருந்தும் யாவற்றையும் பார்க்கிறார், யாவற்றையும் கேட்கிறார்; மேலும் கைகாலற்றவராயிருந்தும் எல்லாவிடங்களிலும் செல்லுகிறார், யாவற்றையும் பற்றுகிறார். இவர் யாவருக்கும் பிரபு, யாவருக்கும் ஈசுவரர், யாவருக்கும்ஆச்ரயர், யாவருக்கும் நண்பர்.

THROUGH Whom the sensès manifest their powers but Who is Himself devoid of senses; He is the Lord and Governor of all, the Friend and Protector of all.

---

## (64.) கேனோபநிஷத்து

இரண்டாவது கண்டம் 2-வது வாக்கியம்.

நாஹம்மந்யேஸு‍வேதேதி நோநவேதேதிவேத ச; யோநஸ்தத்வேத தத்வேதநோ நவேதேதி வேதச.

பொழிப்புரை.

யான் பிரமத்தை முற்றும் அறிந்தேனென்று நினைக்கவில்லை அது அறியப்பட்டதுமன்று, அறியப்படாததுமன்று. "அது அறியப்பட்டதுமன்று அறியப்படாததுமன்று" என்னும் வாக்கியப்பொருளை நமக்குள் யார் அறிகின்றனரோ அவர்களே பிரமத்தையறிகின்றனர்.

விசேஷ உரை.

பிரமத்தின் பூரணத்தன்மையை விசேஷித்து முற்றும் அறியக்கூடாதென்று சொல்வதால், அதன்கருத்து பிரமத்தி

ன் விஷயமாகச் சிறிதும் அறியக்கூடாது என்பதன்று அவரது உண்மையான பூரணத்தன்மையை ஒருவிதத்திலும் நமது அல்பமாகிய கருத்தில் கட்டுப்படாவிடினும்; அவரது இருப்பும், பூரணத்தன்மையும், நல்லதன்மையும் நமது ஞானக்கண்ணுக்கு விளக்கமாகப் புலப்படுகிறது. அவரது எல்லையற்ற ஞானத்திற்கும் எல்லையற்ற சக்திக்கும் எல்லையற்ற அன்புக்கும் நிதர்சனங்கள் எங்கும் காணப்படுகின்றன. இந்தக் காரணத்தால் "நான் பிரமத்தையறியவில்லை என்பதுமில்லை, அறிந்தேனென்பதும் இல்லை" என்னும் இவ்வாக்கியம் சொல்லப்பட்டது, அதன் கருத்து யாதெனில்; நாம் அவரது ஆதியும் அந்தமுமற்ற பூரணத்தன்மையையும், அருடைய ஸத்தியஸுந்தர மங்கள ஸ்வரூபத்தையும் விளக்கமாக வறிகிறோம்; ஆனால், ஒரு பரிமிதப்பொருளைப்போல விசேஷித்து அதைக் கருத்தினது எல்லைக்குள் அடக்கக்கூடவில்லை. யார் மிகவும் தூய்மையையுடைய ஞானநேத்திரத்தினால் அவரை நேராகக்கண்டு அவரது பூரணத்தன்மையை அறிகின்றனரோ, அவர்களே இவ்வாக்கியத்தின் மர்மத்தை நன்றாக வறிகின்றனர்.

I do not think that I know God well. *It is neither that I know not God, nor it is that I know him.* He among us who uuderstandeth this *sentence*, knoweth God.

---

## (65.) கேனோபநிஷத்து

இரண்டாவது கண்டம் 2-வது வாக்கியம்.

யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸ:
அவிக்ஞாதம் விஜாநதாம் விக்ஞாதம விஜாநதாம்.

பொழிப்புரை.

யார் பிரமத்தின் ஸ்வரூபத்தை முற்றும் அறியவில்லையென்று நினைக்கிறரோ, அவர் பிரமத்தின் ஸ்வரூபத்தை யறிந்தார், யார் பிரமத்தின் ஸ்வரூபத்தை முற்றும் அறிந்ததாக நினைக்கிறரோ அவர் பிரமத்தின் ஸ்வரூபத்தையறியவில்லை. சிறந்த ஞானிகளதுகருத்து

பிரமஸ்வரூபத்தை முற்றும் அறியவில்லை என்பது. அஞ்ஞானிகளுடைய கொள்கை பிரமத்தின் ஸ்வரூபத்தை முற்றும் அறிந்தாரென்பது.

விசேஷ உரை.

*பிரமத்தின் ஸ்வரூபத்தை நமது பரிமிதமாகிய அல்ப புத்தியினால் விசேஷமாக அறியவல்லர்களல்ல என்பதை நாம் அறிந்தோமெனினும், முதலும் ஈறுமற்ற அவரது பூரணத்தன்மை ஒருவாறு அறியலாயிற்று. ஞானவானாகிய யார் தூய்மையான தனது ஞானக்கண்ணினால் அந்த ஸத்திய சுந்தர மங்களஸ்வரூபருடைய பூரணத்தன்மையை நேராக அறிகின்றாரோ, அவரே பிரமத்தினது தன்மைக்கு இறுதியில்லை எனவறிகிறார்.*

He is conceivable to him who believeth that he conceiveth Him not, and inconceivable to him who believeth that he conceiveth Him. He is unknown to them who believe know Him and known to them who believe they do not know Him.

---

## (66.) மாண்டூக்கிய உபநிஷத்து

*2-வது கண்டம் 7-வது வாக்கியம்.*

*அத்ருஷ்டமவ்யவஹார்யமக்ராஹ்யமலக்ஷண மசிந்த்யமப்யபதேஸ்ய மேகாத்மபரத்யயஸாரம் பரபஞ்சோபசமம்சாந்தம் சிவமத்வைதம்.*

பொழிப்புரை.

கடவுள் கண்ணால் காணப்படாதவர், கருமேந்திரியங்களாற் சுவரப்படாதவர், வியவஹரிக்கப்படக்கூடாதவர், பரிமிதமான லக்ஷணமற்றவர், கருத்திலடங்காதவர், சொல்லிமுடியாதவர், உயிர்களினது ஆத்துமப்பிரத்தியயத்தையே தன்னிருத்தலுக்குப் பிரமாணமாக உடையவர், ஸம்ஸாரதருமத்தைக்கடந்தவர், சாந்தமானவர், மங்களஸ்வரூபி, ஒப்புயர்வான இரண்டாவதற்றவர்.

விசேஷ உரை.

*அவ்விறுதியற்ற ஞானத்தையே வடிவாகக்கொண்ட பரமேசுவரர் கண்களுக்குப் புலப்படத்தக்கவரன்று,*

அவரைக்கைகளால் பற்ற முடியாது, அவரைக் கருத்தினால் கருதவுமுடியாது, அவரைப் பரிமிதப்பொருளைப்போல விசேஷமாக வறியவுங்கூடாது, கேவலம் நிருமலமான ஸகஜஞானத்தினாற்றான் அவர் விளங்குவார். மேலும் ஒரு ஆத்தும ப்பிரத்தியயத்தினுடைய பலத்தில்தான் ஞானத்திற்கு விளங்குகிற ஸத்தியசுந்தர மங்களஸ்வரூபியாகிய புருஷனதுஇருத்தலில் நாம் நம்புகிறோம். ஞானம் எந்த இயற்கையான அழிவுமிறுதியுமற்ற பூரணனை விளக்குகின்றதோ, ஆன்மா அந்தப்பூரணபுருஷனது இருத்தலில்நம்புகின்றது. ஞானத்தினால் உண்மை விளங்குகின்றது. ஆன்மாவுக்கு அவ்வுண்மையில் நம்பிக்கையுண்டாகின்றது. ஆனதினால் இந்த ஸ்வபாவசித்தமாகிய ஆத்துமப்பிரத்தியயமே அவரது அஸ்தித்வத்தின்பிரமாணத்தை நிலைநிறுத்துவதற்கு ஒன்றான ஏது. எப்பொழுது ஆத்துமப்பிரத்தியயசித்தமான இறுதியற்ற புருஷன் ஸஹஜஞானத்தினால் விளங்குகிறாரோ, அப்பொழுது புத்தி அவரது உலகப்படைப்பிலுள்ள கௌசலத்தைக் காண்பித்து அவரது விசேஷ ஞானத்தைத் தெரிவிக்கின்றது; மேலும் உலகத்திலுள்ள நன்னோக்கத்தினது நியமங்களைக்காண்பித்து அந்த நிபந்தாவின் நல்ல தன்மையை விளக்குகின்றது. நமது பரிமித புத்தியால் அம்முடிவற்றபுருஷனை முழுதும் அறியக்கூடாவிட்டாலும் அந்தப் புத்தி ஸஹஜஞானத்தை மிகவும் போஷிக்கின்றது. ஆனதால் பிரமஜிக்ஞாசுக்களான முமுக்ஷுக்கள் உலகத்திலுள்ள காரியங்களை உள்ளும் புறமுமாலோசிப்பதனால் புத்தியைப்பரிசுத்தப்படுத்த ஒருபொழுதும் அலக்ஷியம் செய்யக்கூடாது. புத்தி செவ்வையாகப் பரிசுத்தப்பட்டால் ஸகஜஞானத்தினுடையவும், ஆத்தும பிரத்தியயத்தினுடையவும் அதிகாரத்தையும் நோக்கத்தையும் நாம் விசேஷமாக அறியவல்லவர்களாவோம்.

உலகம் யாரால் படைக்கப்பட்டு யாருடைய நியமங்களுக்குள்ளாகி இருக்கின்றதோ, அவர் எல்லா உலகதருமத்தையுங் கடந்தவர். இராகம் துவேஷம் முதலிய மனோவிருத்திகளொன்றும் அவரிடத்திலில்லை; ஆனதால் அவர் சாந்தர்,

அவர் மங்களஸ்வரூபி, அவர் யாவற்றின் நன்மையையும் நோக்கி இவ்வுலகத்தை நியதமாகப் பாலித்துவருகிறார். அவருக்கு ஒப்பாவது, உயர்வாவதான இரண்டாவது பொருளில்லை. அவர் அத்துவிதீயர்.

He is susceptible of no physical use, subject to no Organ of action, Invisible, Indefinable, Inconceivable, Indescribable, beyond the world, All-peace, All-goodness and without a second the intutive belief in whose existence is the only proof of it.

---

## (67). தைத்திரிய உபநிஷத்து

### பிருகுவல்லி 1-வது அநுவாகம்.

**யதோவா இமாநிபூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தியத்ப்ரயந்த்யபி ஸம்விசந்தி தத்விஜிக்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம.**

பொழிப்புரை.

எதனிடத்திலிருந்து (சிதசிதாத்மகமாகிய) பொருள்கள் உண்டாகின்றனவோ, உண்டானவை எதனால் நிலைபெற்றிருக்கின்றனவோ, (முடிவில்) எதை நோக்கிச்சென்றடைகின்றனவோ, அதை விசேஷமாகவறிய விரும்புங்கள். அது பிரமம்.

விசேஷ உரை.

நிலையியற்பொருளாகவும், இயங்கியற்பொருளாகவு மிருக்கிற இவ்வஸ்துக்களெல்லாம் யாரால் படைக்கப்பட்டனவோ, யாருடைய ஆதரவாலிருக்கின்றனவோ, யார்கருதின் அவற்றின் ஒரு அம்சமும் இராதோ, அவரே, பிரம்மம்; அவரே ஸத்தியஸ்வரூபி, அவரே நமது பிரபு, எல்லாம்வல்ல அந்தப்பரமேசுவரர் ஸத்தியகாமர், ஸத்தியஸங்கல்பர்; அவர் எதைக்கருதுகிறாரோ அது ஆகின்றது எந்தப் பூரணபுருஷனுடைய சக்தியிலிருந்து இந்தச் சகல வஸ்துக்களும் உண்டாகி, அதனதன் சக்தியைப்பெறுகின்றனவோ; அவர் அவற்றை அழிக்கவேண்டுமெனக்கருதின் அவை அததின் சக்தியுடன் அந்த எல்லாம் வல்லவஸ்துவின் சக்தியில் லயமாகி அவரிடத்திலேயே மறுபடியும் சென்றுவிடலாம். அப்போ

தவற்றின் குறியும் எங்கும் தென்படா. படைத்துக்காத்த ழிக்க வல்லவர் கேவலம் கடவுளொருவரே. நமக்குச் சில வஸ்துக்கள் கிடைக்கின்ற நாம் அவற்றின் குணங்களை யறிந்து, அவற்றிற்கியன்றவாறு ஒன்றுடனொன்றைச்சேர்த்து, ஓர் அபூர்வமான யந்திரத்தைச் செய்யவல்லோம், உண்மையே; ஆனல் ஒரு மணலணுவையும் படைக்கவாவது, அழிக்கவாவது வல்லவரல்லம். படைத்தளித்தழிக்கும் வல்லமை, தனக்கு ஒப்புயர்வுள்ள இரண்டாவது வஸ்துவற்ற கடவுளொருவரிடத்திலேயேயுள்ளது.

From Whom these creatures receive being, through Whom, after receiving being, they subsist, and Whom they at last deport unto and enter, desire to know Him; He is God.

---

## (68). ப்ரஹதாரணிய உபநிஷத்து

5-வது அத்தியாயம் 8-வது பிராம்மணம் 8-வது வாக்கியம்.

ஏதத்வைதக்ஷரம் கார்கி ப்ராஹ்மணு அபிவதந்தி; யஸ்தூலமநண்வ ஹ்ரஸ்வமதீர்க்க மலோஹித மஸ்நேஹ மச்சாயமதமோ வாய்வநாகாசமஸ ங்கமரஸ மஸமகந்த மசக்ஷுஷ்க மச்ரோத்ரம வாகமநோர்தேஜஸ்க மப்ராண மமுகமமாத்ரம்.

பொழிப்புரை.

ஓ கார்க்கி! பிரமஞானிகள் யாரைப்பணிகிறார்களோ அவர் இந்த அழிவற்ற புருஷர். அவர் தூலரன்று, அணுவன்று, குறுகினவரன்று, நீட்சியுடையவருமன்று. அவர் வருணமுள்ள பொருளன்று, திரவப்பொருளன்று, நிழலன்று, இருளன்று, காற்றன்று ஆகாயமன்று. சுகதுக்கமற்றவர், இரஸநேந்திரியமற்றவர், கிராணேந்திரியமற்றவர், கண்ணற்றவர், காதற்றவர், வாக்கற்றவர், மிதமாகிய மனதற்றவர், உஷ்ணமற்றவர், பிராணவாயுவற்றவர், முகமற்றவர், அவருக்கு ஒப்பில்லை.

விசேஷ உரை.

ஆரியர்வேதத்தில் அர்ச்சைக்கு அல்லது விக்கிரகாராதனை செய்வதற்கு விதிகள் இருப்பனவாக இந்நாட்டு இந்து

க்களில் அநேகரும், கிறிஸ்தவர் முதலான ஏனையமதஸ்தர்களும் நம்பி இருக்கிறார்கள். இந்த நம்பிக்கையினால் இக்காலஇந்துக்கள் ஏராளமானபொருளையும், பொழுதையும் செலவழித்துக் கோயில்கோபுரங்களைக்கட்டி அவைகளில் அநேகவித விக்கிரகங்களை ஸ்தாபித்து அர்ச்சைசெய்து வருகிறார்கள். இவைகளைக்காணும் கிறிஸ்தவர் முதலான மதஸ்தர்கள்: இந்துக்கள் அஞ்ஞானிகளென்றும், அவர்களுடைய ஆரியவேதம் அக்ஞானத்துக்கு ஹேதுவான விக்கிரஹ ஆராதனையைப்போதிக்கும் உபயோகமற்றவேதமென்றும் பரிஹாசம்செய்துவருகிறார்கள். இப்படிச் செய்வதற்குக்காரணம் வேதவிசாரணை இல்லாமையே. இதுவரையில் எடுத்துக் காட்டப்பட்டவேத உபநிஷத்துக்களில் விக்கிரஹாராதனைக்கு விதிகள் இல்லாதிருத்தல் பிரத்தியக்ஷம். அதற்கு திருஷ்டாந்தமாகப் பின்னும் சில உபநிஷத்துக்களை இதனடியில் காட்டுகிறோம்.

## முண்டகோபநிஷத்து

பிரதமமுண்டகம் 1-வது அத்தியாம் 6-வது வாக்கியத்தில்,

யத்ததத்ருச்ய மக்ராஹ்ய மகோத்ர மவர்ண, மசக்ஷுச்ஶ்ரோத்ரம், ததபாணிபாதம் நித்யம் விபும், சர்வகதம் ஸுஸூக்ஷ்மம் தத்வ்யயம் யத்பூதயோநிம், பரிதிருச்யந்தி தீரா:

அது (பிரமம்) அதிருசியம், கிரஹிக்கக்கூடாதது, அடியற்றது, வர்ணமற்றது. கண்காதற்றது, நித்தியமானது, விபுசுவரூபி, எங்கும் பரவியது, சூக்ஷ்மமானது, அவ்யயமானது, அதைத்தீரர்கள் பூதங்களுக்கெல்லாம் ஆதிகாரணமென்று நன்றாயறிகிறார்கள், என்றும்,

## கடோபநிஷத்து

3-வது வல்லி, 12-வது வாக்கியத்தில்,

ஏஷஸர்வேஷு பூதேஷு கூடாத்மாநப் பிரகாத்ருச்யதே த்வக்ர்யயாபுத்யா ஸூக்ஷ்மயா। [சதே ஸூக்ஷ்ம தர்சிபி:

ஸர்வ பூதங்களிலும் கூடமான ஆத்மாவாக இருக்கும் அவன் (பிரமம்) (கண்ணுக்கு) விளங்குகிறதில்லை. நுண்ணறிவு உள்ளவருக்கு (மாத்திரம்) விளங்குவான் என்றும்,

கடோபநிஷத்து

6-வது வல்லி, 9-வது வாக்கியத்தில்,

நஸம்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய நசக்ஷுஷா பச்யதி, கச்சனைந நம்ஹ்ருதாமநீஷா மநஸாபி: கலப்தாய, ஏதத்விதுரம் ருதாஸ்தே பவந்தி.

இவனுக்கு (பிரம்மத்துக்கு) ரூபம் (நமது) பார்வையிலில்லை. இவனை ஒருவரும் கண்ணால் பார்க்கிறதில்லை; ஹிருதயத்திலும், மனதிலும் அறியப்படுகிறான். இதை யறிந்தவர் அமிருதத்துவத்தை அடைகிறார்கள், என்றும்,

பிரசினோபநிஷத்து

4-வது பிரசினம், 10-வது வாக்கியத்தில்,

ஸயோஹ வைததத்சாயம சரீரமலோஹிதம் சுப்ரமக்ஷரம்,வேதயதேயஸ்து ஸௌம்ய ஸஸர்வக்ஞ ஸர்வோபவதி.

ஓ அன்புள்ளவனே ? யாராகில் அதை (பிரம்மத்தை) நிழலற்றது, அசரீரி, வர்ணமற்றது, ஒளியுள்ளது: அழிவற்றது என்றறிகிறானோ அவன் சர்வக்கியனாகவும் சகலமாகவுமாகிறான். என்றும்,

தைத்திரிய உபநிஷத்து

சிக்ஷாவல்லி 6-வது அநுவாகத்தில்,

ஸயேஷோந்தர் ஹ்ருதய ஆகாச: தஸ்மிந்நயம் புருஷோ, மநோமய: அம்ருதோஹிரண்மய:; ஆகாசசரீரம், ப்ரஹ்ம சத்யாத்ம ப்ராணாராமம் மந ஆநந்தம், சாந்தி ஸம்ருத்தமம் ருதம்.

ஹிருதயமாகிய ஆகாசத்தில் அமிர்த சுபாவத்தையும், பொன்போன்ற ஞானதேஜஸையுமுடைய மனோமயமான புரு

ஷனிருக்கிறான்; அந்தப் பிரம்மம் ஆகாசத்தைச் சரீரமாக வும், சத்தியத்தை ஆத்மாவாகவும், லீலையைப் பிராணனாக வும், ஆநந்தத்தை மனமாக உடையவனாகவும், பரிபூர்ண சாந் தத்தை யுடையவனாகவும் அமிர்தனாகவும் இருக்கிறான். என் றும்,

வாஜஸநேய உபநிஷத்து

8-வது வாக்கியத்தில்,

ஸபர்யகாச்சுக்ர மகாய மவ்ரணம் அஸ்நாவிரம் சுத்தமபாபவித்தம் கவிர்ம நீஷீபரிபூ: ஸ்வயம்பூ: யதாதத்ய தோர்த்தான் வ்யததாச்சுஸ் வதிப்ய ஸமாப்யம்.

அவரெங்கும் நிறைந்தவர், ஒளிபொருந்தியவர், எவ்வித சரீரமுமற்றவர், பரிசுத்தமானவர், பாவமற்றவர், விவேகி, மனதையாள்பவர், சகல பூதங்களுக்கும் மேலானவர், தானாய் உண்டானவர், பொருள்களை அதனதன் இயல்புக்குத் தக்க படி சாச்வதமாகவும் சமமாகவும் அமைத்தார், என்றும்,

கடோபநிஷத்து

இரண்டாம் வல்லி 12-வது வாக்கியத்தில்,

தந்துர்த்தர்ஸம் கூடமநுப்ர விஷ்டம் குஹாஹிதம், கஹ்வரேஷ்டம் புராணம் அத்யாத்மயோகாதிகமேன, தேவம்மத்யா திரோஹர் ஷசோகௌ ஜஹாதி.

தீரர்கள் அத்யாத்ம யோகத்தாலேயே காணக்கூடியதா னவும், அழுமறியக் கூடாதவும், (ஹிருதய) குஹையிலிருக்கிற வும், புகவரிதான இடத்தையுடையவும், அநாதியானவும் பிர ம்மத்தைத் தியானித்துச் சந்தோஷத்தையும், வியசனத்தை யும் விடுகிறார்கள், என்றும், பின்னும் பல உபநிஷத்துகளில் பிரம்மத்துக்கு எவ்வித சரீரமும் இல்லை என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

இப்படி விக்கிரஹாராதனையாகிய அர்ச்சைக்கு ஆதார விதிகள் ஆரியர் வேத உபநிஷத்துக்களில் இல்லை என்று வ்ய

ஷ்டமாகிற தன்றியில், புராண இதிகாசாதி கிரந்தங்களும் அர்ச்சையாகிய (விக்கிரஹாராதனையைக்) கண்டிக்கிற தென்பதற்கு இங்கு சில உதாரணங்களைக் காட்டுகிறோம்.

உத்தரகிதையில்,

அக்நிர்தேவோ த்விஜாதிநாம்;
முநீநாம் ஹ்ருதிதைவதம்;
ப்ரதிமாஸ்வப் ரபுத்தாநாம்;
ஸர்வத்ர ஸமதர்சிந:.

துவிஜர்களுக்குத் தெய்வம் அக்கினியில் முனிவர்களுக்குத் தெய்வம் ஹிருதயத்தில், புத்திகுன்றி யவர்களுக்கு தெய்வம் விக்கிரகத்தில். சமதிருஷ்டி யுடையவர்களுக்கு தெய்வம் எங்கும், என்றும்,

பாகவதம்

3-வது ஸ்கந்தம் 29 வது அத்தியாயத்தில்,

அஹம் ஸர்வேஷு பூதேஷு பூதாத்மாவஸ்திதஸ்ஸதா தமவக்ஞாயமா மர்த்ய: குருதேர்ச்சா விடம்பநம். யஸ்துஸர்வேஷு பூதேஷு ஸந்தமாத்மா நமீச்வரம். ஹித்வார்ச்சாம்பஜதே மௌட்யாத் பஸ்மந்யேவ ஜுஹோதிஸ: அஹமுச்சவைசர்த்ரவ்யை: க்ரியயோத்பம் நயாநகே | நைவ துஷ்யேர்ச்சிதோ அர்ச்சாயாம் பூதக்ராமாவமாநிந:.

நான் எப்போதும் சகல பூதங்களிலும் ஆத்மஸ்வரூபமாயிருக்கிறேன். அப்படிப்பட்ட என்னை மனிதன் அவமதித்து அர்ச்சையாகிய பரிகாசத்தைச் செய்கிருன் சகல பூதங்களிலும் ஆத்மஸ்வரூபமாயுள்ள ஈச்வரனுகிய என்னை விட்டுவிட்டு முட்டாள் தனத்தினுல் அர்ச்சையை யார் தொழுகிறுரோ அவன் செய்யும் பூஜை சாம்பலிற்கொட்டிய நெய்யிற்கொப்பாம். ஓ! நிர்த்தோஷமானவனே! சகல பூதங்களுக்கும் அவமானம் விளையும்படியாக என்னை அர்ச்சையாக்கி

உயர்ந்த பதார்த்தங்களைக்கொண்டு பூஜிப்பவனிடத்தில் நான் சந்தோஷமடையவே மாட்டேன், என்றும்,

பாகவதம்

11 வது ஸ்கந்தம் 3-வது அத்தியாயத்தில்,

ஸர்வபூதேஷுய: பச்யேத்பகவத் பாவமாத் மந: பூதாநி பகவத் யாத்மந்யேஷ பாகவதோத் தம: ஈச்வரே, தததீநேஷு, பாலிசேஷு, த்விஷத்ஸு சப்ரேமமைத்ர க்ருபோ பேக்ஷாய:கரோதி ஸமத்யம: அர்ச்சாயாமேவது ஹரே: பூஜா யச்ரத்தயே ஹதே, நததபக்தேஷு சாந்யேஷு ஸபக்த: ப்ராக்ருத ஸ்ம்ருத:.

சகல பூதங்களிலும் பகவத் பாவமாகிய ஆத்மாவையும், பகவதாத்மாவில் பூதங்களையும் யார் காண்கிறானோ அவனே பாகவதர்களில் உத்தமன். கடவுளிடத்திலும், அவர் பக்தர்களிடத்திலும், நீசர்களிடத்திலும், பகைவரிடத்திலும் பிரேமையும் நட்பும் கிருபையும் உபேக்ஷையும் யார்வைக்கிறானோ அவன் மத்திமன். சிரத்தையுடன் அர்ச்சையில் எவன் பூசை விரும்புகிறானோ அப்படிப்பட்டவன் பக்தர்களில் சார்ந்தவனல்ல பிராகிருதனென்று சொல்லப்படுகின்றான், என்றும்

சாதாதப வசனத்தில்,

அப்ஸுதேவா மநுஷ்யாணம்;
திவிதேவாமநீஷிணம்;
காஷ்டலோஷ்டேஷு மூடாணம்;
யுக்தஸ்யாத்ம நிதேவதாம்.

சாதாரண ஜனங்களுக்குத் தெய்வம் நீரில், சற்றுத்தெரிந்தவர்களுக்கு தெய்வம் ஆகாசத்தில்; மூடர்களுக்குத் தெய்வம் கல்லிலும் கட்டையிலும்; யோகிகளுக்குத் தெய்வம் அவர்களுக்குள்ளே, என்றும்.

ஸ்காந்தபுராணம் ஞானயோக கண்டம் நாடி

சக்கிராத்தியாயத்தில்,

தீர்த்தேதா நேநதபோயஜ்ஞே காஷ்டேபாஷாண கேஸதா, சிவம்பச்யதி மூடாத்மா சி

வேதேஹே ப்ரதிஷ்டித: ஸர்வத்ர வஸ்த்தி தம் சாந்தம் நபச்யதி சசங்கம், ஜ்ஞாநச்சக்ஷுர் விஹீநத்வாத் அஹோமாயா பலம்மூநே! ஆத்ம ஸம்ஸ்தம் சிவாத்யக்தா பஹிஸ்தம் யஜதே சி வம், ஹஸ்தஸ்தம் பிண்டமுத்ஸ்ருஜ்ய லிஹேத் கூர்ப் பரமாத்மந: சிவமாத்மநி பச்யந்தி ப்ரதி மாஸுநயோகிந, அக்ஞாநாம் பாவநார்த்தாய ப்ரதிமா பரிகல்பிதா: அபூர்வம் நாபரம் ப்ரஹ்ம ஸ்வாத்மாநம் ஸத்யமத்வயம், ப்ரக்ஞாந கநமா நந்தம் ய: பச்யதிஸபச்யதி, ஸர்வபூத ஸ்தாத் மயாநம் விசுத்தக் ஞாநதேஹிநம், ஸ்வாத்மந்ய பச்யத் பாஹ்யேஷு பச்யமநந்த நபச்யதி.

மூடாத்மாக்கள் தீர்த்தத்திலும், தானத்திலும், தபசி லும், யக்கியத்திலும், கட்டையிலும், கல்லிலும சிவனிருப்ப தாக நினைக்கிறார்கள். ஓ முனியே! ஞானக்கண்ணில்லாமை யாலும், மாயையின் பலத்தாலும் (அல்லவா) எங்கும் வசிக் கும் சாந்தமூர்த்தியாகிய சங்கரனைக் காண்கிறதில்லை. தனக் குள்ளே யிருக்கும் சிவனை விட்டுவிட்டு, சிவன் வெளியிலிரு ப்பதாய்ப் பூஜிப்பவன் உள்ளங்கையிலுள்ள சோற்றை யெறி ந்துவிட்டு, புறங்கையை நக்குவான்போல, யோகிகள் சிவனை த்தமக்குள்ளே காண்பார்களே யன்றி, பிரதிமைகளிற் கா ணார். அக்ஞானிகளுக்குப் பாவனார்த்தம் பிரதிமைகள் செய் யப்பட்டிருக்கின்றன. பிரம்மம் பூர்வமும் பரமுமற்றது, ஞா னசுவரூபி, அளவற்ற ஆநந்தஸ்வரூபி யென்று காண்பவனே க்ண்ணுடையவன். சர்வபூதங்களுக்கும் ஆத்மாவாகவும், பரி சுத்த ஞானத்தைச் சரீரமாகவும், சுவந்த ஆத்மாவிலே விள ங்குகிறது, அதை வெளியில் காண்கிறேனென்பவன் காண் கிறதில்லை, யென்றும், பின்னும பல கிரந்தங்களில் விக்கிர ஹாராதனை கண்டிக்கப்பட்டிருக்கிறது ஆகவே, பரமேசு வார் தூலரன்று, அணுவன்று, குறுகினவரன்று, நீண்டவர ன்று, அவருக்கொரு பரியாணமுமில்லை. அவர் அலோஹி

தர், அவருக்குச் செகப்பு முதலிய ஒரு வர்ணமுமில்லை. அவர் திரவப்பொருளன்று அவர் நீரைப்போன்ற வஸ்து வன்று' அவர் காற்றன்று, காற்று ஸம்பந்தமான பொருளு'மன்று. இவர் இரசமுமன்று, கந்தமுமன்று, இவையாவும் வெளியா ங்கமான ஜடப்பொருளின் தன்மைகள், அவர் ஒருபோதும் ஜடப்பொருளன்று; ஆனதால் இவையாவும் கிஞ்சித்தேனும் அவரிடத்திலில்லை, அவர் ஜடவஸ்துவன்று, நம்மைப்போல் ஜடசரீரத்தோடு கூடியவருமன்று, அவரிடத்தில் சாரீரிக பிராணவாயுவுமில்லை, அவரிடத்தில் முகாதி அங்கங்களுமி ல்லை. நமக்கும் சரீரத்திற்கும் எப்படி பரஸ்பர சம்பந்தமிருக் கிறதோ, மேலும் இந்த ஸம்பந்தத்தினால் எப்படி பார்க்கி றோமே, கேட்கிறோமோ, வார்த்தை சொல்லுகிறோமோ, கடவுளப்படி ஒருடலோடு கூடிய ஜீவனன்று, ஆனதால் நம் மைப்போல அவர் கண்ணினால் பார்க்கிறதில்லை. அவர் கண் ணற்றவர், காதற்றவர் ,வாக்கற்றவர், அவர்மிதமாகிய நினைப் பற்றவர், அவர் உடலில்லாத சிற்றறிவினருமன்று. அவரிட த்தில் சிற்றறிவினரைச்சேர்ந்த காரியமொன்றுமில்லை. அவர் அஸங்கர், ஸாம்ஸாரிக சுகதுக்கங்களி லழுந்தினவரன்று. அவர் ஜடப்பொருளுமன்று சிற்றறிவினையுடைய சித்துப் பொருளுமன்று, அப்படியாயின் அவர் நிழல், இருள், வெளி இவற்றைப்போன்ற ஓர் பொருளல்லாதவரா ? இல்லை. அவர் நிழல், வெளி, இருளைப்போல் ஒரு பொருளல்லாதவரன்று, அவர் ஞானத்தையே வடிவாகக்கொண்டவர், அவருக்கு ஒப் பில்லை. ஜடப்பொருளுக்கு எப்படி ஞானப்பொருளுயர்ந் ததோ அதுபோல சாதாரணமான ஞானப்பொருளைவிட ஞா னத்தையே வடிவாக உடைய பரமாத்துமா பலமடங்கு உய ர்ந்தவர். அவரது ஞானம் படைக்கப்பட்ட சித்துப்பொருளி ன்து ஞானத்தைப்போன்றதன்று. ஞானக்கிரியைகள் அவரி டத்தில் இயற்கையிலுள்ளவை. ஒரு வஸ்துவை யறியும்பொ ருட்டு அந்த எல்லாமறிந்த புருஷனுக்குப் பொறிகளுடைய ஸகாயம் ஆவசியகமில்லை. முன் நடந்த விஷயங்களை யறியும் பொருட்டும் அவருக்கு ஞாபகசக்தி ஆவசியகமில்லை; அவர்

ஒரு காலத்திலேயே யாவற்றையுமறிகிறார். நமக்கிருப்பது போல அவருக்குச் சினமில்லை, பகையில்லை, வெறுப்பில்லை, துயரமில்லை, அவருக்குச் நமக்கிருப்பதுபோல மித்ரமாகிய தயையும், நட்பும், அன்பும், சந்தோஷமுமில்லை. அவர் நன்மையே வடிவாக உடையவர், அவரது அந்த நல்ல தன்மையிலடங்கியிருக்கிற நட்பு, அருள், அன்பு, அவரிடத்தில் நின்று வெளிப்பட்டு உலகத்தை க்ஷேமமாக வைத்துக்கொண்டிருக்கின்றன; அவர் நமது மாநஸிக விருத்திபைப்போன்ற அருள் நட்பு, அன்பு இவைகளைப் பலமடங்கு கடந்தவர்; நமதன்பு அவரது அளவற்ற அன்பின் அம்சமாத்திரமாக உள்ளது.

He the Imperishable, O Gargi! to Whom the holy class among men pay reverence, is neither thick nor thin, nor short nor long. He is colourless, humourless, shadowless. He is neither darkness, nor air, nor space, wirhout company, without taste, without smell, without eyes, without ears, without speach, without finite mind, without vital beat, without erganic life, without face, He is without parallel.

---

## (69.) கடோபநிஷத்து

### 3-வது வல்லு 15-வது வாக்கியம்.

அசப்தமஸ்பர்ச மரூபமவ்யயம் ததாரஸம்
நித்யமகந்தவச்சய; அநாத்யநந்தம்மஹத: [தே.
பரம்த்ருவம் விசார்யதம் ம்ருத்யுமுகாத்ப்ரமுச்ய

பொழிப்புரை.

எது சத்தமற்றதோ, பரிசிக்கத்தக்க பண்பற்றதோ, உருவமற்றதோ, அழிவற்றதோ, இரஸநேந்திரியத்திற்கு விஷயமானபண்பற்றதோ, என்றுமுள்ளதோ மணமற்றதோ, முதலற்றதோ, ஈறற்றதோ, பெருதிலும் பெரியதோ, நித்தியமானதோ அதை அடைந்து மரணத்தின் வாயிலிருந்து நீங்குகின்றனர்.

விசேஷ உரை.

படைப்புக்கதீதமாயே ஞானத்தையே வடிவாகக்கொண்ட பரமேசுவரர் ஒருபொழுதும் செவி, மெய் முதலிய

பொறிகளுக்குப் புலப்படத்தக்கவரல்லர் அவர்உருவற்றவர், வேறுபாடற்றவர், என்று முள்ளவர், பெரியவர். அவரை அறிந்தார் மரணத்தின்வாயிலிருந்து விடுபட்டுப் பிரமமென்னும் வீட்டிற்குடிபுகுந்து, எக்காலத்திலும் மேன்பதவியைப் பெற்றுக்கொண்டிருப்பார்.

KNOWING Him Who is without sound, touch from taste, and smell, unfading, eternal, without origin, without end, greater than greatest, and true, one is freed from the mouth of death.

---

## (70.) தைத்திரிய உபநிஷத்து

ஆநந்தவல்லி 9-வது அநுவாகம் 1-வது வாக்கியம்.

யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸ:
ஆநந்தம்ப்ராம்மணோவித்வான் நபிபேதிகுதச்சந.

பொழிப்புரை.

மனதுடன் வாக்கு எதை அடையமாட்டாமல் எதிலிருந்து திரும்புகின்றதோ அந்தப்பிரமத்தின் ஆநந்தத்தை யறிந்தவர் ஒருபொழுதும் அஞ்சார்.

விசேஷ உரை.

அளவற்ற ஞானத்தையே வடிவாகக் கொண்ட பரமேசுவரன் எவ்வித அளவுக்கும் அடங்கின பொருளன்று, அவர் ஜடப்பொருளுமன்று, பரிமிதஞானத்தையுடைய சித்துப்பொருளுமன்று, ஆனதால் மிதஞானத்தையுடைய மனது அவரை முற்றும் அடையமாட்டாது. ஆனதுபற்றி வாக்கும் அவரை குறைவறச் சொல்லமாட்டாது. மனது அவரை நினைப்பதற்காகச் சென்று திரும்புகின்றது. வாக்கு அவரை வருணிக்கச்சென்று பின்னிடுகின்றது. அவ்வரம்பற்ற புருஷனை மனதிற்கு மனதென்றும், வாக்குக்கு வாக்கென்றும், எல்லா ஞானப் பொருளுக்கும் ஞானத்தைத் தருபவரென்றும், யாவற்றிற்கும் காரணமென்றும் நிச்சயித்துச் சொல்லலாகும். யார் இந்த நிர்விசேஷனுகியும் ஸர்வவியாபியாகியுமிருக்கிற ஆநந்தஸ்வரூபனைத் தம்முள்ளத்தில் ஒவ்வொருகணமும்,

நேராய் அடைந்து போாநந்தத்தைப் பெறுகின்றனரோ அவர்களது எல்லாவிருப்பங்களும் முடிவுறுகின்றன. அவர்கள் தமது மிக அன்புடைய செயற்கையால் திருப்தியடைந்து விரும்பியபேறுகளைப் பெற்றவர்களாகின்றனர். அவர்கள் அவரைச்சரணடைந்து, அவரைப்பற்றிய அடியவர்களாகி, அவருக்கன்பாகிய காரியங்களைச்செய்வதிலேயே சென்றிருப்பார்கள், அவர்கள் உலகத்தார் செய்யும் தூற்றுதலுக்காவது, விலக்கவறிய துன்பத்திற்காவது பயந்து அக்காரியங்களைவிட்டுப் பின்னிடார்கள். மிகவும் பிரியனுகிய அவருடைய கட்டளைகளை நிறைவேற்றும் நிமித்தம் உயிரைக்கொடுப்பதும் அவர்கள் விஷயத்தில் ஸாதாரணகாரியம், ஆனது பற்றி அவர்களை யார் பயமுறுத்தவல்லார்? அவர்கள் உயிரைக்கொடுத்தவனிடத்தில் உயிரை அர்ப்பிதஞ்செய்து, பயட்நீங்கினவர்களாகின்றனர். யாவரையுங்கொல்லுவதும் பயந்தருவதுமாகிய மரணமும் அவர்களைப் பயப்படுத்தமுடியாது.

Knowing the blissful nature of God Whom not able to reach speech with the mind desist, one doth not fear any.

---

## (71). கேனேபநிஷத்து

2-வது கண்டம் 1-வது வாக்கியம்.

யதிமந்யஸேஸு⁻வேதேதி தப்ரமேவாபிநூநம் தவம்வேத்த ப்ரஹ்மணோரூபம.

பொழிப்புரை.

பிரமந்தை முற்றும் அறிந்தனமென்று நினைத்திராறல் பரமத்தின் சுவநபத்தை சிறிதே அறிந்திரேன்பது நிச்சய.

விசேஷ உரை:

பிரமத்தை மிக நன்ருக அறிந்தோமென்று யார் நினைக்கிறார்களோ அவர்கள் பிரமத்தின் விஷயமாக அதி அல்பமாகவே தெரிந்துகொண்டார்கள்; இப்படிச் சொல்வதற்குக் காரணமென்னையெனின், அந்தமில்லாத ஸ்வரூபத்தையுடைய

பிரமத்தை நன்ருக அறிந்து முடியாதென்று அவர்கள் தெரிந்துகொள்ளாததுதான். அவர்கள் பிரமத்தை வெளி இந்திரியங்களுக்குப் புலப்படத்தக்க உருவத்தையுடைய ஒரு பொருளைப்போல நினைத்து திருப்தியடைந்திருக்கின்றனர்; அல்லது அதைவிட அதிசூக்ஷமமாக இருப்பதாக நினைத்தார்களாயின் உடலற்றிருக்கிற பரிமிதமாகிய ஒரு சித்துப்பொருளைப்போன்ற வஸ்துவாக நினைக்கின்றனர். அவர் உடலுள்ள வஸ்துவுமன்று, உடலற்றிருக்கிற சிற்றறிவினையுடைய ஒரு சித்துப்பொருளுமன்று என்பதை அவர்களொருபோதும் அறியக்கூடாமலிருக்கின்றனர். அவர் உடலுள்ளவராயிருக்கின் வெளி இந்திரியங்களுக்கு விஷயமாவார்; பரிமிதமாகிய சித்துப்பொருளாக விருக்கின் நமது கருத்திற்கு முற்றும் விஷயமாவார். பலர் பிரமத்திற்கு உடலில்லை என்பதை நன்ருகவறிந்திருக்கின்றனர். ஆனுல் அவர் பரிமிதமாகிய சித்துப்பொருளன்று என்பதை நன்ருகவறிந்திலர். அவர்கள் சுத்தனுகியும், முத்தனுகியும், அளவற்றவனுகியும், ஞானத்தையே வடிவாகக்கொண்டவனுயுமிருக்கிற கடவுளிடத்தில் பரிமிதமாகிய சித்துப்பொருளுக்குரிய செய்கைகளனைத்தையும் ஆரோபிக்கின்றனர்; அவர்கள் அவரிடத்தில் குரோதம், பகை, மிதமாகிய நட்பு, மிதமாகிய தயை, பக்ஷபாதத்தன்மை இவைகளிருக்கிறதாக நினைக்கின்றனர். அவரிடத்தில் இப்படிப்பட்ட பரிமிதமாகிய சித்துப்பொருளின் தன்மைகளிருக்குமாயின் அவரை நன்ருகவறியக்கூடும்; ஆனதால் அவரை முற்றும் அறியக்கூடுமென்று யார் நினைக்கின்றனரோ; அவர்கள், அவரிடத்தில் பரிமிதமாகிய சித்துப்பொருளுக்குரிய தருமங்களையும், அவர்களுக்குள் ஸ்தூலதரிசிகளாக விருப்பவர்கள் அவரிடத்து சரீரதருமங்களையும் ஆரோபிக்கின்றனர். சித்துப்பொருளெதுவோ அது வெளியிந்திரியங்களுக்கு விஷயமாகாது, அது அதிசூக்ஷமவஸ்து; அதைவிட ஸூக்ஷமவஸ்துயாரோ யாரிடத்தில் பரிமிதமாகிய சித்துப்பொருளுக்குரிய தருமங்களில்லையோ, அவரை முற்றும் எவ்விதமாக அறியவல்லோம்? இந்த ஜகத்

தின் சகல கவுசலங்களுக்கும் காரணம் யாரோ அவருக்கு அவசியமாக ஞானமிருத்தல் வேண்டும்; ஆனால் அந்த ஞானம் நமது ஞானத்தைப்போல் பரிமிதமானதா? அந்த அநந்த ஞானத்தை நமது அல்பமாகிய புத்தி மூலமாக அறியவல்லோம்? அவர் இவ்வுலகத்தைப்படைத்தார். மேலும், இதுவரையில் காத்துவருகிறார். ஆனதினால் சிருஷ்டிக்கவும் காக்கவும் வல்லமை அவரிடத்திலிருக்கிறதென்று விளங்குகிறது. ஆனால், அவருக்கிருக்கும் வல்லமை நமக்கிருக்கும் வல்லமையைப்போல பரிமிதமானதன்று. அவரது அசிந்தியமாகியசக்தியை நமது கருத்தினால் எட்டிமுடியுமா? யார் இந்தப் படைப்பின் நன்மையின்பொருட்டு தயை, நட்பு, அன்பு இவைகளையுண்டு பண்ணினாரோ அவரது அன்பு சிற்றறிவினராகிய நமது அன்பைப்போன்றிருக்குமா? அந்த ஸத்தியஸுந்தர மங்களஸ்வரூபியினது கருதிமுடியாத பெரியவன்பு யாருடைய கருத்தினால் கருதிமுடியும்.

If you think that you have known God well, then you know but little of the nature of God.

---

## (72). ச்வேதாஸ்வதர உபநிஷத்து

### 6-வது அத்தியாயம் 14-ம் வாக்கியம்.

நதத்ரஸூர்யோபாதி நசந்த்ரதாரகம்நேமா
வித்யுதோபாந்தி குதோயமக்நி:; தமேவபாந்த
மநுபாதிஸர்வம்தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி

### பொழிப்புரை.

பிரமத்தைச் சூரியபிம்பம் விளங்கச்செய்யமாட்டாது. சந்திர நக்ஷத்திரங்களாலுமாகாது. இந்த மின்னலும் விளங்கச்செய்யமாட்டாது. இந்தத் தீ எப்படி விளங்கச்செய்யும். தாமாக விளங்குகிற அவரைப்பற்றிக்கொண்டே யாவும் விளங்குகின்றன. இவையாவும் அவரது விளக்கத்தினாலேயே விளங்குகின்றன.

### விசேஷ உரை.

அபாரமாகிய இந்த பிரஹ்மாண்டத்தைப் படைத்தவர் யாரோ அவரது அறிவுக்கு அளவில்லை, வல்லமைக்கு வரம்

பில்லை, கருணைக்குக் கரையில்லை—என்றால், அவரது இயற்கை எல்லா நன்மையிலும் நிறைந்த தன்மையுடையது. அவருடைய எந்தப் பல விசித்திர செயல்களை நாம் கண்டுகளித்து அவருடைய எந்தெந்தக் கலியாண குணங்களை ஒருவாறு கிரகிக்கின்றோமோ, அவற்றில் எதினாலும் அவரைப் பரிமிதஸ்வபாவமுடையவராகக் கொள்ளக்கூடவில்லை; ஆனால், அவர் அளவற்ற அறிவினையுடையவர், அபார சக்தியையுடையவர், பூரணத்தன்மையுடையவர் என்னும் விஷயம் தர்க்கத்தினால் ஸ்தாபிக்கவேண்டியதன்று. இது மானவ ஜாதியின் ஆத்மப்பிரத்யயஸித்தமாகிய நிர்விவாதஸ்வப்ரத்யக்ஷ ஸத்தியம். யார், உலக அமைப்பிலிருக்கிற நன்னோக்கத்திற்குக் காரணராகக்கடவுள் ஒருவருளர் என்று நம்புகிறார்களோ, அவர்கள் அவரைத் தம்மைவிடப் பூரணரென்று நம்பியே தீரவேண்டும்.

இவ்விஷயம் மானவஜாதியின் ஆத்மப்பிரத்யயஸித்தமான உண்மையாயினும்; சிலர், நியாயத்தினால் நிரூபிக்கப்படாத விஷயத்தில், மநப்பூர்வமாய் நம்பிக்கைவைப்பதில்லையாகையால்; இதை ஒருவாறு நியாயபூர்வகமாக ஆராய்ச்சி செய்வது அநுபயோகமன்று. எந்த விஷயத்தைப் பூரணமாயறிய நமக்கு வல்லமையில்லையோ, அதை அபாரமென்று கொள்வது பெரும்பாலும் நமது தன்மையாகவிருக்கிறது. நாம் தேச காலங்களின் ஆதி அந்தங்களை நிச்சயிக்க சக்தியற்றவர்களாகி, அவற்றை எல்லையற்றவையென்று நம்புகிறோம். ஒரு அபரிமிதமான பெரியவஸ்துவின் அளவையறியக்கூடாமல், அதை அபரிமேயமென்று நினைக்கவேண்டியிருக்கிறது. நாம் எந்தவஸ்துவின் எல்லையையாவது அளவையாவது அறியாமல் அதைப் பரிமிதமானதென்று நிர்ணயிப்பதற்கு எவ்விதத்திலும் கூடவில்லை; ஆனால், தர்சந ஸ்பர்சநாதி இந்திரியங்களால் அறியக்கூடாத அளவினையுடைய சில வஸ்துக்களின் பரிமிதஸ்வபாவத்தை அறியவல்லோம், உண்மையே; ஆயினும், இப்படியறிவது அவற்றின் இயற்கை நமக்கு வேறு மூலங்களால் தெரியவருவதைப்பற்றியே

யன்றி வேறன்று. அதிவிசாலமாகிய கடலின் அக்கரை
நமது கண்ணுக்கெட்டாவிடினும் அது, கரையுடையதென
நம்புகிறோம். மிகுதியும் உயர்ந்திருக்கிற மலை உச்சியில் நா
மேறக்கூடாவிடினும், பூமியின் நிறை நாம் நிறைகோலால்
நிறுத்து முடியாவிடினும், இவற்றையெல்லாம் பரிமிதமான
தென்றே நம்புகிறோம். ஏனெனில் சாதாரணமாகப்புலப்ப
டாத இவற்றின் பரிமிதஸ்வரூபம் நமக்கு உபாயாந்தரங்க
ளின் மூலமாகத் தெரியவருகின்றது. பூப்ரதக்ஷணம் செய்
கிற மஹாநாவிகர்களால் நமக்குக் கடலின் எல்லை தெரிகின்
றது. உயர்ந்த மலைகளின் உன்னதமும், ஏறிப்பாராமலே
கணிதகோவிதர்களுடைய திறத்தாலறிகின்றனம். பூமியி
னது நிறையளவும் ஜடதத்வக்ஞர்களால் நிர்த்தேசிக்கப்படு
கின்றது. ஆனால், சிருஷ்டிகர்த்தாவாகிய ஜகதீசுவரனது
ஞான சக்தி கருணைகளுக்கு ஒருவிதத்திலும் அளவிடுவதற்கு
நாமெவ்வளவு தூரம் முட்டிப்பார்த்தபோதிலும் நம்மாலாக
வில்லை. இதைப்பற்றியே நாமவரை அபரிமேயர் அல்லது
பூரணர் என்று கொள்ளாதிருக்க நமக்குச் சக்தியேது?

நாம் சிருஷ்டிகாரியத்தை ஆலோசித்து சிருஷ்டி கர்த்
தாவின் ஞானம், அருள், வல்லமைகளை ஒருவாறு அறிந்து
அவற்றை முற்றுமறியச் சக்தியில்லாமல், அவரைப்பூரண
ரென்று நம்புகிறோம். மநுஷ்யஜாதி உண்டானது முதற்
கொண்டு, மனிதர்கள் இயற்கையாகவே ஜகதீசுவரது அஸ்
தித்துவக்கியான முடையவர்களாய் அவரது ஞானத்தையும்,
கருணையையும், சக்தியையும் கூடியவரையில் ஆலோசித்து
வருகின்றனர். ஆனால், ஒரு காலத்திலும் அவர்கள் கடவு
ளினது ஸ்வரூபத்தை முற்றும் அறிந்ததில்லை. யார் எந்த
க்காலத்தில் அவர் சம்பந்தமான எந்த விஷயமாகவாவது,
அநுசந்தானம் செய்யச் சென்றபோதிலும், அவர்கள் பக
வானது எல்லையைக் காணமுடியாமல் அவரைப் பூரணஸ்வ
பரென்று கீர்த்தனம் செய்கின்றனர். அறிஞரென்ன, அறி
விலிகளென்ன, நாகரிகமுள்ளவர்களென்ன, நாகரிகமற்றவர்
களென்ன, ஸாதுக்களென்ன், துஷ்டர்களென்ன அனைவ

ரும் ஒருவாய்ப்பட்டார்போல அவரை அளவற்ற ஞானமுடையவரென்றும், அநந்த சக்திசம்பந்நரென்றும், அபார கருணையுடையவரென்றும் கோஷிக்கின்றனர். நாகரிகமற்ற தேசஸ்தர்கள் எப்படி அவரைக் கருணைக்கடலென்று முறையிடுகின்றனரோ, அப்படியே, பண்டித கணங்களும் கூறுகின்றன. இணையற்ற ஞானிகளாய் இந்தத்தேசத்தில் ஆதிகாலத்திலெழுந்தருளியிருந்த ரிஷிகளாகிய நம்முன்னோரும் கடவுளை முற்றும் அறியக்கூடாதவர்களாகி, தமது தீனத் தன்மையையும் அவரது அபரிமேயஸ்வரூபத்தையும் கருதியே, அண்டபிண்ட சராசரங்களைத் தேடித்தேடித் திரிந்து பார்த்து ஞானதிருஷ்டியினாலே.

"நேதி, நேதி = இதுவன்று, இதுவன்று; யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ=அடையக்கூடாமல் எதை விட்டு வாக்கு மநதுடன் திரும்புகின்றதோ; யஸ்ஸர்வஜ்ஞ:= யார் ஸர்வக்ஞனோ: ஏஷ ஸர்வேச்வர = இவன் சர்வேச்வரன்."

என்பவை முதலிய அநேகச்ருதிகளால் வாசாமகோசரமாய் வெளியிட்டிருக்கின்றனர். அவர்களது திவ்யோக்திகளின் பொருளை நன்கறிவதும் மந்தமதிகளாகிய நம்மால் கூடாமலிருக்கிறது. இப்போதிருக்கிற சர்வதேச பண்டிதர்களும் கடவுளை, பரிமிதஸ்வரூபனென்று சொல்லக் கூடாதவர்களாகவே யிருக்கின்றனர். அவர்கள், அவர் அபரிமேய கல்யாணகுணங்களுடையவரென்னும் உண்மையை நிர்விவாதமாய் அங்கிகரித்திருக்கின்றார்கள், இதைச் சந்தேகிகளாகிய சில நாஸ்திகர்கள் மறுக்க முயலலாம். அவர்களபிப்பிராயம் அநந்த கோடிஜனங்களின் ஐயமற்ற ஐககண்டிகாபிப்பிராயத்தைப் பொய்யாக்கத்தக்கதன்று. எப்படிப்பக்ஷிகள் தன்தன் சக்திக்குத்தக்கபடி ஆகாத்தில் உயர்ந்துயர்ந்து பறந்தபோதிலும், அவற்றில் ஒன்றும் ஆகாசத்தின் அளவை எட்டமுடியாதோ; அப்படியே பண்டிதர்கள் அவரவரது சக்திக்கும், பக்திக்கும் தக்கபடி பரமாத்மாவின் ஸ்வரூப தத்வத்தை அறிந்தபோதிலும் அதை ஒருபொழுதும் யாராவது

அளவுபடுத்தியறிவது அசம்பவம். மஹான்களாகிய பேரி யோர்கள் அமோகமாய்த்திருவாய்மலர்ந்தருளிய திவ்ய சூக் திகளில் ஒவ்வொன்றின் பொருளை ஆலோசித்தாலும், கட வுளின் அப்ரமேயத்வம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகின்றது. ககோளஞானம் (Astronomy), பூகோ ளஞாநம்(Geography), ஜடதத்வஞானம் (Natural Philosophy), ஆத்மதத்வஞானம் (Mental Philosophy), அங் காதி பாதசாஸ்திரம் (Anatomy), காலவிருத்தாந்த சாஸ்தி ரம் (Chronology), இரசாயந சாஸ்திரம் (Chemistry), ஜீவ தத்துவ சாஸ்திரம் (Biologp), தாதுவர்க்க தத்துவ சாஸ்தி ரம் (Mineralogy), முதலிய எந்த ஞாநானுசந்தானம் செய் தபோதிலும் அவற்றிலெல்லாம் அவரது அளவற்ற தன்மை யே வெளிப்படுகின்றது. நாம் எந்த ஞானத்தைக் கற்கமுய ன்று அதநிலும் ஆழ்ந்துபார்க்கின், அவரது அளவற்ற கரு ணை முதலிய கல்யாணகுணங்களையே கற்கவேண்டியிருக்கி றது. இதனால் வாஸ்தவமான கல்வி அவரது கல்யாணகுணா நுபவம் செய்வதே என்று எளிதில் விளங்கும். நமது கல்வியால் நாம் சாமாந்யமாய் விஷயங்களைக்கற்பதில் உண் மையாக ஒரு மாகாத்மியமுமில்லை. எப்பொழுது அதின் மூலமாய்க் கடவுளினது எந்த நன்றேக்கமாவது, சக்திகவு சலமாவது எந்த அளவுக்குத் தெரியவருகின்றதோ, அப் பொழுது அந்த அளவுக்குத்தான் நமது கல்வி சிறப்படை கின்றது. இக்கருத்தைக்கொண்டே,

> "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ
> னற்றுடொழாஅரெனின்"

என்று நாயனாரும் சொன்னார். நாம் எவ்வளவு கல்வி யினாலும் அவரை முற்றுமறியக்கூடாதென்பது அபாதித மான உண்மை. அகண்டமாகிய ஆகாசத்தில் அத்திக்கனி கள்போல அந்தரத்தில் அமைந்து நியமனப்படி தன்தன் கதியில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற கிரஹ நக்ஷத்திராதி அண்டகோடிகளின் அளவு, கதி முதலியவற்றை அறிவிக்கி ன்ற ககோள ஞானமும், அவரது சக்தியை அளவுபடுத்தக்

கூடாததாகவிருக்கிறது. வஸ்து தத்துவஞானத்தின் மூலமாகவும், அவரது ஞானத்திற்கு எல்லை ஏற்படவில்லை. எதனாலும் அவரது கருணைக்குக்கரை காண்கிலம். நமது ஆராய்ச்சியின் அளவுக்குத்தக்கபடி அவரைப்பற்றிய நமது ஞானம், அதிகப்படுகின்றதேயன்றி, முற்றுப்பெறவில்லை.

ககனமார்க்கத்தில் விளங்கும் அவரது ஞாநசக்தியாதிகள் எப்படி தூரவீக்ஷணி (Telescope) நிர்மாணம் செய்யப்படாதபோது அளவிடக்கூடாதவையாயிருந்தனவோ, அப்படித்தான் அந்த மஹாயந்திரம் உண்டான இக்காலத்திலுமிருக்கின்றன. ஆனால், பேதமென்னவெனின்; அக்காலத்தைவிட இக்காலத்தில் இந்த அருமையான கருவியின் துணையால் கிரக உபக்கிரஹ தூமகேதாதி உத்பாத முதலியவற்றின் ஸங்க்யாதிகள் அதிகமாகத் தெரியவருதலின், அந்த அளவுக்குத்தக்கபடி அவரது கியாந சக்தி முதலியன அதிகமாகத்தெரியவந்ததென்பதேயன்றி முற்றும் தெரியவந்ததென்பதன்று. இவ்வாறே இந்த யந்திரம் இன்னும் சீர்படச் சீர்படக் ககோளமூலமாய்க் கடவுள் சம்பந்தமான ஞானம் மேலுமேலும் விருத்தியாகுமேயன்றி முற்றுப்பெறாது, எப்படித் தூரவீக்ஷணி, நபோமண்டலத்திலுள்ள அகணிதாண்ட ஜாலங்களின்மூலமாய் அண்ணலின் அபரிமேயஸ்வரூபத்தைத் தன்னாலியன்றமட்டும் விளக்குகின்றதோ, அப்படியே சூக்ஷ்மவீக்ஷணியும் (Microscope) நமக்கு அதிக சமீபமான இடங்களிலும். அதிவிசித்ரமாகிய கவுசலத்தோடுங்கூடிய எண்ணிறந்த படைப்பைக் காண்பித்து, அவரது அபரிச்சின்னத்தன்மையை ஓலமிடுகின்றது. எவ்வெவ்விடங்களை முன்னர் உயிர்களற்ற சூந்யப்ரதேசங்களாக எண்ணியிருந்தனமோ, அவ்விடங்களிலெல்லாம் கோடிகோடி ஜீவராசிகள் சுகமாய் ஜீவிகரித்துக்கொண்டிருப்பதை இப்போது இந்த யந்திரத்தின் மூலமாய்க்காண்கிறோம். நாம் அதி பரிசுத்தமானதென்றும், சிறிதும் கல்மஷமற்றதென்றும் நினைத்து பானம்செய்கிற ஜலத்தில் ஒரு பிந்துவையெடுத்து இந்தக்கருவியினால் பார்த்தாலும் அதில் விசித்ரவிசித்ரமாக எத்தனை

போ பிராணிகள் சுகமாகவாழ்ந்திருத்தல் தென்படுகின்றன. மேலும் ஒவ்வோரிலை, பூ, கனி முதலியவற்றில் இந்த யந்திர பலத்தால் லக்ஷலக்ஷமாய் ஜந்து சமூகங்கள் இருத்தல் புலப்படுகின்றன.

மேற்குறித்த கருவியைக் கொண்டு கிரமப்படி யார்பார்த்தாலும் இநத விசித்ரமான படைப்புகளெல்லாம் அவர்களுக்குத் தெரியும். கண்ணாடியினால் புலப்படுகிற பொருள்களெல்லாம் பொய்யானால் இந்தக்கருவிகளினால் புலப்படுவதும் அப்படியேயாகலாம். இந்த யந்திரசக்தியெல்லாம் அதிசூக்ஷ்மமான வஸ்துவையும் அதனதன் உருவத்திற்குத்தக்க அளவு திருஷ்டிகோசரமாக்குவதேயன்றி இல்லாததை இருப்பதாக்கக்காண்பிப்பதன்று. தூரவீக்ஷணியைப்பற்றி முன் குறிக்கப்பட்டதெல்லாம் இதற்குமொக்கும். ஜடதத்துவவித்தையும் இப்படியே உபயோகமாகிறது. அநுபயோகிகளாக முன்பு எண்ணப்பட்டிருந்த அநேக இயற்கை செயற்கைப் பொருள்களிடத்திலும் இப்பொழுது இந்தக்கல்வியின் வியாபகத்தால் அற்புதமாகிய அநேக நற்குணங்கள் தோன்றி நம்மை ஆச்சர்யத்தில் அமிழ்த்துகின்றன. முன்பு ஒரு நன்மையும் உடையனவாக நமக்குத்தோன்றாமலிருந்த கொடிகள், செடிகள் முதலியவை அநேக உபகார சாதனங்களாயிருப்பது கந்த ரூப தத்கவநூலால் தெரியவந்து, கிருதக்ஞதா ஜலம் நம்முள்ளங்களில் சுரந்து அந்த நன்மைகளை உத்தேசித்துப் பெருநட்புடன் அவற்றைப் படைத்த பேரறிவினையுடைய கடவுளினது பாதகமலங்களுக்குப் பாத்யமாகச் செல்லுகின்றது. எவற்றை நமக்குக் கெடுதி விளைவிப்பதாக முன் நினைத்தோமோ, அவை இப்பொழுது இவ்வாராய்ச்சியினால் சஞ்சீவியைப்போலக் காணப்படுகின்றது. இவ்வஸ்து தத்துவ விளக்கத்தால் சாமான்யப்பொருள்களும் நமக்கெவ்வளவோ மகோபகாரமாகின்றன! எத்தனை கஷ்டங்களையும் துயரங்களையும் தவிர்த்துச் சுகத்தை உண்டாக்குகின்றன! இவற்றிலெல்லாம் இந்த நற்குணங்களை அமைத்தவர் கடவுளே. இந்த நன்மைகளை முன்னறியாது

தும், யாவுமறிந்தவர்போலிவற்றைத் தீமைகளாகப்பாவித்து ப்பலவித குத்சிதமதங்களுக்கிடங்கொடுத்ததும் நமது மடமையேயன்றி வேறன்று. சாதாரணமான பொருள்களாகிய நீர், நெருப்பு, முதலியவை புகைக்கப்பல் புகைவண்டி முதலானதுகளைப்போன்ற பரோபகாரமாகிய காரியங்களுக்குத வுமென்று முன்பு யாருக்குத்தெரியும்? சாதாரண மண்முத லியவைகளில் குளோப்பு, லஸ்டர் முதலிய மிகவும் ரம்யமானதும் அதிக விலைபெற்றதுமான பொருள்களை அமைப்ப தற்குபயோகமாகத்தக்க தன்மை இருக்கிறதென்பதை யார் முன் அறிந்திருந்தார்? இதை எல்லாம் அறிந்து அமைத்து வைத்தவர் கருணைக்கடலாகிய வள்ளலொருவரே. மனித னது ஞானம் விருத்தி அடைய அடைய எவ்வளவு ஈச்வர னது ஞானநோக்கமும், பலசெய்கையும், அருட்குறிப்பும் வெளிப்பட்டதோ, வெளிப்படுகின்றதோ, வெளிப்படுமோ அதை அநேககோடி வருஷம் அநேககோடி நாவுகளுடன் கோஷிக்கினு மது நிறைவேறாது. மேலும், எக்காலத்திலும் எவராலும் அவற்றை அளவுபடுத்தியறிய முடியாது. ஆகையால் களவுளினது அறிவு, வல்லமை, அருள் இவைகளுக்கு அளவில்லை யென்பது நிர்விவாதமாய்ச் சித்தாந்தப்படுகிறது. அவரை அப்ரமேயரென்றும் பூரணரென்றும் நிஸ்ஸந்தேக மாகச் சொல்லலாம். அவரை வேறுவிதமாகச்சொல்ல நமக்குக்கதியில்லை. சொல்வதற்கு நியாயமுமிடந்ததராது. அவர் எப்பொழுதும் தனது மகிமையிலேயே பூரணராக விளங்கிக்கொண்டிருக்கிறார். மனிதன் ஒருகாலத்தில் அறிவிலியாயும் மற்றொருகாலத்தில் அறிஞனாயும் இருப்பதைப்போலவன்று அவரது தன்மை. அவர் எப்பொழுதும் ஞானமுடையவர், எல்லா ஞானமுமுடையவர். நிர் விகாரர். அவர் ஆதிமத்யாந்தரகிதர், அகண்டர், பூரணர், அவரது தன்மைக்கு விருத்திக்ஷயங்களில்லை. அவர் அநிர்வாச்சியர், அப்ரமேயர். ஆகவே,—

சூரிய சந்திராதிகளின் ஒளியினாலும் கடவுள் விளக்கப்படமாட்டார். ஆத்மாவினது ஞான ஒளியினால் உள்பார்வை

யில் அவர் விளக்கப்படுகிறார். உலகம் யாவும் தாமாக விளங்குகிற அந்தப்பரமேச்வரனது விளக்கத்தினால் பின் பிரகாசிப்பதாகி விளக்கத்தைப்பெறுகிறது. அவரைவிட்டு இவை பிரிந்ததாயின் நசித்துப்போகும்.

Him neither the sun manifesteh, nor the moon, nor the stars, nor these lightnings, much less fire, but all shine through Him the all-radiant ; all these shine through His Light.

---

## (73) சாந்தோக்கிய உபநிஷத்து

8-வது பிரபாடகம் 3-வது கண்டம் 4-வது வாக்கியம்.

தஸ்யஹவா ஏதஸ்யப்ரஹ்மணோநாமஸத்யம்;
நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம்
நிரஞ்ஜநம்; அம்ருதஸ்யபரம்ஸேதும்
தக்தேந்தனமிவாநலம்.

பொழிப்புரை.

அப்படிப்பட்ட இந்தப்பிரமத்தின்பெயர் ஸத்தியம்; அவர் நிரவயவர் நிஷ்கிரியர், சாந்தர்; அவர் அநிந்தநீயர். நிர்லிப்தர் முத்திக்குச்சிறந்த ஸேதுவைப்போன்றவர். மேலும் கொளுத்தப்பட்ட கட்டையிலிருந்து வெளிப்படுகிற தீயைப்போல ஸ்வப்பிரகாசர்.

விசேஷ உரை.

மிக்க தூரத்திலிருப்பவரும், மிகவருகிலிருப்பவரும், யாவற்றிலும் நிறைந்தவருமாகிய அப்படிப்பட்ட இந்தப் பிரமத்தினதுபெயர் ஸத்தியம்; ஆனதால் அவர் ஸத்தியஸ்வரூபி. அந்த ஸத்தியஸ்வரூபரைப் பற்றிக்கொண்டே இவ்வுலகம் யாவும் ஸத்தியமாகவிருக்கின்றது. அவர் ஸத்தியத்திற்கு ஸத்தியம், பிராணத்திற்குப்பிராணம், ஞானத்திற்கு ஞானம், ஆன்மாவுக்கு ஆன்மா.

அவர் ஒன்றாகிய பிரக்கியாநகநர்; அவருக்கு அவயவமில்லை, அவருக்கு ஓர் பிரிவுமில்லை அளவுமில்லை. அவர் நன்னேக்கமுடைய மாற்றக்கூடாத நியமங்களனைத்தையும் ஏற்படுத்திக்கொண்டு இவ்வுலகமாகிய அரசை நடத்திவருகிறார்

எல்லாம் வல்லவரும், யாவற்றையுமறிந்தவருமாகிய அந்தப் பூரணர் இவ்வுலக காரியங்களை நிர்வஹித்தற்பொருட்டு யாரிடத்தில் அல்லது எதனிடத்தில் எந்தச்செய்கையின் பளுவைத்தந்தாரோ, அவர் அல்லது அது அவற்றைத்தானுள்ளவும் நடத்திவருகின்றது; அவர் யாவற்றிற்கும் தலைவராகி நியந்தாவாக எங்கும் வியாபித்திருக்கின்றார். அவரது இயற்கை நியமங்களுக்குள்ளாகிய காலத்தில் சூரியபிம்பம் உதயமாகின்றது; மேகம் மழையைப்பொழிகின்றது. மரங்கள் பலனைத்தருகின்றன; மேலும் அவரது தரும நியம சாஸனத்தில் மனிதர்கள் சுவாதீனர்களாகி துர்மார்க்கத்தில் சென்றால் தருமதண்டனையாகிய பாபத்தினால் வரும் இயற்கையான அனுதாபத்தில் வருந்துகிறார்கள். அவரது சரணடைந்து பாவத்தைவிட்டு நீங்கிக் காப்பைப் பெறுகின்றனர், புண்ணியானுஷ்டானத்தைச்செய்து தருமத்தின் பயனாகிய ஆத்மாநந்தத்தினால் பவித்திரர்களாகின்றனர்; பவித்திரர்களாகி அந்தப் பவித்திரஸ்வரூபனை அடைந்து உலகக்கட்டுப்பாட்டை விட்டு நீங்கி முத்திபெற்று மேலான பதவியையடைகின்றனர். அவர் தானாக ஒருகாரியத்தையும் செய்யவேண்டியதில்லை அவர் தானாக ஒரு வருத்தத்தையும் வாங்கிக்கொள்ள வேண்டியதில்லை; அவர் நிஷ்கிரியர், சாந்தர், அவரது இச்சாமாத்திரத்தில் இவ்வுலகம் யாவும் உண்டாயிற்று; மேலும் அவர் ஒருவரது இச்சைக்குட்பட்டு யாவும் சேர்ந்து அசித்துப்பொருள்கள் கட்டுப்பட்ட தன்மையினாலும், சித்துப்பொருள்கள் ஸ்வாதீனத்தன்மையினாலும் அவரது ஆக்ஞாகைங்கரியத்தைப் புரிகின்றன. அவர் இவ்வுலகத்தின் தலைவர். ஆனால் இவ்வுலகத்திற்கதீதர்; அவர் ஒரு உலகச்செய்கையிலும் ஸம்பந்தப்பட்டவரன்று; அவர் நிரஞ்சனர், நிர்லிப்தர். அவர் பூரணஸ்வரூபர், அவரது ஸ்வரூபத்தில் குற்றமில்லை, அவர் நிரவத்தியர், அநிந்தநீயர். அந்த அழிவற்றவரது சரணடைந்தால்தான் அவரையடையலாகும்; அவரையடைந்தாற்றான் மிருத்யுபயம் நில்லாது, அவர் அழிவற்றபதவிக்குச்சிறந்த ஸேது, யார் அவரை ஞானக்கண்ணினால்

பார்க்கப்பெறுகின்றனரோ, அவர்கள் அவரைச்சுடர்விட்டெரிகிற தீயைப்போல அவர் எங்கும் விளங்குகிறதைக்காண்கிறார்கள்.

The name of God is Truth. Ho is Formless, tranquil, blameless, free, and devoib of action; Action like created beings. He is the bridge to immortality, and conspicuous as the fiame of blazing fuel.

---

## (74). தைத்திரிய உபநிஷத்து

ஆநந்தவல்லி 1-வது அநுவாகம் 1-வது வாக்கியம்.

ஸத்யம் ஜ்ஞான மநந்தம் ப்ரஹ்மயோவேத நிஹிதம், குஹாயாம் பரமேவ்யோமன்; ஸோச்நுதேஸர்வான் காமான் ஸஹப்ரம்மணா விபச்சிதா.

பொழிப்புரை.

ஸத்தியஸ்வரூபியும் ஞானஸ்வரூபியும் முடிவற்றவருமான பிரமத்தைச்சிறந்த தேகாகாசத்தில் ஆத்மாவினிடத்திலிருப்பதாக யார் அறிகின்றரோ அவர் எல்லாமறிந்த பிரமத்துடன் ஸகல போகங்களையுமனுபவிக்கிறர்.

விசேஷ உரை.

பரமேசுவரரே ஸத்தியத்திற்கு மூலம், அவரிடத்திலிருந்தே எல்லா உண்மைகளும் உண்டாகி அவரைப்பற்றிக்கொண்டேயிருக்கின்றன. அவர் ஆதிஸத்தியர், அனாதிஸத்தியர், சிரேஷ்டமாகிய ஸத்தியர், நித்தியமாகிய ஸத்தியர் ஸநாதனர்.

எது தன்னைத்தான் அறியவில்லையோ அது ஜடப்பொருள்; எது தன்னைத்தான் அறிகின்றதோ அது சித்துப்பொருள். மண், கல், உலோகம், மரம்முதலியவை தம்மைத்தாம் அறிவதில்லை, இந்தக்காரணத்தினால் இவையாவும் ஜடப்பொருள்கள்; ஜீவாத்துமா பரமாத்துமாக்கள் தம்மையும் தமக்குவேறானவற்றையும் அறிகின்றன, இந்த ஏதுவினால் அவை ஞானப்பொருள்கள்; ஆனால், அவற்றிற்குள் தாமாக

விளங்கும் பரமாத்துமாவினது அபரிமேயமான இயற்கை ஞானத்துடன் ஜீவாத்துமாவினது பரிமிதமாகிய அல்ப ஞானத்தை ஒப்பிட்டு முடியாது. பரிமிதமாகிய ஜீவாத்துமாவுக்கு ஞானமுமிருக்கின்றது, அஞ்ஞானமுமிருக்கின்றது; மேலும், கலக்கம், தவறல், ஆசை, இவைகளுமிருக்கின்றன. ஆனால் பெருமையுள்ள பரமாத்துமாவுக்கோ கலக்கம், தவறல், ஆசை, அஞ்ஞானம் இவைகளில்லை. அவர் சுத்த புத்த முக்தத்தன்மையுடையவர், அவர் நிறைந் தஞானமுடையவர்; அவர் எல்லாப்பொருள்களுக்கும்வேண்டிய அவ்வளவு அதற்குரிய பண்பையும், தன்மையையும் கொடுத்து அவற்றினது மிக மறைவான தத்துவங்களனைத்தையும் நன்றாகவும் விசேஷமாகவும் தெரிந்துகொண்டிருக்கிறார். ஆனதால் கேவலம் அவர் ஒருவரே ஞானஸ்வரூபி; ஜீவாத்துமாவினது ஞானம் அவரது ஞானத்தின் விளக்கமாத்திரமாக விருக்கின்றது.

அவர் இறுதியற்றவர்; அவரது ஞானத்திற்கு இறுதியில்லை. வல்லமைக்கு இறுதியில்லை. அருளுக்கு இறுதியில்லை, அவருக்கு இடத்திலும் இறுதியில்லை, காலத்திலும் இறுதியில்லை.

யார் இந்த ஸத்தியஸ்வரூபரும் ஞானஸ்வரூபரும் முடிவற்றவருமான பிரமத்தை மிகச்சமீபமாகத் தமக்குள்நேராக அறிகின்றாரோ; மேலும், அவரது கருத்துடன் தமது கருத்தைச்சேர்க்கின்றாரோ, அவர் அந்தப் பரமாத்துமாவோடு விரும்பத்தக்க எல்லா விஷயங்களை மனுபவிக்கிறார். சிரேஷ்டமான பிதாவாகிய பரமேசுவரர், எவ்விதமான உதாரநோக்கத்துடன் உலகத்தைப் படைத்தாரோ; மேலும், அதியல்பமாகிய கிருமிவரையில் யாவற்றினுடைய நன்மையையும் கருதுகிறாரோ அவரும் அவ்வித நோக்கத்திற்கும் கருத்திற்கும் இசைய நடக்கிறார். யாதுயாது பரமேசுவரனது திருவுள்ளத்துக்கிசைந்ததோ, அது தான் அவரது விருப்பம்; மேலும், அதுதான் அவரதுகாரியம். பரமேசுவரனது திருவுள்ளப்படி அவசியம் நிறைவேறும். ஆனதால் அவரது கருத்தை அனுசரித்தவர்களது விருப்பமும் ஸித்திபெறும். ஆகையாற்றான்

அப்படிப்பட்டவர்கள் விரும்பிய எல்லா விஷயங்களையும் பரமேசுவரனுடன் அனுபவிக்கின்றனர்; மேலும், விரும்பியதைப் பெற்று அவருடன் பின்செல்லுகிறவர்களாகி அவரது தூய்மையான ஸகவாஸத்தினால் திருப்தியடைந்திருக்கின்றனர்.

He, whe knoweth God the True, the Intelligent, and the Infinite as dwelling in his understanding that is in the most superior part of his body, enjoyeth all bliss with the all Intelligent God.

---

## (75). ப்ரஹதாரணிய உபநிஷத்து

3-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 8-வது வாக்கியம்.

தேதத்ப்ரேய: புத்ராத் ப்ரேயோவித்தாத்
ப்ரேயோ அந்யஸ்மாத் ஸர்வஸ்மாத்
அந்தரதரம் யதயமாத்மா.

பொழிப்புரை.

யாவற்றிற்கும் அதிக நெருங்கியவராயிருக்கிற எந்தப்பரமாத்துமாவோ அந்த இவர் புத்திரனைவிடவும் பிரியர், பொருளைவிடவும் பிரியர், வேறு யாவற்றைவிடவும் பிரியர்.

விசேஷ உரை.

அவரைவிட நெருங்கிய மிக அன்புள்ள நண்பர் நமக்கு வேறுயாருமில்லை.

Dearer than son, dearer than wealth, dearer than all other things, is the Being who dwelleth deepest within

---

## (76). ப்ரஹதாரணிய உபநிஷத்து

ரு-வது அத்தியாயம் அ-வது பிராம்மணம்
கக-வது வாக்கியம்.

தத்வா ஏதத்க்ஷரம் கார்க்ய த்ருஷ்டம் த்ரஷ்டு
ச்ருதம் ச்ரோத்ரமதம் மந்த்ரவிஜ்ஞாதம்
விஜ்ஞாத்ரோ தஸ்மிந்நுசல்வக்ஷரே கார்க்யாகாச
ஒதச்சப்ரோதச்ச.

பொழிப்புரை.

ஓ கார்க்கி! இவ்வழிவற்ற புருஷர் பார்வைக்குப் புலப்படார், பார்ப்பார், செவிக்குப் புலப்படமாட்டார், கேட்பார், நினைவுக்கு அகப்படார், தான் நினைப்பார், இவ்வழிவற்ற புருஷரிடத்தில் ஓ கார்க்கீ! ஆகாயம் ஓதப்புரோதயமாகப் பரவியிருக்கின்றது.

விசேஷ உரை.

*நாம் பார்ப்பது கேட்பது நினைப்பது முதலிய சகல செய்கைகளால் எந்தச்சிறிது விஷயங்களைத் தெரிந்துகொள்ளமாட்டுவோமோ அவற்றை அவர் அறிந்துகொள்ளமாட்டுவார். மேலும் நாம் எவற்றையறிய நமக்கு வல்லமையில்லையோ, அவற்றையும் அறிவார். ஆனால் அவர் யாருடையவும் பார்வைகேள்வி மநசு புத்தி இவைகளுக்கு விஷயமாகார். அவர் தன்னைத்தான் எப்படி அறிகிறாரோ அப்படி யாரும் அவரை அறியவல்லவரல்லர். அளவற்ற ஸ்வரூபத்தை, புத்தி அளவுசெய்து அறியவல்லதன்று. இவ்வெல்லையற்ற அழிவற்ற புருஷனால் ஆகாசம் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஸர்வவியாபியாகிய பரமேசுவரன் இல்லாத இடமில்லை.*

This Imperishable being, O Gargi! being Himself unseen seeth, being Himself unheard, heareth, being Himself unconceived, conceiveth, being Himself unknown knoweth. It is by Him O Gargi, all space is pervaded.

---

## (77). கடோபநிஷத்து

*உ-வது வல்லி எ-வது வாக்கியம்.*

*ச்ரவணாயாபி பஹுபிர்யோ நலப்ய:*
*ச்ருண்வந்தோபி பஹவோயந்நவித்யு:;*
*ஆச்சர்யோவக்தா குசலோ அஸ்யலப்தா*
*ஆச்சர்யோ க்ஞாதா குசலாநுசிஷ்ட:.*

பொழிப்புரை.

கேள்வியில்லாததினால் யார் பலரால் அறியப்படவில்லையோ, கேள்வியடைந்தும் யாரை அநேகர் அறியக்கூடாமலிருக்

கின்றனரோ, அப்படிப்பட்டவர் விஷயமான ஞானத்தையுபதேசிக்கவல்லவர் மிகவுமரிது. அவரையடைபவர் மிக நிபுணர், அவர் விஷயமாக விசேஷமாகக்கற்பிக்கப்பட்ட ஞானியும் மிகவரிது.

விசேஷ உரை.

*பலர் பரமேசுவரனது உண்மையான தன்மையைப்பற்றியும், அவரது உண்மையான கருத்தைப்பற்றியும், உபதேசத்தைப் பெறாததினால் அவ்விஷயமான ஞானத்தையடையக்கூடாமல் போகின்றனர். புத்திவிருத்திகள் பரிசுத்தமாகாவிடின் பரமேசுவரனது தன்மையும், அவரது திருஉள்ளமும் நன்றாகவறிதல் கூடாது. இதனாற்றான் பரமாத்தும தத்துவ ஞானிகள் எல்லாத்தேயங்களுள்ளும் எல்லா ஜாதியாருள்ளும் மிகச்சிறிய எண்ணினராகவிருக்கின்றனர். நல்ல ஞானமும் உள்ளன்புமிருப்பவர்களன்றி அவரையொருவருமறியவல்லவரலலர். மேலும் பரிசுத்தமான உள்ளத்தையுடைய பரமாத்தும ஞானிகளன்றி அவர் விஷயமாகவுபதேசிக்க யாரும் வல்லவரல்லர். அவரைப்பற்றிச் சொல்பவருமரிது; அவரையடைபவருமரிது; ஆனதால் பரமாத்துமஞானம் விசேஷஞானத்தால் பெறக்கூடியது. அவரையறியவேண்டுமென்று உள்ளுறவிச்சையும் உண்மையான முயற்சியுமிராவிடின் அவரை அறியமுடியாது. அவரைக்கருத்தில் நிறுத்தும சாதனை செய்யவும் முடியாது.*

Of Him who is not attained by many for want of oppertunities to hear about Him, and Whom many even hearing about Him comperhend not, rare is the describer, rare the knower well-instructed. The able only can know Him.

---

## (78). *தைத்திரிய உபநிஷத்து*

*7-வது அனுவாகம் 1-வது வாக்கியம்.*

*கோஹ்யேவாந்யாத் க:ப்ராண்யாத் யதேஷ ஆகாச, ஆநந்தோ நஸ்யாத் ஏஷாஹ்யேவா நந்தயாதி.*

பொழிப்புரை.

வெளியில் ஆநந்தஸ்வரூபனுகிய பரமாத்துமா இராவிடில் யாருக்குச் சரீர அசைவுண்டாகுமோ? யார் உயிர்வாழ்வர்? இவரே அவரவரது செய்கைக்குத்தக்க இன்பத்தைத் தருகிறர்.

விசேஷ உரை.

*பரமாத்மா யிருப்பதினுலேயே இந்த ஒப்பற்ற உலகம் உண்டாயிற்று. மேலும் உயிர்களனைத்தும் உயிர்வாழ்வதற்குரிய உபகரணங்களைப் பெற்றிருக்கின்றன. அவரிராவிடில் இவையொன்றும் ஆகா. யாவற்றையும் படைத்து, யாவற்றிற்கும் இருப்பிடமாகி, நன்மையையே ஸ்வரூபமாகக்கொண்ட பரமேசுவரன் இவ்வுலகத்தைப் படைக்காமலும், இவ்வித நியமங்களைக் கிரமமா யேற்படுத்தாமலு மிருக்கின், இம்மண்ணுலகமேது? இவ்வுலகமேது? இவ்வியங்கியற்கைப் பொருளனைத்துமேது? அவற்றின் கிரியாகலாபங்களும், சுகசவுபாக்கியங்களு மெவ்விடம்? யாவருக்கும் இன்பத்தைத் தருபவர் அவரே. நன்மையையே வடிவாகக்கொண்டு யாவையும் காக்குமீசன் நம்மில் யாவருடைய சுகத்தையுங் கருதி எதெதில் எவ்வகையாகிய சுகத்தை வைத்தனரோ, நாம் அதநில் அந்தந்த விதமான சுகத்தை அடைந்து கிருதார்த்தர்களாகிறோம். உலகத்தின் அழகைப்பார்த்தால், உண்பதற்கினிய அந்நரசத்தைப் பருகுதல், தாய்தந்தையாது அன்பையும் உறவினரது நட்பையும் பெறுதல், கல்விக்கற்றல், தருமம் புரிதல் இவைமுதலியவைகளில் எந்தெந்த மார்க்கத்தில் எந்தெந்த விதமாகச் சுகத்தை யடைகின்றேமோ அவையாவும் அவருடைய பிரசாதத்தினுல். ஆ ஆ! அவரது கருணை என்னே! அவர்கேவலம் விஷயங்களின் மூலமாய்ப்பலவிதமான இன்பங்களைத்தந்து நம்மைப்பாராமல் விட்டுவிடவில்லை. நாம் விரும்பின் அவர் தன்னையே நமக்குத் தந்து நமதுள்ளத்தைக்குளிரவைத்து, கருத்தை நிறைவேற்றி ஆசையைத் தணியச்செய்கிறார். சாந்தமான இயற்கையையுடைய விவேகிகள் விஷய சுகத்தில் திருத்தியடையாமல் ஒவ்வொரு கணமும் அவரையடைய விரும்புகின்றனர். அவர் விரைவில் அவர்களது உள்*

ளத்தில் குடிபுகுந்து அவர்களது கண்களிரண்டிலும் சோகத்தி ஞல் உருகிய ஜலத்தைத் துடைத்து அமுதமழைபொழிந்து உலர்ந்திருக்கும் அவர்களது உள்ளமாகிய தாமரையை மலரச் செய்கின்ருர். ஆஹா! யார் ஒரு கணப்பொழுதேனும் அமுத வடிவணுகிய அந்தப் பூரணபுருஷனை தம்முள்ளத்தில் நேராய் அடைந்து குற்றமற்ற ஆநந்தத்தைப் பெறுகின்றனரோ, அவர்களே அவரது மகிமையை அறிகின்றனர்.

Who would have lived, who would have moved, if in all Space, He the Blissful, were not? It is He that maketh happy.

---

☞ இது வரையில் எடுத்துக்காட்டிய உபநிஷத்துக்க ளால் பரப்பிரம்மஸ்வரூப லக்ஷணங்கள் விவரமாகும். இனி இப்படிப்பட்ட பரப்பிரம்மத்தை அடைபவர்களுக்கே இக பரசுகம் கிடைக்குமென்று கோஷிக்கின்ற உபநிஷத்துகளில் சிலவற்றை இதனடியில் காட்டுகின்றனம்.

## (79). தைத்திரீய உபநிஷத்து.

ஆநந்தவல்லி 7-வது அநுவாகம் 1-வது வாக்கியம்.

ரஸோர்வைஸ:; ரஸக்ம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீபவதி.

### பொழிப்புரை.

பரமாத்மா ஆநந்தகாரணன். ஜீவாத்மா ஆநந்த காரணனை யடைந்து ஆநந்தத்தைப் பெறுகின்றது.

### விசேஷஉரை.

பரமாத்துமா அபிராகிருதமான வஸ்து. இந்த அபிரா கிருத வஸ்துவிலிருந்து ஜனித்த ஜீவாத்துமாவும அப்ராகி ருதவஸ்து. ஆவலே, பரமாத்துமாவாகிய அப்ராகிருத வஸ்துவிடத்தில், ஜீவாத்துமாவாகிய அப்ராகிருத வஸ்து வும் சேர்ந்தால்மாத்திரம் அது தன்மயமாகி பேரானந்தத் தையடையுமேயன்றி உலக ஆசாபாச அர்ச்சைகளிற் சேர் வதினுல் புனிதமாகிப் பேராநந்தத்தைப்பெருது.

எப்படியெனில்

அக்கினியிலிருந்து பிறக்கும் அடுப்புக்கரியின் வருணம் கறுப்பு, அதை சிவப்பு பச்சைமுதலான மற்றவருணங்களுடன் கலக்கினால், அந்தச்சிவப்பு பச்சைமுதலான வருணங்களையும் கருப்பாக்கி அந்தக்கரியும் முன்போலக்கறுப்பாகவே இருக்கும். அப்படிக் கறுப்பாக இருக்கும்கரியைஅதன் பிறப்பிடமாகிய அக்கினியில் போட்டால், உடனே அதன் கறுப்பு வருணமாறி அக்கினிமயமாவது பிரதியக்ஷம்; அதுபோலவே அப்ராகிருதமாகிய ஜீவாத்துமாவும் அப்ராகிருதமாகிய பரமாத்துமாவையடைந்தாலன்றி பேரானந்தத்தைப் பெற வேறுவழியில்லை. ஆகவே,

எந்த ஜீவன் நன்மையே வடிவாகக்கொண்ட அவரது பிரேமரஸத்தையடைந்து பேரானந்தத்தில் மூழ்கியிருக்கின்றதோ, அந்த ஜீவனது வாக்கு அவரை ரஸஸ்வரூபனென்று சொல்லி எழுகின்றது.

He is an object of enjoyment. Obtaining him who is the odject of enjoyment, one becometh happy.

---

## (80). கடோபநிஷத்து

4-வது வல்லி 2-வது வாக்கியம்.

பராச: காமாநநுயந்தி பாலாஸ்தேம்ருத்யோர் யந்தி விததஸ்யபாசம்; அததீரா அம்ருதத்வம் விதித்வாத்ருவமத்ருவேஷ்விஹ நப்ரார்த்தயந்தே.

பொழிப்புரை.

சிற்றறிவினரானவரும் புறம்பான விஷயங்களில் விருப்பமுடையவர்களாகி மிருத்தியுவின் விஸ்தீரணமான பாசத்தில் கட்டுப்படுகின்றனர். விவேகிகள் நித்தியமாகிய அழிவதற வஸ்துவையறிந்து அநித்தியமான பதார்த்தங்களுக்குள் ஒன்றையும் விரும்புவதில்லை.

விசேஷ உரை.

யார் வெளி விஷயங்களை மாத்திரம் பார்க்கின்றனரோ, யார் தமது ஸ்வரூபத்தையும்; தமதந்தராத்துமாவின் ஸ்வரூ

பத்தையும் அறியக்கூடாதவர்களாகவிருக்கின்றனரோ, அவர்கள் வெளிவிஷயங்களில் விருப்பமுள்ளவர்களாகித் தமது பிரவிருத்திகளுக்கே அடிமைகளாகி விஸ்தீரணமாகிய மிருத்யுபாசத்தில் கட்டுப்படுகின்றனர் விஸ்தீரணமாகிய மிருத்தியுவென்பது இந்தச் சடஜகத்தும் சாரீரிகத்தன்மையுமாம். மேலும் மிருத்தியுவின் பாசமென்பது இந்தக்காரியகாரணத்தொடர்ச்சியுடன் கூடிய இயற்கை நியமனங்கள். ஜடஜகத்தும் பசுத்தன்மையும், காரியகாரணத்தொடற்சியுடன் கூடிய பிராகிருதிக நியமங்களாகிய மிருத்தியுபாசத்தில் கட்டுப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட சிறந்த மானிடப்பிறவி பிறந்தும் யார் ஸம்ஸாரத்தினது விஷயவிச்சையில் மூழ்கித் தம்மிஷ்டப்படி பிரவர்த்திக்கிற சிறுவர்களைப்போல வியவஹரிக்கின்றனரோ அவர்களும் மிருத்தியுபாசத்தில் கட்டுப்பட்டவர்களாகி தமது ஸ்வாதீனத்தை விட்டுப் பிரஷ்டர்களாகிப் பரமபதத்திற்கும் சாமகதிக்கும் வெகுதூரத்திலிருக்கின்றனர். அறிஞர்கள் அழிவற்ற தன்மையுடையவருடன் ஆன்மாவின் நித்தியமான செயற்கையையறிந்து இவ்வநித்தியமான சம்சாரத்திற்குள் ஒன்றையும் விரும்புவதில்லை. அவர்கள் தருமத்தின் நியமத்தை அனுசரித்து தமது பிரவிருத்திகளைத்தமது வசப்படுத்திக்கொண்டு உலகத்தந்தையினது திருவுள்ளத்திற்கு உகப்பான விஷயங்களை முடிக்கக்கூடுமாறற்றுன் முற்றும் திருத்தியடைந்திருக்கின்றனர்.

The puerile pursue external objects and are entangled in the wide-spread meshes of death. (1) The wise there-fore knowing the eternal, want not any among things perishable in the world. (2) Spiritual death.

---

## (81). ப்ரஹதாரணிய உபநிஷத்து

க-வது அத்தியாயம் ச-வது பிராம்மணம் அ-வது வாக்கியம்.

ஸயோந்யாபாத்மந: ப்ரிய ம் ப்ருவாணம்
ப்ரூயாத் ப்ரியம்ரோத்ஸ்யதீதி ஈச்வரோஹ
ததைவஸ்யாத்.

பொழிப்புரை.

யார் பரமாத்துமாவை விட வேறனதைப் பிரியமானதே ன்று சொல்லுகிறரோ அவரை நோக்கி பிரமப்பிரியவாதி உங்களு க்குப் பிரியமானது அழியுமென்று சொல்லுகிறர். அவநக்கிப்படிச் சொல்ல அதிகாரமுண்டு. உண்மையில் அவர் சொல்லுகிறபடியே ஆகின்றது.

விசேஷ உரை.

மக்கள் மனைவி பொருள் சுற்றத்தார் யாவும் அநித்தி யம். இந்த சம்சாரத்தினது சகல பிரியவஸ்துக்களிலிருந்தும் ஒரு காலத்திலில்லாவிட்டாலும் வேறொருகாலத்தில் நீங்க வேண்டிவரும், ஆனல் யாவற்றைவிட அதிக நெருங்கிய வரும் மிக அன்பிற்குரியவருமான பரமாத்துமாவை விட்டு இம்மையிலும் மறுமையிலும் ஒருபொழுதும்நீங் குவதில்லை. பரமேசுவரனுக்கு வேறனதை அன்பிற்குரியதென்று யார் உரைக்கின்றனரோ அவரன்புசெய்வது அவசியம் அழியுமெ ன்னும் வாக்கியம் ஐயமற்றது. விடயவிருப்பத்தில் விசேஷ மூடத்தன்மை பெற்றிருக்கிறவர்களுக்கும் இப்படி உபதேசி க்கவேண்டிய அதிகாரம் ஒவ்வொரு ஞானியாகிய பிரமோ பாசகருக்குமுண்டு. மேலும் யார் அவருடைய உபதேசத் தைப் பெற்றுக்கொள்ளவில்லையோ அவர்களுக்குத் துயர மூண்டாகின்றது. யாவருக்கும் அதிகநெருங்கியவரும், நன் மையே வடிவாகக்கொண்டிருக்கிறவருமான பரமாத்துமா வே யாவற்றிலும் அதிகப்பிரியமானவர், அவரிடத்து அன் புசெய்யின் அவரது அன்பிற்குரிய எல்லாவற்றினிடத்தும் அன்புசெய்தல்வேண்டும், மேலும் இவ்வுலக சம்சாரத்தின் நன்மையின் நிமித்தம் அவர் யாரா ரிடத்தில் தகுந்த பிரீதி யும் நட்பும் செய்யும்படி கட்டளையிட்டிருக்கின்றரோ அவர் களிடத்தில் தகுந்த பிரீதியும் நட்பும் வைக்கவேண்டும். ஆனல் பரமாத்மாவினிடத்தில் தவிர வேறு யாதொரு பொ ருளினிடத்தில் அதிக அன்புவைத்து அதில் மூழ்கிக்கிடப் பது தூய்மையுடன் கூடிய அன்பின் ஸ்வரூபமன்று.

To him who acknowledgeth any other as the object of his love than God, let him that loveth God say, "Your beloved shall perish", To tell this he has a right and his words shall come to pass.

---

## (82). தைத்திரிய உபநிஷத்து

### ஆநந்தவல்லி 7-வது அனுவாகம் 2-வது வாக்கியம்.

யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருச்யே அநாத்ம்யே அநிருக்தே அநிலயநே அபயம் ப்ரதிஷ்டாம்விந்ததே; அதஸோஅபயம்கதோபவதி

பொழிப்புரை.

வெளியிந்திரியங்களுக்குத் தோன்றாதவரும், உடலற்றவரும் சொல்லுக்கடங்காதவரும், ஆதாரமற்றவருமாகிய பிரமனிடத்தில் உபாசகன் எப்பொழுது பயமின்றி தியானத்தினால் நிலைபெறுகிறனோ அப்பொழுதவன் பயமற்றவனாகிறான்.

விசேஷ உரை.

*குழந்தைகளுக்கு அச்சமுண்டாயின், தாயின் மார்பையடைந்து அச்சத்தை நீக்கிக்கொள்வதுபோல நாம் அமுதவடிவனாகிய புருஷனது எங்கும் பரவியிருக்கிற மார்பைப் பற்றிக்கொண்டு கவலை மிகுதியாக நிறைந்த இந்த ஸம்ஸாரத்தின் கவலையைவிட்டுக் காப்பையடைகிறோம், அப்பொழுது நாம் கவலையற்றவர்களாகி, தான் புலப்படாமல் யாவற்றையும் புலப்படுத்திக் கொள்ளுகிறவரும், தனக்கோராதாரமுமின்றித் தான் யாவற்றிற்கும் ஆதாரமாயும் ஆசிரயமாயு மிருப்பவருமாகிய பரமேசுவரரொருவரையே நண்பரெனவும் துணைவரெனவும் அறிந்து அவரிடத்து நம்மைச் சமர்ப்பித்திருக்கிறோம். மேலும் அவரது கட்டளையின்படி செல்லுகிறவர்களாகி விருப்பத்துடன் அவராற்காட்டப்பட்ட வழியில் சஞ்சாரம் செய்துகொண்டிருக்கிறோம்.*

When, in this invisible, incorporeal, indifinable, and abodeless Being, one attaineth a station of fearlessness, he becometh devoid of fear.

---

(83). ப்ரஹதாரணிய உபநிஷத்து

அ-வது பிராம்மணம் 5-வது வாக்கியம்.

யோதாஏகததக்ஷரம் கார்க்ய விதித்தவாஸ்மால் [லோகாத்
ப்ரைதிஸக்ருபண:; அத ஏத தக்ஷரம் கார்கி
விதித்வாஸ்மால்லோகாத ப்ரைதிஸப்ராஹ்மண:.

பொழிப்புரை.

ஓ கார்க்கீ யார் இவ்வழிவற்ற புருஷனையறியாமல் இவ்வுலகத்தைவிட்டு நீங்குகின்றனோ அவன் அதிதீனன். ஓ கார்க்கீ! யார் இந்த அழிவற்ற புருஷனையறிந்து இவ்வுலகத்தைவிட்டு நீங்குகிறரோ, அவரே பிராம்மணர்.

விசேஷ உரை.

பூமண்டலத்தில் எத்தனை உயிர்களிருக்கின்றனவோ, அவற்றில் மனிதனே பிரம ஞானத்தைப் பெறுதற்கு அதிகாரி. சிறப்புள்ள யாவற்றிலும் சிறந்த கடவுளையும், அவரால் நியமிக்கப்பட்ட தருமங்களின் தொகுப்பையும், அறியும் அதிகாரம் இருக்கிறதென்றே மனிதன் பெயருக்கு இவ்வளவு சிறப்பிருக்கின்றது. யார் இந்த மிகச்சிறந்த மனிதப்பிறப்பைப் பெற்றும், அவரை அறியக்கூடாமல் போகின்றனரோ அவர்களிலும் நிர்ப்பாக்கியர்கள் வேறு யாரிருக்கின்றனர்? மிகுந்த அன்பிற்குரிய கடவுளையறிந்து சொல்லிமுடியாவாநந்தத்தை அனுபவித்தும், அச்சுவையை கிரகிக்கவும் யார் சக்தியற்றவனாகிறனோ அவனிலும் தீனன் யாவன்? அவனே இரக்கத்துக்குப்பாத்திரனாகிய அதிதீனன், அவனது பிறப்பு பளுவைச் சுமக்கும் பசுபிறப்பு. மேலும் யார் அவரை யறிந்து இவ்வுலகத்தைவிட்டு அப்புறப்படுகின்றாரோ; அவரே மிகுந்த பாக்கியவான், அவரே மனிதர்களுள் சிறந்தவர். அவரே பிராம்மணர்.

He, O Gargi! who not knowing this imperishable Being departeth from this world, is indeed an object of composision But he O Gargi, who knowing this imperishable Being depar, teth from this world, belongeth to the holy class among men.

## (84). ப்ரஹதாரணிய உபநிஷத்து

௩-வது அத்தியாயம் ௪-வது பிராம்மணம் ௮-வது வாக்கியம்.

*ஆத்மானமேவ ப்ரியமுபாஸீத; ஸய ஆத்மான மேவ ப்ரியமுபாஸ்தே நஹாஸ்ய ப்ரியம் ப்ரமாயுகம்வதி.*

பொழிப்புரை.

பரமாத்துமாவை அன்பாக உபாசித்தல் வேண்டும். யார் பரமாத்துமாவை அன்பாக உபாசிக்கிறரோ அவருக்கன்பானது (பரமாத்துமா) ஒருபோதும் அழிவதில்லை.

விசேஷ உரை.

*யார் நமது கருத்தாகிய நிலத்தில் அன்பென்னும் மலரின் அதிக அழகிய மொக்கையுண்டாக்கிறரோ, முயற்சியினல் அதை மலரச்செய்து அதனுலனை அருச்சிக்தல்வேண்டும். அழிவற்ற பரமேசுவரர் யாருக்குப் பிரியமானவரோ, அவருக்குப் பிரியமானது ஒருபொழுதும் அழிவதில்லை. அவருக்குப் பிரியமான கடவுளிடத்திலிருந்து அவர் எப்போதாயினும் பிரிவார்களென்பது சம்பவமன்று.*

God should be worshipped as an object of love. He who worshippeth this Being, as an object of love, the object of his love perisheth not.

---

## (85.) சுவேதாசுவதர உபநிஷத்து

*3-வது அத்தியாயம் 20-வது வாக்கியம்.*

*நாராயணம்*

*அநுவாகம் 1-வது வாக்கியம்.*

*அணோரணீயான் மஹதோமஹீயா நாத்மா குஹாயாம் திஷ்டே அஸ்யஜந்தோ:, தமக்ரதும் பச்யதி வீதசோகோ தாது ப்ரஸாதாந்மஹிமா நமீசம்.*

பொழிப்புரை.

பரமாத்துமா சிறிதிலும் சிறிது. பெரிதிலும் பெரிது. அவர் உயிர்களினது உள்ளங்களில் உறைந்துகொண்டிருக்கிறார். துயர மற்றவர்கள் விஷயபோகவிருப்பமற்ற கடவுளையும், அவரது மகிமையையும் அவரது அருளால் பார்க்கின்றனர்.

விசேஷ உரை.

*ஜீவாத்துமாவிலும் அவர் மிகச்சூக்குமமானவர், மேலும் எல்லையற்ற விசும்பிற்கும் அவர் பெரிதானவர். அவரைப் பார்ப்பதற்குத் தூரத்தில் செல்லவேண்டியதில்லை; அவர் நம்மிலும் நம்முள்ளத்திலும் கருத்திலும் குடியிருக்கிறார். அவர் போகவிருப்பமற்றவர், நித்திய திருத்திபெற்ற ஆநந்தஸ்வரூபி. எந்த அடியார் அவரைத்தரிசிக்கிறாரோ, அவருக்குப் பிறகு துயரம் உண்டாவதில்லை; அவரது அன்பில்மூழ்கினவருக்குப் பிறகு ஒரு குறைவும் இருப்பதில்லை.*

He is subtler than the most subtle, greater than the most great, and is seated in the work of creatures. The man who seeth, through His grace, Him and His glory who is without worldly desires, grieveth not.

---

(86.) ஈசோபநிஷத்து

*6-வது வாக்கியம்.*

*யஸ்துஸர்வாணி பூதான்யாத்மந்யே வாநுபச்யதி; ஸர்வபூதேஷு சாத்மாநந்த தோநவிஜுகுப்ஸதே.*

பொழிப்புரை.

யார் பரமாத்துமாவினிடத்தில் எல்லாப் பொருள்களையும், எல்லாப்பொருள்களினிடத்தும் பரமாத்துமாவையும் பார்க்கின்றாரோ அவர் ஒருவரையும் அவமதிக்கார்.

விசேஷ உரை.

*பரமாத்துமாவினிடத்தில் எல்லாப் பொருள்களும் நிலைபெற்றிருக்கின்றன; அவர் எல்லாப்பொருள்களுக்கும் ஆதா*

ரமானவர். அவரைப்பற்றிக்கொண்டே யாவுமிருக்கின்றன. யார் பரமாத்மாவை எல்லாப்பொருகளுக்கும் ஆதாரமானவ ரென்றறிகிருரோ ; மேலும், எல்லாப்பொருள்களிடத்திலும் அவர் வியாபித்திருத்தலைப் பார்க்கின்ருரோ அவர் பிறகு யாரையும் அவமதிக்கார். அவர் நாமனைவரும் அந்த நித்திய புருஷனது பிள்ளைகளெனப் பார்க்கிருர் ; யாவற்றிற்கும் நியந்தாவாகிய அந்த உலகரக்ஷகனுல் யாரும் அவமதிக்கப் படத்தக்கவரும், தள்ளப்படத்தக்கவரும் அல்லர்; ஆனதால் அவர் ஒருவரையும் அவமதிப்பதும் வெறுப்பதும் இல்லை. அவரவரது உயர்ந்த தாழ்ந்த குணங்களுக்குத் தக்கபடி யாராரிடத்தில் எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டு மோ அந்தந்த விதமாக நடந்துக் கொள்ளுகிருர்.

He who seeth all in God and God in all, despiseth not any.

---

## (87.) சாந்தோக்கிய உபநிஷத்து

7-வது பிரபாடகம் 23-வது கண்டம் 1-வது வாக்கியம்.

யோவை பூமா தத் ஸுகம் நால்பேஸுகமஸ்தி ; பூமைவஸுகம் பூமாத்வேவ விஜிஜ்ஞாஸிதவ்ய:.

### பொழிப்புரை.

யார் மஹானே அவர் சுகருபி, அற்பசுக முடையவரன்று. மஹானே சுகருபியானதால், சுகருபியே அறியப்படத்தக்கவர்.

### விசேஷ உரை.

மனிதர்களினது கருத்து பரிமிதமாகிய அற்பப் பொரு ள்களில் ஒருபொழுதும் சுகத்தை யடையமாட்டாது. மஹா ஞகிய பரமாத்துமாவினிடத்தே நமது சுகம், அற்பவிஷயங் களில் சுகமில்லை. விஷய சுகங்களில் ஆன்மா திருத்தியடை யாது. விடயசுகமனைத்தும் ஒரு கணப்பொழுதினது, மிக வும் அற்பமானது. சிறிது காலத்திலது தருமத்திற்கு அநு கூலமாம், சிறிது காலத்திலது பிரதிகூலம் ; சிறிது காலத்தி லது தள்ளத்தக்கது, சிறிது காலத்திலது கொள்ளத்தக்கது.

*மஹாநாகிய ஈசுவரரே நமது திருத்திக்கு இடம், நமது பரிசுத்தமாகிய சாந்தி நிகேதநம்; ஆனதால், அவரைத்தேடுங்கள். அவரை யறியவிரும்புங்கள்.*

He who is infinite is blissful ; in things finite is no bliss; the Infinite alone is blissful. The knowledge of the Infinite therefore is to be desired.

---

## (88.) ப்ரஹதாரண்ய உபநிஷத்து

*6-வது அத்தியாயம், 4-வது பிராம்மணம் 1—வது வாக்கியம்.*

*ப்ராணஸ்யப்ராண முதச்சக்ஷுஷச்சக்ஷு ருதச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் மநஸோயே மநோவிது ; தே நிசிக்யுர்ப்ரஹ்மபுராணமக்ரயம்.*

பொழிப்புரை.

யார் பிரமத்தை உயிருக்குயிராகவும், கண்ணுக்குக்கண்ணாகவும், செவிக்குச்செவியாகவும், மநதிற்கு மனதாகவும் அறிகின்றரோ ; அவர்களே, புராதனனும் மேலானவனுமான பிரமத்தை உண்மையாக அறிகின்றனர்.

விசேஷ உரை.

*யார் இவரையாவருக்கும் ஞானத்தைக்கொடுப்பவரென்றும், ஆதாரமானவரென்றும் அறிகின்றனரோ அவர்கள் இவரை நிச்சயமாக அறிகின்றனர்.*

They certainly know the ancient God, the first of all, who know Him as the Life of life, the Mind of mind, the Eye of eye, Ears of ears.

---

## (89.) முண்டகோபநிஷத்து

*3-வது முண்டகம் 2-வது கண்டம் 5-வது வாக்கியம்.*

*ஸம்ப்ராப்யே நம்ருஷயோஜ்ஞானத்ருப்தா : க்ருதாத்மா நோவீதராகா : ப்ரசாந்தா :; தேஸர்வகம் ஸர்வத : ப்ராப்யதீராயுக்தாத்மாந: ஸர்வமேவா விசந்தி.*

பொழிப்புரை.

இருஷிகள் இவரை நன்றாகவடைந்து ஞானத்தினால் திருப்தியடைகின்றனர், பரிசுத்தமான உள்ளமுடையவராகின்றனர், இராகாதி தோஷமற்றவராகின்றனர், இந்திரிய சஞ்சலமற்றவராகின்றனர். ஒருவழிப்பட்ட கருத்தையுடைய அந்த விவேகிகள் யாவற்றிலும் நிறைந்திருக்கின்றவரை எல்லாவிடங்களிலும் அடைந்து யாவத்திலும் ஞானத்தினாற் பிரவேசிக்கின்றனர்.

விசேஷ உரை.

*எந்தவிவேகிகள் ஞானத்தினால் அந்தசத்தியஸ்வரூபனை யறிந்து அன்பினால் அவரது மங்களஸ்வரூபத்தை பூஜித்து, அவரது நல்லநோக்கத்துடன் தமது நல்ல விருப்பத்தைச் சேர்த்து ஒருவழிப்பட்ட கருத்துடையவராகின்றனரோ; அவர்கள் யாவற்றிலும் நிறைந்து எல்லா நன்மைகளுக்கும் காரணராயிருக்கிறவருடைய சேர்க்கையைப்பெற்று, யாவற்றிலும் பிரவேசித்து யாவற்றினுள்ளும் அன்பையே வடிவாக உடைய அந்த நித்தியவஸ்துவைப் பார்க்கின்றனர்.*

They the sages who have got Divine knowledge, who are wise, are without fondness for objects of this world, are tranquil of heart, and have minds devoted to God, having obtained Him every where Who is every where, comprehended by knowing God the end with which all things have been created is known all things.

---

## (90.) சுவேதாசுவதர உபநிஷத்து

### 3-வது அத்தியாயம் 12-வது வாக்கியம்.

*ததோயதுத்தரதரம் ததரூபமநாமயம்;*
*யஏதத்விதுரம்ருதாஸ்தேபவந்தி*
*அதேதரே துஃகமேவாபியந்தி.*

பொழிப்புரை.

யார் காரணத்திற்குக்காரணரோ, அவர் உருவற்றவர். நிராமயர். யார் இவரை யறிகின்றனரோ அவர் அழிவற்ற பதவியைப் பெறுகின்றனர்; பிறர் துயரத்தையே அடைகின்றனர்.

விசேஷ உரை.

இவ்வுலகத்தில் எந்தச்சகலகாரணங்களிலிருந்துஅந்தச் சகல காரியங்களுமுண்டாகின்றனவோ, அந்தச்சகல காரணங்களுக்கும் காரணர்பிரமம்; அவர் உருவற்றவர், நிராமயர். யார் இவரை ஞானக்கண்ணினால் பிரத்தியக்ஷப்படுத்திக் கொள்வதினால் இவருடன் பிரியாத சம்பந்தத்தை உண்டாக்கிக்கொள்ளுகின்றனரோ அவர்கள் அழிவற்றபதவியைப் பெறுகின்றனர். பிறர் ஒருவரும் இந்தசம்சாரத்துயரத்தைக் கடக்கவல்லவரல்லர்.

He, who is the Cause of causes is Formless and without pain and disease. They who know Him become immortal, others go to misery.

---

## (91). ப்ரஹதாரணிய உபநிஷத்து

ரு-வது அத்தியாயம் அ-வது பிராம்மணம்

கக-வது வாக்கியம்.

யோவா ஏததக்ஷரம் கார்க்ய விதித்வா அஸ்மின் லோகேஜுஹோதி யஜதேதபஸ்தப்யதே பஹூந்நிவர்ஷ ஸஹஸ்ராண்யந்த வதேவாஸ்யதத்பவதி.

பொழிப்புரை.

ஓ கார்க்கீ! யார் இவ்வழிவற்ற புருஷனை யறியாமல் அநேகாயிரம் வருஷங்கள் ஓமம், வேள்வி, தவம் இவைகளைச்செய்யினும் அவர்களுக்கு அழிவுள்ள பயனே உண்டாகின்றது.

விசேஷ உரை.

மங்களவடிவனாகிய பரமேசுவரனை உள்ளத்தில் நேராக அறிந்து, அவரிடத்து அன்பை யுண்டாக்கிக்கொள்ளவேண்டும். அவரது மகிமையை அறிந்தும் கேள்வியுற்றும், அவரது திருப்பணிசெய்வதில் சேரவேண்டும்; அப்படியாயின் அவரது சேர்க்கையாலுண்டாகிற அழிவற்ற பயனைப்பெறலாகும். அவரை அறியாமல் மனதை வேறே இடத்தில் செ

னுத்தி, விடயங்களில் விருப்பமுற்றவராகி வெளியாடம்பரங் களுடன் இரவும் பகலும் அவரை உபாசிக்கினும், அல்லது உலகத்திற்கு மகிழ்ச்சியுண்டாக்கத்தக்க வினை வேள்வி முதலிய செய்கைகளிலேயே உடலையும் மனதையும் விழுந்திருக்கும்படி செய்யினும், அல்லது மானம்மரியாதை யசஸ- கீர்த்தி இவைகளைப் பெறவிரும்பித் தமக்குள்ள பொருளையெல்லாம் செலவழிக்கினும்,கடவுளிடத்து அவருக்குச் சிறிதும் சம்பந்தமுண்டாகமாட்டாது, ஆனதால் அவருக்கு அழிவற்ற பயன் உண்டாவதில்லை. யார் கடவுள் விஷயமான ஞானத்தினாலும் அவரிடத்துள்ள அன்பினாலும், அவருக்கன்பாகிய காரியங்களைச் செய்யவெண்ணி அவரால் நியமிக்கப்பட்ட தருமங்களைப்புரிகின்றனரோ, அவரிடத்தில் தருமத்தின் எல்லாலக்ஷணங்களும் கிடைக்கின்றன. மேலும் அவர்கள் என்றும் மிகுதியும் விரும்பத்தக்க அழிவற்ற பிரம்மாநந்தத்தை அநுபவித்துக்கொண்டேயிருக்கின்றனர்.

He, O Gargi, who not knowing this imperishable Being, performeth ritual observances and practises austerities in this world for many thousands of years, obtaineth fruits but transitory.

---

## (92). சாந்தோக்கிய உபநிஷத்து

8-வது பிரபாடகம 15-வது கண்டம 2-வது வாக்கியம்.

*மாஹம் ப்ரஹ்ம நிராகுர்யாம் மாமாப்ரஹ்ம நிராகரோத நிராகரணமஸ்து.*

பொழிப்புரை.

பிரமம் என்னைவிடவில்லை, நான் பிரமத்தை விடாமலிருப்பேனாக. என்னால் பிரமம் விடப்படாமலிருப்பாராக.

விசேஷ உரை.

அருள்வடிவனாகிய உலகத்தந்தை ஒருகாரியத்திலும் நம்மை மறந்திருக்கவில்லை. நாம் ஒவ்வொரு நிமிஷமும் அவரது அருள்வாரியைப்பெறுகிறோம். மேலும் ஒவ்வொருதரம் மூச்சை உள்ளே கொள்ளுகையிலும் அவரது அருளைன்

னும் காற்றையே உட்கொள்ளுகிறோம். அவர் நம்மை ஒரு காரியத்திலும் மறந்திருக்கவில்லை, ஒருகாலத்திலும் மறந்திருக்கவில்லை. அவர் நம்மை எப்பொழுதும் அருட்பார்வையால் பார்க்கிறார். ஆனதால் நாம் அவரை மறவாமலிருப்போமாக, அவரது செய்நன்றியையறிந்து, எப்பொழுதும் அவருடைய அருளாகிய அமுதத்தைப் பருகுவோமாக. அவர் அருளியிட்ட கட்டளைகளனைத்தையும் சந்தோஷமாக நிறைவேற்றுவதில் பிரவர்த்திப்போமாக.

Let me not forsake God as God has not forsaken me. Let Him not be abandoned by me.

---

## (93). பிரசிநோபநிஷத்து

### 6-வது பிரசினம் 6-வது வாக்கியம்.

### தம்வேத்யம் புருஷம் வேதயதாமாவோ ம்ருத்யு:பரிவ்யதா:.

### பொழிப்புரை.

மரணம் உங்களைபீடிக்காதபடி அந்த அறியத்தக்க புருஷனை அறியுங்கள்.

### விசேஷ உரை.

அந்த அழிவற்ற புருஷனை அறியுங்கள். அவர் மீது யாவற்றின் மீதிலும் தம்மீதிலும் உள்ளதைவிட அதிக அன்பை வையுங்கள். அப்பொழுது உங்களது மரணபிடை ஒழிந்துவிடும். யார் பிரமத்தை யடைகின்றனரோ, யார் பிரமத்துடன் நித்திய வாழ்வைப் பெறுகின்றாரோ; அவர் இங்கேயிருந்தும் ஸம்ஸாரத்தைக் கடக்கிறார், மேலும் மரணமென்னும்கயிற்றிலிருந்து விடுபட்டுக் காப்பைப் பெறுகிறார். அவரிடத்தில் குறைவு, நிறைவாகின்றது. விபத்து சம்பத்துக்காதாரமாகவும், மரணம் அழிவற்ற பதவிக்குப் படியாகவும் கொள்ளப்படுகின்றது.

Know Him the Perfect, who should be known that death may not afflict thee.

---

## (94). கடோபநிஷத்து

3-வது வல்லி 6-வது வாக்கியம்.

யஸ்துவிஜ்ஞாநவாந்பவதியுக்தேநமநஸாஸதா
தஸ்யேந்த்ரியாணிவச்யாநி ஸதச்வா
இவஸாரதே:.

பொழிப்புரை.

யார் விவேகியாகவும், எப்பொழுதும் வசப்பட்ட மனதுட னும் இருக்கிறரோ; அவருடைய இந்திரியங்கள் தேர்ப்பாகனது நல்ல குதிரைகளைப்போல வசமாயிருப்பவைகள்.

விசேஷ உரை.

யாருடைய இந்திரியங்களனைத்தும புத்தியின் வசப்பட் டிருக்கின்றனவோ, அவர் அவைகளைக் கடவுள் அருளிய நன்மார்க்கத்தில் செல்லும்படி செய்கிறார். மேலும் இதனால் அவருக்கு விசேஷ நன்மைகிடைக்கிறது.

He who is wise with a mind always under rule, his sensos are subject to him as docile horses are to a charioteer.

---

## (95). கடோபநிஷத்து

3-வது வல்லி 9-வது வாக்கியம்.

விஜ்ஞாநஸாரதிர்பஸ்துமந: ப்ரக்ரஹவாந்நர:;
ஸொஅத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ:
[பரமம்பதம்.

பொழிப்புரை.

எந்த விவேகி ஞானத்தைத்தேர்ப்பாகனாக உடையவரோ மனத்திற்குக் கடிவாளமிட்டிருக்கிறவரோ, அவர் ஸம்ஸாரத்தின் எல்லையாகிய அந்த ஸர்வ வியாபகருடைய பரமபதத்தையடைய கிறார்.

விசேஷ உரை.

யார் தன்னுடைய மனதை ஞானத்திற்கும் தருமத்திற் கும் வசப்படுத்தி வைத்திருக்கிறாரோ, அவர் சம்சாரத்தி னது வெல்லக்கூடாத மோகத்திலிருந்து நீங்கி ஸர்வவியாபி யாகிய பிரமத்தையடைகிறார்.

He whose reason is his charioteer, and who bridleth his mind, obtaineth the mansion of God which is the good or worldly career.

---

## (96). ப்ருஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 11-வதுவாக்கியம்.

அநந்தாநாமதேலோகா அந்தேநதமஸாவ்ரு[தா
தாம்ஸ்தேப்ரேத்யபிகச்சந்தி அவித்வாம்ஸோ
புதோஜநா:.

பொழிப்புரை.

அஞ்ஞானிகளும், துர்ப்புத்தியுடையவர்களுமான ஜனங்கள் இறந்தபின். பார்க்கக்கூடாத இருள்மூடிய உலகங்களையடைகின்றனர்.

விசேஷ உரை.

யார் இவ்வுலகத்தில் ஞானத்தையும் தருமத்தையும் ஸம்பாதிப்பதை அவமதித்து பவித்திரமாகிய பிரமாநந்தத்தை அடையக்கூடாதவர்கள் ஆய்விடுகின்றனரோ, அவர்கள் மரணாநந்தரம் அதைப்பெறுதற்கு அதிகாரிகளல்லர். எவ்வளவு தூரம் இவ்விடத்தில் ஞானத்துடனும் தருமத்துடனும் பிரமாநந்தத்தை யனுபவிக்கக்கூடுமோ அதற்குத் தக்கபடியே சிறந்த பதவி கிடைக்கும். ஆனதால் இவ்வுலகத்தி லிருக்கையிலேயே மனதை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு பரிசுத்தராகி ஈசுவரனோடு நமது சம்பந்தத்தை நிச்சயப்படுத்திக் கொள்ளல்வேண்டும். சிறந்த பதவியைப் பெறுதற்கு வேறு உபாயமில்லை.

Lo worlds devoid of felicity wrapped up in blinding gloom, those go after death who are ignorant of God and are unwise.

---

## (97). ப்ரஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 23-வதுவாக்கியம்.

சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷு:
ஸமாஹிதோபூத்வா
ஆத்மந்யேவாத்மாநம் பச்யதி.

பொழிப்புரை.

பிரமஞானி வெளியிந்திரியங்களையும், உள்ளிந்திரியங்களையும், வசப்படுத்திக்கொண்டு, பாபத்தில் வெறுப்புற்று சுகதுக்கங்களைப் பொறுத்துக்கொண்டு, தன்னிடத்திலேயே பரமாத்துமாவை த்தரிசிக்கிறார்.

விசேஷ உரை.

ஒரு புறத்தில் ஸம்ஸாரசுகத்தில் விருப்பம். வேறொரு பக்கத்தில் கடவுளை யடையவேண்டுமென்னும் இச்சை. எவ்வளவு தூரம் ஸம்ஸாரசுகத்திலுள்ள விருப்பம் குறைகிறதோ அவ்வளவுக்கும் கடவுளை யடையவேண்டுமென்னும் இச்சை எழுச்சியுறுகின்றது. கடவுளை யடையவேண்டு மென்னும் விருப்பம் மிகுதியாக எழுச்சியுறின், அப்பொழுது அறிவு அவரைத்தேடுகின்றது. மேலும் எப்பொழுது அது தேடி அந்தப் பூரணஸ்வரூபனை அடைகின்றதோ, அப்பொழுது அவர் எங்கும் பரிபூரணராக விருக்கிறாரெனப் பார்க்கிறது; மேலும் பார்த்துக் கிருதார்த்தத்தைப் பெற்று பவித்திரபிரமாநந்தத்தை அனுபவிக்கின்றது. பிரமஞானிகள் ஞானப்பிரஸாதத்தினால் பரிசுத்தர்களாகி, ஸத்தியத்தினது ஸத்தியமும், பிராணத்தினது பிராணமும், அறிவினது அறிவுமான அந்தந்த மங்களஸ்வரூபரைத் தமக்குள் ஆத்மாவிலேயேதரிசித்து கிருதார்த்தர்களாகி மிகத்தூய்மையான பிரமாநந்தத்தை அனுபவிக்கின்றனர். அந்தப் பூரணபுருஷன் நம்மில் யாருக்கும் தூரத்திலிருக்கவில்லை. எங்கே ஜீவாத்துமா உளதோ அங்கேயே அவரிருக்கிறார். எல்லாப்பொருள்களும் எல்லா உலகங்களும், எல்லா உயிர்களும் அவரது அருளென்னும் மார்பைப் பற்றிக்கொண்டிருக்கின்றன. எவ்வளவு நாள் ஞானக்கண் திறக்கவில்லையோ அவ்வளவு நாள் வரையிலும் கடவுள் தூரமாகவிருக்கிறா ரென்று மனிதன் நினைக்கிறான்; ஆனால், திறக்கப்பட்ட ஞானநேத்திரத்தை யுடையவர் வெளியிந்திரியங்களையும் உள்ளிந்திரியங்களையும் வசப்படுத்திக் கொண்டவராகி,பாபத்தில் வெறுப்புற்றுச் சுகதுக்கங்களில் வெறுப்புற்று ஒருவழிப்பட்ட கருத்தினால் தன்னுள்ளத்திலேயே கடவுளைத் தரிசிக்கிறார்.

Being of well-regulated and peaceful mind, averse to vice, patient; and of undivided attention, one seeth God in the soul.

---

## (98). ப்ரஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம், 4-வது பிராம்மணம் 15-வது வாக்கியம்.

**யதைதமநுபச்யத்யாத்மாநம் தேவமஞ்ஜஸா;**
**ஈசாநம் பூதபவ்யஸ்ய நததோ விஜுகுப்ஸதே.**

பொழிப்புரை.

ஸ்வப்பிரகாச முள்ளவரும், இறந்தகால எதிர்காலங்களின் நியந்தாவுமான இந்தப் பரமாத்துமாவை, யார் எப்பொழுது பிரத்தியக்ஷமாகத் தரிசிக்கிறரோ; அப்பொழுது அவர் தன்னை அப்பரமாத்துமாவி னின்று மறைந்து வைத்துக்கொண்டிருக்கிறர்.

விசேஷ உரை.

எவன் பாப காரியங்களில் மூழ்கிக்கிடக்கின்றனே அவன் தன்னை மறைவாக வைத்துக்கொண்டிருக்க விரும்புகிறன்; ஆனல் பிறர் பாராமல் தன்னை மிகவாக மறைத்து வைத்துக்கொள்ளக்கூடுமாயினும். யாவருக்கும் அந்தராத்துமாவாக யாவற்றையும் பார்க்கின்ற புருஷன் பாராமல் தன்னைமறைத்து வைத்துக்கொண்டிருக்க முடியாது. யார் பிரகாசமுள்ளவரும். இறந்தகால எதிர்காலங்களின் நியந்தாவுமான பரமாத்துமாவை உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல சாதாரணமாய் பிரத்தியக்ஷமாகத் தரிசிக்கிறரோ, அவர் ஒரு குற்றமுள்ள செய்கையிலும் சம்பந்தப்பட விரும்பார்; ஆனதால் தன்னை அவர் பாராமல் வைத்திருக்க விரும்புவதும் இல்லை. மோகவசத்தினல் ஏதேனும் அவர் ஒரு குற்றத்தில் ஸம்பந்தப்படினும் தன்னை அவர் பாராமல் வைத்துவைக்க விரும்புவதில்லை; ஆனல் தான் குற்றத்திலிருந்து மீளுவதற்காக ஸரளமான உள்ளத்துடன் அநுதாபப்பட்டு அவரைப்பிரார்த்திக்கிறன்; மேலும் அவர் அவனை அந்தப் பாபத்திலிருந்து விடுவிக்கிறர்.

He, who easily can conceive God, the Being Divine and the Governor of time past and future, wisheth not to conceal himself from Him.

---

(99.) கடோபநிஷத்து

2-வது வல்லி 24-வது வாக்கியம்,

நாவிரதோ துச்சரிதாந் நாசாந்தோ
நாஸமாஹித:; நாசாந்த மாநஸோ வாபி
ப்ரஜ்ஞாநேநைந மாப்நுயாத்,

பொழிப்புரை.

கெட்ட செய்கையை விட்டு வெறுத்திராதவனும், பொறிகளி னது சஞ்சலந்தை விட்டுச் சாந்தமாக விராதவனும், நிச்சய சித்த முடனிராதவனும், அமைதியான கருத்துடனுவதி ராதவனும் கேவ லம், ஞானத்தினுல் இப்பரமாத்துமாவை யடையான்.

விசேஷ உரை.

*பிரிய தமனுகிய பரமாத்துமாவை யறிந்தனம். ஆனல் அவரிடத்தில் கருத்தை நிறுத்த இல்லை; மேலும் அவரிடத் தில் கருத்தை நிறுத்தி அவரோடு அத்தியான்ம யோகத்தில் சேருவதினுல் வரும் விமலாநந்தத்தை ஒருபொழுதும் அநு பவித்திலம்; அவரை மகானென்றும், பரிசுத்தரென்றும் அறி ந்தும், நமதுநடையைப் பெருமையுள்ளதாகவும் பரிசுத்தமா னதாகவும் செய்துக்கொண்டு அவருடன்கூடிவாழத் தகுந்த வர்களாகவில்லை; நாமவரை நியந்தாவாகவும் விதாதாவாகவும் அறிந்தும், அவர் காட்டிய நல்வழியில் நாம் ஒருபொழுதும் செல்வதில்லை, கேவலம் இம்மையினுள்ள ஸ்வப்பிரயோஜன த்தின் பொருட்டே பிறந்ததுமுதல் வேலை செய்துக்கொண் டிருக்கின்றோம்; அப்படியாயின் இன்னும் அவரையடைவது எப்படி ஸம்பவிக்கும்.*

He who refraineth not from vice is passionate, is of distracted attention and is of mind untranquil, obtaineth not God through mere knowledge of Him.

---

## (100.) கேனோபநிஷத்து

2-வது கண்டம் 5-வது வாக்கியம்.

இஹசேதவேதீ ததஸத்யமஸ்தி நசேதிஹா
வேதீந் மஹதீ விநஷ்டி:; பூதேஷு பூதேஷு
விசிந்த்ய தீரா: ப்ரேத்யா ஸ்மால்லோகா
தம்ருதா பவந்தி.

பொழிப்புரை.

இம்மையில் மனிதன் பிரமத்தை யறிந்தானாகில் அவனுடைய பிறப்பு பயனுள்ளதாகின்றது. இம்மையில் அறியானாயின் மிகுந்த நஷ்டமுண்டாகின்றது; ஆனதால் விவேகிகள் நிலையியற் பொருள் இயங்கியற் பொருளாகிய சகல, வஸ்துக்களிலும் ஒன்றாகிய கடவுள் வியாபித்திருக்கிறாரென விசேஷமாக வறிந்து, இவ்வுலகத்தை விட்டு நீங்கி அழிவற்ற பதவி யுடையவர்களாகின்றனர்.

விசேஷ உரை.

நமது அறிவின் மூலமாகப் பிரமத்தின் ஸ்வரூபத்தை ஒரு பரிமிதப் பொருளைப்போல முழுவதும் அறிவதற்குக் கூடாவிடினும், நமது அறிவிற்கு ஆதாரமாகிய ஸகஜஞான த்தினால் எல்லாக் காரணங்களுக்கும் காரணரும், எல்லா ஆதாரங்களுக்கும் மூலாதாரரும், எல்லா நன்மைகளுக் கும் இருப்பிடமானவரென அவரது பூரணமாகிய மங்கள ஸ்வரூபத்தை ஐயமின்றி யறிந்திருக்கிறோம். பாபம் நசித்த ஜீவாத்மா, இறுதியற்ற ஞானத்தையும் நன்மையையும் வடி வமாகவுடைய கடவுளை யாவற்றிற்கும் ஆச்ரயஸ்தானமாக இருப்பவரென்று தனக்குள்ளே நேராக அறியக்கூட்டும். இவ்விதமாக இப்புவியின்மீதிருந்து அவரை யாம் அறிய வல்லவர்களாயின் நமது பிறப்புப் பயனுள்ளதாகின்றது. அவர் அறிவதினாலல்லாது நமது பிறப்பு வேறெவ் வகையினால் பயனுள்ளதாகும்? அவர் நமக்கு அவரை யறியும் அதிகாரத்தை யளித்திருக்கிறார். இதுதான் அவரு டைய எல்லா அருள்களிலும் முக்கியமாகிய அருள். நாம் இருள் சூழ்ந்த இச்சிறு புவியினது ஜந்துக்களாயிருந்தும்

யாவற்றையும் கடந்த அந்த ஸத்தியசுந்தர புருஷனை அறிகிறோம். இதைவிட நமது பாக்கியத்திற்கு விஷயம் வேறு யாதிருக்கின்றது! உலகத்தினது கௌசலத்தைக் கண்ணுற்று, அந்தக் கௌசல கருத்தாவினது இறுதியற்ற ஞானத்தைத் தெரிந்துக் கொள்ளுகிறோம். உலகத்தினது எல்லா நியமங்களிலுமிருக்கிற நன்னோக்கத்தை யறிந்து அந்த நியந்தாவின் நல்ல கருத்தை உணருகிறோம். அவரால் நியமிக்கப்பட்ட கருமத்தை யாசரித்து நாம் உயர்ந்த பதவியைப் பெறுகிறோம்; மேலும் நம்மெல்லோரிடத்தும் அவருக்குள்ள அன்பைக்கண்டு அவரிடத்தில் நன்றியறிவுள்ளவர்களாகி அவரது அன்பில் மூழ்கினவர்களாகிறோம் இங்கு நாம் அவரை யறியாமலிருக்கினும், அவரது அன்பில் மூழ்காதிருக்கினும், அவரால் நியமிக்கப்பட்ட தருமங்களை ஆசரியாமலிருக்கினும், அப்பொழுது நமது நிலை என்ன ஆயிற்று? முத்திரையிட்ட பொன்னை மிகுதியாக ஸம்பாதிப்பதினாலாவது, பெரும்புகழையும் மரியாதையையும் பெறுவதினாலாவது, இழிவான இந்திரிய சுகங்களை யனுபவிப்பதினாலாவது ஆன்மா திருப்தியுடனிருக்குமா? அழிந்துபோகத்தக்க ஜடப்பொருள்களிலும், பாபத்துடன் கூடிய நிறைவற்ற தன்மைகளிலும் நமது அன்பைவைக்கின், அன்பு பயனைப்பெறுமா? யாா பிரமத்தை யறியாமல் அவரது சேர்க்கையினால் உண்டாகிற அழிவற்ற பேரானந்தத்தைவிட்டு நீங்கிப் புவியினது தூய்மையற்ற சுகங்களில் மூழ்கியிருக்கின்றனரோ அவர்களுக்கு மிகுந்த கெடுதியுண்டாகும். அவர்கள் புண்ணியலோகத்தைவிட்டு வெகு தூரத்தில் அலைவர். நிலையியற்பொருள், இயங்கியற் பொருள்களாகிய படைப்புகளில் விளங்கும் வல்லமையையும், நோக்கத்தையும் கருதி, பிரமஞானத்தை எழச்செய்தல் வேண்டும், மேலும் ஆத்மபிரத்தியயத்தைக் காக்கவேண்டும். நிலையியற்பொருள் இயங்கியற் பொருள்களாகிய யாவும் அவரது படைப்பே, அவரது கௌசலமே; அவை அவரது நல்ல கருத்தையே விளங்கச்செய்கின்றன; அவரது மகிமையை வெளியிடுகின்றன அவரது பெயரை கோஷிக்கிற,

ன்றன. ககோளநூல் பூதத்வநூல், வைத்தியநூல், மனோவி ஞ்ஞானநூல், ஆத்மதத்வநூல், நீதிநூல் முதலிய எல்லா ஞானநூல்களும் அவரது அளவற்ற ஞானமும் நன்மையுமா கிய தன்மையையே உபதேசிக்கின்றன. இவ்வெல்லா ஞான நூல்களிலிருந்தும் இந்த எல்லா ஞானங்களுக்கும் ஆதார மாகிய பிரமஞானத்தைப் பெற்றுப் பிரமஞானியாகவேண் டும். மேலும் இவ்வுலகத்தைவிட்டு நீங்கியபின் நித்தியமாகிய பொருளைப் பற்றிக்கொண்டு நித்திய பதவியைப் பெறவே ண்டும்.

If man know Him here then it is good, but if he know Him not, great is the ruin. Contemplating Him in object after object, the wise, after departing from this world, become immortal.

---

## (101.) கடோபநிஷத்து

2-வது வல்லி 2-வது வாக்கியம்.

ச்ரேயச்ச ப்ரேயச்ச மநுஷ்யமே தஸ்தௌ ஸம்பரீத்ய விவிநக்தி தீர :; தயோ : ச்ரேய ஆததா நஸ்ய ஸாதுபவதி ஹீயதே அர்த்தாத் ய உப்ரேயோ வ்ருணீதே.

பொழிப்புரை.

சிரேயமும் பிரேயமும் மனிதனையடைகின்றன. விவேகி அவையிரண்டையும் நன்றாகவாராய்ந்து வேறுவேறாகப்பிரிக்கிறான் அவைகளுக்குள் சிரேயத்தைக் கிரகிக்கிறவனுக்கு நன்மை யுண்டா கிறது. யார் பிரேயத்தைக் கிரகிக்கிறனோ அவன் பரமார்த்தத்தை விட்டுப் பிரஷ்டனாகிறன்.

விசேஷ உரை.

கடவுளையடையும் மார்க்கத்தைப் பற்றுதல் சிரேயமா னது, ஸம்ஸாரசுகத்தில் மூழ்கிக்கிடப்பது பிரேயமானது. ஒவ்வொரு காலத்தில் கடவுளையடையும் வழியைப்பற்ற விரு ப்பமுண்டாகிறது. ஒவ்வொரு சமயத்தில் ஸம்ஸாரசுகம் மனதைக் கவருகின்றது. இவைகளுக்குள் யார் ஈச்வரனைய

டையும் வழியைப் பற்றுகிறாரோ அவருக்குச் சிறந்த நன்மை யுண்டாகிறது. எவன் ஸம்ஸாரசுகத்தில் முழுகிக் கிடக்கிறானோ, அவன் ஒருபொழுதும் பரமபவித்திரமாகிய பிரமாநந்தத்தை யடைவதற்குத் தக்கவனாகான். யார் ஈசவரனிடத்தில் அன்பு செலுத்துகிறாரோ அவர் அந்தப் பரமப் பிரேமாஸ்பரனுடைய திருப்பணி என நினைத்து ஸம்ஸார காரியங்களைச் செய்கிறார்; எவன் ஸம்ஸாரத்தில் விருப்பமுடையவனாக விருக்கிறானோ, அவன் ஸம்ஸாரத்தின் நன்மையைக் கருதியே மிகுந்த நன்மைகளுக்கு இருப்பிடமாகிய ஈச்வரனை உபாசனை செய்கிறான். ஸம்ஸாரத்தில் விருப்பமுள்ளவனகி ஸ்வப்பிரயோஜனபரனாக விருக்கிற எவனும் "ஓ! பரமாத்துமாவே! உனது கட்டளையின்படி உலக நன்மையின் நிமித்தத்தினாலும், உனக்கன்பான காரியமென்னும் நிமித்தத்தினாலும், ஸம்ஸாரயாத்திரை நிர்வகிக்கும்பொருட்டுப் பிரவர்த்திக்கிறேன்" என்னும் வாக்கியத்தை ஒருபொழுதும் மனப்பூர்வமாக வாய்விட்டுச்சொல்லான். எப்பொழுது உள்ளக் கிளர்ச்சியுடன் இவ்வாக்கியத்தைச்சொல்ல வல்லவர்களாவோமோ; மேலும், நாம் செய்கிற காரியங்களிலனைத்திலும் இதையே லக்ஷியமாக வைத்துக் கொள்ளுவோமோ, அப்பொழுது நாம் சிரேயமானதை நன்றாகப் பற்றினோமென்று அறியக்கடவோம்.

Duty and pleasure both offer themselves to man. The thoughtful man considereth about them. He, who of these two accepteth duty, becometh blessed; he loseth his eternal interests who accepteth pleasure.

---

## (102.) கடோபநிஷத்து

5-வது வல்லி 13-வது வாக்கியம்.

நித்யோ நித்யானாம் சேதனச் சேதநாநா
மேகோ பஹூநாம் யோ விததாதி காமான்;
தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ்தேஷாம்
சாந்தி: சாச்வதீ நேதரேஷாம்.

பொழிப்புரை.

யார் எல்லா அநித்தியப் பொருள்களுக்குள் நித்தியரோ, எல்லா ஞானப்பொருள்களுக்கும் ஞானத்தைத்தருபவரோ, ஒருவராயிருந்தும் யாவருக்கும் வேண்டியவற்றைக் கொடுக்கிறரோ அவரைத்தம்முள் இருப்பவராகக் காண்கிற தீரர்களுடையதே அழிவற்ற சாந்தி, அது வேறு யாருடையதுமன்று.

விசேஷ உரை.

*இவ்வுலகத்தின் கண்ணேயுள்ள எல்லாப் பொருள்களும் அநித்தியங்கள்; கேவலம் அவரொருவரே நித்தியர், அவர் சித்துப் பொருள்களுக் கெல்லாம் ஞானத்தைக் கொடுத்துப் படைத்தார்; அவர் அவைகளுக்கு உணவைத்தந்து காப்பாற்றி வருகிறார்; இந்த எண்ணிறந்த உயிர்களுக்கு வேண்டிய தனைத்தையும் அவரொருவரே பூர்த்தி செய்கிறார். இவ்வொரு மண்ணுலகத்திலேயே அவரால் காக்கப்படவேண்டிய உயிர்களெத்தனை? இவ்வொவ்வொரு உயிருக்கும் வேண்டியவை எத்தனை? அவர் ஒருவரே இவ்வெல்லாவற்றிற்கும் வேண்டியவற்றை தகுந்தபடி கொடுத்துவருகிறார்; அவர் ஒரு அற்பமாகிய புழுவுக்கு வேண்டியதையும் மறப்பதில்லை. யாவருக்கும் நண்பரும், நன்மையே வடிவாகக்கொண்டவருமான இம்மிகச்சிறந்த தேவதையை, யார் தம்முள்ளமாகிய கோவிலில் நேராய்த் தரிசனை செய்கின்றாரோ; அவரது மனத்திருத்தியென்னும் தடாகம் ஒருபொழுதும் காய்ந்துபோவதில்லை, எப்பொழுதும் நிறைந்திருக்கின்றது, அவர்களுக்கே நித்தியசாந்தி கிடைக்கின்றது.*

He is the only Eternal among things transitory, is the Life of all living things and, Being One, fulfilleth the desires of many. The wise who see Him within themselves, theirs is peace everlasting not of any others.

---

## (103) கடோபநிஷத்து

5-வது வல்லி 12-வது வாக்கியம்.

ஏகோவசீ ஸர்வபூதாந்த ராத்மா
ஏகம் ரூபம் பஹுதாய: கரோதி; தமாத்மஸ்தம்
யேநுபச்யந்தி தீராஸ் தேஷாம் ஸுகம்
சாச்வதம் நேதரேஷாம்.

பொழிப்புரை.

யார் ஒருவரோ, தம்வயமுடையவரோ, எல்லா உயிர்களுள்ளு மிருப்பவரோ, ஒருருவத்தைப் பல உருவாகச் செய்பவரோ, அவரைத் தம்மிடத்திருப்பவராகப் பார்க்கிற விவேகிகளுடையதே நித்தியசுகம், அது பிறருடையதன்று.

விசேஷ உரை.

*யாவும் அவருடைய வசத்தில் இருக்கின்றன, அவர் யாவற்றிற்கும் நியந்தை. அவர் நாமனைவராகிய ஆன்மாக்களுள்ளுமிருக்கிறார். அவர் ஒருவராயிருந்தும் வேறு யாருடைய துணையும் பற்றாமல் இவ்விசித்திரமாகிய உலகத்தைப்படைத்தார்; அவர் நித்தியமாகிய தனதுஸ்வரூபத்தில் மாறுபடாமல் இருந்துகொண்டே ஒருருவத்தைப் பல உருவாகச்செய்கின்றார்; தான் வேறொரு பொருளாகத் திரிவதில்லை. இப்படி ஒருவர் நியந்தாவாகவும் எல்லாப் பொருள்களுக்கும் அந்த ராத்துமாவாகவும் இருப்பவரை தமக்குள் யார் நேராய் அடைந்து அவருடன் சேர்க்கையைப் பெறுகின்றனரோ, அவர்களடையும் விடயாதீத நித்திய சுகத்தை, வேறு யாரும் ஒருபோதும் அடையார்.*

He is the One, the Subjector, the Soul of the souls of all beings, and changeth one form into many. The wise who see Him within themselves, their's is bliss everlasting, that is, as the Soul of the souls not of any others.

---

## (104.) முண்டகோபநிஷத்து

*3-வது முண்டகம் 1-வது கண்டம் 4-வது வாக்கியம்.*

*ப்ராணோஹ்யேஷ: ஸர்வபூதைர் விபாதி*
*விஜாநந் வித்வான்பவதே நாதிவாதீ;*
*ஆத்மக்ரீடா ஆத்மரதி: க்ரியாவாநேஷ*
*ப்ரஹ்மவிதாம் வரிஷ்ட:*

பொழிப்புரை.

எல்லாப் பொருள்களிடத்திலும் விளங்குகிறவர் யாரோ, அவர் இந்தப் பிராணஸ்வரூபராகிய பரமேசுவரர். அறிந்த ஞானி

கள் அவ்வரைக்கடந்து ஒரு வார்த்தையுஞ் சொல்லார். பரமாத்துமாவையே விளையாட்டுக்கும் ஸந்தோஷத்திற்கும் விஷயமாக உடையவரும், நல்ல காரியங்களைச் செய்கிறவருமானவர் பிரமஞானிகளுக்குள் சிறந்தவர்.

விசேஷ உரை.

*யாவற்றையும் படைத்து, யாவற்றிற்கும் ஆதாரமாகவிருக்கிற பிரம்மம் இராவிடில் ஒன்றுமிராது, ஒன்றுமாகாது, அவரே யாவற்றிற்கும் உயிரைப்போன்றவர். சலித்துக்கொண்டிருக்கிற மதி இரவிகளென்ன, தழைத்திருக்கிற மரம் கொடிகளென்ன, வன்மையுடனிருக்கிற பசுக்கள் பறவைகளென்ன, இவையாவற்றிற்கும் காரணமாகவும், ஆதாரராகவும்; யாவற்றிற்கும் உயிரைப் போன்றவராகவும், யாவற்றிற்குள்ளும் அவரே விளங்குகிறார். பிரமஞானிகள் பரமேசுவரரே தமக்குச் சிறந்த சுற்றமென வறிகின்றனர். அவர்கள் அன்புள்ள அந்த நண்பரது குணகீர்த்தனங்கள் செய்துக்கொண்டே எப்பொழுதும் உவகை யடைந்திருக்கின்றனர், கேவலம் அவரது காரியங்களை பேசுவதினாலேயே அவர்களுக்கு அதிக இன்பம் உண்டாகின்றது; கேவலம் அவரது பிரசங்கம் செய்வதிலேயே, அவரது உள்ளம் எப்பொழுதும் ஆவலுள்ளதாக விருக்கிறது; கருத்தை வேறு விஷயத்திற் செலுத்தாமல், அவரது ஸ்வரூபசிந்தனை செய்வதால் அவருக்கு எவ்விதமான உவகையுண்டாகிறதோ, அவ்விதமான உவகை அவர்களுக்கு வேறு யாதொரு விஷயத்திலும் உண்டாவதில்லை. பரமேசுவரரே தங்கள் சிறந்த தந்தையெனவும் அவர் தங்களால் பூஜிக்கப்படத் தக்கவரெனவும், அவரது கட்டளையை நிறைவேற்றுதலே தங்களாற் செயற்பாலதெனவும், அது தவிர வேறு யாதொன்றும் தங்களாற் செயற்பாலதன்றெனவும், பிரமஞானிக ளறிகின்றனர்; ஆதலால் அவர்கள் அவரது நன்னோக்கத்தை முடிப்பதற்கே எப்பொழுதும் முயலுகின்றார்கள். எந்த விஷயத்தினால் அவரது நல்ல தன்மை விளங்குமோ, அவரது நன்னோக்கம் தெரியுமோ, அதையே அவர்கள் தாண்டுகின்றனர், அதையே அவர்கள் கற்கின்ற*

னர்; மேலும் அதையே அவர்கள் உபதேசித்திருக்கின்றனர். அவரைக் கடந்து அவர்கள் ஒரு வார்த்தையும் சொல்வதில்லை. பரமேசுவரனிடத்திலேயே அவர்களுக்கு நிறைந்த விருப்பம்; மேலும் அவரிடத்திலேயே அவருக்கு அழிவற்ற உவகை; ஆதலால் பிரமஞானி பரமாத்துமாவினிடத்தில் கிரீடிக்கிறுரென்றும் இரமிக்கிறுரென்றும் சொல்லப்பட்டது. ஆனுல் இந்தப் பிரமஞானிகளுக்குள் யார் கேவலம் பிரமத்தினிடத்தில் அன்பு மாத்திரம் வைத்து, அவரது திருவுள்ளத்தையும் தெரிந்துக்கொண்டு திருப்தி யடைந்து சும்மாயிராமல் அவரது திரு உள்ளத்தை யனுசரித்து அவருக்காகும் காரியங்களைச் செய்யச்சென்று நல்ல காரியங்களைச் செய்கின்றனரோ, அவர்களே சிறந்தவர்கள் நமக்குள் யாருக்கு அவரிடத்தில எவ்வளவு அன்பு உண்டாகிறதோ, யார் எவ்வளவு தூரம் அவரது திரு உள்ளப்படி நல்ல காரியங்களைச் செய்ய முயலுகின்றனரோ, அவ்வளவுக்குத் தான் அவர்களுக்குச் சிறப்புண்டாகும். மேலும், அவ்வளவுக்குத்தான் அவர்களது பிறப்புப் பயன்பெறும். இது தான் நமது காரியம். இது தான் நமது லக்ஷியம்.

He who is manifest in all things, is the life of all. Know-ing him, the knower of God doeth not talk much of any thing else, He whose amusement is God, whose enjoyment is God, and who doeth good works is the best among the knowers of God.

---

## (105) முண்டகோபநிஷத்து

3-வது முண்டகம் 1-வது 5-6-வது வாக்கியம்.

ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்; ஸத்யேந பந்தா
விததோ தேவயாந: யேநாக்ரமந்த்ருஷயோஹ்யாப்த காமா யத்ர தத்
ஸத்யஸ்ய பரமம் நிதாநம்,

பொழிப்புரை.

மெய்யே வெல்லும் பொய்யன்று; உண்மையினுலும், ஒரு வழிப்பட்ட கருத்தினுலும், நல்ல ஞானத்தினுலுமே இப்பரமாத்து

மானவ யாடயலாகும். இருஷிகள் இவ்வனுஷ்டானத்தினால் திருப்தி யுடையவர்களாகி ஸத்தியத்தின் மேலான இருப்பிடமாகிய பிரமத்தை யடைகின்றனர்.

விசேஷ உரை.

*சாந்த சித்தர்களாகி உண்மையை யறியுங்கள், உண்மையை யறிந்து உண்மையான வழியில் செல்லுங்கள்; அப்பொழுது உண்மைக்கு ஜயங்கிடைப்பதால் உமக்கும் ஜயங்கிடைக்கும். பரமேசுவரனை யடையவேண்டுமாயின் மெய்யைஅடைக்கல ஸ்தானமாகப் பற்றுங்கள், பொய்யையும் கபடத்தன்மையையும் விட்டுவிடுங்கள், உண்மையைப் பற்றுவதிலும், கருத்தை ஒரு வழிப்படுத்துவதினாலும், நல்ல ஞானத்தினாலும் அவ்வுண்மையின் மேலான இருப்பிடமாகிய பிரமத்தையடையலாகும். முற்காலத்தில் திருப்தியான சித்தமுடையவர்களும், குற்றமற்றவர்களுமான இருஷிகள் கேவலம் இவ்வித உபாயங்களினாலேயே சித்திபெற்றனர்.*

Truth triumphs. not untruth. Through truth and mediation and the fulness of wisdom, this Being is gained. Through them the all-contented sages obtain the peace where He, the great abode of truth is.

---

((106.) ப்ரஹதாரணிய உபநிஷத்து

*ச-வது அத்தியாயம் ரு-வதுபிராம்மணக்கரு-வதுவாக்கியம்.*

ஸவா அயமாத்மா ஸர்வேஷாம் பூதானும்
அதிபதி: ஸர்வேஷாம் பூதானும் ராஜா.

பொழிப்புரை.

அப்படிப்பட்ட இந்தப் பரமாத்துமா எல்லா உயிர்களுக்குந் தலைவர், எல்லா உயிர்களுக்கும் அரசர்.

விசேஷ உரை.

*அவர் யாவற்றையும் நியமமாக வைத்திருக்கிறார், தகுந்தபடி இரக்ஷிப்பும் சிக்ஷிப்பும் நியதமாகக் கொடுத்து வருகிறார்.*

This God is the Lord of all beings, the King of all being

---

## (107.) ப்ரஹதாரண்ய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 14-வது வாக்கியம்.

*இஹைவஸந்தோ தவித்மஸ் தத்வயம்*
*நசேதவேதிர் ஹநீவிநஷ்டி:;*
*யயேதத் விதுரம் ருதாஸ்தே பவந்தி*
*அதேதரே து: கமேவாபியந்தி.*

பொழிப்புரை.

இவ்விடத்திருந்தும் நாம் அவரை யறிகிறோம். நாமவரை அறியாவிடின் மிகுந்த கெடுதியுண்டாகும்; யார் இவரை அறிகின்றனரோ அவர்கள் அழிவற்ற பதவியைப் பெறுகின்றனர். பிறர் துயரத்தையே அடைகின்றனர்.

விசேஷ உரை.

*என்ன ஆச்சரியம்! நாம் இவ்விடத்திருந்தும் அவரை அறிகின்றோம், இந்த இருள்மயமாயிருக்கிற ஸம்ஸாரத்தில் மூழ்கினவர்களாயும் மறைக்கப்பட்டவர்களாயு மிருந்தும் நமது ஞானக்கண் அந்த உண்மை ஞானச்சுடரைக் காணக் கூடியதாயிருக்கிறது. மேலும், நம்முள்ளம் அவரிடத்தில் தூய்மையான அன்பை வைத்துப் பாபதாபங்களிலிருந்து மீட்பைப் பெறுகின்றது. இதைவிட வியக்கத்தக்கது வேறென்ன இருக்கிறது? இதனாலே தான் நாம் பாக்கியவான்களாயிருக்கிறோம். அவர் இம்மண்ணுலகத்தில் எத்தனை வகையான உயிர்களைப் படைத்திருக்கின்றனர், அவற்றிற் கெல்லாம் இவ்விதமான வல்லமையையும், அதிகாரத்தையும் தரவில்லை. நம்மிடத்தில் கிருபைசெய்து இவையனைத்தையும் தந்தார். இதனால் நாம் கிருதார்த்தர்களாகிறோம். இதனாலே தான் நாம் எல்லா செல்வத்தையும் அடைந்திருக்கிறோம்.நாம் அவரை இம்மையில் அறியக்கூடாவிடினும், அவருடன் இடைவிடாத நித்திய சம்பந்தத்தை உறுதிப்படுத்திக் கொள்ளக்கூடாவிடினும், அப்பொழுது நாம் முடிவற்ற தீய நிலைமையை அடைவோம். அப்படியாயின் இந்த சம்சாரமாகிய துயரக்கடலில் விழுந்து வேறெவ்விடத்தில் புக்கிடம் பெறுவோ*

ம்; உலகத்தாரால் கடுமையாய் நடத்தப்பட்டு எவ்விடத்தில் குளிர்ச்சியைப் பெறுவோம்? மரணபயத்திலிருந்து நம்மை யார் மீட்பார்கள்?

Being even here we have known Him: if we bad not known Him, Great would have been the ruin. They, who know Him become immortal, others go to misery.

---

## (108.) முண்டகோப நிஷத்து

3-வது முண்டகம் 1-வது கண்டம் 3-வது வாக்கியம்.

யதாபச்ய: பச்யதே ருக்மவர்ணம்
கர்தாரமீசம் புருஷம் ப்ரஹ்மயோநிம்;
ததாவித்வான் புண்யபாபேவிதூயநிரம்ஜந:
பரமம் ஸாம்ய முபைதி; மஹாந்தம்
விபுமாத்மா நம்மத்வாதீரோ நசோசதி.

பொழிப்புரை.

எப்பொழுது ஞானி ஸ்வப்பிரகாசனுகவும், உலகத்தின் கருத்தாவாகவும், நியந்தாவாகவும், காரணஸ்வருபியாகவும் இருக்கிற பிரமத்தைத் தரிசிக்கிறரோ; அப்பொழுது அவர் புண்ணிய பாவங்களிலிருந்து நீங்கி, கல்மஷ மற்ற உயர்ந்த பதவியைப் பெறுகிறர். விவேகி மஹானும் சர்வ வியாபியுமான பரமாத்துமாவை அறிந்து பிறகு துயரப்படுகிறதில்லை.

விசேஷ உரை.

எப்பொழுது ஞானத்தைப்பெற்ற பிரமநிஷ்டராகிய பிரமோபாசகர் தமது ஞானக்கண்ணிறுல் பிரமத்தை நேரே தரிசிக்கிறரோ, அப்பொழுது அவர் பிரமத்தை யடைந்து பாபத்திலிருந்து நீங்குகின்றர்; மேலும் புண்ணியத்தின் பயனை விரும்பி யாதொரு செய்கையும் செய்வதில்லை. அவர் விடயசம்பந்த மற்றவராகி, உலகத்தினது நன்மையின் பொருட்டும், கடவுளினது அன்பின் பொருட்டும் கடவுளுக் கன்பான காரியங்களைச் செய்கிறர். எப்பொழுது பிரபு வானவர் உள்ளத்தி லெழுந்தருளுகிறரோ, அப்பொழுது மனே

விருத்திகளனைத்தும் அடங்குகின்றன, அப்பொழுது சித்தம் சமத்தன்மையைப் பெற்றுத் தூய்மையுட னிருக்கின்றது. விவேகிகள் கடவுளை யடைந்து பின்பு தீனத்தன்மையில்மூழ் கித்துயரப்படுவதில்லை.

When the wise man seeth the all-glorious, the Lord, the Governor, the Perfect, the Cause, the Supreme, he the knower, being free, and washed from virtue and vice, attaineth great tranquillty knowing the Great and pervading the wise man grieveth not.

---

(109.) ப்ரஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது வாக்கியம்.

பரமேவாக்ஷரம் ப்ரதிபத்யதே
ஸயோஹ வைததச்சாய மசரீர மலோஹிதம்
சுப்ரமக்ஷரம் வேதயதே:.

பொழிப்புரை.

யார் அந்த இருளற்றவராகவும், வருணமற்றவராகவும், தூய் மையானவராகவும் அழிவற்றவராகவு மிருக்கிறவரை அறிகிறரோ அவரந்தச் சிறந்தவரும் அழிவற்ற வருமானவரை அடைகிறர்.

விசேஷ உரை.

பரமேசுவரர் எப்பொழுதும் எங்கும் இருக்கிறர். தூய் மையான சித்தமுடையவர்களாகி அவரை அறிந்தாற்றன் அவரை அடையலாகும்.

The Being all excellent and imperishable, he gaineth who knoweth Him, who is shadowless, bodiless, colourless, pure, and undying.

---

(110.) சாந்தோக்கிய உபநிஷத்து

8-வது பிரபாடகம் 7-வது கண்டம் 3-வது வாக்கியம்.

யஆத்மா பஹதபாத்மா விஜரோ விம்ருத்யுர்
விசோகோ விஜிகத்சோ பிபாச: ஸத்யகாம;

ஸத்ய ஸங்கல்ப:; ஸோந்வேஷ்டவ்ய:
ஸவிஜிஞாஸிதவ்ய:; ஸஸர்வாம்ச்ச
லோகாநாப்நோதி ஸர்வாச்சகாமான்
யஸ்தமாத்மா நமநுவித்ய விஜாநாதி.

பொழிப்புரை.

எந்தப் பரமாத்துமா பாபமற்றவரோ, மூப்பற்றவரோ, சா வற்றவரோ, துயரமற்றவரோ, பசிதாகங்களற்றவரோ, ஸத்திய காமரோ, ஸத்திய சங்கல்பரோ அவர் தேடப்படத்தக்கவர், விசேஷமாக வறியப்படத் தக்கவர். யார்அப்படிப்பட்ட பரமாத்துமா வைத் தேடி யறிகிறரோ, அவர் எல்லா உலகங்களையும் எல்லா விருப்பங்களையும் அடைகிறர்.

விசேஷ உரை.

நாம் பூரணத்தன்மையற்றவர்களும், திரிபான உணர்ச்சியுடையவர்களும், பாபத்தினல் கவரப்பட்டவர்களுமான உயிர்களாகவிருந்தும்; பாபமற்றவரும் பரிசுத்தரும், பரிபூரணரும், ஸத்தியமானவரும், அழிவற்றவருமான புருஷனை அறியக்கூடியவர்களாக விருப்பது நமக்குச் சாதாரணமான பாக்கியமன்று. ஆனல், அவரை அறியவேண்டுமாயின், நமது அந்தரங்கமான விருப்பமும், முயற்சியும், நடக்கையும் ஆவசியகங்களாக விருக்கின்றன. நீர்வேட்கைகொண்டமான் எப்படி நீரைத் தேடுமோ அதுபோல அந்த நித்தியரும், ஸத்தியரும், விகாரமற்றவரும், அழிவற்றவருமானவரை விரும்பித் தேடல்வேண்டும். மேலும் உள்ளங்கைக்கனி எவ்வளவு பிரத்தியக்ஷமாக விருக்கின்றதோ, அதுபோல அவரைத் தூய்மையான ஞானத்தின் வழியாக ஐயமில்லாவண்ணம் அதி சமீபஸ்தராக அறிய விரும்பல்வேண்டும். பொறிகளை வென்று விசேஷமாகத் தேடியபின்னர் அவரைக் குற்றமற்ற ஒளிவடிவாகிய தமக்குள் ஆன்மாவுக்கான்மாவாகவும், பிராணனுக்குப் பிராணனுகவும், யாவற்றிற்குங் காரணராகவும், பற்றுக்கோடான வராகவும், பிரத்தியக்ஷமாக வறியக்கூடுமாயின் நீர்வேட்கையினல் வருந்தியமான்

எப்படி நீரையடைந்து திருப்தியைப்பெறுமோ, அதுபோல அவர் திருப்தியடைகிறார். அவரது எல்லா விருப்பங்களும் வித்தியாகி பூமி முதலிய சகல உலகங்களினுடைய சுகத்தை யும் அடைகிறார்; அவர் பிரம்மாநந்தத்தைப் பெற்று சகல ஆநந்தங்களையும் அநுபவிக்கிறார்.

God is without vice, without decay, without death, without sorrow, without hunger, without thirst. What He willeth is done, what He resolveth is effected. He should be sought after. He should be known. He gaineth all world and all desires, who seeking God, knoweth Him.

---

## (111.) முண்டகோப நிஷத்து

1-வது முண்டகம் 1-வது கண்டம் 5-வது வாக்கியம்.

அபரா ரிக்வேதோ யஜுர்வேத:சாமவேதோ
தர்வவேத: சிக்ஷாகல்போவ்யாகரணம்
நிருக்தம் சந்தோ ஜ்யோதிஷமிதி;
அதபராயயாத தக்ஷரமதிகம்யதே.

பொழிப்புரை.

இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவே தம் சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸு, சோதிடம் இவைசிறந்த வித்தியைகளன்று அழிவற்ற பொருளை எதனாலறி கிறார்களோ, அதுவே சிறந்த வித்தை.

விசேஷ உரை.

கடவுளினது தன்மையையும், அவரது கருத்தையும் பற்றிய ஞானத்தைப் பெறுவது மனிதனது முக்கிய புரு ஷார்த்தம். எந்தக் கல்வியைக் கற்றால் மிகவும் விரும்பத் தக்க அந்த ஞானரத்தினத்தைப் பெறலாமோ, அதுவே உண்மையான கல்வி; அதுவே உயர்ந்தகல்வி; அதற்கு வே றான யாவும் உயர்ந்த வித்தைகளன்று. இக்காரணத்தினால் இருக்கு, யஜுசு, சாமம், அதர்வணம், என்னும் வேதங் களும் சிக்ஷை கல்பம், வியாகரணம் சந்தசு, சோதிடம் என்

னும் வேதாங்கங்களும் அக்ஷரவிலக்கணம், இலிகிதம், கணிதம், புராணம், நீதிசாஸ்திரம், தருமசாஸ்திரம், யோகசாஸ்திரம், மந்திர சாஸ்திரம், சகுன சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், உருவ சாஸ்திரம், சாமுத்திரிகம், இதிகாசம் அலங்காரம், மதுரபானம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரம்மம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திர பரிட்சை, கன பரிட்சை, கஜ பரிட்சை, அசுவ பரிட்சை, இரத்தின பரிட்சை, பூமி பரிட்சை, சங்கிராமவிலக்கணம், மல்லயுத்தம், ஆகருடனம், உச்சாடனம், வித்துவேடணம், மதனசரித்திரம், மோகனம் வசீகரணம், இரசவாதம் காந்தருவவாதம், பிபீலவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசியம் இந்திரஜாலம், மகேந்திரஜாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம் அவத்தைப் பிரயோகம் என்றுதி 64-கலைக்கியானங்களும் இவையெல்லாம சிறப்பற்ற வித்தைகளென்று கூறப்பட்டன. இருக்கு, யஜுஸ், சாமம்முதலியவற்றில் எந்தெந்தப் பிரிவுகள்; மேலும் வேறெந்த எல்லாவித்தைகள் பிரம விஷயமாக உண்மையான தத்வோபதேசத்தைச் செய்கின்றனவோ, அவையே சிறந்த் வித்தைகள். அவை யாவரும் வாசிக்கத்தக்கவை.

The inferior knowledge is the Rig Veda, the Yajur Veda, the Sama Veda, tho Atharva Veda, Siksha, Kalpa, Vyakarana, Nirukta, Chandas and Jyotish. The superior knowledge is that by which the Undecaying is known.

**Siksha is Treatise on Intonation.**

| | |
|---|---|
| Kalpa ... ... ... | Ritual |
| Vyakarana ... ... ... | Grammar. |
| Nirukta ... ... ... | Signification of obsolete words. |
| Chandas ... ... ... | Prosody. |
| Jyotisham ... ... ... | Astronomy. |

## (112.) ப்ரஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 23-வது வாக்கியம்.

நைநம்பாப் மாதரதிஸர்வம் பாப்மா நந்தரதி
நைநம் பாப்மாதபதிஸர்வம் பாப்மா நந்தபதி;
விபாபோவிரஜோ அவிசிகித்ஸொ ப்ராஹ்ம
[ணோபவதி.

பொழிப்புரை.

இவரைப் பாவம் பற்றாது. இவர் எல்லா பாபத்தையும் கடக்கிறார் இவரைப் பாபம் தபிக்கச்செய்யாது, இவர் எல்லாப் பாபத்தையும் தபிக்கச்செய்கிறார். இவர் பாபமற்றவரும் நிச்சலமான சித்தமுடையவரும் கடவுள் ஒருவர் உளர் என்பதில் ஐயமற்றவரும் பிராம்மோபாசகாாகிறார்.

விசேஷ உரை.

*யார் ஞானக்கண்ணை பிரமமென்னும லக்ஷியத்தினிடத்தில் வைத்து தருமமார்க்கத்தில் செல்லுகிறாரோ அவரை பாவம் வந்து பற்றமாட்டாது. அவர் பாபதாபங்களிலிருந்து நீங்கி பிரமோபாசகராகிய பிராம்மணராகிறார்.*

Vice cannot subject him, He subjecteth vice, Vice cannot afflict Him, He afflicteth vice, Being viceless, pure and without any religious doubts, one becometh a Brahmin.

---

## (113.) ப்ரஹதாரணிய உபநிஷத்து.

6-வது அத்தியாயம், 5-வது பிராம்மணம் 6-வது வாக்கியம்.

ஆத்மவா அரேத்ரஷ்டவ்ய:
ஶ்ரோதவ்யோமந்தவ்யோ நிதித்யாஸதவ்ய:-

பொழிப்புரை.

பரமாத்துமாவினது தரிசனமும், சிரவணமும், மனனமும் நிதித்தியாசனமும் செய்தல் வேண்டும்.

### விசேஷ உரை.

பரமாத்துமாவை தரிசித்தல் வேண்டும் என்றால் அவர் செய்தருளிய இவ்வுலகப் படைப்பினால், அவரது ஞானத்தையும், சக்தியையும் மகிமையையும் அறிதல் வேண்டும். யாவற்றிற்கும் உயிரைப்போன்றிருக்கிற அவரை எங்குமுள்ளவராகத் தெரிந்துகொளல் வேண்டும். மேலும் ஞானிகளாகிய ஆசாரியர்களிடத்தில் அவரது மகிமையை வெளியிடுகிற உபதேச வாக்கியங்களனைத்தையும் மிகுந்த அன்புடன் கேட்டல்வேண்டும். உலகத்தில் அவரது மகிமையைக் கண்ணுற்று மேலும் ஆசாரியர்களிடத்தில் அவரது பெருமையைக் கேள்வியுற்று இவையனைத்தையும் மறுபடியும் ஆலோசித்து அவரைக் கருதல் வேண்டும். பிறகு அவரை நிச்சயமாக தியானித்தல்வேண்டும். அவரிருத்தலில் ஐயமற்றவர்களாகி அவரிடத்து ஆத்தும சமர்ப்பணஞ் செய்தல் வேண்டும்.

God should be seen, heard of, thought of, and meditated upon as an Object known beyond any doubt.

---

## (114.) கடோப நிஷத்து

### 6-வது வல்லி 15-வது வாக்கியம்.

யதா ஸர்வேப்ரபித்யந்தே ஹ்ருதயஸ்யேஹ க்ரந்தய:; அதமர்த்யோ அம்ருதோபவத்யேதாவதநுசாஸநம்.

### பொழிப்புரை.

இவ்வாழ்க்கையிலேயே எப்பொழுது உள்ளத்தினது பாபமாகிய முடிச்சுகளனைத்தும் அவிழ்ந்துபோகின்றனவோ அப்பொழுது மனிதன் அழிவற்ற நிலையைப் பெறுகிறான், இது தான் உபதேசம்.

### விசேஷ உரை.

அஞ்ஞானமும், மோகமும் நமதுள்ளத்திலுள்ள முடிச்சுகள். பாவவிருப்பமும் அஞ்ஞானமுமாகிய உள்ளத்தி

ளுள்ள முடிச்சுகளனைத்தையும் அழிக்காவிடின் மிகத் தூய்மையையுடைய புருஷனை அடைவது சம்பவமன்று மிக வருத்தத்துடன் நீக்கத்தக்க இவ்வுள்ளத்தின் முடிச்சுகளனைத்தும் நீங்கியபொழுது எந்த நல்லவழியைப் பற்றின் சிறந்த பிதாவுக்கருகே சென்று, ஒரு பயமுமின்றி அவருடன் பேரானந்தத்தில் ஒழிவற்ற வாழ்க்கையைப் பெறுவோமோ, அவ்வழிப்போக்கர்களானோமென்றும், மரணத்தைக் கடந்து பரம புருஷனை அடைந்தனமென்றும் அறியக்கடவோம். இது அனுசாசனம் இது உபதேசம்.

When the knots of error and sin in the heart are destroyed, then the mortal man becometh immortal. Thus much is our instruction.

---

## (115). முண்டகோபநிஷத்து

1-வது கண்டம் 7-வது வாக்கியம்.

### நாராயணம்

10-வது அனுவாகம் 20-வது வாக்கியம்.

### சுவேதாசுவதர உபநிஷத்து

3-வது அத்தியாயம் 9-வது வாக்கியம்.

வ்ருக்ஷஇவஸ்தப்தோ திவிதிஷ்டத்யேக:;
தேநேதம்பூர்ணம்புருஷேண ஸர்வம்.

பொழிப்புரை.

அத்துவிதீயனாகிய பரமாத்மா விருக்ஷத்தைப்போல நிச்சலமாக விருந்துகொண்டு ஸ்வப்பிரகாசமாகிய மகிமையில் வீற்றிருக்கிறார். அந்தப் பூரணபுருஷனால் இவையாவும் நிறைந்திருக்கின்றன.

விசேஷ உரை.

இவ்வுலகாதிபதியைப் பற்றிக்கொண்டு உலகமாகிய சக்கிரம் எப்பொழுதும் சுழன்றுக்கொண்டும்; மேன்மேலும் விருத்தியடைந்துகொண்டும், அவரது நன்னோக்கங்களனைத்தையும் முடிக்கின்றது. அவர் சாக்ஷியாகவும். நியந்தாவாக

வும்,எப்பொழுதும் நிச்சலமா யிருந்துகொண்டு தன்னால் கரு தப்பட்ட நன்மைகள் விளைவதில் ஐயமற்றிருக்கிறார்.ஆற்றுப் பெருக்கினால் ஆற்றங்கரையிலிருக்கிற கிராமங்களும் நகரங்க ளும் மூழ்கிப்போகின்றன; அநேக தேசங்களும், பிரதேசங்க ளும்வெள்ளத்தினா லடித்துக்கொண்டு போகின்றன;மிகுதியா னகாற்றும் அதிபயங்கரமான பூகம்பமும் உண்டாகி அநேக லக்ஷம் உயிர்களை எமன் வாயில் விழச்செய்கின்றன; ஆனால், சருவஞ்ஞரும்,நன்மைக்கே இருப்பிடமுமாகிய பரமேசுவரர் தற்காலத்திற்கு துன்பத்தைத் தருவதாகத் தோற்றுகிற இக் காரியங்களெல்லாவற்றையும், பிற்காலத்தின் அநுகூலத்திற்காகச் செய்துகலக்கமற்று நிச்சலமான தன்மையில்வீற்றிருக்கிறார். எப்பொழுது மிகக்கொடியதாகிய கல்மாரியினாலும்.மேக மு ழக்கத்துடன் கூடி அடிக்கடி இடிவிழுவதாலும், பூமிக்குப்பெ ரிய ஆபத்துவந்து விட்டதாக நினைக்கத்தக்கதாக விருக்கிற தோ.மிகுதியும் அச்சத்தைத் தரத்தக்க அக்கினிமலைகளிலிரு ந்துதீ எழும்பி நாற்பக்கங்களிலுமுள்ள பசுக்கள் பறவைகள் மனிதர்கள் இவைகளுடன் கூடிய கிராமங்களையும் பட்டணங் களையும் தீக்கின்றதோ, அரசனாலும் குடிகளாலும் யுத்தங்க ளுண்டாகி மனிதர்களினது கண்டங்களிலிருந்து வருகிற இர க்தப்பிரவாகத்தினால் பூமி மூழ்கிப்போகிறதோ; அப்பொ ழுது, அவர், தான் வெகுகாலமாகக் கருதிய முடிவான நன் மையை நிறைவேற்றும் விஷயத்தில் நிச்சயமுடையவராக விருந்துகொண்டு எப்பொழுதும்போல சாந்தராகவிருக்கி ன்றார்.

அவர் தனது ஸ்வப்பிரகாசமான மகிமையிலிருக்கின் றார். மற்றவையாவும் அவரைப்பற்றிக்கொண்டே யிருக்கின் றன, அவர் ஒன்றையும் பற்றிக்கொண்டிருக்கவில்லை; அவர் தனது மகிமையிலேயே இருக்கின்றார். அந்தப் பூரணபுருஷ னால் இவ்வுலகம் யாவும் நிறைந்திருக்கிறது.

Still as a motionless tree, He, the One, dwelleth in His glory, All this is full of Him, the Perfect.

## (116). முண்டகோபநிஷத்து

2-வது முண்டகம் 1-வது கண்டம்.

*திவ்யோச்யமூர்த: புருஷ: ஸபாஹ்யா*
*ப்யந்தரோஹ்யஜோ ப்ராணோஹ்யமநா:;*
*யம்பச்யந்தியதய: க்ஷீணதோஷா:.*

பொழிப்புரை.

ஸ்வப்பிரகாசர், நிரவயவர், பூரணபுருஷர், யாவற்றிந்தும் உள்ளேயும் வெளியேயும் நிறைந்திருப்பவர், பிறப்பற்றவர், சாரீரக பிராணமற்றவர், பரிமிதமான மனதற்றவர்; இவரைத் தோஷங்களை நசிக்கச் செய்துகொண்ட யத்தின சீலர்கள் பார்க்கின்றனர்.

விசேஷ உரை.

*அவர் ஸ்வப்பிரகாசர், எங்கும் விளங்கிக்கொண்டிருக்கிறார். இந்த அதிவிஸ்தீரணமான உலகத்தின் ஒவ்வொருபொருளும் அவரிருக்கிறாரென்பதற்குப் பிரமாணத்தைத் தருகிறது. இவற்றின் ஒவ்வொரு சக்தியும், இவற்றிற்குக் காரணமாகிய அவரது மூல சக்தியை விளக்குகிறது. அவருக்கு ஒரு மூர்த்தியில்லை. அவர் பூரண புருஷர்; அவர் எல்லாப்பொருள்களுக்கு உள்ளேயுமிருக்கிறார். அவர் பிறப்பற்றவர், அவர் என்றுமுள்ளவர், அழிவற்ற தன்மையுடையவர். அவர் மனிதர்கள் முதலியவர்களைப்போல பிராணவாயுவைப்பற்றிக்கொண்டு ஜீவித்திருப்பதில்லை; அவர் தானே பிராணஸ்வரூபி, அவர் பிராணத்திற்குப் பிராணமானவர். மனது அவரால் படைக்கப்பட்ட பரிமிதப் பொருள்களிலொன்று; ஆனதால், அவருக்கு இப்படிப்பட்ட மனதிருக்குமென்று நினைப்பதற்கிடமில்லை. அவரது ஞானம் நமது ஞானத்தைப்போல மனோவிருத்தியன்று, அவரது ஞானக்கிரியை இயற்கையாகவுள்ளது. யார் பாபாசரணையை விட்டு வெறுப்புடனிருந்து பரிசுத்தர்களாகி அவரைத்தேடுகின்றனரோ அவர்கள் அவரைப் பார்க்கின்றனர்.*

He is glorious, formless and perfect, is within and without, is unborn, and is without organic life and finite mind. He is seen by them who seek after Him and are viceless.

---

## (117.) சுவேதாசுவதர உபநிஷத்து

1-வது அத்தியாயம் 12-வது வாக்கியம்.

*ஏதத்ஜ்ஞேயம் நித்யமேவாத்மஸம்ஸ்தம்*
*நாத: பரம் வேதிதவ்யம் ஹிகிஞ்சித்.*

### பொழிப்புரை.

எப்பொழுதும் ஆன்மாவிலிருக்கிற பரமாத்துமாவே அறியப் படத்தக்கது அதன் பின்னர் அறியப்படத்தக்கது சிறிதும் இல்லை.

### விசேஷ உரை.

பரமாத்துமா சர்வவியாபி, அவர் எல்லாவிடங்களிலு மிருக்கிறார்; அவர் நிருமலர், அவர் நிஷ்களர், யாதொரு களங்கமும், யாதொரு தீமையும் அவரை யணுகவல்லதென்று. அவர் நிரவயவர், அவருக்கு ஓரவயவமும் இல்லை. ஆனதால் அவர் நரம்பற்றவர், அவருக்கு நரம்பில்லை; மேலும் அவருக்குப் புண்ணுமில்லை காயமுமில்லை. அவருக்கு உடலைப்பற்றிய ஒரு தீங்கும் துன்பமுமில்லை. அவர் எப்படி உடலற்றவரோ, அப்படியே பரிமிதமாகிய மனது மற்றவர். ஆனதால் மனதைப்பற்றிய தீங்குகளாகிய பாவம் துயரம் இவை யாவும் அவருக்கில்லை. நாம் எப்படி பிணியினால், வருந்துகிறோமோ துயரத்தினால் வியாகூலப்படுகிறோமோ, பாபத்தினால் தபிக்கப்படுகிறோமோ, அப்படி அவரில்லை; அவருக்குப் பிணியில்லை துயரமில்லை, பாபமில்லை; அவர் புண்ணற்றவர் அவர் சுத்தர், அவர் பாபமற்றவர், அவர் யாவற்றையும் பார்ப்பவர், அவர் கவி. சௌரமண்டலத்தில் கிரகங்கள் அமைக்கப்பட்டிருக்கிற சிறந்த வரிசைக் கிரமமென்ன, அமுதம்பொழியும் பூரணசந்திரனது இரமணீயமான ஒளி என்ன, ஞானம் தருமம் என்னும் இரத்தினங்களினது அபூர்வமான மனோவின்பத்தைத்தரும் தன்மை என்ன, இவை யாவும் அவரது மிக வல்லமையும் வியப்புமான வேலை. அவர் மநீஷி, அவர் மன

தினது நியந்தா, மனதின் நியந்தாவாகிய பரமபுருஷன் வெவ்வேறினமான ஜந்துக்களின் கருத்துகளில் வெவ்வேறு நியமங்களை ஏற்படுத்தியிருக்கிறார்; ஆனால் பிரிவற அவ்வெல்லா நியமங்களினது நோக்கமும் இவையனைத்தும் சுகமாக விருக்கவேண்டுமென்பதே. விசேஷமாக அவர் மனிதனது மனதை அவனது ஞானமும் தருமமும் உயர்வதுடன் அவன் ஆத்மோந்நதியும் அடையத்தக்க விதமாக அதிவியப்பான நியமங்களினது ஸ்வாதினப்படுத்தி யிருக்கிறார். மனித ஆன்மா அவரது மிகுந்த முயற்சியின் பொருள்; மிகுந்த வல்லமையுடன் அவரதைக் காத்துவருகிறார். மனித ஆன்மாமோகமாகிய வலையினின்றும், துயரத்தினால் வரும் வியாகுலத்தினின்றும் பாபத்தினுடைய தாபத்திலிருந்தும், மரணத்தினது வாயிலிருந்தும் மீட்கப்பட்டு பிரமஞானத்தையும், பிரமாநந்தத்தையும், பெறத்தக்கவிதமாக இந்தத்தரும நியமங்களனைத்தும் ஸதாபிக்கப்பட்டிருக்கின்றன. அவர் பரிபூரணர். அவர் யாவற்றிலும் சிறந்தவர், அவர் சுவயம்பு. அவர் தாமாக விளங்குகிறவர். எல்லா ஜந்துக்களும் அவரால் படைக்கப்பட்டு விளங்கச்செய்யப்பட்டிருக்கின்றன. அவருக்குப் பிறப்பில்லை, அநாதி, அவர் யாராலும் படைக்கப்பட்டவருமன்று, விளங்கச்செய்யப்படுகிற வருமன்று; அவர் எப்பொழுதும் தாமாக விளங்குகிறவராக விருக்கிறார், அவர் எப்பொழும் பிரஜைகளனைவருக்கும் வேண்டிய பொருள்களனைத்தையும் பகர்ந்து கொடுக்கிறார். நீர் நிலம் வெளி குகைகளில் நிறைந்திருக்கிற புழுக்கள், விட்டிற் பறவைகள், எறும்புகள் மீன்கள், ஆமைகள், முதலைகள், பசுக்கள், பறவைகள், மனிதர்கள் முதலிய அளவற்ற அநந்தகோடி பார்ப்பதற்கரிய சூக்ஷும உயிர்களுக்கு அதனால் விரும்பப்பட்ட அந்நபானமுதலிய பல போகப்பொருள்களை வேண்டுமளவும் எப்பொழுதும் அதிசியாயமாகப் பகர்ந்து கொடுத்துக்கொண்டு வருகிறார். இவை அவற்றைப்பெற்று இங்கு மங்குமாக சுகித்துக்கொண்டு சஞ்சரிக்கின்றன.

He is to be known Who dwelleth ever in himself. There is nothing else which is to be known in preference to Him.

## (118). கடோப நிஷத்து

2-வது வல்லி 12-வது வாக்கியம்.

*தந்துர்தர்சம் கூடமனுப்பிர விஷ்டம் குஹாஹிதம், கஹ்வரேஷ்டம் புராணம்; அத்யாத்ம யோகாதிக மேந, தேவம் மத்வா திரோஹர்ஷ சோகௌஜஹாதி.*

பொழிப்புரை.

மிகவருந்தத்தினால் அறியப்படத்தக்கவரும், எல்லாப்பொருள்களிலும் அதி சூக்ஷுமமாகப் பிரவேசித்திருக்கிறவரும், ஆத்மாக்களிலிருப்பவரும், அதிஸங்கடஸ்தானங்களிலு மிருப்பவரும், புராதனருமான அந்தத்தேவனை உள்ளத்தை விஷயங்களினின்று நீக்கி பரமாத்துமாவினிடத்தில் சேர்த்துவைக்கும் சாதனையினால் விவேகிகளறிந்து சுகதுக்கங்களை விட்டுவிடுகின்றனர்.

விசேஷ உரை.

அவர் வருத்தத்தினா லறியப்படத்தக்கவர் விஷய போகத்தினால் நசித்த ஞானத்தையுடையவர்கள் அவரை ஒருபோதும் அறியவல்லவரல்லர்; அவர்தரிசன சாத்திரங்களைப் படிக்கட்டும், தருமநூல்களைப் படிக்கட்டும் அவர்களது உள்ளங்களிலுள்ள ஐயம் ஒருபோதும் நீங்குவதில்லை, அவர்களது ஞானம் ஒருபொழுதும் திருப்தியடைவதில்லை, ஸத்தியத்திற்கு ஸத்தியம் அவர்களுக்கருகில் நிழலைப்போல விளங்கிக்கொண்டிருக்கும், கட்டையில் எப்படி, தீ மறைந்திருக்கின்றதோ, அதுபோல எல்லாப்பொருள்களிலும் அவர் சூக்குமமாகப் பிரவேசித்து மறைந்திருக்கிறார்; தூய்மையான சத்துவகுண முடையவர்களும், பிரமநிஷ்டர்களுமானவர்களுடைய நிருமலஞானத்திற்கு அந்தச்சிறந்த தேவதை எரிக்கப்பட்ட கட்டையினின்று வெளிப்பட்டுப் பிரகாசிக்கிற தீயைப்போல விளங்குகிறார். அவர் ஆத்துமாவுக்கு அந்தராத்துமா, அவர் ஆத்துமாக்களிலெப்பொழுதும் குடிகொண்டிருக்கிறார், அவர் ஆகாயத்தில் ஓதப்புரோதத்தன்மையாகவிருக்கிறார். அவர் மலைகளினது குகைகளிலும், இமயம், கைலாயம் முதலிய மலைகளின் உச்சிகளிலும், மிகுதியான காட்டுத் தீயினிடத்திலும், பயங்கரமான சமுத்திரத்தின்

அலைகளிடத்திலும், ஜநசஞ்சாரமில்லாததும் போவதற்குக் கஷ்டமுமான இடங்களிலும் அவர் எப்பொழுதும் வீற்றிருக்கிறார். அவர் நமது நேரான தந்தை, அவர் நமது அழிவற்ற பாட்டன். விவேகிகள் அத்தியாத்மயோகத்தினால் அந்த அறிவதற்கரிய பரமாத்துமாவை அறிந்து இன்பதுன்பங்களைவிட்டு நீங்குகின்றனர். பரமாத்துமாவினிடத்தில் ஜீவாத்துமா சேர்ந்திருப்பதே அத்தியாத்மயோகமென்று சொல்லப்படும். அத்தியாத்மயோகத்தில் எப்பொழுது நமது கருத்து அவர் கருத்துடன் சேருகின்றதோ, எப்பொழுது அறிவு அவரது சத்திய ஸுந்தர மங்களஸ்வரூபத்தை அறிந்து திருப்தியடைகின்றதோ; அப்பொழுது, உள்ளம் அவருக்கு அன்பென்னும் காணிக்கை செலுத்தி, ஆநந்தக்கடலில் மூழ்கிவிடய இச்சையினாலுண்டாகும் இன்பதுன்பங்களிலிருந்து நீங்குகின்றது. எவ்வளவு தூரம் நமது கருத்து அவர் கருத்தோடும், நமது அறிவு அவர் அறிவோடும், நமது அன்பு அவர் அன்போடும் சேருகின்றதோ, அவ்வளவுக்கு நமக்கும் அவருக்குமுள்ள சம்பந்தம் அதிக உறுதியுமுள்ளதாகின்றது. மேலும், அவ்வளவுக்கு அவரது தூய்மையான ஸாமீப்பியத்தைப் பெற்றுத் தூய்மையுடையவர்களாகிறோம். இப்படிப்பட்ட * யோகத்தினாலேயே அவரை நாம் அறியவல்லோம், இப்படிப்பட்ட யோகத்தினாலேயே அவரால் கட்டளையிடப்பட்ட தருமானுஷ்டானத்தினால் பலத்தைப் பெறுகிறோம். இவ்விதமான யோகத்தினாலேயே மறுமையின்பம் கிடைக்கிறது, இவ்விதமான யோகத்தினாலேயே முக்தி கிடைக்கிறது.

* யோகம் என்னும் பதம் வடமொழிப்பதம், அப்பதம் நிஷ்டை, உபசாரம், உபாயம், உயர்ச்சி, உற்சாகம், கூடல், நக்ஷத்திரமென்னும் பல பொருள்களைக் குறித்தபோதிலும், இவ்விவகாரத்தில் மதவிஷயமான பொருளைக் கொள்ளல் வேண்டும். ஆகவே, யோகமென்னும் பதமானது பூர்வத்தில் யூகமென்னும் பதத்திலிருந்து மருவியிருக்கவேண்டும். அதாவது யூகியென்னும் வினையடியால், (பரமாத்துமாவை) ஆழ்ந்து யோசித்தறிந்துகூடும் நிலையெனக் கொள்ளல்வேண்டும்.

இந்த யோகத்தில் பல பிரிவுகளிருந்தாலும், அவற்றில் ஹடயோகம், இராஜயோகமென இரண்டு பெரிய வகுப்புகளுண்டு. இவ்விரண்டில் ஹடயோகமாவது=தனது இஷ்டத்தின்படி மனதை வசப்படுத்திக்கொள்ள ஸ்தூலதேகத்தை பழக்குவதேயாம். அதாவது தலைகீழாக நிற்றல், தண்ணீர்மீதும் தீயின்மீதும் நடந்துபோதல், மரக்கிளைகளில் ஒரு கரத்தையும், அல்லது ஒரு காலையும் மாட்டித் தொங்கியாடல் சில சமயங்களில் ஆகாயத்தில் நிற்றல் முதலியவைகளாம்.

இராஜயோகமாவது=ஹடயோகத்தினால் ஸ்தூலதேகத்தையும் மனம் புத்தி சித்தாதிகளைத் தமது அடிமையாக்கி ஆத்மாவின் அபிஷ்டப்படி நடிக்கச்செய்வதேயாம்.

அங்கிசை முதலிய இயமம்; தபசு முதலிய, நியமமும்; சுவஸ்திக முதலிய ஆசனமும்; இரேசக முதலிய பிராணாயாமமும்; சரீர முதலிய பிரத்தியாகாரமும், பூத முதலிய தாரணையும்; அஷ்டதார முதலிய சமாதியும், என்னுமிவற்றை அனுஷ்டிக்கும் நிலையேயாம் அவையாவன:—

இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டு வகைப்படும். இதுவே அஷ்டாங்கயோகமாம்.

☞ இந்த யோக விஷயத்தை விவரமாக அறிய விரும்புவோர் எமது இராஜயோக வினாவிடையைப் பார்க்கவும்.

Him the Being Divine who is difficult to be comprehended who is hidden within all things, who is seated in the hearts of beings, and is in all inaccessible places; Him who is the Ancient the wise, knowing by concen tration of mind avoid both mirth and sorrow.

---

## (119). முண்டகோபநிஷத்து

3-வது முண்டகம் 2-வது கண்டம் 3-வது வாக்கியம்.

நாயமாத்மாப்ர வசநேநலப்யோ நமேதயாந பஹுநாச்ருதேந; யமேவைஷ வ்ருணுதேதேந

*லப்யஸ்தஸ்யைஷ ஆத்மாவ்ருணுதே*
*தநூம்ஸ்வாம்.*

பொழிப்புரை.

இப்பரமாத்துமா நல்ல சொற்களினால் பெறப்படமாட்டார், புத்தியினாலுமில்லை, பல கேள்விகளினாலுமில்லை; யார் அவரை விரும்புகிறார்களோ, அவர்களால் அவர் பெறப்படுகிறார். பரமாத்துமா அப்படிப்பட்டவருக்குத் தனது தன்மையை விளங்கச் செய்கிறார்.

விசேஷ உரை.

*அவரை யடையவேண்டுமென்னும் முயற்சியும் * பக்தியும் இராவிடின், நல்ல புத்தியிருக்கினும்; மேலும், நல்ல உபதேச வாக்கியங்களைக் கேட்கினும், எதனாலும் அவரை அடையக்கூடாது. யார் தாகங்கொண்ட வழிப்போக்கரைப் போல, கவலையுடையவராகி தனிமையில் அவரை பக்தியினால் தேடுகின்றனரோ அவர்கள் முன்பாகவே பரமாத்துமா தனது ஸ்வரூபத்தை விளக்குகிறார். அப்பொழுது அந்தச் சாதகர் விரும்பியதைப் பெற்றவராகியும் தூய்மையுடையவராகியும் திருப்தியுடையவரும் ஆகிறார்.*

* பக்தி *என்னும் பதம் வடமொழிப்பதம் இப்பதத்திற்கு அமரம் அல்லது நாமலிங்கானு சாசனமென்னும் கிரந்த வியாக்கினமாகிய* குரு பல பிரபோதம் *என்னும் கிரந்தம் துவிதியகாண்டம்* 623-*வதில்* "பிஸ்ஸா ஸ்ரீ பக்தமம் தொன்ன்மோதனோ ஸ்ரீஸதிதிவி" *என்ற சுலோகத்தினால்* பக்தி *என்னும் பதமானது* "பஜ்ஜதி இதி பக்தம்; பஜ" ஸேவாயாம்—*ஆசிரயிக்கக்கூடியது, என்றும்; ஸம்ஸ்கிருத சப்தார்த்த கல்பதரு என்னும் பெரிய ஸம்ஸ்கிருத அகராதியில் பக்தி என்னும் பதத்துக்கு* பாக=*பாகம்,* ஸேவாயாம்=*ஸேவித்தல் என்று பொருளாகுமென நானார்த்தரத்னமாலா என்னும் கிரந்தத்தில் சொல்லப்பட்டிருப்பதாகவும், சப்தலிங்கார்த்த சந்திரிகா' என்னும் கிரந்தத்தில் 'யோகே, பக்தி யோகம், செய்தல், க்பாவே, அபிப்பிராயம் என்றுதி பொ*

ருள்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அன்றியும் சாண்டலிய ரிஷியவர்கள் செய்த பக்தி சூத்திரங்களுக்கு வியாக்கியானம் செய்த சுவப்பனேசுவர சுவாமிகள் அந்த கிரந்தத்தின் 56-வது சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்தபோது, பக்தி என்ற பதமானது பஜன் என்ற பதத்துக்குப் பொருளென்றும், இந்த இரண்டு பதங்களும் பஜ்என்னும் தாதுவிலிருந்துண்டானதென்றும்,—அதாவது ப ஜ ய தி இ பி ஹி என்பதனால், பரமேசுவரரைப் பஜிக்குந் தொழிலுக்கு பக்தி என்றும், பஜி என்ற பதம் சகார ஜகார இலக்கண சந்தி பேதங்களினால் பக்தி என்றாயிற்றென்றும் சொல்லியிருக்கிறார். மேலும், சைதன்னிய சுவாமிகள் 'பக்தி' என்னும் பதத்திலிருக்கும் ப=எழுத்து பரமேசுவரரையும் க்=ஜீவாத்மாவையும் தி=சேர்ப்பதெதுவோ அது பக்தி என்று சொல்லுவதற் கனுகூலமாகவே, வேதமூர்த்திகளான ஸ்ரீ சங்கராசாரி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய 'சிவானந்தலஹரி' என்னுங் கிரந்தத்தில் "அங்கோலம் நிஜபீஜ ஸந்ததி ரயஸ் காந்தோபலம் ஸூசிகா ஸாத்வீநைஜ விபும்லதாக்ஷி திருஹம் ஸிந்துஸ்ஸரித்வல்லபம், பிராப்நோதீஹயதா ததா பசுபதே! பாதாரவிந்தத்வயம் சேதோவ்ருத்தி ருபேத்யதிஷ்டதி ஸதாஸா பக்திரித்யுச்சதே"—அழிஞ்சற் செடியின் விதைகள் பக்குவமான காலத்தில் பூமியில் உதிர்ந்து மறுபடியும் யாதொருவருடைய பிரயததனமுமில்லாமல் மேற்படி செடியில் தம்மிடத்தை நாடி செல்லுவதைப்போலவும் ஊசிகள் காந்தத்தை நாடிச் செல்லுவதைப்போலவும், பதிவிரதையானவள் தன் நாயகன் பாதத்தைநாடிச் சேர்வதைப்போலவும், கொடி விருக்ஷத்தை நாடிப் படருவதைப் போலவும், சித்தத்தினுடைய வியாபாரமானது சதா பரமேசுவரருடைய பாதாரவிந்தங்களை நாடுவதென்பதெதுவோ அதற்குத்தான் பக்தி என்று செப்பியிருக்கின்றனர்.

இத்தியாதிகளால் பக்தி என்பது பரமேசுவரரிடத்தில் ஜீவாத்துமாக்கள் சிரத்தையோடு கூடி இகபரசுகங்களை அனுபவிப்பதற்கு பரமேசுவரர் படைத்த இயற்கைச்சாதன

மென்றும்; இந்தச்சாதனம்: மானவஜாதியாராகிய நாம் தாது வர்க்க கந்தமூல வர்க்க ஜீவவர்க்கத சையிலிருந்த காலங் களிலும்; பிறகு மானவஜாதியாராகப் பிறந்த இப்போதும் பாலியதசையில் பயம் அல்லது பீதிரூபமாக இருந்தும், பிறகு யௌவன காலத்தில் பிரியம் அல்லது பிரீதி அல்லது அன்பு ரூபமாக மாறியும், பிறகு சராசரப் பொருள்களின் மேலிருக்கும் ஆசாபாசங்களை முற்றும் விட்டொழித்து யாதொரு பிரதிப் பிரயோஜனத்தை நாடாமல் பரமேசுவ ரிடம் வைக்கும் பூரண அன்பிற்கே பக்தி என்று பொருளா கிறது.

God is not attained through religious sayings, or through capacity of intellect, or through much hearing of holy men. He who wanteth Him, Obtaineth Him.

---

## (120.) ப்ரஹதார்ரண்ய உபநிஷத்து

### 3-வது அத்தியாயம் 3-வது பிராம்மணம்.

**ததேதத்ப்ரஹ்மாபூர்வம் ஏத தம்ருதமபயம் சாந்த உபாஸீத.**

### பொழிப்புரை.

எது அந்தப்பிரமமோ, அதற்குமுன் ஒன்றுமில்லை; அது அழி வற்றது, பயமற்றது சாந்தராகி அதை உபாசியுங்கள்.

### விசேஷ உரை.

யார் இவை யாவற்றிற்கும காரணரோ அவருக்கு ஒரு காரணமுமில்லை; அவர் முதலும் ஈறும் அற்றவர், அழிவற்ற வர் எங்கும் நிறைந்தவர். அந்தப் பயமற்றவரது சரணடை யின் வேறொரு பயமுமிராது. சாந்தராக அவரது உபாஸனை யைச் செய்யுங்கள். சாந்திதான் கடவுளிடத்துள்ள அன் பிற்கு இருப்பிடம். எப்பொழுது மனது நிருமலமாகி அசை வற்ற தடாகத்தைப்போல, சாந்தமாக விருக்கின்றதோ, அப் பொழுதுதான் உள்ளத்தில் கடவுளினது ஸ்வரூபம் விளங் கும்; அப்படியிராமல், மிகுந்த பொருளவாவினாலும் புகழ வாவினாலும், பொறிகள் வழி எல்லாம் சென்று மனம்

தூய்மையற்றிருக்கினும், மிகத் தூய்மையான பிரமாநந்தத்தை அனுபவிக்க வல்லமையிராது; ஆனதால் சாந்தராக அவரை உபாஸியுங்கள்.

This is He, the supreme, who has nothing prior to Him. He is immortal and without fear. With a tranquil heart is He to be worshipped.

---

## குறிப்பு.

இந்த அத்தியாயத்தில் இதுவரையில் எடுத்துக் காட்டிய உபநிஷத்து வாக்கியங்களினால், பிரம்மலக்ஷணம் இப்படிப்பட்டதென்றும், இப்படிப்பட்ட பிரம்மத்தை யடைபவருக்கே இகபரசுகம் கிடைக்குமென்றும், இந்த இகபர சுகத்தைத் தரும் பிரம்மத்தை அடைவதற்குக் கேவலம் பக்தியே சிறந்த சாதனமென்றும், இந்தப் பக்தியினால் பரமேசுவரரை உண்மையாக உபாசனைசெய்து அடைவதே பக்தி யோகமென்றும், இந்தப் பக்தி யோகத்தைச் சாதித்தல் சகலருக்கும் சுலபமான மார்க்கமென்றும் ஸ்பஷ்டமாகிறபடியால், அடுத்த அத்தியாயத்தில் இந்தப் பக்தி யோகமாகிய பிராமோபாஸனையைச் செய்யும் இடம், காலம் விதம் முதலான விவரங்களைப்பற்றி அறிவிக்கும் உபநிஷத்துகளைக் காட்டுகிறோம்.

---

## நான்காவது அத்தியாயம்.

### பிர்மோபாஸனை.

பிர்மவாதிகளுரைக்கின்றனர்.

### (121.) கடோபநிஷத்து

3-வது வல்லி 14-வது வாக்கியம்.

உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்யவரான் நிபோதத;
க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா
துர்கம் பதஸ்தத் கவயோ வதந்தி.

பொழிப்புரை.

ஓ உயிர்களே! எழுந்திருங்கள், அஞ்ஞானத் தூக்கத்தைவிட்டு விழித்துக்கொள்ளுங்கள். பிரம நிஷ்டராகிய சிறந்த *ஆசாரியரிடத்திற்குச் சென்று ஞானத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள்; விவேகிகள் இந்த வழியை தீட்டப்பட்ட கத்தி முனையைப்போல செல்வதற் கரிதானதால் நடப்பதற்கு கடினமானதென்று உரைக்கின்றனர்.

விசேஷ உரை.

ஓ! உயிர்களே ! எழுந்திருங்கள். அஞ்ஞானத் தூக்கத்தைவிட்டு விழிப்படையுங்கள்; இன்னும் எவ்வளவு காலம் அவரை விட்டிருப்பீர்கள், இன்னம் எவ்வளவு நாள் அந்தப் பெருஞ்செல்வத்தை மறந்திருப்பீர்கள், காலம் செல்லுகின்றது, சாவு சமீபிக்கின்றது. மந்தத்தன்மையையும், சோம்பலையும் ஒழித்துவிடுங்கள்; சிறந்த ஞானிகளாகிய ஆசான்களுக்கருகே சென்று எல்லா விருப்பங்களையும் முடிப்பதற்குரிய கருவியானவரும் மிகுந்த அன்பிற்குரியருமானவரை அறியுங்கள், ஆயிரம் நூல்களை வாசிப்பதினால் ஆகாததும் சிறந்த ஆசானது சொல்லினாலாகும். ஈசுவரனிடத்திற்குப் போகும் வழியைப் பற்றவேண்டுமாயின் அறிவைத் தூய்மைப்படுத்தல் வேண்டும், பொறிகளை வசப்படுத்தல்வேண்டும், பொறுமையைப் பழக்கப்படுத்தல் வேண்டும், தருமக் கருத்துகளனைத்தையும் வளர்த்தல்வேண்டும், மேலும் கடவுளிடத்துள்ள அன்பில் கருத்தை ஆழ்த்தல்வேண்டும்; ஆனதால் இவ்வழி, செல்வதற்கு மிகக் கடினமான வழி, ஆயினும் கடவுளுடைய அருளாலும், சாதகனது விருப்பத்தினாலும், இவ்வருத்தமானவழியும் எளிதான வழியாகும்.

*ஆசாரியன் என்றால்=தான் பிறருக்கு போதிப்பதைப் போல, தானும் அனுஷ்டிக்கப்பட்டவன். சில சமயங்களில் இப்பதத்திற்கு குருவென்று சொல்வாருமுண்டு. குருவென்றால் கு=அந்தகாரம், ரு=என்றால் சூரியன். அதாவது அந்தகாரத்தில் சூரியன் பிரகாசம்பட்டால் அந்த இருட்டு நீங்குவதைப்போல், கு=(அஞ்ஞானத்திலிருக்கும்) சீடனுக்கு

ரு=(என்னும் சூரியனைப்போல பிரகாச) ஞானத்தைத்தரு பவன் என்று கருத்து.

Awake, arise, and going to the best of men, understand God. The path of Religion, say the wise, is as difficult of passage as the edge of sharpened razor.

---

## (122.) சுவேதாசுவதர உபநிஷத்து

2-வது அத்தியாயம் 5-வது வாக்கியம்.

ஶ்ருண்வந்துவிச்வே அம்ருதஸ்ய புத்ரா
ஆ யே தாமானி திவ்யாநி தஸ்து:-

பொழிப்புரை.

ஓ! ரமணீயமான இடங்களில்வசிப்பவர்களும் நித்தியநடைய பிள்ளைகளுமாகிய எல்லா உயிர்களே, செவியுற்றுக் கேளுங்கள்.

விசேஷ உரை.

நிர்விகாரரும் அழிவற்றவருமான பிரமத்தை உதயகாலத்தின் சூரியப்பிரகாசத்தைப் போல தம்முள்ளங்களின் வழியாக அடைந்து புதிய ஊக்கங்கொண்ட பிரமவாதிகள் "ஓ" அழிவற்ற புருஷருடைய பிள்ளைகளே! விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் வசிக்கிற தேவர்களே! மனிதர்களே! செவியுற்றுக்கேளுங்கள்; நாங்கள் இருளைக்கடந்த ஒளிவடிவராகிய மஹா புருஷனை யறிகின்றனம்." என்று உரைக்கின்றனர்.

Hear this. O all ye sons of the Immortal! Who reside in these pleasant mansions the earth and in the orbs of Heaven.

---

## (123.) சுவேதாசுவதர உபநிஷத்து

3-வது அத்தியாயம் 8-வது வாக்கியம்.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தமாதித்ய வர்ணம், தமஸ: பரஸ்தாத்; தமேவவிதித்வாதி ம்ருத்யுமேதி, நாந்யபந்தா: வித்யதேஅயநாய.

பொழிப்புரை.

நான் மஹானும் ஸ்வப்பிரகாசரும் இருளைக் கடந்தவருமான இந்தப் புருஷரை அறிவேன். அவரையே அறிந்து சாதகர் மரணத்தைக் கடக்கிறர். பரமபதமடைவதற்கு வேறுவழி இல்லை.

விசேஷ உரை.

*இந்த இருளைக்கடந்த ஒளிவடிவராகிய மகாபுருஷரை அறிந்து சாதகர் மரணத்தைக் கடக்கிறார், அவர் அளவற்ற காலம் வரையில் ஞானத்தையும் அன்பையும் வடிவாகக் கொண்ட புருஷனைத் தொடர்ந்து பேராநந்தத்தை அனுபவிக்கிறார். அவரைச் சரணமாக அடைதலன்றி முத்தியைப் பெறுதற்கு வேறு உபாயமில்லை.*

I have known Him Who is Perfect, Great, Glorious and beyond darkness. Knowing Him alone one avoideth death. No other path there is for Salvation

---

## (124.) சுவேதாசுவதர உபநிஷத்து

2-வது அத்தியாயம் 10-வது வாக்கியம்.

*ஸமேசுசௌ சர்கராவந்நி வாலுகா விவர்ஜிதே சப்த ஜலாச்ர யாதிபி:; மநோநுகூலே நது [சக்ஷுபீடநே குஹாநிவாதா ச்ரயணே ப்ரயோஜயேத்*

பொழிப்புரை.

மேடுபள்ளமில்லாமல் சமமாகவும், சுத்தமாகவும், சிறுமணலும் சூடேறியமணலும் இராததாகவும், ஓசை, நீர் இருப்பிடம் முதலியவைகளால் கருத்திற்கின்பம் தருவதாகவும், பார்வைக்கு வெறுப்பான பொருள்களில்லாமலுமிருக்கிற போதுமான காற்று வருகிற தனித்த இடத்தில் கருத்தை பிரமத்தி னிடத்தில் செலுத்தத்தக்கது.

விசேஷ உரை.

*எவ்விடத்திலிருக்கின் கருத்து நன்றாக விருக்குமோ; மேலும், தூய்மையான அந்தப் புருஷனிடத்திற்கு ஆயாசமின்றிக் கருத்துச்செல்லுமோ, அவ்விடத்தி லுட்கார்ந்து*

உபாஸனை செய்யத்தக்கது. கெட்ட மணம் வீசுகிறதும், அனல் வீசுகிறதும், சுத்திசெய்யப்படாததும், அசுத்தமானதுமான இடத்தில் உட்காரின் கருத்தில் மாசுண்டாம்; மேலும், வேண்டியபடி ஈச்வரனிடத்திலும் சிந்தனை செல்லாது. ஆனால் எந்த இடம் மிகவும் தனித்தும் சுத்தமாயும், சுத்திசெய்யப்பட்டும் கூரையிடப்பட்டும், குளிர்ச்சியாயும் ஸமமாயுமிருக்கிறதோ, எவ்விடத்தில் நன்னீருளதோ, எவ்விடத்தில் காற்றினால் தீங்கில்லையோ, எவ்விடத்தில் பரவைகளினது இனிய ஓசை கேட்கப்படுகிறதோ, எவ்விடத்தில்கண்ணுக்கருவருப்பான விஷயங்களில்லையோ, அப்படிப்பட்ட இடத்தைவிட வேறெந்த இடத்தில் கருத்துமிகவுந்தூய்மையாகக்கூடும்? இதனால் இப்படிப்பட்ட தூய்மையும் சுகமுமானவிடத்தில் உட்கார்ந்து உபாஸனை செய்யவேண்டியது பிரமவாதிகளினது கருத்து, எந்த இடத்தில் கருத்து நன்றாகவும் தூய்மையாகவும் கலக்கமற்றும் இருக்கக்கூடுமோ, அப்படிப்பட்ட இடத்தில் உபாஸனைசெய்யவேண்டும்; காரணமென்னவெனில் கருத்து கலக்கப்பட்டு நிலைகுலைந்து மலினப்படுமாயின், தூய்மையான ஸ்வரூபமுடைய ஈச்வரனது உபாஸனை கிரமமாய் நிறைவுறாது என்று உபாஸனை செய்யும் இடத்தின் விவரத்தைப் பற்றி இந்த வாக்கியத்தில் சொல்லப்பட்டது.

In a pure and even spot devoid of gravel or burning sand; with good sounds and sheets of water, and shelter from rain and sun shine; a spot delightful, with nothing before disagreeable to sight; a recess exposed to no fierce gustes of wind, in such a retreat should one apply himself to God.

---

## (125.) சுவேதாசுவதர உபநிஷத்து

2-வது அத்தியாயம் 8-வது வாக்கியம்.

திரிருந்நகம் ஸ்தாப்ய சமம் சரீரம்
ஹ்ருதீந்திரியாணி மநஸாஸந்நிவேச்ய

*ப்ரஹ்மோடுபேந ப்ரதரேதவித்வான்*
*ஸரோதாம்ஸி ஸர்வாணி பயாவஹானி*

பொழிப்புரை.

**மார்பு கண்டம் தலை ஆகிய மூவுறுப்புகளுந் நிமிர்ந்தபடி உடலை வைத்துக்கொண்டு ஞானிகள் சம்சாரமென்னுங் கடலினது அச்சத்தைத் தரத்தக்க வெள்ளத்தை பிரமமென்னுமோடத்தினுற் கடக்கின்றனர்.**

விசேஷ உரை.

*முன்னர் எப்படி *உபாஸனைக்குரிய இவ்விஷயமாய்ச் சொல்லப்பட்டதோ, அதுபோல் உபாஸநாகாலத்தில் இவ் விதமாக உட்காரவேண்டுமென்பதிவ் வசனத்தினுற் பெறப் படுகின்றது. மார்பு, கழுத்து, தலை இவைகளை நிமிர வைத் துக்கொண்டு; சாதாரணமாய் உட்காரின், உடலுக்கு முள் ளத்திற்குமொரு விகாரமுமுண்டாவதில்லை; ஆனதினுற்றான் உபாஸநா காலத்தி லிவ்விதமா யுட்கார்ந்துகொண்டு பொறி யின் செயல்களையு முள்ளத்தி லடக்கல்வேண்டும். அவைக ளைப் பலவிதமான வெளிவிடயச் செய்கைகளி லிருந்து பிரி த்து மனநூடனுத்துமாவைப் பரமாத்துமாவினிடத்தில் நிறு த்தல்வேண்டும்; மேலு முள்ளத்தி னன்மை யவரிடத்திற் செலுத்தி உய்யவேண்டும்.*

Keeping the body erect, and concentrating the mind and the senses within the heart, the knower of God should cross all torrents fearful in the ocean of the world with God as his boat.

---

(126.) *தைத்திரிய உபநிஷத்து*

*ஆநந்தவல்லி 1-வது அநுவாகம்.*

*தபஸா ப்ரஹ்மவிஜிஜ்ஞாஸஸ்வ;*
*ப்ரம்மவிதாப்நோதிபரம்.*

பொழிப்புரை.

கருத்தை ஒருவழிப்படுத்தி பிரமத்தைவிசேஷமாகவறியவிரும் புங்கள். பிரமஞானி பிரமத்தையடைகிறர்.

விசேஷ உரை.

பிரமஞானத்தைப் பெறுதற்குக் கருத்தை வேறு வழியில்செலுத்தாமல் மறுபடியும் அவரையேகருதல்வேண்டும். சாந்தஸமாஹித் சித்தராகி, அகக் கண்ணினால் அவரது ஸத்தியஸுந்தரமங்களத் தன்மையைக் காணல்வேண்டும். அப்பொழுதுதான் நாம் அவரையடைந்து வேண்டியதைப் பெற்றவர்களாவோம். பிரமம் உள்ளும் புறமும் எங்கும் ஒரேவிதமாக வியாபித்திருக்கிறார். அவரை யடையும் நிமித்தம் ஒரு இடத்திலிருந்து வேறிடத்திற்குப் போகவேண்டிய தில்லை. அவரை நேராக அறிவதே அவரை யறிவது. மனிதலோகத்திலேயே அவரை யறிய ஆரம்பிக்கலாகும்; ஆனாலப்படி யறிதல் அநந்தகாலம் வரையினு முற்றுப்பெறாது. இவ்வுலகத்தைவிட்டு லோகாந்தரத்தில் இவரை எவ்வளவு அதிகமாக வறியவல்லவர்களாவோமோ, அவ்வளவுக்கு அதிகமும் தூய்மையுமான பிரமாநந்தத்தை அனுபவித்து கிருதார்த்தர்களாவோம்.

Desire to know God through meditation; the knower of God attaineth God.

---

(127). பிரஹதாரணிய உபநிஷத்து.

3-வது அத்தியாயம் 3-வதுபிராம்மணம் 28-வதுவாக்கியம்.

ஏநாஹம் நாம்ருதாஸ்யாம் கிமஹம்
தேநகுர்யாம்; அஸதோமாஸத்கமய
தமஸோமா ஜ்யோதிர்கமய ம்ருத்யோர்மா
ம்ருதம்கமய; ஆவிராவிர்மயேதி;
ருத்ரயத்தே தக்ஷிணம் முகம்தேந
மாம்பாஹிநித்யம்,

பொழிப்புரை.

எதனால் நான் அழிவற்றபதவியை அடையேனோ அதனால் நான் என்ன செய்வேன்? அஸத் ஞானத்தைவிட்டு ஸத்ஞானத்தை என்னையடையச் செய்யும், இருளைவிட்டு என்னை ஒளியையடையச்

செய்யும். அழிவுள்ள தன்மையை விட்டு அழிவற்ற தன்மையை யடையச்செய்யும். ஓ ஸ்வப்பிரகாசனே! எனக்காகப் பிரகாசியும், * ஓ ருத்திரனே! உனது மகிழ்ச்சியைத் தரத்தக்க முகமேது வோ அதனால் என்னைக் காப்பாற்றும்.

### விசேஷ உரை.

*எதனால் நித்திய புருஷனோடு கூடும் வாழ்க்கை கிடைக்காமல் நித்திய பதவியைப் பெறேனோ அதை யடைந்து நானென்னசெய்வேன் ? விஷய விபவமும் பெருமையான புகழும். ஆமோதப் பிரமோதங்களும் யாவும் நிலையற்றவை; இவை நிலையுள்ளவைகளாக விருக்கினும், பிரிய தமனாகிய ஈச்வரனைவிட்டு இவை யனைத்தையும் அடைந்து என்னசெய்வேன் ? ஆனதால் ஓ ! பரமேச்சுவரனே ! எதனால் உம்மை யடையும் வல்லமை மெய்தப்பெறுவேனோ, அதை எமக்குத் தாரும். அஸத்தாகிய ஸம்ஸாரத்தை விட்டு நீக்கி உமது ஸத்தாகிய மார்க்கத்தில் என்னைச் சேர்ப்பியும், அஞ்ஞானமாகிய இருளை நசிக்கச்செய்து எமதுள்ளத்தில் ஞானஒளி விளங்கச்செய்யும். அமிர்தஸ்வரூபனாகிய நீர் என்னை உன்னிடத்துக் கொண்டுபோம். ஓ ஸ்வப்பிரகாசனே ! என்னருகில் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிரும். ஏதேனும் விபத்தில் விழுந்து உனது ருத்திரமுகத்தைப் பாராமலிருப்பேனாக. எப்பொழுது உனது பிரசன்ன முகத்தை நான் பாராமலிருக்கிறேனோ, அப்பொழுது நான்குபக்கங்களிலும் இருளையே பார்க்கிறேன். நீர் எமது இருளுக்கு விளக்கைப்போன்றவர்; தாகத்திற்கு ஜலத்தைப்போன்றவர். மேலும் எமது இளைப்பாறுமிடமும் நீரே.*

Things through which I cannot gain life eternal, what shall I do with them ! Lead me forth, O God ! from the unreal into the real, from darkness into light, from death into immortality. O ! God ! protect me ever with Thy Bright face.

---

### பிரமோபாஸனா பத்ததி.

*இந்தப்* பிரமோபாஸனை, ஸ்தோத்திரம், வந்தனம், தியானம், பிரார்த்தனை என்னும், நான்கு அங்கங்களையுடையது.*

ஸ்தோத்திரமாவது, கடவுளது குறைவற்ற நித்திய லக்ஷணங்களை யுன்னி, நமது பக்தி, சிரத்தைகளை வெளியிடுகை.

வந்தனமாவது, நமது உடலையும், உயிரையும், சம்ரக்ஷணை செய்யும், இவரது அளவற்ற கருணையைக்கருதி நமக்குள்ள நன்றியறிவைத் தெரிவிக்கை.

தியானமாவது, ஈசுவரனுடைய, ஸர்வ வியாபகத்துவம் ஸர்வஞ்ஞத்வம், ஸர்வ காருணியத்வம், ஸர்வ நிருமலத்துவம், என்பவற்றைச் சிந்தித்து அவரது அதிஸமீப ஸாந்நித்யத்தை மனக்கண்ணால் காண முயலுகை.

பிரார்த்தனையாவது, பாப பந்தங்களைவிட்டு நீக்கும்படிக்கும், ஆத்மசாந்தியையும், தூய்மையையும், அருளும்படிக்கும், ஈசுவரனை வினயமாய் வேண்டுதல்.

இந்த நான்கங்கங்களும் நன்கமைதலே பிரமோபாஸனையாம்.

ஆரியருடைய பிரார்த்தனைகளின் உத்தேசம் இன்னதென்று அறியச் சக்தியற்ற சில கிறிஸ்து முதலான மதஸ்தர்கள், ஆரியர் கேவலம் விக்கிரஹாராதனைக் காரர்களென்றும், அவர்கள் செய்யும் பிரார்த்தனைகள் பிரதி மனுஷனுடைய பாவமன்னிப்பைப் பற்றிய தல்லவென்றும் கேவலம் இகலோக சுகத்தைக் கருதிய வீண் சடங்குகளென்றும்,எண்ணியிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் ஆரியருடைய சந்தியாவந்தனம் என்னும் பிரார்த்தனையைப்பற்றி ஆராய்ந்து பார்க்கில், அதில் பிரதிதினமும் காலை, மாலை மத்தியானங்களில், பிரதி மனுஷன் தான் தனது கரசரணம், மனம் புத்தி முதலியவைகளால் செய்த பாவங்களை அப்போதுக்கப்போது போக்க அதிக அநுதாபத்துடன் செய்யும் பாவவிமோசனார்த்தமான பிரார்த்தனைகளென்பது ஸ்பஷ்டமாகும், ஆகவே அந்தச் சந்தி வந்தனத்தின் அருத்த சாராம்சத்தை இதனடியிற் பதிப்பிக்கின்றனம்.

## சந்தியாவந்தனத்தின் ஸாரசங்கிரகம்.

### ஆசமனம்.

ஓம் அச்சுதாயநம:; ஓம் அனந்தாயநம:; ஓம் கோவிந்தாயநம:

ஓம் கேசவாயஸ்வா:, ஓம் நாராயணாயஸ்வா:; ஓம் மாதவாயஸ்வா: ஓம் கோவிந்தாயநம: ஓம் விஷ்ணவேநம:, ஓம் மதுசூதநாயநம:, ஓம் திரிவிக்ரமாயநம:, ஓம் வாமநாயநம:, ஓம் ஸ்ரீதராயநம:, ஓம் ஹிருஷீகேசாயநம:, ஓம் பத்மநாபாயநம:, ஓம் தாமோதராயநம:, ஓம் அநிருத்தாயநம:, ஓம் புருஷோத்தமாயநம:, ஓம் அதோக்ஷஜாயநம: ஓம் நாரசிம்மாயநம:, ஓம் அச்சுதாயநம:, ஓம் ஜனார்தனாயநம: ஓம் உபேந்திராயநம:, ஓம் ஹரயேநம:, ஓம் ஸ்ரீகிருஷ்ணாயநம:,

☞ இதன் பொருளை

இப்புத்தகத்தின் 141-145-ம் பக்கங்களில் பார்க்கவும்.

## பிராணயாமம்.

ஓம் பூ: ஓம்புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜந: ஓம் தப: ஓம் ஸத்யம், ஓம் தத்ஸ விதுர்வரேண்யம், பர்கோதேவஸ்ய தீமஹி தியோயோந: பிரசோதயாத் ஓமாபோஜ்யோ தீரஸோமிருதம் பிரஹ்ம: பூர்புவஸ்வரோம்.

## பொருள்.

ஓம் பூ:—ஸர்வபரி பூரணனாகியும், ஓம் புவ:—ஸர்வ சிரேஷ்டனாகியும், ஓம் சுவ:—சோபன சுகஸ்வரூபனாகியும், ஓம் மஹ:—ஸர்வபூஜநீயனாகியும், ஓம் ஜ்ந:—ஸர்வ ஜனகமாகியும், ஓம் தப:—ஞானஸ்வரூபனாகியும், ஓம் ஸத்யம்—ஸத்தியஸ்வரூபனாகியும, ய:—எந்த சவித்ரநாமத்தைக்கொண்ட பரப்பிரமம் ந:—நம்முடைய, திய:—புத்திகளை, பிரசோதயாத்—பிரேரேபணைசெய்கிறதோ, தத்—அந்தப்பிரசித்தியான, ஸவிது:—பிரேரகனாகிய, தேவஸ்ய—பகவானுடையவரேண்யம்—அனைவராலும் விரும்பத்தக்க, பர்க்க:—பாவத்தை நசிப்பிக்கும் தேஜஸை, தீமஹி=தியானிக்கிறோம், அந்த தேஜஸு ஓம்—பிரணவ பிரதி பாத்தியமான அப:—பரிபாலன சக்தி சம்பன்னனும், ஜ்யோதி:—பிரகாசஸ்வரூபத்தையும், அமிருதம்—மரணரஹிதமான, பிரம்ம—ஸர்வ பரிபூரணத்தை, பூர்புவ: சுவ:—பூலோக புவர்லோக சுவர்லோகாந்தரியாமியாக இருக்கிறது.

கருத்துரை.

மேலேசொன்ன அநந்தகலியாண குணங்களையுடைய பகவானைத் தியானிக்கிறேன் என்பதாம்.

(இந்து சங்கல்பம் மார்ஜனம்.)

ஓம் ஆபோஹிஷ்டா மயோபுவ: தாநஊர்ஜே ததாதந மஹீரணாயச் சக்ஷஸே யோவச்சிவதமோரஸ: தஸ்யபாஜய தேஹந: உசதீரிவ மாதர: தஸ்மா அரங்கமாமவ: யஸ்யக்ஷ யாயஜின்வத ஆபோஜனய தாசந:

பொருள்.

ஆப:ஆப்நா—முத்தையுடைய பரப்பிரம்மமே, மயோ புவ:—சுககர்த்தனாகியவனே,ஹி—உண்மையாகவே, ஸ்த— ஆவாய், தா:—அப்படிப்பட்ட நீ,ந:—எம்மை, ஊர்ஜே—ஞா னரசத்தின் நிமித்தம், ததாதன—இருக்கவை.

ஏனெனில்.

மஹேரணாய—திவியமங்களமான, சக்ஷஸே—தரிசனத் திற்காக, ய:—ஏ, சிவதம அநந்தகலியாணமாகிய,வ:—உனது சம்பந்தமாகிய, ரஸ:—அமிர்த ரசமுண்டோ தஸ்ய—அப் படிப்பட்டதற்கு, ந:—எம்மை இஹ—இவ்வுலகத்திலேயே பாஜயத—அநுபவிப்பதற்குஅருகாளாய்ச் செய்யும், உசதீ— விரும்பும் மக்களுக்கு மாதர + இவ—தாய்மார்களைப்போல் (அநுபவிக்கச்செய்யும்) தஸ்யே—அப்படிப்பட்ட அமிர்தரச த்திற்காக, வ:—உம்மை, அரம்—மிகவும், கமாம்—சேருகி றோம், யஸ்ய—பாவத்தினுடைய,க்ஷயாய—நசிப்பதற்கு, ஜின் வத—பிரியத்தை யடையச்செய்யும், சு—மேலும், ஆப:—ஓ பகவானே, ந:—எம்மை, ஜநயத—பிறப்பியும், (என்றால் ஞா னயுக்தர்களாகச்செய்யும்).

கருத்துரை.

பரமேசுவரன் (நமது பாவத்தைப்போக்கி) ஞானமோ க்ஷத்தை யருள்வாராக என்பதாம்.

பிராதக்கால பிராசன மந்திரம்.

சூரியஸ்ச மாமன்யச்ச மந்யுபதயச்ச மன்யுகிரதேப்ப:; பாபேப்யோ ரக்ஷந்தாம் யத்ராத்ரியா பாபமகார்ஷம், மநஸா

வாசா ஹஸ்தாப்யாம், பத்ப்யா முதரேண சிச்னா, ராத்ரிஸ்தத வலும்பது யத்கிஞ்ச துரிதம்மயி இதமஹம், மாமமிர்தயோ னௌ, சூர்யேஜ்யோதிஷி ஜுஹோமிஸ்வாஹா.

இம்மந்திரத்திற்கு ருஷி நாராயணர், சந்தசு பிரகிருதி 84 - அக்ஷரங்களுடையது.

பொருள்.

சூரிய—சூரியநாமகனாகிய பரப்பிரம்மம், ச—மேலும், மந்யு:—குரோதத்தை நசிக்கச்செய்யும்பரபிரமம், ச—மேலும், மந்யுபதய:—குரோதத்திற்கு பாதிகளான ராகாதிகளும் நசிக்கச்செய்யும் பரப்பிரமமே, மந்யுகிருதேப்யம்—குரோதத்தினால்செய்யப்படும், பாபேப்ய:—பாவங்களை,மா—என்னை, ரக்ஷம்தாம்—இரக்ஷிப்பாயாக, யத்—ஏ, பாபம்—பாவத்தை, ராத்ரியா — இராத்திரிகாலங்களில் மநஸா—மனதினாலும், வாசா—வாக்கினாலும், அஸ்தாப்பாம்—கைகளினாலும், பதாப்பாம்—பாதங்களினாலும்,உதரேண—வயிற்றினாலும்,சிச்னா குஹியத்தினாலும், அகார்ஷம்—செய்தேனோ, தத்—அதைராத்திர:—ராத்திரி நாமக—பரப்பிரம்மமே. அவலும்பது—நசிக்கச்செய்வாயாக, யத்கிஞ்ச—எவ்வளவு கொஞ்ச மான போதிலும், துரிதம்—பாவத்தை, மை—என்னிடம் (இருக்கிறதோ) இதம்—இந்த பாவங்களை, மாம்—அந்த பாவங்களுக்குக் கர்த்தனாகிய என்னை, அஹம்—நான், அமிர்தயோனௌ—சாத்விக பதவிக்காதாரமான, சூர்யே—பகவத் சம்பந்தமான, ஜ்யோதிஷி—தேஜஸினிடத்தில், ஜுஹோமி—ஹோமஞ்செய்கிறேன், சுவாஹா என்னை சமர்ப்பித்துக்கொள்ளுகிறேன்.

கருத்துரை.

பிரேரகனாகிய பரமாத்துமாவே! குரோதாபிஷ்டனாகிய எனது சர்வ இந்திரியங்களால் செய்யலான பாவங்களை நசிக்கச்செய்வதற்காக, (எனது) ஆத்மாவை சமர்ப்பணம் செய்து எனது பாவத்தை (உனது பகவத்தேஜசுமுன்) ஹோமம் செய்கின்றேன்.

### மத்தியானத்தில் செய்யவேண்டிய பிராசனமந்திரம்.

ஆப: புநந்து ப்ருதுவீ பூதாபுநா துமாம் புநந்து பிர்ம ணஸ்பதிః பிரஹ்மபூதா புநாதுமாம், யதுச்சிஷ்டமபோஜ்யம் யத்வாதுஸ்ச் சரிதம் மமஸர்வம் புநந்து, மாமாஸிபா ஸதாஞ்ச பிரதிக்கிர ஹக்ம்ஸ்வாஹா.

இந்த மந்திரத்திற்கு பூதரிஷி அஷ்டசந்தர் ஆபோரு ஷிரனுஷ்டுப் சந்த:.

ஆப:—அமிர்தரசம, புருதிவீம்—மஹாபூத விகாரத் மசரீரத்தையும், புநந்து—பவித்திரம் செய்வாயாக, பூதா—பவித்திரமாக்கப்பட்ட, ப்ருதுவி—சரீரம், மாம்—என்னை, புநாது—பவித்திரம் செய்வதாக, பிம்ஹ்மணஸ்பதி—பரமாத்மா, புநந்து—பவித்திரம் செய்வதாக, பூதா—பவித்திரமான பிரஹ்ம—வேதம், மாம்—என்னை, புநாது—பவித்திரம் செய்வதாக, யத்—எந்த, உச்சிஷ்டம்—பிறருடையசம்பந்தமாகிச் செய்தனுபவிக்கப்படுகிறதோ, தத்—அந்தபாவம், (என்றால் பிறருடைய பொருளை யெடுப்பதாலுண்டாகும் பாவம்) அபோஜியம்—புசிப்பதற்கநர்ஹமாகிய பதார்த்தங்களை புசிப்பதனாலுண்டாகும் பாவமும், யத்—எந்த, துச்சரிதம்—துஷ்டாசரணையான பாவமும், மம—என் சம்பந்தமான, ஸர்வம்—சகலமான பாவத்தையும், அசதாம்—அந்த புருஷர்களுடைய சம்பந்தமான, ஸர்வம்—சகலமான பாவத்தையும், அசதாம்—அந்த புருஷர்களுடைய சம்பந்தமான, பிரதி கிரஹ்ம் + ச—பிரதிகிரகத்தினால், மாம்—என்னை, ஆப:—என்னும் சப்தநாமகனான பரமாத்துமா, புநந்து—பவித்திரம்செய்வராக, ஸ்வா:—ஆத்மசமர்ப்பணம் செய்வேனாக.

### கருத்துரை.

பகவத்கருணைரசம் எனது சரீரத்தை பவித்திரமாக்கி எனது பாவங்களைப்போக்கி என்னை ரக்ஷிப்பாராக.

### சாயங்காலத்தில் செய்யவேண்டிய பிராசான மந்திரம்.

அக்நிச்ச மாமந்பச்ச மந்நுபதயச்ச மந்யுகிரதேப்ய:, பாபேப்யோரக்ஷந்தாம் யதந்நாபாபமகார்ஷம் மநஸாவாசா

ஹஸ்தாப்யாம் பப்யாமுதரேண சிச்நா அஹஸ்தத வலும் புதுயத்கிஞ்ச துரிதம்மயி இதமஹம்மாமமிர்தயோனௌ ஸத்யேஜோதிஷி ஜுஹோமிஸ்வாஹா.

இந்த மந்திரத்திற்கு யஞ்ஞாவல்கியர்ரிஷி; பிரகுருதி சந்தசு.

இதன்பொருள்.

யத்—எந்த பாபத்தை, ஆஹனி—பகலில், அகார்ஷம்—செய்தேனே, ஆஹ: ஆஹோநாமக பரப்பிரம்மம், தத் அந்த பாவத்தை, அவலம்புது போக்குவாராக, ஸத்யேஜோதிஷி ஸத்தியநாமக பரப்பிரம்மத்தில் ஜுஹோமி ஸமர்ப்பிக்கிறேன். என்பதாம். மற்றவைகளுக்குக்காலைவந்தனத்திலெழுதப்பட்டிருப்பதால் அந்த அர்த்தத்தை அன்வயமாகக் கொள்ள வேண்டும்.

கருத்துரை.

அக்னி நாமத்தால் பிரகாசிக்கும் பரமாத்துமாவே! குரோதங்களால் நிறைந்த எனது சர்வ இந்திரியங்களால் செய்த பாவங்களை பகவத்தேஜசின் முன் ஹோமமாக செய்கின்றேன்.

அர்க்கியம்.

ஓம் பூர்புவஸ்ஸுவ: ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹி தியோயோந: பிரசோதயாத்.

மத்தியாஹ நிகார்க்கியப் பிரதான மந்திரம்.

ஹம்ஸச்சு சிஷத்துவ சுரந்தரி க்ஷஸத்தோத வேதிஷத் திதிதுர்ரோணஸத் நிருஷத் வரஸதுரத ஸத்வோயமநத் பாஜகோஜாருதஜா அதிரிஜாருதம் புரஹத்.

இந்தமந்திரத்திற்கு வாசுதேவர்ரிஷி, ஜதிகசந்தசு.

பொருள்.

ஹம்ஸ:—அஹங்காரமென்னும் அஞ்ஞானத்தைப்போக்கும் பரமாத்துமாவே, சுசிஷத்—சுவர்க்கத்திலிருக்கும், வசு:—நியாயமகனுன, அந்தரிக்ஷத் அந்தரிக்ஷத்திலிருப்பவனும், ஹோதா—ஞானிகளைக் கூப்பிடுகிறவனும், வேதிஷத்

—புருதிவியிலிருப்பவனும், நிருஷத்—மனுஷர்களிடமிருப்ப வனும் வரஸத்—சிரேஷ்ட ஸ்தானத்திலிருப்பவனும், ருத ஸத்—சத்தியத்தில் ஜுவலிக்கப்பட்டவனும், வியோமசத்—அபிராகிருத ஆகாசத்திலிருப்பவனுமாகிய இந்த பகவானுடைய மஹிமை எப்படிப்பட்டதெனில், அப்ஜாஹம்—அபூ பிரகமாகும் பிரகிருதியை சிருஷ்டித்தவனும், கோஜா:—அப்படிப்பட்ட பிரகிருதியினால் பூமாதி கோளங்களை சிருஷ்டித்த ருதஜா:—எல்லாப் பூதங்களிலும் பிரவேசித்தும் ருதமென்னும் வழியை யேற்படுத்தியவனும், அத்ரிஜா—ஸமஸ்தமான பூதங்களுக்கு ஜீவனுதாரமாக மேகம் மழை மரம் முதலானதுகளை யுண்டாக்கிய அந்த பரமாத்துமா நமது மோக்ஷத்தின் நிமித்தம், ப்ரஹத்—பெரிதான, ருதம்—மானஸ யக்கியத்தை நிர்ணயித்தது.

கருத்துரை.

பரமேசுவரர் மூன்று லோகங்களிலும் வியாபித்து அஞ்ஞானத்தைப்போக்கி, சத்தியம் முதலான குணங்களினால் பவித்திரமான நமது ஹிருதயங்களிலிருந்து, சகல பொருள்களையும் நமது சுகத்துக்காக சிருஷ்டிப்பதால், நாமனமுவந்து அவரைத் தியானிக்கவேண்டும் என்பதாம்.

ஜெபம்.

ஓம் பூர்புவ:ஸுவ: ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்யதீமஹி தியோயோந: பிரசோதயாத்.

அபிவாதனம்.

சதுர்திக பரியந்தம் ஸர்வபூதேப்ய: ஸர்வஜநேப்ய: சுபபவது, பிரபரான்வித: அஹம்போ அபிவாதயே,

பொருள்.

சர்வலோகங்களிலிருக்கும், ஸர்வஜீவ கோடிகளுக்கும் சுகமுண்டாவதாக, அந்தந்த பிரவரையில் கோத்திரத்தையுடைய நான் பரபிரம்மத்துக்கு வந்தனம் செய்கிறேன் என்பதாம்.

இந்த சந்தியாவந்தனத்தில கண்டபடி பிரதிமநுஷனும் தான் பிரதிதினமும் செய்யும் பாவத்தைப்போக்க பிரார்த்திப்பதைப்போலவே, பிரதிதினமும் தன் குடும்பத்தில் மனைவி மக்கள், குடும்ப சமேதராகவும் இஷ்டபந்துக்களுடனுங் கூடி அடியில் காட்டியிருக்கிறபடி பிரார்த்தனை செய்யலாம்.

---

## பொதுஜன சமூஹபிரார்த்தனை.

### மகாநிர்வாணதந்திரப்பிரார்த்தனை.

ஓம் நமஸ்தே ஸதேதே ஜகத்காரணாய
நமஸ்தே சிதே ஸர்வ லோகாச்ரயயாய
நமோத்வைத தத்வாய முக்தி ப்ரதாய
நமோ பிரஹ்மணே வ்யாபினே சாத்வதாய.

இதன் பொருள்.

ஸத் ஸ்வரூபனும், ஜகத்காரணனும் ஆகிய உனக்கு நமஸ்காரம்; ஞானஸ்வரூபனும், ஸர்வலோகாச்ரயனும் ஆகிய உனக்கு நமஸ்காரம்; ஒப்புயர்வான இரண்டாவது வஸ்துவற்றவனும், முத்தியளிப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம்; பெரியபொருளும், ஸர்வ வியாபியும், நித்தியனும் ஆகிய உனக்கு நமஸ்காரம்.

த்வமேகம் சரண்யம் த்வமேகம் வரேண்யம்
த்வமேகம ஜகத்பாலகம் ஸ்வப்ரகாசம்
த்வமேகம் ஜகத்கர்த்ரு பாத்ரு ப்ரஹர்த்ரு
த்வமேகம் பரம் நிச்சலம் நிர்விகல்பம்.

(இ-ள்.) நீ ஒருவனே அடைக்கல ஸ்தானமானவன், நீ ஒருவனே பூஜநீயன், நீ ஒருவனே உலகத்தைக்காப்பவன், தானாகவிளங்குகிறவன், நீ ஒருவனே உலகத்தைப்படைத்துக்

காத்தழிக்க வல்லவன்; நீ ஒருவனே மேலானவன், சலன மற்றவன், விகாராஹிதன்.

பயாநாம் பயம் பீஷணம் பீஷணாநாம்
கதிஷ்ப்ராணிநாம் பாவநம் பாவநாநாம்
மஹோச்சைஷ் பதாநாம் நியந்த்ருவமேகம்
பரேஷாம் பரம் ரக்ஷணம் ரக்ஷணாநாம்.

(இ-ள்.) நீ சகல பயங்கர வஸ்துக்களுக்கும் பயங்கரன், பயாநக வஸ்துக்களுக்கு பயாநகன்; உயிர்களுக்குத்துணை, பரம பாவநன், நீ யொருவனே மிகுந்த உயர் பதவிகளையும் ஆள்பவன், ஸர்வ சிரேஷ்டன், மஹாரக்ஷகன்.

வயம் த்வாம் ஸ்மராமோ வயம் த்வாம் பஜாமோ
வயம் த்வாம் ஜகத் ஸாக்ஷிரூபம் நமாம்
ஸதேகம் நிதாநம் நிராலம்ப மீசம்
பவாம்போதி போதம் சரண்யம் வ்ரஜாம.

(இ-ள்.) நாங்களுன்னை ஸ்மரிக்கின்றோம், நாங்களுன்னைத் துதிக்கின்றோம்; உலக சாக்ஷிரூபனாகிய உன்னை நாங்கள் நமஸ்கரிக்கின்றோம், ஸத்யஸ்வரூபனும், ஒருவனும் ஆச்ரயஸ்வரூபனும், அவலம்பரஹிதனும், யாவற்றையும் நடத்துகிறவனும் ஸம்சாரக் கடலைக்கடக்க மரக்கலமும் ஆகிய உன்னை சரணமடைகின்றோம்.

அஸதோமா ஸத்கமய, தமஸோமாஜ்யோதிர்கமய, ம்ருத்யோர்மா அம்ருதங்கமய, ஆவிராவீர்ம ஏதி ருத்ர, யத்தே தக்ஷிணமுகம், தேநமாம் பாஹிநித்யம்.

(இ-ள்.) ஓ நாயகனே ! எம்மை அசன்மார்க்கத்தினின்று நீக்கி ஸன்மார்க்கத்தை யடையச்செய்வாய்; எம்மை அஞ்ஞான இருளினின்று விடுவித்து சுஞ்ஞான வொளியடையச்செய்வாய்; அநித்திய நிலையினின்று நித்திய பதவியை

யடைய அருள்வாய்; ஓ ஸ்வப்பிரகாசனே ! எம்மருகில் பிரகாசிப்பாய். ஓ துக்கத்தைப் போக்கடிப்பவனே! உனது கருணையாகிய முகத்தினால் எம்மை எப்பொழுதும் காப்பாற்றுவாய், ஓ ! அளவற்ற ஸத்தியஸ்வரூபனே ! நினது ஆஸ்திகத்துவத்தை எமக்குத் தெரிவித்தருள்வாய். நீ கருணாநிதியாகையால் எம்மை எப்பொழுதும் நின் கிருபா சமுத்திரத்தில் அமிழ்த்துவாய் ஓம் தத்ஸத்.

## ஓம் பிரமகிருபாஹி கேவலம்.

## ஏகாந்தசேவை.

ஆரியர்கள் இப்படி பிரதிதினமும் காலைமாலைகளில் மனம் கரகர சரணாதிகளால் செய்யும் பாவங்களைப்போக்கிக் கொள்ள சந்தியாவந்தனாதி பிரார்த்தனைகளும், இல்லற சுகத்தைக்கருதியும் பொதுஜன சமூஹத்தைக்கருதியும் பிரார்த்தனைகளும் இருக்கச்சே, சிலர் இல்லறத்தைவிட்டு இமாலயம் முதலான பர்வத பிரதேசங்களுக்கு ஏகாங்கிகளாக்ப் போய் தபசுசெய்யவேண்டிய காரணமென்னவென்று எண்ணக்கூடும்; அப்படிப்பட்டவர்களுடைய திருப்தியின் பொருட்டு ஏகாந்த சேவையின் பெருமையைப் பற்றி இங்கு சற்று பிரஸ்தாபிப்போம்.

ஏகாந்த சேவை என்றால் ஜகதீசுவரனை யாதொரு பர்வத பிரதேசங்களுக்குப் போய் தனியாக இருந்து தியானித்தலாம்.

ஏகாந்த சேவைக்குப் டற்பல தொழில்களாலும், தொல்லைகளாலும், கவலைகளாலும், பிரபஞ்ச ஆசாபாச சஞ்சலங்களாலும், சூழப்பட்ட நாடு நகரங்கள் மாடமாளிகைகளைப் பார்க்கிலும், நிர்மலமான ஹிருதயத்தோடு ஈசுவரனை யாராதிப்பதற்கு அசோகவனங்களும் நிச்சப்தமான உன்னத பருவத பிரதேசங்களும், திவ்விய நதி தீரங்களும் சிரேஷ்டமானவை.

நமது சரீர சவுக்கியத்திற்குக்கூட பர்வதாதி நூதனபிரதேசங்களுக்கு சிலகாலம் போயிருந்தால் உத்தமமென வை

த்திய நூல்கள் முறையிடுகின்றன. அதாவது: நமது சரீரத்திலிருக்கும் இரத்தம் கெட்டு அதன் சத்துக்கள் க்ஷீணதசையடைய, கொடிய வியாதிகள் சம்பவித்து நொந்து பலஹீனமடையும்போது நாமிருக்கும் பழைய விடங்களைவிட்டு நூதன ஸ்தலங்களுக்குப்போகும்படி ஆயுள்வேதம்ஆஞ்ஞாபிக்கிறது. தீராத வியாதிஸ்தர்களாகி இனிப்பிழைக்கமாட்டோமென்று எண்ணியவர்களும், நல்ல ஆஹாரமும், சுத்தக் காற்றும் சுத்த ஜலமும் உள்ளவிடங்களுக்குப்போய்; அங்கு சில காலந்தங்கி, வியாதிகள் நீங்கி மறு ஜனனம் பெற்றுவந்தவர்களைப் போலாகிவிடுவந்து சேர்ந்தவர்களை நாம் பிரத்தியக்ஷத்தில் கண்டது உண்மையல்லவா? இவ்வண்ணமாகவேபக்திரஸமென்னும் சுத்த இரத்தங்கெட்டு, பாவமென்னும் வியாதியினால் பிடிக்கப்பட்ட ஆன்மாக்களும், பாவான்மிகளின் கூட்டத்தையும் இடத்தையும் விட்டு பரிசுத்தமான நூதன பர்வதப் பிரதேசங்களுக்குப்போய் தம்தாபத்தைத் தீர்த்துக்கொண்டு தன்னியராகலாமென்பது திண்ணம். அங்கு ஆத்துமாவை பாவபந்தங்களுக் காதாரமான சிற்றின்ப எண்ணங்களை விட்டுப் பேரின்பத்தை யடையச்செய்யும் சாதனங்களனந்தமிருக்கின்றன. அவைகள் நமது பிரயத்தனமில்லாமல், தாமாக பிரம்மாநந்தத்தில் மூழ்கத்தூண்டும்.

அங்குத்தோன்றும் பிரம்மாண்டமும், பயங்கரமுமான பர்வதங்களும், அவற்றின்மேலிருக்கும் பிரம்மாண்ட குன்றுகளும் சஞ்சலமும் சலனமுமற்று, சர்வேசுரரைக் காண்பதற்கு விண்ணுலகை நோக்கி (மௌனயோகிகளைப்போல் அசைவற்று) நிரந்தரமாய் நிற்க; அந்த மலைகளாகிய மௌனயோகிகளின் சலனமும் சஞ்சலமுமற்ற தபசை, சர்வேசுரரானவர் கண்டு கொண்டாடி, விண்ணுலகத்திலிருந்து தேவாமிர்தத்தைத் தாம் வாரி வாரி கொடுப்பதைப்போல, அப் பர்வதங்களின் சிகரங்களில் பெய்த விண்ணுலகின் பனித்துளிகள் உறைந்து,வெய்யோனைப்போல் வெளுத்து பெரும்பனிக்கட்டிகளாகி,பிரபாகரனுடைய பிரகாசம் அவற்றின்மேல்பட சுத்த ஜலம் பீறிட்டெழுந்து ஜகதீசுவரனை நம்பினோருக்கு

அவனருள் இப்படித் தான் எதேஷ்டமாக வருமென்று உத்கோஷிப்பதைப்போல அடுத்த பள்ளத்தாக்குகளில் குபீர் குபீரென்று வெள்ளிரசம்போல் விழுந்து பேரருவிகளாகவும் சிற்றருவிகளாகவும் பாய்ந்து பல கற்களிலும் செடிகளிலும் தாக்கி, சர்வேசுவரரின் சக்தியைப்பற்றி சலசலவென்று பாடுகின்றன. அப்படிப்பாயும் அருவிகளின் அழகிய கரையோரங்களிலும், அதனுதகத்தினாலுண்டாகிய வாவி, கூபதடாகங்களிலும், கரை திரங்களிலும் ஆடு, மாடு, பசு, புலி, யானை, நாய், நரி, மான், மந்தி முதலான மிருகங்கள் அங்கு யதேஷ்டமாகவிருக்கும்; அநேக உணவுகளைக்கொள்வியும்வெளவியும் தின்று தேக்கெறிந்து மனோபீஷ்டத்தின்படி திரிந்து விளையாடி விண்ணுலகிற்கொப்பான இப்பர்வத வனங்களை, மாணிடர்வந்து மிதமிஞ்சிக் கெடுக்காவண்ணம் இயற்கைக் காவலாளிகளைப்போலக்காக்கின்றன.

அருகில் நிற்கும் விருக்ஷங்களிலும், செடி கொடிகளிலும் பச்சை, நாகம், சாரை, விரியன் முதலான அழகிய பாம்பினங்கள் மணிமாலைகளைப்போல அம்மரங்களில் தொங்கி, அவ்வனங்களை அன்னியர் புகுந்து கெடுக்காதவண்ணம் வேலிகளைப்போலிருந்து காப்பதாக ஊஞ்சலாடிக்கொண்டிருக்கின்றன. அடியிலிருக்கும் அழகிய புல்லுகளை மனுஷர் கெடுக்காவண்ணம் அழகிய அட்டைகள் நீளநீண்டு எச்சரிக்கை யிடுகின்றன. அங்கு அருணோதயகாலத்தில் ஆநந்த பரவசமாகி அப்பனிடத்தில் அன்பையும் நன்றியறிதலையும் காட்டி, அவர் மஹிமையைத் தாமறிந்தாற்போலும், அவரது சிருஷ்டி செய்த கஷ்டமாகிய ஆயாசத்தைத் தீர்ப்பது போலும் கோகிலம், கிளி, நாகணவாய், சக்கிரவாகம், செம்போத்து, வானம்பாடி முதலான பக்ஷிகள் தமக்குத் தெரிந்த பாஷைகளில் இனிய கீதங்களைப்பாடியும் ஆநந்தமுண்டாக்கியும்; அவற்றில் சிலபக்ஷிகள் குதித்துக் கிளைகளில் விளையாடியும் (உத்தமகன்னிகைகள் கொம்மியடித்தாடுவது போல) விருக்ஷங்களிலிருக்கும் கனிகளைத்தாவித்தாவி உண்டு உல்லாசமாக ஆடுகின்றன, அப்படி விருக்ஷங்களின்மேல் பாடும்

பக்ஷிகளின் கீதங்களுக்கேற்க அடியில், மயில் அன்னம் புறு முதலான பக்ஷிகள் தம் பலவித வருண அலங்காரமான் இரக்கைகளை விரித்து (கற்புடைய மாதர் தம் கணவர்மெச்ச நடித்து நடப்பதுபோல) தம் சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளின் ஆநந்தமுண்டாக்கும்அழகைக்கொண்டாடிநடிக்கின்றன.மேலும் இப்பர்வதபிரதேசங்களை நாடிவரும்தபோநிதிகள், எதீந்திரர்கள், ஜிதேந்திரியர்களாகிய மஹான்கள் சுகமாகத் தங்கியிருப்பதற்கு இயற்கையானகுகைகளும்,பலவித புஷ்பக்கொடிகளாலாகிய சிங்கார லதாகிரஹங்களும்,அங்குவந்து தங்கப்பட்டவர்க்குப் பலவிதக்கனிகளும் கிழங்குகளும், காமதேனுவைப்போன்ற காட்டுப்பசுக்கள் தமது தித்திப்பான பாலில் பாதி பாகத்தைத் தம்மோடு குதித்துக் குதித்துத் துள்ளி விளையாடும் தம் கண்மணிகளான கன்றுகள் குடிக்கக்கொடுத்தனுபோக, மீதியைக் குடிப்பதற் கியாருமில்லையே என்று ஏங்கி மஹாத்துமாக்களான வன சஞ்சாரிகளுக்காவது உபயோகமாகும்படி பர்வதக் குகைகளுக்கும்,லதாகிரகங்களுக்கும் அருகில்போய், அங்குக்கிடக்கும் பாறைக்கற்களின்மீது படுத்து தம்மடிகளை அழுத்த, அமிர்தத்துக்கொப்பான அவற்றின் பால் தானுக வடிந்து வெண்ணாறுகளாகப் பெருகிப் பயந்தோடிப் பிறகு, பிரபாகரனுடைய உஷ்ணத்தினல் காய்ந்துவெடித்து ஸ்படிகத்துண்டுகளைப்போலவும்,பத்தாசுக்கட்டிகளைப்போலவும் பிரகாசிக்கும் பாற்கட்டிகளையும்; குளிர் சீதளமுதலானதுகளால் வருந்தாதபடி, ஏலம், இஞ்சி, சுக்கு, மிளகு, கிராம்பு முதலான மலைதரும் பொருட்களையும், புலித்தோல் மரவுரிமுதலான சர்மங்களையும் மந்திகள் கொண்டுவந்து சேர்த்து வைக்கின்றன. ஏகாந்தவாசிகளுக்கு "ஏகமேவாத்விதீயம், பிரம்மகிருபாஹி கேவலம்" என்றுதி சுருதிகளை அப்பர்வதரிஷிகள் பாடுவதைக் கிளிகள்பழக்கத்தால் பாடஞ்செய்து அங்குப் பாடுகின்றன. மற்ற சில்வண்டுகளனைத்தும் "ஓம் தத்சத்" என்று ஒரே ராகமாகப்பாடி ஆநந்த மூட்டுகின்றன.

இப்படிப்பட்ட விடத்தில் பிரபஞ்ச சம்பந்தமான பாப தாபங்கள் பிரவேசிக்க வழியில்லை. இவ்விடத்தில் உலக

ஆசாபாசங்கள் வந்து அணுகுவதற்கு அதிகாரமில்லை; உலக தாபத்திரயங்களால் வருந்தும் மானுஷிக ஹிருதயங்களை கிருபாநிதியாகிய கடவுள் தம் கருணைக்கரங்களால் தடவிக்கொடுத்து அழைப்பதுபோல் குளிர்ந்த காற்று தேகத்தின்மீது வீசிச் சாந்தியை அடையச்செய்கின்றது. மேலும், பர்வத பிரதேசங்களில் அடிக்கடி மழைபெய்வது சஹஜமாகையால், அவ்விடத்துக்குப்போகும் பக்திமான்களுக்கு அப்பரமேஸ்வரருடைய இருப்பைக் காட்டும்படி மேககர்ச்சனைகள் கிடு, கிடு, தாம், தாம், திம், திம் என்று கர்ஜித்து நான் எங்கும் இருக்கிறேன் என்று அடிக்கடி நினைப்பூட்ட, அவரது மஹிமா சக்தியை மின்னற்கொடிகள் மோஹன சுந்தரிகளைப்போல ஜ்வலித்து நடித்துக்காட்ட இவைகளைக் கண்டும் கேட்டும் அறிந்த பக்திமான்களுக்குக் கடவுள் கருணாரசம் பொழிவதைப்போல அடிக்கடி பாட்டம் பாட்டமாக மழை பெய்து மனதைச் சாந்தப்படுத்தும். இம்மட்டோ! இந்தப்பர்வதப் பிரதேசங்களிற் கண்ணுறும் பற்பல பதார்த்தங்களும் பரமேசுவரருடைய மஹிமையைப் பிரதிஷ்டையாக்கி அவ்வள்ளலைச் சிந்திக்கச்செய்யும்; ஆம் அவைகள் நமது பிரயத்தினமில்லாமலும் நம்மையறியாமலும் மனதை பகவத் தியானத்தில் மூழ்கிச் சதானந்த யோக சமாதியை யடையச் செய்யும்.

ஆனது பற்றியே ஆரிய ரிஷிகள் ஏகாந்த சேவைக்காக பர்வத பிரதேசங்களுக்குச் சென்றனர்.

## DIVINE WORSHIP.

DIVINE worship consists of four parts:—Adoration, Thanks giving, Meditation, and Prayer.

Adoration is the expression of reverence and devotion to the Diety at the conception of His perfect and eternal attributes. Thanksgving is the expression of gratitude at the conception of His infinite mercey and love, where-with He protects our body and soul. Meditation is the spiritual insight into His living presence at the contemplation of all-pervading existence. Prayer is the humble supplication of deliverance from sin, and

of peace and purity in the soul. The harmonious combination, of these four elements constitutes true Divine worship.

---

## (128). முண்டகோபநிஷத்து

3-வது முண்டகம் 2-வது கண்டம் 9-வது வாக்கியம்,

ஸமோதமே மோதநீயம் ஹிலப்த்வா;
தரதிசோகந்தரதி பாப்மாநம் குஹாக்ரந்தி
ப்யோவிமுக்தோஅம்ருதோபவதி.

பொழிப்புரை.

(இப்படி பிரமோபாஸனை செய்யும்)

அவர் ஆநந்திப்பிக்கிற பிரமத்தை யடைந்து ஆநந்திக்கிறார். துயரத்தைக்கடக்கிறார் பாபத்தைக்கடக்கிறார் உலதத்திலுள்ள பாவ முடிச்சுகளிலிருந்து நீங்கி அழிவற்ற பதவியடைபவராகிறார்.

விசேஷ உரை.

யாவற்றிலும் சிறந்தவரும் உள்ளத்துக்குத் திருத்தியை வருவிக்கிற ஒன்றாகிய பொருளுமான பிரமத்தை யடைந்து அவரில் பிராணனைவைத்த, பிரமஞானிகள் வாய்விட்டுச்சொல்லி முடியாத சுகத்தை அநுபவிக்கின்றனர். யார் பிரமத்தை யடைந்தாரோ அவர் பிரமத்தினது திருவுள்ளப்படி எல்லாக் காரியங்களையும் நடத்துகிறார். ஒரு பலனையும் விரும்பாமல் அவரால் நியமிக்கப்பட்ட தருமமார்க்கத்தில் சரித்துக்கொண்டிருக்கிறார். மேலும் ஸ்வப்பிரயோஜனத்தைத் துறந்து அவருக்கு அன்பான காரியங்களைச் செய்வதிலேயே முயற்சி செய்துகொண்டிருக்கிறார். ஆனதால் அவர் துயரத்திலிருந்து நீங்குகிறார். பாபத்திலிருந்து நீங்குகிறார், இல்லறத்தினது மோஹபாசத்திலிருந்து விடுபட்டு எப்பொழுதுமுள்ள பிரமத்தினிடத்தில் நித்தியமும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்.

Having obtained Him, the all-cheering, one rejoiceth. He avoideth sorrow, avoideth vice and freed from the knots of error in the mind, becometh mmortol.

## (129). ஈசாவாஸ்ய உபநிஷத்து

### 1-வது வாக்கியம்.

*ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச*
*ஜகத்யாம் ஜகத்; தேநத்யக்தேந புஞ்ஜீதா*
*மாக்ருத: கஸ்யஸ்வித்தனம்.*

### பொழிப்புரை.

இந்தப் பிரமாண்டத்தில் ஏதோ கிஞ்சித்தாக இருக்கும் இவ்வுலகமுழுமையும் பரமேசுவரனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. பர பசிந்தையை விட்டுப் பிரம்மாநந்தத்தை யடையுங்கள். யாருடைய பொருளையும் விரும்பாதேயுங்கள்.

### விசேஷ உரை.

*எப்படிப் பறவைகள் தங்கள்குஞ்சுகளைத் தங்கள் இரக்கைகளினால் மூடிவைத்துக்கொண்டு பல இடுக்கண்களினின்றும் காக்கின்றனவோ; அவ்விதமாகப்பரமேசுவரனால்இவ்வுலக முழுமையும் போர்த்தப்பட்டும் வியாபிக்கப்பட்டும் இருக்கின்றது. மேலும் நியதமாக ரக்ஷணையைப் பெறுகின்றது. அவர் உலகத்தினது இராஜாதிராஜன், அவர் நமது தந்தை, இரக்ஷகர், பந்து, அவரது அதிகாரம் எங்கும் வியாபித்திருக்கின்றது. அவரது அன்பு எங்கும் விளங்குகின்றது; பாப சிந்தையையும், விஷய விருப்பத்தையும் விட்டு, அன்பிற்குரிய அவரை யடைந்து பிரமாநந்தத்தை அநுபவியுங்கள். எப்படி உடலினது இயற்கையான நிலையின் திரிபு பிணியோ அப்படி மனோவிகாரம் பாபம். பிணி உண்டாயின் எப்படி அன்னாஹாரம் செல்லாதோ, அதுபோலப் பாபாசரணைசெய்யின் பிரமாநந்தானுபவத்தில் கருத்திராது; ஆனதால், பாப சிந்தையும் பாபானுஷ்டானத்தையும் விட்டு, மனதை நன்னிலையில் நிறுத்தி, சுத்தப்படுத்திப் பிரமாநந்தத்தை யனுபவித்தல் வேண்டும். குற்றம் புரிபவராகியும், நல்லொழுக்கமில்லாமலுமிருக்கிற பிள்ளைகள், தமது தந்தையினிடத்து ஒருபொழுதும் அன்புசெய்ய மாட்டாதவர்களாகி இருக்கின்றனர்; மேலும்,தம்மிடத்து அவர்களுக்கிருக்கும் அன்பையும்அறிய*

மாட்டாதவர்களாக இருக்கின்றனர்; அவரது கட்டளைகளின்படி எப்பொழுதும் துயரப்பட்டுக்கொண்டிருக்கின்றனர் அதுபோல பாபத்தைச் செய்கிறவர்கள் நாள்தோறும் அவரது சிறந்த தந்தையினால் ஸ்தாபிக்கப்பட்ட தருமமென்னும் அணையைக்கடந்து தகுந்த தண்டனையைப்பெற்று எப்பொழுதும் துயரத்திலேயே யிருக்கின்றனர். அவரது சாந்தஸ்வரூபத்தையும், அவரது பவித்திரமாகிய ஸ்வரூபத்தையும், அவரது மங்களஸ்வரூபத்தையும் அனுபவித்து நிலையற்றதும் அல்பமானதும், தூய்மையற்றதுமான சித்தத்தை அவரது அன்பாகிய இரசத்தில் எவ்விதமாக நனைக்கமாட்டுவார்கள்! ஆகையால், யாருக்குப் பிரமத்தையடையவேண்டுமென்னும் விருப்பமிருக்கிறதோ அவர்கள்விஷயவிருப்பத்தைவிட்டுவிட வேண்டும்; அவர்கள் முற்றும் பாபகிரியையையும், பாபத்தைப்பற்றிய வார்த்தைகளையும், பாபானுஷ்டானத்தையும் விட்டு நீங்கியிருத்தல் வேண்டும். அவர்கள் பிறருடன் அநியாயமான வியவஹாரத்தைச் செய்யக்கூடாது; பிறர்மனைவியின்மீது கெட்ட நோக்கத்தை வைக்கலாகாது, பிறரது பொருளை விரும்பலாகாது.

All this whatever is in this world is full of God. Abandoning vicious desires, enjoy Him and covet not the riches of any.

## குறிப்பு

பிரமோபாஸனையின் விதத்தையும் உபயோகத்தையும்பற்றி இந்த அத்தியாயத்தில் சங்கிரஹமாகக்காட்டப்பட்டது. இனிப் பிரமோபாசனை செய்யும் ஆரியர் அநுஷ்டித்த தருமங்களின் சாரசங்கிரஹத்தை அடுத்த அத்தியாயத்தில் காணலாம்.

# ஐந்தாவது அத்தியாயம்.

## ஆரியர் தருமரக்ஷணம்.

### பிராம்மவாதிகளுரைக்கின்றனர்,

## (130.) தைத்திரிய உபநிஷத்து

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 2-வது வாக்கியம்.

*யாந்யஸ்மாகம் ஸுசரிதாநி தாநித்வயோ பாஸ்யாநிநோ இதராணி.*

பொழிப்புரை.

எங்களுடைய நல்லொழுக்கங்கள் உங்களால் அனுஷ்டிக்கப் படத்தக்கவை. வேறனவை அனுட்டிக்கப் படத்தக்கவை யன்று.

விசேஷ வுரை.

*நாங்கள் சொல்லுகிற எல்லா நல்லுபதேசங்களின் படிக்கும், எங்களுடைய எல்லா ஸதாசார அநுஷ்டானங்களின் படிக்கும் நீங்கள் நடத்தல்வேண்டும்; துஷ்டர்களைப்பார்த்து அவர்களது துர்மார்க்கத்தில் செல்லல் வேண்டாம், என்று பிரமஞானிகளாகிய ஆசாரியர்கள் உபதேசிக்கின்றனர்.*

Those good deeds which we perform, them you should per form, not those of a contrary nature.

## (131.) தைத்திரியம்

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 2-வது வாக்கியம்.

*யாந்ய நவத்யாணி கர்மாணி தாநி ஸேவிதவ்யாநி நோ இதராணி.*

பொழிப்புரை.

எந்தக் காரியங்கள் அநுஷ்டிக்கப்படத் தக்கவைகள்; அல்லவோ அக்காரியங்கள் அனுஷ்டிக்கப்படத்தக்கவை.வேறு காரியங்களன்று.

விசேஷ உரை.

*இவ்வுலகில் விசேஷ தருமம், சாமானிய தருமம் என இரண்டுவகைக் காரியங்களுண்டு. இவைகளில் விசேஷ தரும*

காரியமேதெனில், அந்தந்தத் தேசத்துக்கும்,காலத்துக்கும் தக்கபடி நியமித்துக்கொள்ளும் தருமகாரியங்களில் இவை களை அந்தந்த தேசத்துக்கும், காலத்துக்கும் தக்கபடி,காலத் துக்குக்காலம் மாற்றிக்கொள்வதில் பாதகமுமில்லை.சாதகமு முண்டு. சாமானிய தரும காரியங்களோ எல்லாத் தேசத்தா ருக்கும் எல்லாக் காலத்தாருக்கும் பொதுவானவை. அவை களை அனைவராலும் அங்கிகரிக்கத் தக்கவையாம். அவை யெவையெனில், "நன்மை செய். தீமை மற" என்னும் நல்ல காரியங்களேயாம். ஆகவே,

எல்லா நன்மைகளுக்கும் காரணராகிய பரமேசுவரரது நன்னோக்கத்தை லக்ஷியத்தில் வைத்துக்கொண்டு, நன்மை யைக்கருதி நற்காரியத்தை அநுஷ்டித்தல் வேண்டும்; தீய காரியத்தை அனுஷ்டிக்க வேண்டாம்.

Those actions which are blameless, them you should practise, not those of a contrary nature.

---

(132.) தைத்திரியம்

சிக்ஷாவல்லி 11-வது அனுவாகம் 3-வது வாக்கியம்.

மாத்ருதேவோ பவ, பித்ருதேவோபவ
ஆசார்யதேவோ பவ.

பொழிப்புரை.

தாய் தந்தை ஆசான் இவர்கள் தெய்வத்தைப்போல மரியா தை செய்யப்படுதற்கு உரியவர்களென்று அறியக்கடவீர்.

விசேஷ உரை.

மாதா பிதா குரு தெய்வமென்று மனு சொன்னதைப் போலவே, அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வ மென்று ஔவையும் சொன்னர். குழந்தைகளைப் பெறுவதினால் தாய் தந்தைகள் அநுபவிக்கும் வருத்தங்களைத் தீர்ப்பதற்கு நூறு வருஷங்களும் போதாதாகையால்; கவுரவத்துக்குரிய யாவ ருள்ளும் தாயே அதிக கவுரவத்துக்குரியவர், இந்தப் பூமி யைவிட உயர்ந்தவர், குலத்தைப் பரிசுத்தப் படுத்துகிறவர்

களாகிய நல்ல புதல்வர் தாய் தந்தைகளுடன் மரியாதையாக வும் மெதுவாகவும் வார்த்தை சொல்லல்வேண்டும். அவர்களு க்கு பிரியமான காரியங்களை நியாயமாகுமானால் அநுஷ் டிக்கவேண்டும்; ஏனெனில் தாய் தந்தைகள் கடவுளினது நல்ல தன்மைக்கு உலகத்தில் பிரதிரூபிகளாகி அவரது பிரதி நிதிகளைப்போல நம்மைக் காத்து வருகிறார்கள். சற்குரு உப தேசத்தினால் நாம் அஞ்ஞான இருளைவிட்டு நீங்கி மூப்பும் சாவும் பயமுமற்ற நிரதிசயமாகிய பிரமத்தை யடைகிறோம். ஆனதால் ஆசாரியர்களிடத்தில் அன்பும் உருக்கமும் வைத் தல்வேண்டும்.

Consider your mother as a deity - Consider you father as a deity. Consider your spiritual preceptor as a deity.

---

### தைதிரியம்

### (133). பிரச்ஞோபநிஷத்து

6-வது பிரசினம் 1-வது வாக்கியம்.

ஸத்யம்வத; ஸமூலோவா ஏஷ
பரிசுஷ்யதி யோஅ ந்ருத்மபிவததி.

பொழிப்புரை.

மெய்யைச்சொல். பொய்யைச்சொல்லுகிறவன் வேருடன் தீய்ந்துபோகிறான்.

விசேஷ உரை.

ஸத்யம் என்னும் பதம், ஸத் என்னும் தாதுவிலிருந்து பிறந்தது. அந்த ஸத் தாதுவுக்கு=அது இருக்கிறது, உள் ளது, உண்மை, மெய் என்றாதி பொருள்களாம்; அதாவது, ஆதியாகவும், என்றுமுள்ளதாகவும் இரண்டற்றதாகவும், மற்ற சேதனாசேதனங்கள் யாவும் எதிலிருந்து ஜனித்ததாக வும் ஜனிப்பதாகவும், ஜனிக்கிறதாகவும், மறுபடியும் எதினி டமே போய்ச் சேர்வதாகவும் இருக்கிறதெதுவோ அதற்கு ஸத் என்று பெயர். இந்த ஸத் என்னும் தாதுவிலிருந்தே ஸத்தியம் என்றபதாயகியது. இந்த ஸத்துபதத்தின பெருமை

யிப்படிப்பட்ட தாகையால், "ஸத்யமேவ ஜயதி"—ஸத்யமே எப்போதும் ஜயத்தைப்பெறுமென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும்,

ஸத்தியமே வேதாந்த சித்தாந்த சமயதீபம்; அந்த நித்தியதீபத்தை அவிக்க யாவராலும் முடியாது. அதுவே பரிசுத்தவான்களுடைய சமயம். அதுவே பரிசுத்தமான பக்தி, அதுவே பூத உடலை நசிக்கச்செய்து ஜீவாத்துமாவை பரமாத்துமாவினிடம் சேர்க்கும் சாதகம். அதுவே முடிவான சுகிர்தத்தைத்தருவது, அதுவே பூரணப்பொருளைக் காட்டுவது. அதை யனுஷ்டிப்பதே உண்மையான பூஜையும், உண்மையான விரதமும், உண்மையான வேள்வியுமாம். அதினாலேயே எதுவும் ஸ்திரப்படுத்தப்படுகின்றது. யார் சுயலாபத்தை விட்டுப் பொது நலத்துக்கு உழைக்க அந்த ஸத்தியத்தைத் துவஜமாகக் கொள்ளுகின்றனரோ, அவரை அது பூஷணப்படுத்தும்,ஸத்தியத்திற்கு மேலானது ஒன்றுமில்லை.ஸத்தியத்தின் ஒரு அணுவை ஒரு திராசுத்தட்டிலும், ஆயிரம் அசுவமேத யாகபலனை யோர் திராசுத்தட்டிலும்வைத்துநிறுத்தால் அந்த அணுரூபமான சத்தியம், அந்த ஆயிரம் அசுவமேத யாக பலனையுடைய திராசுத்தட்டைத் தூக்கிகவிழ்த்துவிடும் ஆகவே, ஸத்தியத்தை நாடித் தலைவணங்குங்கள், அது என்றும் பக்கத்திலிருந்து புனிதமாக்கும் என்று பாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும்,

ஸத்தியம் என்பது தனியேகமானது. அது அநந்தமல்ல. அது தன்மயமாகஇருப்பதால் அதை ஸ்தாபிக்கத் தருக்கவலங்காரம் வேண்டியதில்லை. அது சகலரும் அறியக்கூடிய சமீபத்தில் சாதாரண சாதனமாகவிருப்பதால் அதை அறிய அதிக தூரம்போகவேண்டிய தில்லை. அதைத் தொன்றுதொட்டு அறிந்துப்ப அநேகர் ஆவல்கொண்டார்கள்; ஆனால் அன்று முதல் இன்று வரையிலும் அதை ஒருவரும் முற்றும் அடைந்தார்கள் இல்லை. அந்த விலையற்ற செல்வத்தைப்பெற்றவர்கள் பாக்கியமே பாக்கியம்; அதைப்பெறாதவர்களுடைய துர்ப்பாக்கியமே துர்ப்பாக்கியம்,அது பார்க்கப் பிரயத்தனப்

பட்டால் பிரதியக்ஷமாகும், பார்த்தவுடனே ஸ்பஷ்டமாகும் ஸ்பஷ்டமானால், அதைவிட்டுப் பிரிய மனம்வராது. அது மானவஜாதியாரின் மதசித்தாந்தங்கள் யாவற்றிலும் மறைந்து நிற்கின்றது. பிரபஞ்ச லௌகிக தெய்விக காரியங்களெல்லாவற்றிலும் எப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது; அது அந்தகாரமான இருட்டின் மறைவிலும் மங்காமலிருக்கிறது. பூரண சந்திரபிரகாசத்தில் புஷ்பச்செடிகளுக்கடியில் பரிமள கந்திகளைப்போல் நடிக்கின்றது. அது பயங்கரமான மேக கர்ச்சனைகளிலிருந்து பாவிகளைப்பயப்படுத்துகிறது; நக்ஷத்திரங்களிலிருந்து நல்லோர்முகத்தைப்பார்த்து நகைக்கின்றது.

அது அருள்வாக்கு பெற்ற ஆசாரியர் வார்த்தைகளிலிருந்து பிறிக்கொண்டு வந்து உபதேசிக்கின்றது, அது நிரபராதிகளின் நேத்திரங்களிலிருந்து ஜ்வலிக்கின்றது, அது குரூரமுள்ள குற்றவாளிகளின் கண்களைக் கூசும்படி செய்கின்றது. இம்மட்டோ! அது குழந்தைகள் முகத்தில் காருண்ணியரூபமாகக் குடிகொண்டிருக்கிறது, பாலியர் முகத்தில் பூரண அன்பாகப் பிரகாசிக்கிறது. முதியோர் முகத்தை மகிமைப்படுத்துகின்றது. ஆகவே ஸத்தியம் என்பது எங்கும் எப்போதுமிருத்தல் பிரத்தியக்ஷம், அதை அநுஷ்டித்ததனாலல்லவா ஹரிச்சந்திரன் முதலானவர்களுடைய பெருமை இன்றளவும் பிரபஞ்சமெங்கும் பிரதிஷ்டையுடன் புகழப்பட்டுவருகிறது. ஆகவே,

ஸத்தியரூபமே பிரமம், ஸத்தியமே தருமத்திற்கு மூலம்; ஆனதால் பிரம பாராயணர்களாகிய சான்றோர் மெய்நோன்புடையவர்களாகி, மெய்மைசொல்லல் வேண்டும், மெய்யாக நடத்தல்வேண்டும்.

Tell truth. He drieth to the very roots who telleth untruth.

---

(134.) தைத்திரியம்

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 1-வது வாக்கியம்.

ஸத்யாந்நப்ரமதிதவ்யம் தர்மாந்நப்ரமதிதவ்யம் குசலாந்நப்ரமதி தவ்யம்.

பொழிப்புரை.

ஸத்தியத்தைவிட்டு வழுவலாகாது, தருமத்தைவிட்டு வழுவலாகாது, நற்செய்கையை விட்டு வழுவலாகாது.

விசேஷ உரை.

*ஸத்தியம் சொல்லுதலும், ஸத்தியமாக நடத்தலும் ஆரியர் சமயத்தின் உயிர். யார் சத்தியஸ்வரூபியாகிய பிரமத்தை யடைய விரும்புகின்றனரோ அவர்கள், ஒரு பொழுதும் சத்தியம் தவறலாகாது. பிரம பாராயணராகிய பிரமநிஷ்டர் நல்ல தன்மையுடன் எப்பொழுதும் தருமத்திற்கு மூலமானவரும், நன்மைக்கே இருப்பிடமுமான கடவுளால் நியமிக்கப்பட்ட தருமாநுஷ்டானத்திலேயே யிருக்கிறார். தருமாநுஷ்டானமின்றி உள்ளம் பரிசுத்தமாவதில்லை; கடவுளுடைய அருளும் கிடைப்பதில்லை. பிரமஞானமும் விளங்குவதில்லை; ஆகையால், மோக்ஷத்தில் விருப்பமுடையவர் ஒருபொழுதும் தருமத்தைவிட்டு வழுவலாகாது, கடவுளினது நல்ல நோக்கத்துடன் தமது நல்ல விருப்பத்தையும் சேர்த்து, அவரால் நியமிக்கப்பட்ட ஸம்ஸாரத்தினது நன்மைக்கு வேண்டிய காரியங்களில் செல்லாவிடின், அவரது நல்ல நோக்கத்தை யறிய வல்லோ மல்லோம். ஆனதுபற்றியே, நல்ல காரியங்களைவிட்டு நீங்கலாகாது.*

One should not part from truth; One should not part from righteousness; One should not part from good deeds.

---

## (135). தைத்திரியம்

*சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 3-வது வாக்கியம்.*

*ச்ரத்தையாதேயம்: அச்ரத்தையா அதேயம்.*

பொழிப்புரை.

அன்புடன் தானம் செய்தல்வேண்டும்' அன்பின்றி தானம் செய்யத் தக்கதில்லை.

விசேஷ உரை.

*தக்கவருக்கே தானம் செய்யவேண்டும், ஏன் என்றால், கூன்குருடு கொண்டி முடவர்களுக்கும் அல்லது பிணி மூப்பு*

முதலானதுகளால் யாதொரு தொழிலையும் செய்ய சக்தியற்ற ஏழைப்பரதேசிகளுக்கும், ஏழைகளுக்காக ஸ்தாபித்த கல்வி, கைத்தொழில் வைத்தியாதி சாலைகளுக்கும், ஜனோபகாரமாகவும் தேசோபகாரமாகவும் ஸ்தாபிக்கும் தருமசாலைகளுக்கும் செய்வதே உத்தமமான தானம். குடியர், மடையர், தடியர், சோம்பேறி வேஷதாரிகளுக்கும்; பிறர் மெச்சும்படியாகவும், டம்பார்த்தமாகவும் செய்யும் தானத்தினால் தீமையுமுண்டு நன்மையுமில்லை; மேலும், செய்யும் தானத்தை வீண் டம்பத்துக்கும் கட்டாயத்துக்கும் செய்யாமல் உண்மையான அன்புடன் செய்யவேண்டுமாகையால், எவரும் துயரத்துடன் தானம் செய்யவேண்டுவதில்லை, ஆனால் அன்புடன் தானம் செய்தல்வேண்டும்.

---

## தைத்திரியம்.

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 1-வது வாக்கியம்.

தர்மஞ்சர; தர்மாத்பரம்நாஸ்தி;
தர்ம:ஸர்வேஷாம் பூதானும் மது.

### பொழிப்புரை.

தருமத்தை அனுஷ்டியும், தருமத்தைவிடச் சிறந்ததொன்றுமில்லை, தருமம் எல்லா உயிர்களுக்கும் இனிமையானது.

### விசேஷ உரை.

தருமம் என்னும் பதம் திரி: என்னும் ஸம்ஸ்கிருத தாதுவிலிருந்துண்டானது. இந்த திரி: என்னும் தாதுவுக்கு காப்பாற்று என்பது பொருள், அதாவது—பிரபஞ்ச வாழ்க்கை என்னும் ஆசாபாசப் படுகுழியில் தப்பித்தவறி விழுந்து தத்தளிப்பவருக்குக் கைகொடுத்து மேல்தூக்கிப் பாதுகாக்கும் செய்கைக்குத் தருமமென்று பெயர். ஆதியிலிருந்த இந்நாட்டு ஆரியர் இந்தத் தருமத்தை 32 விதங்களாக வகுத்தார்கள் அவையெவை யெனில்:—

1 ஆதுலர்க்குச்சாலை—ஏழைகள் குடியிருக்க வீடுகளைக் கட்டிக்கொடுத்தல்.

2 ஓதுவார்க்குணவு—படிப்பவருக்கு அன்னமிடல்.

3 அறுசமயத்தார்க்குண்டி — சைவாதி 6 சமயத்தாருக்கும் உணவுகொடுத்தல்.

4 பசுவுக்குவாயுறை—பசுக்களைத் தீனிபோட்டு வளர்த்தல்.

5 சிறைச்சோறு—குற்றஞ்செய்த கைதிகளுக்கு உணவுகொடுத்தல்.

6 ஐயம்—ஏழைகளுக்குப் பிச்சைகொடுத்தல்.

7 தின்பண்டம் நல்கல்—யாத்திரைக்காரருக் குணவுகொடுத்தல்.

8 அறவைச்சோறு—திக்கற்றவர்களுக்கு அன்னமிடல்.

9 மகப்பெறுவித்தல்—பிள்ளைபெறுவோர்க்குதவி செய்யல்.

10 மகவுவளர்த்தல்—பிள்ளையைப்போஷித்தல்.

11 மகப்பால் வார்த்தல்—குழந்தைகளுக்குப் பால்தருதல்.

12 அறவைப்பிணஞ்சுடுதல்—அநாதப்பிரேதங்களைச்சுடல், புதைத்தல்.

13 அறவைத்தூரியம்—திக்கற்றவர்க்கு வஸ்திரமீயல்.

14 சுண்ணம்—தாம்பூலத்துக்குச் சுண்ணாம்புதருதல்.

15 நோய்மருந்து—வியாதிஸ்தர்களுக்கு மருந்தீதல்.

16 வண்ணார்—ஏழைகளின் துணிவெளுக்கக் கூலிதரல்.

17 நாவிதன்—தருமக்ஷவரம் செய்வித்தல்

18 கண்ணாடி—முகம்பார்க்கக் கண்ணாடிதரல்.

19 காதோலை—ஏழைப்பெண்களுக்கு காதுகளுக்கு ஓலைச்சுருள் தரல்.

20 கண்மருந்து—கண்நோய்களுக்கு மாத்திரை அல்லது மைதரல்.

21 தலைக்கெண்ணெய்—ஏழைகள் தேய்த்துக்குளிக்க எண்ணெய் தரல்.

22 பெண்போகம்—புருஷர்களுக்குக் கலியாணம் செய்வித்தல்.

23 பிறர்துயர்காத்தல்—ஏழைகள் துயரத்தை நீக்கல்.

24 தண்ணீர்ப்பந்தல்—வழிப்போக்கருக்குத் தாகத்தைப் போக்க நீர்மோர் பானகம் கொடுத்தல். அதற்குப்பந்தல் அமைத்தல்.

25 மடம்—யாத்திரைக்காரருக்குத் தங்கச் சத்திரங்கள் கட்டல்.

26 தடம்—ரஸ்தாக்கள் தடாகம் குளங்கள் ஏற்படுத்தல்.

27 சோலை—வழிப்போக்கர் தங்கத் தோப்புகளை யுண்டாக்கல்.

28 ஆவுரிஞ்சுதறி—கால்நடைகள் உடம்பை தேய்த்துக் கொள்ள கற்கள் அல்லது மரங்கள் நடுதல்.

29 விலங்கிற்குணவு—பிராணிகளைப் போஷித்தல்.

30 ஏறுவிடுதல்—பசுக்களுக்காகக் காளைகளைப்பொலியக் கொடுத்தல்.

31 விலைகொடுத்துயிர்காத்தல்—பொருள்கொடுத்துப் பிராணனைக்காத்தல்.

32 கன்னிகாதானம்—கன்னிகைகளைச் சொத்துடன் விவாஹம் செய்வித்தல்.

என்று வகுக்கப்பட்டும் அநுஷ்டிக்கப்பட்டும் வந்தாலும், இந்தத் தருமம் என்னும் பதத்தின் பொருளைப்பற்றி ஆழ்ந்து ஆராய்வோமாகில் அதற்குக் கடமைஎன்னும் பொருளே பலவிதத்திலும் பொருந்தியதென்று சொல்லலாம்.

அதாவது.

மானிடர்தம்கடைமையைநிறைவேற்றுதல்தான்தருமம். தமது விஷயத்தில் தாம் செய்யவேண்டிய கடமை, தாய் தந்தைகள் விஷயத்தில் தாம் செய்யவேண்டிய கடமை மனைவி விஷயமாயும் குழந்தைகள் விஷயமாயும் செய்யவேண்டிய கடமை அண்டைவீட்டார் விஷயமாயும் வேறு சுற்றத்தார்

விஷயமாயும் செய்யவேண்டியகடமை, செல்வவான்கள் விஷயமாகச் செய்யவேண்டியகடமை, ஏழைகள்வறுமையிலுள்ளோர்ஆதரவற்றவர் இவர்கள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமை, ஸ்வதேசத்தைப்பற்றி செய்யவேண்டிய கடமை, கடவுள் விஷயமாகச் செய்யவேண்டியகடமை, இவையனைத்தையும் முடித்தலின்பெயரே தருமம்.

## இந்தத் தருமத்தின் விவரம்.

நமது விஷயத்தில் நாம் செய்யவேண்டிய கடமையாவது:—நமது தேகசுகத்தைத் தகுந்த உணவு, உடை, உறைப்புகளால் காப்பாற்றியும், தகுந்த கல்வி கைத்தொழில்களினாலும், சாதுஜன சகவாசத்தினாலும், ஆசாரியர்களுடைய போதனைகளினாலும், ஞானபிவிருத்தி அடைந்தும்; ஸத்தியம்; சாந்தம், பரிசுத்தம் முதலான திவ்ய குணங்களினால் ஆத்மபரிசுத்தம் பெற்றும் பிரகாசிக்கவேண்டும்.

2. தாய் தந்தைகள் விஷயத்தில் நாம் செய்யவேண்டிய கடமையாவது—தம்மை அன்போடு பெற்றெடுத்து வளர்த்த "அன்னையையும் பிதாவையும்" முன்னறி தெய்வமாகக்கொண்டு, அவர்கள் சொல்லும் நீதி வசனங்களை (நியாயமாக விருக்கிறவரையில்) சிரமேற்கொண்டுஅதன்படி நடந்தும் அவர்களுக்கு இக்கட்டு, பிணி, மூப்பு முதலானவைகள் சம்பவிக்கும்போது அருகிலிருந்து வேண்டிய உதவிகளனைத்தையும் உண்மையான உள்ளத்துடன் செய்து பாதுகாக்கவேண்டும்.

3. மனைவி விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இல்லறத்தாருடைய மனைவியானவள் கேவலம் காமத்தைச் சாந்தமாக்கவும், பிள்ளைகளைப்பெற்றுப் போஷிக்கவும், சமையல்வேலை செய்யவும் ஜாடுமாலி முதலான வேலைகளைச் செய்யவுமாத்திரம் வந்தவளல்ல. இல்லறத்தானுடைய இகலோக சுகத்துக்கும்,பரலோகப்பெரும்பாக்கியத்துக்கும் பொருத்தமானவள் மனைவியேயாகையால், அவளிடத்தில் புருஷன் அதிக அன்புவைத்து, அவள் விரும்பும் உணவு

வஸ்திராபரணங்களை (நியாயமானவரையிலும், தன் யோக்கியதைக்குத்தக்க வரையிலும்) கொடுத்தும், மாமிநாத்திகள் முதலானவர் கொரேத்திற் கிடங்கொடாமலும், கல்வி, ஞானம் தேவபக்தி முதலானதுகளைத் தானே ஒர் ஆசிரியனைப் போலிருந்து போதித்தும்; அவளுக்கு மாதவிடாய், கர்ப்பம், பிரசவ சங்கடம் பிணி மூப்பு முதலான இக்கட்டுகள் சம்பவிக்கும் காலத்தில், அருகிலிருந்து அன்போடு வேண்டிய உதவிகளனைத்தும் செய்தும்; அவளிடம் பேசும்போது அதிகசாந்தமாகவும், மரியாதையாகவும், பிரியமாகவும் பேசியும்; அவளது விருப்பத்தை யுக்தியினலறிந்து செய்தும் உண்மையான வாழ்க்கைத்துணைவியாகக் கொண்டு கவுரவப்படுத்தவேண்டும்.

4. குழந்தைகள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இல்லறத்தாருடைய குழந்தைகள் கேவலம் காமசாந்தியின் பலனாக வந்தவர்களல்ல. அவர்கள் பரமேசுவரருடைய பரிபூரண அன்பினால் பிரகாசிக்கும் பிரபஞ்சத்தின் பிரஜாவிருத்தியாக்கத் தேவதூதராக அனுப்பப்பட்டவர்கள். அப்படி அனுப்பப்பட்ட பிள்ளைகளைத் தக்கபடி போஷித்துக் காத்துப் பிரபலமாக்க, பெற்றோராகிய தாய் தந்தைகளைப் பரிபாலகராக பரமேசுவரர் நியமித்திருக்கிறார். ஆகவே பெற்றோர் தமது மக்களை உணவு, உடுப்பு, தேகாப்பியாசம் முதலானவைகளால் தக்கபடி பாதுகாத்தும்; கல்வி கைத்தொழில் ஞானம் நீதி தேவபக்தி முதலானவைகளைப் போதித்தும் தாம் போதிக்கிறபடி தாமும் முன்மாதிரியாக நடந்துகாட்டியும், தமது நடவடிக்கைகளினால் அவர்களும் பின்பற்றும்படி வளர்க்கவேண்டும்,

5. அக்கம்பக்கத்தார் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இல்லறத்தார் அக்கம்பக்கத்தாரை அலக்ஷியம் செய்யக்கூடாது; எனெனில் மானவஜாதியார், மற்ற மிருகங்கள், பக்ஷிகள் முதலான ஜீவப்பிராணிகளுக்கு இருக்கும் கூர்மையான கொம்பு, பல், நகம், இரக்கை முதலான சொந்தக் காப்புகளுக்கேற்றவைக ளில்லாமல் படைக்கப்பட்

டிருப்பதால், பிறருடைய சகாயமில்லாமல் சுகமாகப் பிழைத்தலரிது. அப்படிப்பட்ட சகாயம் பெரும்பாலும் அக்கம் பக்கத்தாரிடம் அடைவது சஹஜம்; ஆகவே, அக்கம்பக்கத்தார் தனவான்களான போதிலும், தரித்திரவான்களான போதிலும் அவர்களுக்குச் சம்பவிக்கும் சுகதுக்கங்களுக்குத்தாம் இடுப்பைக் கட்டிக்கொண்டுபோய் உதவிசெய்யவேண்டும்.

6. சுற்றத்தார் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—சுற்றத்தார்சர்வ வல்லமையுள்ள சுவாமியினால் அனுப்பப்பட்ட பிரியமுள்ள பந்துக்கள்; கஷ்டம் வரும் காலங்களில் சுற்றத்தார் உதவி செய்வதைப்போல ஏனையோர் உதவிசெய்தல் அபூர்வம்: ஆகவே, சுற்றத்தாரில் எவராவது நல்லபதவியில் இருந்தால் அவர்களைக் கண்குளிரக்கண்டும் கேட்டும் சந்தோஷப்படவேண்டும். அவர்கள்கெட்ட தசையிலிருந்தால் அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச்செய்து ஆதரித்து வரவேண்டும்.

7. செல்வவான்கள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இந்தப் பிரபஞ்சத்தில் செல்வவான்கள் சிலராகவும், அவர்களுடைய உதவியினால் ஜீவிப்பவர்கள் பலராகவும் இருக்கப் பரமேசுவரர் நியமித்திருக்கிறார். இப்படிச் சிலராகவிருக்கும் செல்வவான்களில் பெரும்பான்மையோருக்குச் செல்வத்தைச் சீரானவழியில் செலவழிக்கத் தெரியாமல் கெட்ட விஷயங்களில் செலவழித்து இகத்துக்கும் பரத்துக்கும் தீமையை விளைவித்துக்கொள்வார்கள். ஆகவே, செல்மவான்களுடைய திரவியத்தைத் தக்கபடி நல்ல விஷயங்களில் செலவழிக்க புத்திமான்கள் அடிக்கடி அறிவிக்கவேண்டும்.

8. ஏழைகள் வறுமையிலுள்ளோர், ஆதரவற்றவர்கள் இவர்கள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது;—இந்தப் பிரபஞ்சத்தில் பெரும்பான்மையோரை ஏழைகளாகவும், சிறு பான்மையோரை ஏழைகளாகவும், நியமித்துப் போஷித்துவரும்படி பரமேசுவரர் நியமித்திருக்கிறார்; ஆக

வே வேலைசெய்ய வகையற்ற பெரியோரையும், கூன், குருடு, நொண்டி, மூடம், மூப்பு முதலியவைகளால் யாதொரு தொழிலும் செய்ய சக்தியற்ற ஏழைகளையும் பெற்றோர் அற்ற பிள்ளைகள், புருஷரற்ற பெண்டுகள் முதலான ஆதரவற்றவர்களையும், இல்லறத்தார் தமது மக்களைப்போலப் பாவித்துப் போஷித்துப் பாதுகாக்கவேண்டும்.

9. சுவதேசத்தைப்பற்றிச் செய்யவேண்டிய கடமை யாவது:—தமது தேசத்தைவிட வேறு தேசங்களில் கல்வி கைத்தொழில், வர்த்தகம் நாகரீகம் சுதந்திரம், சுகவாழ்வு, நீதி, தேவபக்தி முதலானதுகள் சிறந்து விளங்கினால், அவைகளைப் பலவிதத்திலும் அங்கு சென்றும் கேட்டும் படித்தும் தெரிந்து அவைகளைத் தமது தேசத்தில் ப்பலவிதக் கல்விச் சாலைகளினாலும், கைத்தொழிற்சாலைகளினாலும், வர்த்தகசாலைகளினாலும், சமயாசாரப் பத்திரிகைகளினாலும், புத்தகங்களினாலும் பகிரங்கமாக்கி அவைகளினால் தமது ஜனனதேசத்து ஜனங்கள் சுகவாழ்வைப்பெற்று பிரபஞ்சத்தில் பெருமையாக வாழ்ந்து பிரகாசிக்கச் செய்யவேண்டும்.

10. இராஜாங்க விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இந்த உலகில் எப்படிப்பட்ட இராஜனும் எல்லா ஜனங்களுக்கும் திருப்தியாக நீதி செலுத்துவது கஷ்டசாத்தியம்—ஏனெனில் இந்த உலகத்தையாளும் இராஜாக்களோ சிலர். இவர்களுடைய குறைவுகுற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கு பத்தாயிரங்கோடி கண்களும் காதுகளும் கரசரணாதிகளுமுள்ள குடிகள் காத்துக்கொண் டிருக்கின்றனர். அதாவது அநந்தங்கோடி குடிகள் இராஜாக்களுடைய குறைவு குற்றங்களைக்கண்டு கூக்குரலிடுவது ஸஹஜம். இப்படிப் பல குடிகளுடைய குறைவுகளையும், இராஜாக்கள்நேர் நேராக அறிந்து யாவருக்கும் திருப்திகரமாக நீதிசெலுத்தல் முடியாது; ஆகவே, இல்லறத்தார் பூரண இராஜபக்தியுள்ளவர்களாகி இராஜாங்கத்தாரை பெற்றோரைப்போலப் பாவித்தும், அவர்கள் குடிகளுடைய கஷ்டநிஷ்டூரங்கள் தெரிந்துகொள்ளச் சக்தியற்ற காலத்தில் குறைவு நிறைவு

களைப்பற்றி சாந்தமாகவும், சத்தியமாகவும், மரியாதையாக வும் தெரியப்படுத்தியும்; தேசத்தில் பஞ்சம், புசலகாற்று, வெள்ளம், அக்கினிபாதை, கொள்ளை வியாதி, கலகம் முதலான இக்கட்டுகள் சம்பவிக்கும்போதும், துஷ்டர்கள் கலகம் செய்து குடிகளை வருத்தும்போதும், அல்லது துஷ்டரான எதிர் ராஜா, படையெடுத்து வரும்போதும் இல்லறத்தார் தமது இராஜாங்கத்தாருக்கு உதவியாக நின்று உழைத்து உள்ளன்புடன் இராஜபக்தியைக் காட்டவேண்டும்.

11. சாமானியர் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—இல்லறத்தார் பிறரிடத்தில் உண்மை பேசவேண்டும். அவர்களிடம் சொன்ன சொல்லின்படி நடக்கவேண்டும், அவர்களிடம் நீதியாகவும் நன்றியறிந்தவர்களாகவும் இருந்தும், ஏழைகளிடம் பிரீதிவைத்தும், கேவலம் சுயலாபத்தையே கருதாமல் பொதுஜன சமுதாயத்தினுடைய சுகவிருத்திக்கும் உழைக்கவேண்டும்.

12. ஜீவஜந்துக்கள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது:—பக்ஷி மிருகங்கள் மற்ற கிருமிகீடாதி அற்பப் பிராணிகளையும் வீணாகவும் கொடூரமாகவும் வதைத்து வருத்தப்படாமல், அவைகளின் சுகதுக்கங்களையும் தமது சுகதுக்கங்களைப்போலப் பாவித்துப் போஷித்துப் பாதுகாத்து ஜீவகாருண்ணியமுள்ளவர்களாக இருக்கவேண்டும்.

13. கடவுள் விஷயமாகச் செய்யவேண்டிய கடமையாவது—அத்துவிதியரும், சத்தியஸ்வரூபருமாகிய பரமேசுவரரை நம்பி, அவரிடத்தில் ஹிருதயபூர்வகமான பக்தியைக் காட்டி உபாசித்தும், அவர் விரும்பும் ஸத்கருமங்களைச் செய்யவேண்டும். இது விஷயத்தில் பிரபஞ்சத்திலிருக்கும் பல மதஸ்தர்கள் பலவிதமாகக்கொண்டு அனுஷ்டித்தபோதிலும் அவ்வெல்லா மதங்களிலும் சத்தியம் ஒருபடியாக மறைந்து இருக்கிறது. ஆகவே, எந்த மதத்தையும், எந்த தேவதையையும் ஏளனம் செய்யக்கூடாது. சிலர் சமரசமான சாமானிய தருமத்தை அறிய சக்தியற்றிருப்பார்கள்; அப்படிப்பட்டவர்களுக்கும் சங்கடமுண்டாக்காமலும் சாந்தமாக

வும் மரியாதையாகவும் சத்தியத்தை அன்போடு போதித்து, பரமேசுவரருடைய பிரபாவத்தை இப்பிரபஞ்சமெங்கும் பாராயணம் செய்து உய்யும்படி செய்யவேண்டும். இப்படி எவ்விடத்தில் எக்காலத்தில், எந்நிலையில், எக்காரியத்தை செய்யவேண்டியது நமது கடமையோ; சரியாக அவ்விடத்தில் அக்காலத்தில் அந்நிலையில், அக்காரியத்தைச் செய்தல்வேண்டுமெனனும் கட்டளையை நமக்குள் ஒவ்வொருவருடைய நற்புத்தியின் மூலமாக ஈசுவரர் ஒவ்வொரு கணமும் வெளியிடுகிறார். நாம் அவரது அப்படிப்பட்ட எல்லாக் கட்டளைகளுக்குமே உள்ளாகி, ஸத்திய மார்க்கத்திலும், தரும மார்க்கத்திலும் நன்மார்க்கத்திலும் நடப்போமாயின், நமக்குச் சிரச்சேதமுண்டாயினும் உண்மையானஉயிர்ப்பைப் பெற்று அழிவற்றபதவியை அடையவல்லோம்.

Practise virtue. There is nothing superior than virtue. Virtue acteth as balm to all beings.

---

## (137.) ப்ரஹதாரணிய உபநிஷத்து

6-வது அத்தியாயம் 4-வது பிராம்மணம் 5-வது வாக்கியம்.

யதாகாரி யதாசாரீ ததாபவதி; ஸாதுகாரீ
ஸாதுர்யவதி பாபகாரீ பாபோபவதி;
புண்ய: புண்யேந கர்மணாபவதி பாப:பாபேந.

### மொழிப்புரை.

யாரெப்படி செய்கிறரோ, யாரெப்படி யாசரிக்கிறரோ அவரப்படி யாகிறர்; நல்ல காரியங்களைச் செய்கிறவர் நல்லவராகிறர், பாபகாரியங்களைச் செய்கிறவன் பாபியாகிறன். தருமகாரியங்களைச் செய்வதினுல் ஆன்மா பரிசுத்தமுள்ளதாகிறது; பாபகாரியங்களைச் செய்வதினுல் ஆன்மா பாபமுள்ளதாகின்றது.

### விசேஷ உரை.

இவ்வுலகத்தில் எக்குலத்தில் பிறந்து எவராகவிருக்கினும், அவரவர்கள் ஆசரிக்கிறபடியும், அவரவர்கள் செய்கிறபடியும் ஆகின்றனர். பாவஎண்ணங்களைக் கொண்டவர்களும். பாவகாரியங்களைச் செய்கிறவர்களும் பாவிகளாகிறர்கள்,

தருமகாரியத்தை யெண்ணுந்தோறும், தருமகாரியத்தைச் செய்யுந்தோறும் ஆத்மா பரிசுத்த நிலையை அடைகின்றது; ஆகவே பாப கருமத்தை விடுத்தும் புண்ணிய கருமத்தை அநுஷ்டித்தும் ஆத்மாவைப் பரிசுத்தப் படுத்திக்கொண்டு பரமாத்துமாவுடன் கூடி வாழ்தல் வேண்டும்.

What one doeth, what one followeth, he deriveth his character from the same. The practiser of virtue becometh virtuous. The practiser of vice becomes vicious. Through virtuous actions one becometh virtuous; through vicious actions, vicious.

---

## (138.) கடோபநிஷத்து

### 3-வது வல்லி 5-வது வாக்கியம்.

யஸ்த்வ விஜ்ஞானவான் பவத்யயுக்தேந
மநஸாஸதா; தஸ்யேந்த்ரியாணி வச்யாநி
துஷ்டாச்வா இவஸாரதே:

பொழிப்புரை.

யார் அவிவேகியோ, எப்பொழுதும் அடங்காத மனதுடையவ ரோ; அவனுடைய இந்திரியங்கள் தேர்ப்பாகனது துஷ்டக்குதிரை களைப்போல வசப்படாதவை.

விசேஷ வுரை.

ஜீவாத்மாவாகிய இராஜன் வதிந்துவரும் ஸ்தூலதேகம் பஞ்ச பூதங்களால் செய்யப்பட்ட ஒருரதமாம்; இந்த ரதத் துக்கு மநம் என்னும் குதிரை கட்டப்பட்டிருக்கிறது. அக்குதிரையின் கடிவாளத்தை அவிவேகம் என்னும் சாரதி யினிடம் கொடுத்தால்; அந்த அவிவேகமென்னும் சாரதி அந்தத் தேகமென்னும் ரதத்தையும், அதிலிருக்கும் ஜீவாத் துமா என்னும் ராஜனையும், பஞ்சேந்திரியங்களென்னும் படு குழிகளில் தள்ளி தத்தளிக்கச்செய்து விடுவான்; ஆனால் புத்தி என்னும் சாரதியினிடம் கடிவாளத்தைக்கொடுத்தால், ரதம் சரியாக நடைபெறும். அதைப்போல; மநம் தன்வசப்ப ட்டிராவிடின் அது அந்த ஆத்மாவை தருமமார்க்கத்தை

விட்டு நிர்ப்பாக்கியமான வேறு கெட்டமார்க்கத்தில் செலுத்திக்கொண்டுபோய் பாபமென்னும் முள் நிறைந்த காட்டில் தள்ளி, முடியாத வேதனைப்படும்படி செய்துவிடும்; ஆனதால் எவ்விதத்திலும் மனமும் இந்திரியங்களும் புத்திவிருத்திக்கு வசப்பட்டும் தரும நியமனத்திற்குப் புறம்பாகாமலும் இருக்கவேண்டும்.

He who is unwise with a mind always unruly, his senses are not subject to him, as wicked horses are not to a charioteer.

---

(139.) கடோபநிஷத்து 3—13 ல்.

யச்சேத்வாங்மனஸீப்ராஜ்ஞஸ்தத்
யச்சேத்ஞான ஆத்மனி; ஞானமாத்மனி மஹதிநி
யச்சேத்தத் யச்சே சாஸ்த ஆத்மனி.

பொழிப்புரை.

விவேகியானவன் தன் வாக்கை மனதிலும், மனதை புத்தியிலும், புத்தியை ஆத்மாவிலும், ஆத்மாவை பரமாத்மாவிலும் அடக்கவேண்டும்.

விசேஷ உரை.

மனதின் கண்ணுள்ள சிந்தையால் வாக்கை யடக்கல் வேண்டும், புத்தியின் கண்ணுள்ள விசாரணையினால் மனதின் சிந்தையை யடக்கல்வேண்டும், புத்தியின் விசாரணையை புறத்தினின்றும் தன் ஆத்மாவினிடம் நிறுத்துதல் வேண்டும். ஆத்மாவை பரமாத்மாவில் நிறுத்தல்வேண்டும், இதுவே யோகசாதனையின் கிரமம்.

A wise man should keep down speech and mind; he should keep them within the self which is knowledge; he should keep knowledge within the self which is the great; and he should keep that (the great) within the self which is the quiet.

---

(140.) ப்ரஹதாரணியம் 4—4 22 ல்.

யஜ்ஞேந தாநே நதபஸா நாசகே
நைதமேவ விதித்வா முநிர்பவதி.

பொழிப்புரை.

யக்ஞம், தானம், விஷயவாசனைகளை விடுவதான தபசு, ஆகிய இவைகளால் இந்த பரமாத்மாவை அறிந்துகொண்டு மநுஷி யன் முனியாகிறன்.

விசேஷ உரை.

*பரமாத்மாவை அறிந்து நற்செய்கைகளைச்செய்பவனே முனியெனப் படுவதற்குத் தக்கவன்.*

Brahmins seek to know Him by the study of the Veda, by sacrifice, by gifts, by penance, by fasting, and he who knows Him, becomes a Muni.

---

(141.) சுவேதாசுவதரம் 1—15 ல்.

*திலேஷு தைலம் ததிநீவஸர்ப்பிரா*
*பச்ரோத: சர்வநீஷு சாக்னி:*
*ஏவமாத்மநி க்ருஹ்யதே ஸா*
*ஸத்யேனைநம் தபஸாயோ நுபச்யதி.*

பொழிப்புரை.

எள்ளில் எண்ணெய்போலும், தயிரில்நெய்போலும், நதியில் தண்ணீர்போலும், கட்டையில் அக்கினிபோலும், ஆத்துமாவில் பரமாத்துமாவை: சத்தியத்தையும் தபசையும் கொண்டு தேடு பவர்கள் அறிந்து கொள்ளுகின்றர்கள்.

As oil in seeds, as butter in cream, as water in (dry) river-beds, as fire in wood, so is the self-siezed within the self, if man looks for him by truthfulness and penance.

---

(142.) தலவாகரம்—49.

*யோவா ஏதாமேவம் வேதாபஹத்ய*
*பாப்மா நமநந்தே சுவர்க்கலோகே*
*ஜ்யேயப்ரதிஷ்டதி ப்ரதிஷ்டதி.*

பொழிப்புரை.

எவன் இந்த பிரும்ம வித்தையை (இதில்) சொல்லியவிதமாய் அறிகின்றனே, அவன் பாபத்தைவிட்டுச் சிரேஷ்டமும் அனந்தமு மான சொர்க்கலோகத்தில் வசிக்கின்றன்.

விசேஷ உரை.

*மேலே சொல்லியபடி சாதனைசெய்து பிரும்மக் ஞானத்தை யடைந்தால் முக்தி கிடைக்கின்றது. பாபத்தையும் அதன் பலனாகிய துக்கத்தையும் முற்றும்விட்டு, சிரேஷ்டமான சொர்க்கலோகத்தில் அநந்தகாலம் வரைக்கும் ஆநந்தத்தை அனுபவித்துக்கொண் டிருப்பதே முக்தியாம். மனுஷிய சரீரத்தைவிட்டு எந்த உத்தமலோகத்தை அடைந்து வசிக்கின்றானோ அந்தலோகம் சொர்க்கம். எந்தஆத்மாஎந்த லோகத்துக்குத் தன்னிலையின்படி யோக்கியமானதோ அந்த லோகத்தை யடைகின்றது பெரும்போகமாம். சிரேஷ்டமான சொர்க்கலோகத்தை அடைந்து அங்கே அநந்தகாலம் வசிக்கின்றான். அவன் தாழ்வை யடைவதில்லை. அநேகர் பிரும்மத்தில் லயப்படுவது முக்தியென்கிறார்கள். அது முக்தியல்ல, விநாசமென்று அறியத்தக்கது. பாபத்தினின்று முற்றும் விடுபட்டுப்பிரும்மத்தை நேராகத் தரிசிக்கக்கூடிய அந்த ஆநந்தத்தைத்தரும் லோகத்தையடைந்து தேவதைகளோடு வசிப்பதேஉண்மையான முக்தியாம்.*

He who knows this Upanishad, and has shaken off all evil, stands in the endless, unconquerable world of Heaven, yea, in the world of Heaven.

---

## (143). முண்டகோபநிஷத்து.

### 3-வது முண்டகம் 2-வது கண்டம் 4-வது வாக்கியம்.

ஏதைருபாயைர்யததேயஸ்து வித்வான்
தஸ்யைஷ ஆத்மாவிசதே ப்ரஹ்மதாம

பொழிப்புரை.

எந்த பிரமஞானி இந்த உபாயங்களால் பிரமத்தையடைய முயலுகிறரோ; அவருடைய ஆன்மா பிரமமென்னும் வீட்டை யடைகின்றன்.

விசேஷ உரை.

*எந்தப் பிரமஞானி ஸத்தியத்தைப்பற்றி, தருமத்தைத் தொடர்ந்து, நற்கருமங்களை அநுஷ்டானத்திற்கு கொண்டு வந்து; தாய் தந்தை ஆசாரியர் பெரியோர் ஞானிகள் இவர்களிடத்தில் அன்புவைத்துப், பிரமத்தை அடையும் நிமித்தம் முயற்சி செய்கிறாரோ, அவர் பிரமமென்னும் வீட்டையடைகின்றார். அவர் பிரமத்தையடைந்து அவருடன் நித்தியமாகக் கூடி வாழ்கையால் உண்டாகும் பேராநந்தத்தை யனுபவிக்கிறார்.*

26

The soul of that knower of god, who exerteth himself through these means to obtain god, entereth god as its habitation.

## (144). தைத்திரியம்

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 5-வது வாக்கியம்.

ஏஷ ஆதேச ஏஷ உபதேச ஏதத நுசாஸநம் ஏவமுபாஸிதவ்ய மேவமுபாஸிதவ்யம்,

பொழிப்புரை.

இது கட்டளை, இது உபதேசம், இது பிரமாணவசனம்; இவ்விதமாகக் கடவுளை உபாசித்தல் வேண்டும்.

விசேஷ உரை.

ஹிமாசலாதி பர்வத பிரதேசங்களில் பல்லாண்டுகளுக்குமுன் பரமஹம்ஸர்களாகவும், தபோநிதிகளாகவும், எதிந்திரர்களாகவும் எழுந்தருளியிருந்த மஹரிஷிகள்ஃ திருவாய்மலர்ந்தருளிய தீர்க்கதரிசன வாக்கியங்களடங்கிய இந்த வேதத்தைஉபதேச கிரந்தமாகவும், பிரமாண வாக்கியங்களாகவும் கொண்டு அநுஷ்டிக்க வேண்டுமென்று கட்டளையிடுகின்றனர், யார் இந்த வேதத்தில் சொல்லிய தீர்க்கதரிசன வாக்கியங்களின்படி பரமேசுவரருடைய இருப்பை நம்பி, அவரை உண்மையான பக்தியினால் உபாசித்து, அவருக்குப் பிரியமான தருமங்களைச்செய்து வருகிறார்களோ; அவர்கள், எந்தகாலத்திலும், எங்கிருக்கினும், எப்படிப்பட்டவ ரானாலும் இகபரசுகத்தை யடைவார்கள் என்பது ஸத்தியம் அவர்களே பிரம்மாநந்தர்கள்; அவர்களுக்கு இதுவே உபதேசம்.

தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்கள்பெரும் பான்மையும் செய்யுள் ரூபமாகவே யிருத்தலின் அவைகளை இப்புத்தகத்திற்கு அங்கமாய் அச்சிட்டு ஒரே புத்தகமாகத் தொகுத்திருக்கின்றோம்.

This is the Commandment. This is the teaching. This is the authority. Thus should god be worshipped.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ஹரி: ஓம்.

ஆரியர் வேதமென்னும் இந்து பைபிலின் முதற்பாகம் நிறைவேறியது.

# அத்வைத சித்தாந்த பிரபாகரர்
# ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின்
# சரித்திர சங்கிரகம்.

சாரதா பீடமாகிய சங்கராசாரியர் பிறந்தஇடம், காலம், இன்னதென்று வியக்தமாகத் தெரிவிக்கும் சரித்திரங்கள் கிடையா; ஆயினும் அவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் மலையாள நாட்டில், காலத்தி என்ற அக்கிரகாரத்தில், ஆத்திரேய கோத்திரம், நம்பூரி பிராம்மணர் சிவகுரு நம்பூதிரி பாடவரது கற்புடைய மனைவி மஹாதேவியாரிடத்து பிறந்ததாக பல நூல்களால் பிரதியக்ஷமாகிறது. இந்த சிவகுரு நம்பூதிரிபாதர், சங்கரர் தம் மூன்றாவது வயது அடையுமுன் சிவபதமடைந்தபடியால்; இவர் தாயாரே, இவரைக் கண்ணை இமை காப்பதுபோல பாதுகாக்க வளர்ந்தார். கர்பாஷ்டகத்தில் உபநயனம் செய்விக்கப்பட்ட இவர், தமது பனிரெண்டாவது ஆண்டு நிறையுமுன்னே சகலசாஸ்திரங்களையுங் கற்றுத் தெளிந்து பராங்கதரானபடியால்; பாரின்பப் பாழ்க்கும்பியில் விழாமல் பிறப்பறுத்து பேரின்பத்தைப் பெற்றுய்ய விரும்பி சந்நியாச ஆசிரமத்தை அநுஷ்டித்தார். இது விஷயத்தில் இவரது உத்தம மாதாவுக்கு விருப்பமில்லாமலிருக்க அவரை வேதாந்த உண்மையைக்காட்டித்திருப்தியாக்கினார். பாலசந்நியாசியாகிய இவர் எப்போதும் வேதாந்த விசாரம் செய்து, அக்காலத்தில் மலிந்திருந்த புத்தர், சமணர், சாக்கியர் முதலானவர்களைக் கண்டித்தும்; ஹிமசேது பரியந்தமுள்ள பல திவ்யதீர்த்த க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்தும், ஆங்காங்குள்ள பண்டிதர்களைச் சந்தித்துத் தர்க்கித்து ஜயித்தும்: ஒப்பும் உவமையுமற்ற வித்துவ சிகாமணியாகப் பிரகாசித்தார். வியாசமுனிவர் வேதங்களை எல்லாங் கடைந்தெடுத்துச் சொல்லிய உத்தரமீமாஞ்சை என்னும் பிரம்ம

சூத்திரங்களுக்கு பாஷியத்தை (பனாரிஸ் என்னும் காசிப்பட்டணத்திலிருந்தபோது) செய்தருளினார்.

இவரியற்றிய தசோபநிஷத் பாஷியம், கீதாபாஷியம் நரஸிம் மதாபிந்பாஷியம், ஸஹஸ்ர நாமபாஷியம், ஆநந்தலகிரி, ஹரிமீடே, சிவபுஜங்கம், விஷ்ணுபுஜங்கம், விவேகசூடாமணி,ஆத்மபோதம், கநகதாரை, அமரசதகம்முதலான சிறந்த கிரந்தங்களின் வாக்கியரசனை, திராக்ஷாபாகமுடைய பெருமை இவைகளை இக்காலத்தாரும் இத்தேசத்தாரு மாத்திரமல்ல, மற்றெக்காலத்தாரும், எத்தேசத்தாரும் கண்டு வியந்து கலைமகளேகலியுகத்தில் சங்கரராக அவதரித்தாரோ வென்று சொல்லும்படி இருக்கின்றது. இவர் சைவம்வைஷ்ணவம் என்னும் பேதம் பாராட்டாமல் ஸ்மார்த்தமத ஸம்பிரதாயப்படி சர்வசமய சமரச வேதசித்தாந்த சிரோபூஷணராயும், மனமொழி மெய்களாற் செய்யத்தக்கனவற்றைச் செய்தும், சர்வாந்தரியாமியாகிய ஜகதீச்வரனை எங்குமாய் யாவுமாய்ப்பார்த்தும் பேரானந்த மடைந்திருந்தாரென்பதை இவரியற்றிய நூல்களில் பரக்கக்காணலாம். இந்த சர்வசமய சமரசஞானத்தை தாமனுபவித்து ஆநந்திப்பதைப் போலவே, பிரபஞ்சத்தாரும் அநுபவிக்க வேண்டுமென்ற பேரருள் கொண்டு ஜகந்நாதம், துவாரகை, பதரிகாசிரமம் சிரிங்கேரி முதலான விடங்களில் கி. பி 1200 வருஷங்களுக்கு முன்பே மடங்களை ஸ்தாபித்தும், அம்மடங்களுக்கு முறையே பதுமபாதர், ஹஸ்தாமலகர், சுரேசுவராசிரியர், ஆநந்தகிரி முதலானவர்களைச் சிடர்களாக நியமித்துப் பலவிடங்களிலும் பிரசங்கம் செய்யச் செய்தனர். அக்காலத்தில் காச்மீர நாட்டில் பல புலவர் சிகாமணிகளிருந்தமையால் அங்கும் போய் அவர்களை வென்று புலவர் பெருமானாகிய இவரை அச்சபை நடுவே கலைமகளுக்காக இட்டிருந்த நவரத்தின கசிதமான சாரதாபீடத்தில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டாடினார்கள். இப்படிக்கு இவர் இளமை முதல் ஐம்புலனை வாட்டி உடம்பை ஒடுக்கி பலதேச சஞ்சாரங்கள் செய்து நொந்ததால், மூலவியாதி கண்டு வருந்தி பதரிகாச்ரமத்தை அடைந்தும்,

சில நாள்களிருந்தும், பிறகு இமயமலையின் உன்னதக் கொடு முடியாகிய கேதார நாட்டை அடைந்து தமது முப்பத்திரண்டாம் வயதில் பரிபூரணரானார். இவர் தமது அந்திமதசையில் எங்கும் நிறைந்த பரம்பொருளைத் தியானித்த பிரார்த்தனை இது:—

எம்பெருமானே! பாவி யான் செய்த பிழைகள் மூன்றையும்பொறுத்தருளும். உருவமில்லாத உன்னைத்தியானித்ததின் பொருட்டு (விக்கிரகமாக) மூர்த்திகரித்தேன். மனோ வாக்குக்கு எட்டாதஉன்னை(அவதாரமாக)த்துதிசெய்தேன். நீ எங்கும் நிறைந்திருக்கிறாய் என்பதை எண்ணாது தீர்த்த யாத்திரை செய்தேன் என்று அநுதாபப்பட்டாராம்.—

இப்படிப்பட்ட பக்தசிகாமணியே அத்துவைத சித்தாந்தத்தை ஸ்தாபித்து அதில் காணப்படும் உலகமெல்லாம் பொய்யென்றும், ஆத்துமா ஒன்றே மெய்யாய் உள்ளதென்றும்; அது தான் நான், நானே அது என்றும், அதுவே பிரம்மம், அந்த பிரம்மமே நான் என்றும், (சுவரூப அத்வைத) சித்தாந்தத்தை ஸ்தாபித்ததாக அவருக்குப் பின் வந்தவர்களால் பல கிரந்தங்கள் எழுதப்பட்டன. அவற்றின் சாரசங்கிரகத்தைச் சாதாரண வாலிபர்களும் எளிதாக அறியும்படி வினவிடையாக இங்குத் தெரிவிப்பது அவசியமாகத் தோன்றுவதால்; அப்படியே செய்யத்துணிந்தோம்.

---

## அத்வைத சித்தாந்த ஸார வினா விடை.

(நாம், ஒரு அத்வைதியைப் பார்த்து)

ஐயா, அத்வைத மென்றாலென்ன? (என்று கேட்கில்)

அத்வைதி—அத்வைத மென்றால், அ + துவைதம் =அத்வைதம், அ = இல்லை, துவைதம் = இரண்டு, என்றால் இரண்டற்றது=ஒன்றேயுள்ளது, மற்ற, பூத பவுதிகங்களெல்லாம் பொய் என்பதாம்.

நா—பார்க்கும் பிரபஞ்சமெல்லாம் பொய்யா, இதென்ன ஆச்சரியம்!

அத்வைதி—ஆம் அத்தியாரோபம், அபவாதமிவைகளால் தத்துவ நிர்ணயத்தை யறிந்தால் பார்க்கப்பட்ட பூத பவுதிகாதி பிரபஞ்சகளெல்லாம் வெறும் கற்பனையென்றும் பிரம்மம் ஒன்றே சத்தியமாய் இருக்கிறதென்றும் ஸ்பஷ்டமாகும்.

நா—அத்தியாரோபமாவதென்ன?

அதி—வஸ்து: ஆரோபம் ஒன்றைவறிட்டுச்சொல்லுதல். அதாவது, கிளிஞ்சிலில் வெள்ளியைப் போலவும், கயிற்றில் பாம்பைப்போலவும், பிரபஞ்சமற்றதாகிய ஆத்ம வஸ்துவில் பிரபஞ்சத்தைக் கற்பிப்பதேயாம். அதி, ஓர் வடமொழி உபசர்க்கம் சேருஞ் சொல்லைக்கொண்டு பொருள் தரும்.

நா—இந்தக் கற்பனை உண்டாகக் காரணமென்ன?

அ—ஆத்மாவின் ஸ்வரூப ஞானமில்லாமைதான்.

நா—அந்த அஞ்ஞானத்துக்கு வேறு பெயர்களுமுண்டோ?

அ—அந்த அஞ்ஞானத்தையே அவித்தை, தமஸ், மோகம், மூலபிரகிருதி, குணசாம்யம், அவ்யக்தம், மாயை யென்றுதி பலபெயர்களுண்டு.

நா—மூலப்பிரகிருதி யென்றால் என்ன?

அ—அதற்கு பிரளயமென்றும், மஹா சுஷுப்தியென்றும் பெயர். அது வெள்ளை, சிவப்பு, கருப்பு நூல்களால் திரிக்கப்பட்ட கயிறுபோல சத்துவரஜஸ் தமோ குணக் கலப்புள்ளது.

நா—அதெப்படி?

அ—இந்த மூலப்பிரகிருதியில் அநந்தகோடி ஜீவர்கள் தம்தம் கரும வாசனையுடன் மெழுகு உண்டையில் தங்க சன்னங்களைப்போல் பிரளயத்தில் = சிருஷ்டி காலத்துக்கு முந்தி அடங்கி யிருக்கின்றனர்.

நா—இந்த அனுபவம் எங்கிருக்கிறது?

அ—சகல ஜனங்களுக்கும் ஸுஷுப்தி அவஸ்தையிலிருக்கிறது.

நா—இந்த மூலப்பிரகிருதி சிருஷ்டிகாலத்தில் எத்தனை விதமாயிற்று?

அ—ஜீவர்களுடைய பரிபக்குவ கரும வாசனையினாலே மாயை, அவித்தை, தாமஸி என மூன்றுவிதமாயிற்று.

நா—இவைகளில் மாயை என்பது என்ன குணத்தை யுடையது?

அ—சுத்த சத்துவ குணத்தை முக்கியமாக உடையது.

நா—சிருஷ்டிக்கு முந்தி இருக்கிற பிரம்மசைதன்னியம் மாயையில் பிரதி பலித்தபோது என்ன பெயரைப் பெறும்?

அ—ஈசுவரனென்று பெயரைப் பெறும்.

நா—இந்த ஈசுவரனுக்கு வேறு பெயர்களுமுண்டோ?

அ—அவனை அவ்வியாகிருதன், அந்தர்யாமி என்றும்; ஜகத்தின் சிருஷ்டி கர்த்தா என்றும்; பரிபூரண பிரம்ம சைதன்னிய ரூபத்தினாலே தாமஸி என்கிறதில் அவிச்சின்ன னுய்ச் சேர்ந்தவன்போலிருந்துக்கொண்டு ஜகத்திற்கு (நூலுக்கு சிலந்திப் பூச்சிபோல) உபாதான காரணனென்கிற பெயர்களு முண்டு.

நா—இந்தச் சைதன்னியம், தமஸில் சேர்ந்ததென்று சொன்னதில், அது தமஸுக்குஅன்னியமாகாமல்,தமஸ்ஸாக வே ஆய்விட்டதென்று தானே தாத்பரியம்?

அ— இல்லை. சிலந்திப் பூச்சியானது நூலைத்தானே யுண் டாக்கி, அதில் அச் சிலந்திப்பூச்சி சஞ்சரித்தாலும்; அது அந்த நூலைவிட அந்நியமாயும், அதில் ஒட்டாமலும் இருக்கி றதைப் போலவே, சைதன்னியமும மாயையில் ஒட்டாமல் அதற்கன்னியமாய் இருக்கிறது.

நா—சைதன்னியம் ஜகத்திற்கு உபாதான காரணமென்ப தெப்படி?

அ—உபாதானமென்பது—ஆரம்போபாதானம், பரிணு மோபாதானம், விவர்த்தோபாதானம் என மூன்றுவிதம். எப்படியென்றால்—

(1) துணிக்குக் காரணமான நூலுக்கு யாதொரு மாறு தலின்றியே துணியாக வாயிற்று—இது விஷயத்தில நூல் ஆரம்போபாதானம்.

(2) தயிருக்குக் காரணமான பால் அதன் ஸ்வரூபம் மாறித் தயிராயிற்று. இது விஷயத்தில் பால் பரிணாமோபா தானம்.

(3) கயிற்றில் பாம்பென்கிற தோற்றமுண்டாயிற்று; உண்மையில் கயிறு பாம்பாகவில்லை; கயிற்றில் பாம்புமில்லை; அப்படிக்கிருந்தும் பிரமையாகிய அஞ்ஞானத்தினால் தோற்றப்பட்ட பாம்பென்கிறமயக்கத்துக்குக் கயிறுகாரணமாகையால், அக்கயிறே விவர்த்தோபதானம்; ஆகவே, பிரம்ம சைதன்னியம் ஜகத்திற்கு ஆரம்போபா தானமுமல்ல ஏனெனில் துணியில் நூல் காணப்படுகிறதைப்போல ஜகத்தில் பிரம்மம் காணப்படாததினால் ஆரம்போபாதானமுமல்ல. தயிர் மறுபடியும் பாலாகாததுபோல பிரபஞ்சமாகத் திரிபையடைந்தால் மறுபடியும் பிரம்மமாக மாட்டாதாகையால்; பரிணாமோபா தானமுமல்ல. விவர்தோபா தானமென்றே சொல்லவேண்டும்; ஏனெனில் அக்ஞான மிருக்கும் வரையில் கயிற்றில் பாம்பபோல, பிரம்மத்தில் ஜகத் தோற்றுகிறது. ஞானம் வந்தவிடத்து பிரம்மத்தைத் தவிர வேறொன்றும் காணப்படாதாகையால் ஜகத்தென்பது பொய்யே.

நா—இந்த தாமஸீயின் மூலியமாக உபாதி பிராதான்னியத்தினால் என்ன ஆகிறான்?

அ—உபாதான காரணமாகிறான்.

நா—உபாதியென்று லென்ன?

அ—ஒரு வஸ்துவைபலவிதமாய்தோற்றுவிக்கிறதற்குச் சாதகமாய் இருக்கிறதெதுவோ அதுவே. பிரம்ம சைதன்னியத்தை ஈசுவரனாகத் தோற்றுவிக்கிறதற்குச் சாதகமாயிருக்கும் மாயை ஈசுவரோபாதி என்றும், பிரம்ம சைதன்னியத்தை ஜீவனாக தோற்றுவிக்கிறதற்கு சாதகமான அவித்தை ஜீவோபாதி என்றும் பெயர் பெறும்.

நா—அதெப்படி ஐயா?

அ—சர்வ வியாபகமான ஆகாயத்தில் கடமும் (குடமும்) வீடுமிருக்கையில், கடத்தை ஆகாசத்திற்கு உபாதியாகக் கடாகாசமென்றும்; வீட்டை யாகாசத்திற்கு உபாதியாகக் கொண்டு மடாகாசமென்று விவகரிப்பது போலாம்.

நா—சைதன்னியம் தன்னுடைய பிராதான்னியத்தினால் என்ன ஆகிறான்?

அ—கடமுண்டாவதற்குக் குயவன்போல ஜகத்திற்கு ஈச்வரன் நிமித்த காரணமுமாகிறான். ஈசுவரன் இந்த ஜகத்தை எப்படி அநந்த ஜீவர்களாகச் சிருஷ்டித்தாரெனில், அவித்தை பலவிதமாயும், எண்ணத் தொலையாததாயும் இருக்கிறபடியால் ஒரு புருஷனைச் சுற்றி அநேக கண்ணாடிகள் வைத்தால் அந்த ஒரு புருஷனை எல்லாக் கண்ணாடிகளிலும் தோன்றுவதுபோல அவித்தையில் பிரதிபலித்த சைதனிய ஸ்வரூபிகளான ஜீவர்களும் அனந்தமாக இருக்கின்றனர்

## காரண சரீர லக்ஷணம்.

நா—இந்த ஜீவேசுவரர்களுக்கு காரணசரீரங்களெவை?

அ—வியஷ்டி ரூபமான அவித்தையும், சமஷ்டி ரூபமான மூலப்பிரகிருதியுமே இந்தச் சரீரங்களினால் ஜீவர்களுக்கு ஸுஷுப்தி அவஸ்தையும், காரண சரீரமும் ஆநந்தமய கோசமுமாம்.

## சூக்ஷ்ம பிரபஞ்ச விஷயம்.

நா—இனிச் சூக்ஷ்மபிரபஞ்ச சிருஷ்டியெப்படி?

அ—ஈசுவரனுடைய பார்வையினால் தமோகுணரூபியான பிரகிருதியானது ஆவரணசக்தி விக்ஷேபசக்தி என இரண்டாக ஆயிற்று. அந்த விக்ஷேபசக்தியே ஆகாசம். அந்த ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும் ஜலத்திலிருந்து பிருதிவியுமுண்டாயின.

நா—இவ்வைந்து பூதங்களுக்கும் பெயரென்ன?

அ—இவ்வைந்து பூதங்களுக்கும் சூக்ஷ்மபூதங்கள் அபஞ்சீகிருதங்கள், தன் மாத்திரைகளென்றும் பெயர்.

நா—இவைகளுக்குக் காரணமெவை?

அ—அஞ்ஞானத்திலிருந்து சத்துவ-ரஜஸ்-தமோகுணங்கள் வந்திருக்கின்றன.

நா—இவ்வாகாசம் முதலிய ஒவ்வொரு பூதங்களுடைய சத்துவகுணாம்சத்திலிருந்து உண்டானவை எவை?

அ—காது, துவக்கு, கண் மூக்கு, நாக்கு என்னும் ஐந்து ஞானேந்திரியங்கள்.

நா—ஆகாசம் முதலிய சத்துவசமஷ்டியினால் உண்டாகியது எது ?

அ—அந்தக்கரணம்.

நா—அது எத்தனைவிதம் ?

அ—மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், என நான்கு விதம்.

நா—இவைகளில் அஹங்காரமும், சித்தமும், எதிலெதிலடங்கியவை ?

அ—புத்தியில் அஹங்காரமும்; மனதில் சித்தமுமே.

நா—ஆகாசம் முதலிய ஒவ்வொன்றின் ரஜோகுணத்திலிருந்து உண்டானவை எவை ?

அ—வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்ற கருமேந்திரியங்கள்.

நா—பிராணன் எதனாலுண்டாகியது ?

அ—ஆகாசம் முதலானரஜோகுண சமஷ்டியினால் உண்டாகியது.

நா—அது எத்தனைவிதம் ?

அ—பிராணன், அபானன், வியானன், உதானன் சமானன் என ஐந்துவிதம்.

நா—இந்த ஞானேந்திரிய கருமேந்திரிய பிராணன்களைந்தும்; மனம்புத்திகூடிப் பதினேழும்சேர்ந்ததினால் என்ன ஆகிறது ?

அ—லிங்கசரீரம் இதுவேபோகசாதனம், இந்த சூக்ஷ்ம சரீரத்தில் ஜீவேசுவரர்களுடைய இருப்பு சுவப்பனவஸ்தை இச்சரீரம்தான் விஞ்ஞானமய தேஜோமய பிராணமய கோசங்களாகின்றன.

## ஸ்தூலப் பிரபஞ்ச விஷயம்.

நா—இனி ஸ்தூலசிருஷ்டிக் கிரமமெப்படி ?

அ—தமோகுணப் பிரதானங்களான அபஞ்சீகிருத (சூக்ஷ்ம) ஆகாசம் முதலிய பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றை யும் இரண்டாகப்பாகித்து, அதிலொருபாதியை அதன் சுவக் தாம்சங்களாகவைத்து, மற்றொருபாதியை நான்காகப் பிரி த்து அந்த நான்கையும் ஒவ்வொன்றாய் மற்ற நான்கு பூதங் களுடைய சுவந்தாம்சமான பாதியுடன் சேர்ப்பது பஞ்சீ கரணமாம்.

நா—அஃதெப்படி ஐயா ?

அ—ஆகாசத்தில் அதன் சுவாம்சம் அரை வாயுவாம் சம் அரைக்கால், அக்கினி அம்சம் அரைக்கால், ஜலாம்சம் அரைக்கால் பிருதிவியாம்சம் அரைக்கால்அதாவது ஆகாசத் தில் தன் சுவாம்சம் அரையும், மற்ற நான்கு பூதங்களில் ஒவ்வொன்றினுடைய அரைக்காலம்சம் சேர்ந்து அரையு மாக இருக்கிறது. இப்படியே மற்றப் பூதங்களுக்கும் இப்ப டிச் செய்வதனால் ஐந்து பூதங்களும் பஞ்சீகிரதம் செய்யப் பட்டதாகின்றன.

நா—இப்பஞ்சப்பூதங்களிலிருந்து என்ன உண்டாயின.

அ—பிரம்மாண்டமும், அதிற்குட்பட்ட பதினன்கு லோகங்களும், உத்பீஜம், அண்டஜம், ஜராயுஜம், ஸ்வேதஜ மாகிய ஸ்தூலசரீரங்களும், அன்னம் முதலிய போஜ்ய வஸ் துக்களுமுண்டாயின; இந்த ஸ்தூல சரீரத்தில் ஜீவேசுவரர் களுடைய இருப்பு ஜாக்கிரதாவஸ்தை இதுவே அன்னமய கோசமாம்.

நா—இந்த ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்கள் தனித் தனியே எத்தனைவகை ?

அ—சமஷ்டி, வியஷ்டி என இருவகையாம்.

நா—சமஷ்டியென்றாலென்ன ?

அ—வனம், கிராமம் என்பவைகளைப்போலப் பொது வான பெயர்கள்.

நா—வியஷ்டியென்றாலென்ன ?

அ—மரம், வீடு என்றுதிகளைப்போலத் தனிப்பெயர். ஆகவே பொதுவாகச் சகல சரீரமும் சமஷ்டி. தனியாக ஒரு சரீரத்தைக் குறிப்பது வியஷ்டியாம்.

நா—சமஷ்டியுபாதியுடையவன் எவன்?

அ—சகல பிரபஞ்சமும் தன்னுடைய ஸ்வரூபமென அபிமானங்கொண்டவனை ஈசுவரன்.

நா—வியஷ்டியுபாதியுடையவன் எவன்?

அ—தேகம்தன்னுடைதென்றுகொண்டவனைஜீவன்.

நா—இந்த ஜீவேசுவரர்களுக்குள்ள அவாந்திரபேதங்களுண்டோ?

அ—காரணசமஷ்டியினல் ஈசுவரனென்றும் காரண வியஷ்டியினல் பிராக்ஞன் என்றும் சூக்ஷ்ம சமஷ்டியினல் ஹிரணியகர்ப்பன் என்றும், ஸ்தூல வியஷ்டியினல் தைஜஸன் என்றும் ஸ்தூல ஸமஷ்டியினல் வைசுவானரன் என்றும், ஸ்தூலவியஷ்டியினல் விசுவன் என்றும் பேதங்களுண்டு.

நா—இந்த ஈசுவரனே சத்துவ ரஜஸ் தமோகுணங்களால் என்ன ரூபமாகின்றன்.

அ—பிரம்மா, விஷ்ணு, ருத்திர ரூபங்களைப்பெற்று சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்கிறன். பிரம்மா விராட்டு ரூபத்துக்குள்ளும், விஷ்ணு ஹிரணியகருப்ப ரூபத்துக்குள்ளும், ருத்திரன் ஈசுவர ரூபத்துக்குள்ளும் அடங்கினவராகிறர்கள். இப்படித்தான் பிரபஞ்சத்தின் உற்பத்தி. இதுதான் அத்தியாரோபம்.

நா—இதுவரையில் தமோகுண பிரதானத்தினுடைய விக்ஷேப சக்தி காரியத்தைச் சொன்னீர்கள், இனி ஆவரண சக்தி காரியத்தைச் சொல்லுங்கள் ஐயா!

அ—ஈசுவரன் ஆத்ம ஞானி, இவர்களைத் தவிர மற்ற சகல ஜீவர்களுக்கும் பஞ்சகோசங்களுடையவும், ஆத்மாவினுடையவும் பேதத்தை யுண்டாக்கி ஆவரணசக்தி (அந்தகாரம்போல) மறைக்கிறது.

நா—இந்த ஆவரணமானது எத்தனை வகை?

அ—அசத்தென்றும், அபாநமென்றும் அதாவது வஸ்துவில்லை என்கிற வியவகாரத்திற்குக் காரணம் அசத்து வாவரணம்—வஸ்து விளங்கவில்லையென்கிற வியவகாரத் திற்குக் காரணம் அபானுவரணம் என இருவகை.

நா—ஸம்ஸார விருக்ஷத்திற்கு மூலமெது?

அ—ஆவரணசக்தி காரியமேயொழிய விக்ஷேபசக்தி காரியமில்லை. இந்த ஆவரணசக்தியே மோக்ஷத்திற்குங் காரணம்.

நா—இவ்விருவித ஆவரணமும் எதனுல் நசிக்கும்?

அ—தத்துவஞானத்தினுல் நாசமடையும்.

நா—அந்தத் தத்துவஞானம் எத்தனை வகை?

அ—பரோக்ஷம், அபரோக்ஷமென இருவகை.

நா—பரோக்ஷ ஞானமென்ருலென்ன?

அ—குருமுகமாக வேதாந்த விசாரணையினுலுண்டாவது. இதுவே சிரவணம்=கேட்டறிதலாம். இதனுல் வஸ்து வில்லை என்கிற அசத்துவாவரணம் நாசமடைகின்றது; அப்போது வஸ்து இருக்கிறதென்று வியவகரிக்கப்படுகிறது.

நா—அபரோக்ஷ ஞானமென்ருலென்ன?

அ—சிரவணத்தினுல் சமுசயத்தையும், மனனத்தினுல் அம்சபாவனையையும், நிதித்தியாசத்தினுல் விபரீதபாவனையையும் நிவர்த்திசெய்து: தேகமே ஆத்மா என்கிற ஞானம் எவ்வளவு உறுதிப்பட்டிருக்கிறதோ, அப்படிப்போலப் பிரம்மமேதான், தானே பிரம்மம் என்னும் ஞானமே அபரோக்ஷ ஞானம்.

நா—இப்படி பரோக்ஷாபரோக்ஷஞானத்தினுல் பிரம்மமாகிய வஸ்து விளங்கவில்லை என்று வியவகாரத்துக்கேதுவான ஆவரணமிரண்டும் நசித்தவிடத்திலென்னுகும்.

அ—அப்போது அநர்த்த நிவர்த்தியும் ஆநந்தபிராப்தியுமுண்டாகும். இவ்விதமாக ஏழு அவஸ்தைகள் சித்தியாகும்.

நா—ஏழு அவஸ்தைகளவை ?

அ—அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷஞானம் அபரோக்ஷஞானம், அநர்த்த (துக்க) நிவர்த்தி, தடையற்ற திருப்தி இவ்வேழும் ஜீவனுக்கு அவஸ்தைகள். இவ் விதமாக ஆகாசத்தைப்போல நிர்மலமாயிருக்கிற சைதன்னிய வஸ்துவில், பொய்யாயிருக்கிற பிரபஞ்சத்தைக் கற்பித்தலே அத்தியாரோபமாம்.

நா—நல்லது, அபவாதமென்றாலென்ன?

அ—காரணத்தைத் தவிரக்காரியமில்லையென்னும் அறிவினால் கிளிஞ்சிலில் வெள்ளிபோலவும், கயிற்றில் பாம்பு போலவும் பிரமத்தினிடத்தில் பிரபஞ்சமில்லையென்று தள்ளுவது அபவாதமாம். எதில்லையோ அது மாயை எது இருக்கிறதில்லையோ அது அவித்தை என்ற இந்த வாக்கியங்களுடைய அர்த்தத்தினால் மாயை கற்பிதமென்பது சித்தம்.

நா—இப்படி பிரம்மத்துக்கு அந்நியமாக ஒன்றுமில்லை என்றும், அந்தப் பிரம்மமே "நானே" என்று விசாரித் தறிகிறவனுக்குப் பெயரென்ன ?

அ—அவனே ஜீவன்முக்தன் என்பது வேதாந்தத்தின் ஸித்தாந்தம்.

நா—இதற்கு அநுபந்த சதுஷ்டயமெவை ?

அ—விஷயம், பிரயோஜனம், சம்பந்தம், அதிகாரியாகியவைகளே.

நா—விஷயமென்பது என்ன ?

அ—இந்த வேதாந்த சாஸ்திரங்களுக்கு விஷயம் பிரம்மமே.

நா—பிரயோஜனம் யாது ?

அ—மோக்ஷமே.

நா—சம்பந்தமெது ?

அ—பிரதிபாத்திய=சொல்லத் தகுந்தது+பிரதிபாதக சொல்லுகிறவன், பாவம்=போதிய = தெரியத்தக்கவஸ்து,

போதக=தெரிவிக்கிறவன் சம்பந்தம்=அதாவது சொல்லத் தகுந்ததை சொல்லி, தெரியத்தக்க வஸ்துவைத்தெரிவிக்கிற வன் என்பதாம்.

நா—அதிகாரி யார்?

அ—சாதன சாதுஷ்டய ஸம்பன்னனே.

நா—சாதன சதுஷ்டயமாவதெவை?

அ—நித்தியா நித்திய வஸ்து விவேகம், இஹாமுத்திரார்த்த பலபோக விராகம் சமாதிஷ்டகம். முமுக்ஷுத்துவம்.

நா—நித்தியா நித்திய வஸ்துவென்றெலென்ன?

அ—பிரம்மமே நித்தியமானது, ஜகத் அநித்யமானது என்று சுருதி ஸ்மிருதி புராணாதிகளாலே தனக்குத்தானே உண்டாகிற ஞானமேயாம்.

நா—இந்த ஞானத்தைப் பற்றிச் சொல்லும் சுருதிகளுக்கு என்ன பெயர்?

அ—மஹாவாக்கியங்களென்று பெயர்.

நா—அவை எவை?

அ—இருக்கு வேதத்தைச் சார்ந்த ஐதிரிய உப நிஷத்தில் பிரக்ஞானம் பிரம்மம் என்னும் வாக்கியமும், எஜுர் வேதத்தைச் சார்ந்த தைத்திரிய உப நிஷத்தில் அஹம் பிரம்மாஸ்மி என்னும் வாக்கியமும், சாமவேதத்தைச் சார்ந்த சாந்தோக்கிய உபநிஷத்தில் தத்வமஸி என்னும் வாக்கியமும், அதர்வண வேதத்தைச் சார்ந்த மாண்டூக்கிய உப நிஷத்தில் அயமாத்மா பிரம்ம மென்னும் வாக்கியமுமே.

நா—ஜீவபரங்களுக்குஐக்கியத்தைப்பிரதிபாதிக்க ஒரே வாக்கியம் போதாதா?

அ—முன்சொன்ன நான்கு வாக்கியங்களிலும் பிரயோஜனமுண்டு.

நா—அதெப்படி?

அ—தத்துவமசி வாக்கியம் குருவின் உபதேச வாக்கியம். அகம்பிரம்மாஸ்மி வாக்கியம் சிஷ்யன் அனுபவ வாக்கி

யம். பிரக்ஞானம் பிரம்மமென்னும் வாக்கியம் லக்ஷணவாக்கியம், அயமாத்மா பிரம்மமென்னும் வாக்கியம் சொரூப சாக்ஷாத்காரமாகும்.

நா—பிரக்ஞான பதத்திற் கருத்தமென்ன ?

அ—அது வாச்சியார்த்தம், லக்ஷியார்த்தமென இருவகை.

நா—வாச்சியார்த்த மென்றாலென்ன ?

அ—த்சேந்திரிய வியாபார விஷயங்களை யறிகிற ஜீவனே வாச்சியார்த்தம்.

நா—லக்ஷியார்த்தமெது?

அ—அந்தக்கரணத்தையும் அதன் விருத்திகளையும் தேகேந்திரியாதி வியாபாரங்களையும் தள்ளி அவஸ்தாத்திரய சாக்ஷியமாய்க் கூடஸ்தனாய் நிர்விகார பிரத்தியகாத்துமாவே.

நா—இனி பிரம்மபதத்திற்கு வாச்சியார்த்தமெது?

அ—எந்த சைதன்னியமானது ஏகமாய்,பூரணமாயிருக்கிறதோ அதுவேயாம்.

நா—இனி அகம்பிரம்மாஸ்மி என்னும் வாக்கியத்திலிருக்கும் அகம் என்ற பதத்திற்குப் பொருளென்ன?

அ—பரிபூரணமாய்த் தேசகாலவஸ்து பரிச்சேதசூனியமாய் பிரதியகாத சைன்னியம் மனுஷ சரீரத்தில் புத்திக்கு சாக்ஷியமாக ஹிருதய கமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக்கொண்டிருப்பதுவே,

நா—இனிப் பிரும்மபதத்திற் கருத்தமென்ன?

அ—தனக்கு முந்தியும் பிந்தியும் யாதொரு காரண வஸ்துவும், தனக்கு அந்நியமாய் யாதொரு ஒப்பும் உயர்வு மற்று ஏகமாயிருப்பதுதான்.

நா—இனி அஸ்மி என்னும் பதத்திற்கு அருத்த மென்ன?

அ—அகம் பதலக்ஷியார்த்தமான கூடஸ்த சைதன்னியமும் பிரம்மபதலக்ஷியார்த்தமான பரமாத்துமா சைதன்னியமும் ஏகத்துவ ஐக்கியமேயாம்.

நா—இனி தத்வமஸி வாக்கியத்தில் தத் பதத்திற் கருத்தமென்ன?

அ—ஏகமேவாத்வைதம்.

நா—ஏகமென்றால் போதாதா? ஏகமேவாத்வைதம் என்று ஏன் சொல்லவேண்டும்?

அ—ஏகம் என்ற பதத்தில் விஜாதி சூனியமும், அத்வைதமென்பதில் சுவகதபேத சூனியமும் விளங்குகிறபடியால் அப்படிச் சொல்லப்பட்டது.

நா—இனி தொம்பதத்திற் கருத்தமென்ன?

அ—தேகேந்திரியாதிகளுக்கெல்லாம் அதீதமாய்ச் சிரவண மனன நிதித்தியாசத்துடன் கூடியிருக்கிற பிரத்தியகாத்ம சைதன்னியமேயாம்

நா—இனி அஸிபதத்திற் கருத்தமென்னை?

அ—தத்பத லக்ஷியார்த்தமான பிரம்மத்திற்கும் தொம்பத லக்ஷியார்த்தமான கூடஸ்தனுக்குமுள்ள உபாதிகளை நீங்கிய இருபதத்தின் லக்ஷ்யார்த்த ஐக்கியமேயாம்.

நா—இனி அயம் ஆத்மாப்பிரமம் என்கிற வாக்கியத்தில் அயம்பதத்திற்கு அருத்தமென்ன?

அ—ஆத்மா அபரோக்ஷசுவரூபமென்று சொல்லப்படுவதே.

நா—இனி ஆத்மாவென்னும் பதத்திற்கருத்தமென்ன?

அ—அகங்காரமுதலாய் ஸ்தூலதேக பரியந்தமான காரியகாரண சங்கவாதத்துக்கெல்லாம் அதிஷ்டானமாய் இருதய கமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக் கொண்டிருக்கிற பிரத்தியகாத்மசைதன்னியமே.

நா—இனி பிரம்ம பதத்துக்கருத்தமென்ன?

அ—தத்வமாயிருக்கிற பரமாத்ம சைதன்னியமே பிரம்மபதத்திற் கருத்தமாம்.

நா—இஹாமுத்திரார்த்த பலபோகவிராக மென்றாலென்ன?

அ—இவ்வுலகத்தின் விஷயபோகங்களும், சுவர்க்கம் முதலான விடங்களின் அப்ஸரஸ்திரியாதி விஷய போகங்களும அநித்தியமென்றும் அசங்கியமானவைக ளென்றுந் தள்ளுதலாம்.

நா—சமாதிஷ்டகமென்றுலெவை ?

அ—சமம், தமம், உபாதி, திதிக்ஷா, சமாதானம் சிரத்தையாதிகளே.

நா—சமம் எது ?

அ—மனதை சிரவணாதிகளுக்கு விஷயமான ஆத்மா விடத்தில் நிறுத்தல்.

நா—தமம் எது ?

அ—ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்குதல்.

நா—உபாதியெது ?

அ—விவகாரமற்ற நிஷ்காம்யகருமானுஷ்டான மற்றுச் சநியாசியாயிருத்தல்.

நா—திதிக்ஷா எது ?

அ—பிராரப்தத்தினாலுண்டாகும் சீத உஷ்ணாதிகளைச் சஹித்தல்.

நா—சமாதானமெது ?

அ—சிரவணாதிகளால் கிரஹிக்கப்பட்டதில் மனதை நிறுத்தல்,

நா—சிரத்தையாவது என்ன ?

அ—வேதாந்தம் குருவாக்கியங்களில் விசுவாசம்.

நா—முமுக்ஷா என்பது எது ?

அ—சம்சாரமாகியதாபத்தைப் பரிகரிக்க சகல ஈஷணைகளையும் விட்டவருடைய தீவிரமான இச்சை.

நா—சமாதி எது ?

அ—கோபதாபாதிகளை விட்டிருத்தல்.

நா—நல்லது இந்தப் பிரபஞ்சம் எத்தனைவகை ?

அ—ஆத்மா அநாத்மா என இரண்டுவகை.

நா—பிரபஞ்சாதீதமான ஆத்மாவுக்கு எப்படி பிரபஞ்சத்திற்குள் அந்தர்பாவம்=அடக்கம் வந்தது.

அ—இந்தப்பிரபஞ்சம் சேதனாசேதனாத்மகம்=(சித்தும் ஜடமும் சரஸ்வரூபமாகையாலும், ஆத்மா சேதனனானபடியினாலும் ஆத்மாவைப்பற்றி பிரபஞ்சமில்லாததினாலேயும், ஆத்மாவுக்குப் பிரபஞ்சத்துக்குள் இருப்புசொல்லியே தீரவேண்டும்.

நா—சேதனமென்றுலெது ?

அ—ஜங்கமம் (உயிருள்ளவைகளெல்லாம் சேதனம்.)

நா—அசேதனமென்றுலெது ?

அ—ஸ்தாவரம் (உயிரில்லாத ஜடவஸ்துக்கள்) அசேதனம்,

நா—சேதனங்களும் அசேதனங்களும் வெவ்வேறாயும், பலவிதங்களாயும், இருக்கப் பிரபஞ்சமாத்திரம் இரண்டுவிதமென்று எப்படிச் சொல்லலாம்,

அ—ஆத்மா ஒன்றுதான். அநாத்மகாரியங்களாகிற உபாதியினால் அநேக ஜீவர்களாகவும், ஈசுவரர்களாகவும் விளங்குகிறான். இதுபோலவே அநாத்துமாவும் ஒன்றாக இருந்தாலும் காரிய ரூபத்தினால் அனேகமாக வாயிற்று.

நா—இது சங்கதியை உதாரணங்களோடு விவரப்படுத்துவாய்?

அ—ஆத்மா ஒருவனானாலும் அந்தந்தச் சரீர உபாதிகளினால் அவ்வவ்விடத்தில் பிரவேசித்தவன்போ லிருந்துகொண்டு தேவன் மனிதன் பசு பக்ஷி புழு என்பதாகப் பலவாறாக விளங்குகிறான், இதுவே அவிச்சின்ன பக்ஷத்திற்கு=தொடர்ச்சியாயிருக்கிற விஷயத்திற்குத்திருஷ்டாந்திரம்.இதுபோலவே ஒரே ஜலமானது, சமுத்திரம் நதி குளம் கிணறு பாத்திரம் முதலான விடங்களி லிருப்பதில் அநேகமாக விளங்குகிறது; இதுவே பிரதிபிம்பபக்ஷ திருஷ்டாந்தம்; மேலும் இந்த சமுத்திர முதலானதுகளில ஒரே சூரியன் பிரதி பிம்

பிப்பதினால் அநேகமாய் விளங்குகிறதுபோலவே, ஒரே ஆத்மாவானவன் அந்தக்கரணத்துடன்கூடிய சகலசரீரங்களிலும் பிரதிபலித்தவனாக விளங்குகிறான். அன்றியும் ஜலத்தின் இயற்கையான குளிர்ச்சி சலன முதலானதுகள் பிம்பமான சூரியனை எப்படித் தொடமாட்டாதோ அதுபோலவே, அந்தக்கரணதருமங்களாகிய கர்த்திருத்துவம், போக்திருத்துவ விகாரங்களும் சிதாபாசனாகிய ஜீவனிடத்திலே விளங்குகிறதேயொழிய பிம்பனாகிய ஆத்மாவைத் தொடுகிறதில்லை. ஆகவே, கடாகாசமே மகாகாசம், மகாகாசமே கடாகாசம்போல ஜீவாத்துமாவே பரமாத்துமா பரமாத்துமாவே ஜீவாத்துமா ஜீவாத்துமா என்பது கற்பிதம்.

நா—அப்படியா! ஜீவன் எத்தனைவிதம் விவரமாகச் சொல்லுங்கள்?

அ—பாரமார்த்திகன், வியவகாரிகன், பிரதிபாஸிகன் என மூன்றுவிதம். இந்த ஜீவர்கள் சுஷுப்தி ஜாக்கிர ஸ்வப்பனாபிமானிகள். ஜலத்தில் அலையும், அலையில் நுரையும், கற்பிதமாகிறபடி; பாரமார்த்திகனிடத்தில் வியவகாரிகன் கற்பிதம். குளிர்ச்சி ருசிமுதலானதுகள் ஜலத்தினுடையதாகவும் அக்குணங்கள் அலையிலும் நுரையிலும் விளங்குவனபோல வியவகாரிகனிடம பிரதிபாஸிகன் கற்பிக்கப்படுகிறான். எப்படி அலையின்றி நுரையும், ஜலமின்றி அலையும், இல்லையோ? ஜலமாத்திரம் வாஸ்தவமா யுள்ளதோ அப்படிப் பிராதிபாஸிகன் விவகாரனைத்தவிர இல்லை இல்லை. வியவகாரனும் பாரமார்த்திகனைத்தவிர இல்லை. இப்படிப்பஞ்சகோசங்களில் நின்றுபாரமார்த்திக கூடஸ்தனை யேற்படுத்தி அந்தக் கூடஸ்தன் நானே என்று அறிய வேண்டும்.

நா—நல்லது ஜீவாத்துமாவுக்கு துக்கம் இயற்கையா? அல்லது ஆகந்துகமா? (வேறெதினாலாவது வந்ததா?)

அ—ஆகந்துகமே. ஆத்மா நித்தியன் என்றும், சுகஸ்வரூபியென்றும், சுருதிகளில் சொல்லியிருப்பதால் இந்தச் சுகஸ்வரூபம் நசித்தாலன்றி துக்கச் சம்பவிக்க இடமில்லை. இந்தச்சுகஸ்வரூபம் நசித்தலென்றால் ஆத்மஸ்வரூபத்துக்கே நாசமுண்டாம்.

நா—அதெப்படி?

அ—வெல்லத்திற்கு தித்திப்புக்குணம் இயற்கை; ஆகவே தித்திப்புகுணம் நாசமடைய வேண்டியதாகில் வெல்லத்திற்கே நாசமுண்டாகும்.

நா—அக்கினிக்கு உஷ்ணம் இயற்கையாக இருக்கினும் மணி மந்திராதிகளினாலே அந்த உஷ்ணத்தை நிவர்த்திக்கக் கூடியதுபோல் இயற்கைக் குணம் கெட்டு ஸ்வரூபம் நசிக்காமலிருக்கக்கூடுமல்லவா? அதுபோலவே ஆத்துமாவின் துக்கமும் பக்தியோகங்களினால் நசிக்கச் செய்யலாமல்லவா?

அ—முடியாது அக்கினியின் இயற்கையான உஷ்ணம் மணிமந்திராதிகளால் குளிர்ச்சியாக்கக்கூடினும், அந்த மணி மந்திராதிகள் நசித்த உடனே அவைகளாலுண்டான குளிர் முதலானதுகள் நீங்கி மறுபடியும் அக்கினிக்கு இயற்கையான உஷ்ணம் வந்துவிடும். அதுபோலவே, ஆத்மாவுக்கு பக்தியோகம் முதலியவைகளால் உண்டாகும் துக்கம், தாத்காலிகமே யொழிய நிரந்தரமாகமாட்டாது.

நா—சுகஸ்வரூபனாகிய ஆத்மாவுக்கு துக்கம் எப்படி வந்தது?

அ—சரீரமடைகிறதனால் வந்தது.

நா—சரீரம் எப்படி அடைந்தது?

அ—பூர்வ கர்மத்துடன் கூடிய பஞ்சீகிருத பூதங்களாலே.

நா—கருமமெத்தனைவகை?

அ—ஆகாமி சஞ்சிதப் பிராரப்தமென மூவகையாம்.

நா—இவைகளின் விவரமெப்படி?

அ—ஆகாமியமானது=இந்தத்தேகமெடுத்தபதினொன்று வயதுமுதல் செய்ததும், சஞ்சிதத்துடன் சேருகிறதுமாம். ஸஞ்சிதமாவது = பூர்வஜன்மங்களில் செய்த கருமங்களில் அனுபவித்ததுபோகமிச்சமானவை; பிராரப்தமெனில்=பூர்வ ஜன்ம கருமங்களில் எந்த கருமத்தின் பலனை இந்த ஜன்மம் வந்ததோ, அந்தத்தேகத்தினால் அநுபவிக்கவேண்டியவையாம்.

நா—இக்கருமங்கள் எப்போது நசிக்கும் ?

அ—ஞானம் வந்தால் ஆகாம்யசஞ்சிதம் நாசமடையும் பிராரப்தம் அநுபவத்தால் தான் நசிக்கும்; ஆகவே எவரும் விதேக முக்தியின்பொருட்டுப் பிரயத்தனம் செய்யவேண்டும்.

நா—விதேகமுக்தியென்றாலென்ன ?

அ—தேகமற்ற முக்தி.

நா—வேறுபல முக்திகள் எவை ?

அ—ஸாலோக்கிய, ஸாமீப்பிய, ஸாரூப்பிய, ஸாயுஜ்ஜியம் என நான்காம்.

நா—இவைகளை அடைவதற்கு வேறு வேறு சாதனங்களுண்டோ ?

அ—ஆம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்குவகைகளுண்டு.

நா—சரியையென்றாலென்ன ?

அ—பகவத் கைங்கிரிய ரூபமான தாச பாவனை.

நா—கிரியை என்றால் என்ன ?

அ—தேவதாபூஜை செய்தல்.

நா—யோகம் என்றாலென்ன ?

அ—யமம், நியம் முதலான அஷ்டாங்கங்களால் பரமாத்துமாவினிடம் ஜீவாத்மா ஐக்கியம். அதாவது பிரமத்துடன் கலந்து பேதமற்றிருத்தல்.

நா—ஞானமென்றாலென்ன ?

அ—பிரம்ம சைதன்னியத்தை எங்குமாய் ஏகமாய் கண்டானந்தித்து ஐக்கியமுற்றிருத்தல். ஆக இந்த நான்கில் முந்திய மூன்றும் மறுபடியும் பூமியில் ஜனனத்தைக்கொடுக்கும். சாயுஜ்ஜியமே முக்கியமான முக்தி.

நா—நல்லது சரீர பரிக்கிரகத்தினால் ஆத்மாவுக்கு துக்கமென்று சொன்னீரே அது எத்தனைவிதம்.

அ—புண்ணியம், பாவம், மிசிரம் என மூன்று விதங்களுண்டு.

நா—விவரமாகச் சொல்லும்.

அ—புண்ணிய கருமத்தினுல் தேவாதிசரீரமும், பாவ கருமத்தினுல் மிருகாதி சரீரமும், புண்ணியபாவ மிசிரகருமத்தினுல் மனுஷ்யாதி சரீரங்கள் உண்டாகின்றன.

நா—இவைகளிலும் வித்தியாசங்களுண்டோ ?

அ—உத்கிருஷ்டம், மத்தியமம், சாமான்யம் எனத்தனித்தனி பேதங்களுண்டு இப்படிச் சொல்லப்பட்ட கருமபந்தத்தினுல் தான் நாஞவித ஜனனபேதமாகிறது. எப்படியெனில் ஹிரண்யகர்ப்பாதி சரீரம் புண்ணியோத்கிருஷ்டம், இந்தியாதிசரீரம் புண்ணிய மத்தியமம், யக்ஷராக்ஷஸ பிசாசம் புண்ணிய சாமானியமாம்.

நா—இந்த மூன்றுவித கரும்ம் எதினுல் செய்யப்படுகின்றது ?

அ—மூன்றுவித கரணங்களினுல்.

ந—அப்படியா ! ஆத்துமாவினுலல்லவா ?

அ—ஆத்துமா அவிகாரி, நிஷ்கிரியன் (அவத்தாபேதம் அவயமற்றவனுகையால் கர்திருத்துவம் கிடையாது.

நா—ஆனுல் ஆத்துமாவுக்கு கருத்திருத்துவம் இருக்கிறதுபோல தோற்றவேண்டியதேன் ?

அ—அத்தியாசிகமே. (ஆரோபிதமே)

நா—ஆரோபிதமென்றுலென்ன ?

அ—ஒன்றின் தருமங்கள் வேறென்றினிடம் காணப்படுதலேயாம். அதாவது ஓடத்தின் ஓட்டம் நதிக்கரையிலிருக்கிற மரங்களின்மேலயும் சலிக்காமலிருக்கும் தன்மையையுடைய மரங்களின் தருமம் ஓடத்திலும் ஆரோபிப்பது போலாம்.

நா—நல்லது மூன்று கரணங்களும் அசேதனமாக இருக்க, அதற்கெப்படி கருத்திருத்துவம் உண்டாகும்?

அ—அசேதனமான ஜலமும் வாயுவும் மரமுதலானது களைவேருடன் பிடுங்கித் தூரத்தில்கொண்டுபோய்ப்போடும் படியான கருத்திருத்துவம் காணப்படுவதுபோல மூன்று வித கரணங்களுக்கும் வேறு கரணங்களன்றியில் கருத்திருத்துவ மிருக்கிறது.

நா—இம்மூன்றுவித கரணங்களினால் செய்யப்படுகிற கருமங்களெவை?

அ—ஸவிசேஷ சிந்தை, நிர்விசேஷ சிந்தை, பரலோக சிந்தை, பக்திஞான வைராக்கியசிந்தை என்றுதிகளே. இவைகளில் மனதினாற் செய்யப்படுகிறவைகள் புண்ணிய கருமங்கள் விஷயசிந்தை அன்னியர்களுக் கபகாரசிந்தை, வேத சாஸ்திர அபிமானசிந்தை, தருமாதருமமில்லையென்கிற சிந்தை இவைபோன்ற புத்தி விகாரங்கள் மனச்சம்பவமான பாவகாரியங்கள், அவிசேஷ நிர்விசேஷ புண்ணிய விஷய சிந்தை முதலான பாபசிந்தையுடன் கலந்து அனுஷ்டிப்பது மிசிரகருமங்களாம். வேதசாஸ்திரப்படி பகவத்சங்கீர்த்தனம் சத்தியம், பரோபகாரவார்த்தை, மிருதுபாஷணம் பூர்வபாஷணம் வாசிக புண்ணிய கருமங்களாம். வேதசாஸ்திர தூஷணை வேததூஷணை, அசத்தியம், கடுஞ்சொல், பொய் சொல்லுதல், பரிகாசம் பேசல் முதலியன வாக்கினால் செய்யப்படும் பாபகருமங்களாம். வேதாத்தியயனம் தேவபூஜை காலங்களில் பரசிந்தை, பரிகாசம் அசத்தியம் முதலானதுகளை அநுஷ்டித்தல் மிசிரபாவகருமங்களாம். இப்படியே பலவித பாபகர்மங்களுமுண்டு. பிரம்மஞான முண்டாயிருந்தாலும் மூன்று கரணங்களையும் புண்ணிய கருமத்திலேயே நிறுத்தவேண்டும்.

நா—மூன்று கரணங்களுக்கும் சுவயமாகவே கருத்திருத்தவ முண்டா?

அ—சுவயமா இல்லை. இராக துவேஷாதிகளால் பிரேரேபிக்கப்படுவதனை லுண்டாகிறது.

நா—இந்த இராகத்துவேஷ விருத்திகளெவை?

அ—இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாச்சரியம், ஈருஷை, அசூயை, டம்பம், தருப்பம், அஹங்காரம், இச்சை, பக்தி, சிரத்தை எனப் பதினாறும்.

நா—இவற்றின் விவரத்தைச் சொல்லும் ?

அ—(1) இராகம்=ஸ்திரீகளிடத்தில் சித்தவிருத்தி.

(2) துவேஷம்=அபகாரம் செய்தவனுக்குப்பிரதிசெய்ய இச்சித்தல்.

(3) காமம்=பூமி வீடுகளைச் சம்பாதிக்க விரும்பல்.

(4) குரோதம்=மேற்படி இச்சைக்கு விரோதமானவரிடம் கோபித்தல்.

(5) லோபம்=பொருளைச்சத்பாத்திரத்தில் செலவழிக்க விரும்பாதிருத்தல்.

(6) மோகம்=பணச்செருக்கால் இன்னது செய்யத்தக்கது இன்னது செய்யத்தகாதது என யோசிக்காமல் மந்தனயிருத்தல்.

(7) மதம் = செல்வச் செருக்கால் தன்னால் செய்யக் கூடாத காரியமில்லையென் றெண்ணுதல்.

(8) மாச்சரியம்=சம்பத்தினால் தனக்குச் சமானமா யிருப்பவனைக் கண்டு பொறாமை கொள்ளல்.

(9) ஈருஷை—பிறருடைய துக்கம் அவரைவிட்டு எம்மிடம் எப்படி வந்ததென் றெண்ணுகிற சித்த விருத்தி.

(10) அசூயை=சுகம் தனக்கேயுள்ளது, மற்றவர்க்கில்லை என்னும் சித்தவிருத்தி.

(11) டம்பம்=ஒரு தருமத்தில் தனக்கு பிரசித்தி அதிகமுண்டாகவேண்டுமென்ற சித்தவிருத்தி.

(12) தருப்பம்=தனக்குச் சமானமானவனில்லை என் றெண்ணுதல்.

(13) அகங்காரம் = சகல விஷயத்திலும் தனக்கு சக்தி உண்டென்றெண்ணல்.

(14) இச்சை=உண்ணல் குடிதல் கருமம் செய்ய விரும்பல்.

(15) பக்தி = குரு, சற்சனர், தேவதைகளிடத்திலும் வேதவாக்கியங்களிலும் பிரீதி.

(16) சிரத்தை=யாகாதி கருமங்களில் விசுவாசம்.

இப்பதினாறில் இச்சையைத் தள்ளுவது அசாத்தியம் பக்தி சிரத்தையாகிய இரண்டையும் அனுஷ்டித்து மற்றப் பதின்மூன்றையும் தள்ளவேண்டும்.

நா—இந்த இராகாதிகள் எதனால் வருகின்றன ?

அ—அபிமானத்தினால் வருகின்றன.

நா—இந்த அபிமானம் எப்படி வருகிறது.

அ—அவிவேகத்தினாலே.

நா—இந்த அவிவேகம் எப்படி உண்டாகிறது ?

அ—தனது சிதாத்ம சுவரூபத்தை அனாதிகாலமாக மறைத்ததும் ஆத்ம ஞானத்தினாலேயே நிவிருத்தியாகத் தக்கதுமாகிய அனாதி அக்ஞானமே.

நா—இந்த அக்ஞானம் எப்படி வந்தது ?

அ—இது அனாதி என்று வேதசாஸ்திரங்களில் சொல்லியிருப்பதால் காரணஞ் சொல்லுவது அசாத்தியம்.

நா—இந்த அக்ஞானத்துக்கு ஆதியில்லாவிடில் அந்தமுமில்லையல்லவா ?

அ—அக்ஞானத்துக்கு ஆதியில்லாவிட்டாலும் அந்தமுண்டு. எப்படியெனில் தருக்க சாஸ்திரப்படி. பிராகபாவத்திற்கு ஆதியில்லை. அந்தமுண்டு. பிரத்துவம்சாபாவத்திற்கு ஆதியுண்டு, அந்தமில்லை.

நா—இதை விவரமாகச் சொல்லுங்கள் ?

அ—குடமுண்டாகிறதற்கு முன் குடம் இல்லை என்கிறதாகிய அபாவம் வெகுகாலமாக இருக்கிறது, குடமில்லையென்கிற அபாவவாக்கியம் எப்போதுண்டாச்சுதென்பது தெரியாவிட்டாலும், குடமுண்டானவுடனே ஆதியில்லை

யென்கிற அபாவவாக்கியத்திற்கு அந்தமுண்டாய்விட்டது. இதுதான் பிராகபாவம். நசிக்கச்செய்கிறதினால் இல்லாமை யுண்டாகிறது, எப்படியென்றால், குடம் உடைக்கப்பட்டவுடன் குடமில்லாமையுண்டாகிறது. உண்டான இல்லாமைக்கு அந்தமில்லை ஆகையால் இதுவே பிரத்துவம்ஸாபவம், ஆகவே வாதபித்தாதிகளாலுண்டான ரோகங்களுக்குக்காரணமின்னதென்று தெரியாவிட்டாலும் மருந்துகளினால் அவைகளுக்குப்பரிகாரம் காணப்படுகிறதைப்போல் அக்ஞானத்துக்குக் காரணம் தெரியாவிட்டாலும் ஞானத்தினால் அது நாசமாகிற தன்மையே.

நா—இந்த அஞ்ஞானத்தின் சுவரூபலக்ஷணம் எப்படிப்பட்டது ?

அ—அது ஸத்துமல்ல, அஸத்துமல்ல, ஸதஸத்துமல்ல அவயவமுள்ளதல்ல, இல்லாததுமல்ல இவ்விரண்டும் சேர்ந்ததுமல்ல, சேராததுமல்ல, இது அநிர்வாச்சியம் (வாக்கினால் சொல்லத்தகுந்த தல்லாதது) ஏனெனில் ஸ்தூலாகாசமே சூக்ஷ்மமானது, அதிலும் சூக்ஷமம் (தன் மாத்திரை என்கிற) அபஞ்சீகிருத ஆகாசம், அதிலும் சூக்ஷ்மம் சத்துவாதி குணங்கள் அவைகளிலும் சூக்ஷ்மம் அஞ்ஞானம்; ஆகவே இத்தியாதி சூக்ஷ்மத்திற்கெல்லாம் மூலகாரணமா யிருக்கிறபடியால் அவயமுள்ளதல்ல. அன்றியும் அதுவே ஸ்தூல பதார்த்தமாகிய ஜகதாகாரமாய்ப் பரிணமிக்கிறதினால் அவயவமில்லாததுமல்ல. இப்படி அநாதியாயுள்ள அஞ்ஞானத்தினால் அவிவேகமும்—அவிவேகத்தினால் அபிமானமும்—அபிமானத்தினால் இராக துவேஷாதிகளும்—அவைகளால் கருமமும்—கருமத்தினால்சரீரமும்—அதினால் ஸம்ஸாரதுக்கமும், ஆத்மாவுக்குப் பரம்பரையாக வருகிறது.

நா—இந்த ஸம்ஸாரதுக்கம் எப்போதுபோம்?

அ—சரீரம்போனால் துக்கம்போம், கருமம் நசித்தால் சரீரம்போம், இராகத்துவேஷாதிகள் நசித்தால் கருமம் போம். அபிமானம் நசித்தால் இராகதுவேஷாதிகள் நசிக்கும், அவிவேகம் நசித்தால் அபிமானம்போம். அக்ஞானம்

நசித்தால் அவிவேகம் போம். அக்ஞானமோவெனில் அத்துவைத பிரம்மஸ்வரூப ஆத்மாவாகிய தன்னைப் பிரம்மமே நான், நானே பிரம்மம் என்ற ஞானத்தினால் நசித்துப் போம், அதாவது இருளும் வெளிச்சமும்போல இவைகளில் ஒன்றிருந்தால்மற்றொன்று இருக்கமாட்டாததுபோல ஞானமுண்டானவிடத்து அக்ஞானம் இருக்கமாட்டாது.

நா—கருமமானது மூன்றுவித கரணங்களாலுண்டாகிறதென்று சொன்னீர், ஞானமும் அந்தக்கரணத்தினாலுண்டாகி விருத்தியானபடியால் அதுவும் கருமமேயாகிறதல்லவா? ஆகவே அதெப்படி அக்ஞானத்தை நசிக்கச் செய்யும்!

அ—விருத்தி என்பது மனதிலிருந்துண்டான கருமமேயாம். அந்த விருத்தியானது ரூபத்தை அறிகின்ற விஷயத்தில் கண்களைப்போல, ஞானத்திற்கு ஒரு சாதனமாயிருந்து அக்ஞானத்தை நிவர்த்திக்கிறது, ஞானம் நித்தியமானது.

நா—இந்த ஞானம் எத்தனை வகைப்படும்?

அ—ஸ்வரூபஞானம், விருத்தி ஞானம் என இருவகைப்படும். சுவரூபஞானமென்றால் ஸுஷுப்தியில் அக்ஞானத்தை பிரகாசிப்பிக்கிறதாம், ஜாக்கிர சுவப்நங்களில விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிறது விருத்தி ஞானம்; ஞானம்—ஆத்மஸ்வரூபம், அந்த ஸ்வரூபமாயிருக்கிற ஞானமானது விருத்திகளில் பிரவேசித்து அக்ஞானத்தை நசிக்கச் செய்கிறது.

நா—அதெப்படி? உதாரணத்தோடு காட்டும்?

அ—தேற்றாங்கொட்டை நியாயப்படி:—அதாவது தேற்றாங்கொட்டையானது தண்ணீரிலுள்ள அழுக்கைப் போக்கி, அவ்வழுக்குடன் அதுவும் அடியில்தங்கிவிடுவதுபோல விருத்திஞானமும் அக்ஞானத்தையும் அதன் காரியத்தையும் நசிக்கச்செய்துகொண்டு தானும் தானாகவே நசித்துப் போகிறது. இப்படி விருத்திநாசமானால் அதில் பிரதிபலித்த ஞானமும் தனக்குப்பிம்பமான சுவரூபஞானத்தையடையும்.

பிறகு அத்துவைதமாகிய ஆத்தும ஸ்வரூபம் மட்டுமே மிஞ்சும். இப்படிப்பட்ட ஞானமானது ஆத்மனாத்மா விசாரத்தினாலே யுண்டாகிறது.

நா—ஆத்மா யார் ?

அ—மூன்று சரீரங்களுக்கு விலக்ஷணனாகியும் மூன்றவஸ்தைகளுக்கும் சாக்ஷியாகியும் பஞ்சகோசங்களுக்கு அந்நியனாகியும் உள்ள சச்சிதாநந்த லக்ஷணமே.

நா—அனாத்துமா யார் ?

அ—மூன்று சரீரங்களும உடையவன்.

நா—விவரமாகச் சொல்லும் ?

அ—ஸமஷ்டிஸ் தூலசரீரம், ஸமஷ்டி சூக்ஷ்மசரீரம், ஸமஷ்டி காரணசரீரம் என்றும் வியஷ்டி ஸ்தூலசரீரம், வியஷ்டி சூக்ஷ்மசரீரம் வியஷ்டி காரணசரீரமென மூன்று சரீரங்களும் ஸமஷ்டிவியஷ்டியினால் ஆறுவிதமாக இருக்கிறான்.

நா—ஆத்துமாவுக்கு ஈசுவரத்துவமும், ஜீவத்வமும் வாஸ்தவமோ ?

அ—வாஸ்தவமல்ல. ஸமஷ்டி உபாதியினால்ஈசுவரத்துவமும் வியஷ்டி உபாதியினால் ஜீவத்துவமுமே, மாயோபாதியினால் ஈசுவரத்துவமும், அவித்தியோபாதியினால் ஜீவத்துவமுமேயன்றி வாஸ்தவமல்ல. ஆத்மாவானவன் மாயையாகவும் அவித்தையாகவும் தானேயாகி ஜீவேசுவரர்களாகச்செய்துகொள்ளுகிறான். ஈசுவரனுக்கு ஸமஷ்டிகாரண சரீரத்தில் அபிமானமில்லை.

நா—ஏனில்லை ?

அ—அஹங்காரம் மஹா ஸுஷுப்தியில் நசித்துப்போவதினால்.

நா—இந்த ஸமஷ்டி காரணோபாதிகரான ஈசுவரனுக்கு என்ன பெயர்கள் ?

அ—அவ்வியாகிருதன், அந்தரியாமி என்பவையே.

நா—ஸமஷ்டி சூக்ஷ்மசரீரோபாதிகரான ஈசுவரனுக்கு என்னபெயர்கள் ?

அ—ஹிரண்ணியகர்ப்பன், சூத்திராத்துமா, மஹாப்பிராணன் என்பவைகளாம்.

நா—ஸமஷ்டி ஸ்தூலோபாதிகனுன ஈசுவரன் பெயர்களெவை?

அ—விராட்டு, வைராஜன், வைசுவானரன், என்பவைகளாம்.

நா—பரமாத்துமாவுக்கு மூன்று சரீர உபாதியினுல் ஈசுவரத்துவம் சித்தியான விதம் சொன்னீர்; இனி பரமாத்துமாவுக்கு வியஷ்டியாகிற மூன்று சரீரத்திஞல் ஜீவத்துவம் சித்தியாகிறதெப்படி?

அ—வியஷ்டி காரணசரீரத்துடன் கலந்திருக்கிற பரமாத்துமாவுக்கு, பிராக்ஞன் — பாரமார்த்திகன்—அவித்தியாவச்சின்னர் என்றும், வியஷ்டி சூக்ஷ்மசரீரத்தோடுசேர்ந்திருக்கிற பரமாத்துமாவுக்கு தைஜசன்—சுவப்பனகற்பிதன்—பிராதிபாஸிகன் என்றும், வியஷ்டி ஸ்தூலசரீரத்தோடு சேர்ந்திருக்கிற பரமாத்துமாவுக்கு—விசுவன்—வியவகாரிகன்—சிதாபாஸன் என்றும் சொல்லப்படும்.

நா—இந்த ஜீவனுக்கு இம்மூன்றுதேகங்களால் என்ன பிரயோஜனம்?

அ—அந்தக் காரண பிரதிபிம்பன் ஜீவன்: ஆகவே, ஜீவனுக்கு சூக்ஷ்மசரீரம் அவசியம். பிறகு கருமம் செய்ய ஸ்தூலம் அவசியம், இக்காரிய சரீரங்களுக்குக் காரண சரீரமும் அவசியம்.

நா—இப்படி மூன்று சரீரமுடைய ஜீவனுக்குஅபிமானமுண்டோ?

அ—உண்டு, அபிமானமில்லாவிட்டால் கருமம், கருத்திருத்துவம் பொருந்தாது.

நா—ஆத்துமாவுக்கே அவித்தை மாயா உபாதிகளினுலே ஜீவேசுவரத்துவம் விளங்குவதற்கு உதாரணம்காட்டும்?

அ—ஒரே அக்கினியானது பெரிய பந்தத்திலிருந்து கொண்டு விஸ்தாரமான விடங்களுக்கு வெளிச்சத்தைத் தரு

வதும்; அதுவே, அற்பமான ஒரு சிறிய திரியிலிருந்துகொண்டு ஒரு வீட்டுக்கு மட்டும் வெளிச்சத்தைத் தருவதைப் போல, ஆத்மாவுக்கும் மாயோபாதியாகிய பெரிய காரணத்தினால் சர்வக்ஞத்துவமும்; அவித்தையாகிய அற்ப காரியோபாதியினால் கிஞ்சிக்ஞத்துவமும் வந்தன. இதனால், சர்வக்ஞாத்மா கிஞ்சிக்ஞாத்மா என இரண்டாத்துமா இல்லை.

நா—இதைப்பற்றி வேதசாஸ்திரங்களில் என்ன போதிக்கப்படுகின்றது.

அ—தத் பதத்திற்கும் துவம் பதத்திற்கும் சம்பந்தத்திரயத்தினால் அகண்டத்துவத்தை போதிக்கப்படுகின்றது.

நா—சம்பந்தத்திரயமெவை?

அ—இரண்டு வாக்கியங்களுக்கு ஸாமானாதி கரண்ய சம்பந்தம், இரண்டு பதார்த்தங்களுக்கும் விசேஷண விசேஷிய பாவசம்பந்தம், இரண்டு பதங்களுடனாவது பதார்த்தங்களுடனாவது, பிரத்தியகாத்துமாவுக்கு லக்ஷிய லக்ஷண சம்பந்தமென மூன்றுவிதம்.

நா—இவைகளைத்திருஷ்டாந்தங்களால்விவரப்படுத்தும்?

அ—'அந்த' 'இந்த' தேவதத்தன் என்றால், அந்த இந்த பதங்களுக்கு தேவதத்தன் பிண்டமே ஸமானாதி கரணம் அதாவது அந்த தேவதத்தன்தான் இவன் என்று சொன்னதாக ஆயிற்று. இந்த தேவதத்தனிருக்கும் தேசம் காலத்தை யனுசரித்த விசேஷண விசேஷிய பாவசம்பந்தமாகிறது. அன்றியும், அவன் இவன் என்ற பதங்களுக்காவது, அவைகளின் அர்த்தங்களுக்காவது அகண்டார்த்தமாகிய தேவதத்த பிண்டமாத்திரத்தை எடுத்துக்கொள்வதனால் விரோதாம்சத்தைத் தள்ளி விரோதமில்லாத தேவதத்தன் என்கிறது மாத்திரமான லக்ஷியத்தினாலே லக்ஷிய லக்ஷணபாவ சம்பந்தமிருக்கிறது.

நா—இந்த லக்ஷணம் எத்தனை வகைப்படும்?

அ—பாக தியாக லக்ஷணம் என்றும் ஜகதஜகல்லக்ஷணமென்றும் இருவகைப்படும்.

நா—அதெப்படி?

அ—சாஸ்திரங்களில் வாக்கியத்தினுடைய அர்த்தத்தை க்கிரஹிக்கிற விஷயத்தில் முக்கியவிருத்தி, குணவிருத்திலக்ஷணாவிருத்திகளென மூவகையுண்டு.

நா—இந்த முக்கியவிருத்தி, குணவிருத்தியை உதாரணங்களுடன் விவரப்படுத்தும்?

அ—இரத கஜ துரக பதாதிகள் போவதைப் பார்த்து இராஜா போகிறான் என்று சொல்லுவது முக்கியவிருத்தி. நீலோத்பலம், என்றால் நீலபுஷ்பமென்றது குணவிருத்தியாம்.

நா—இலக்ஷணாவிருத்தி யென்றாலென்ன? அது எத்தனை வகை? உதாரணங்களுடன் தெரிவியுங்கள்.

அ—ஜஹல்=(விட்ட) லக்ஷணை. அஜஹல்=(விடாத)லக்ஷணை ஜஹதஜஹல்=(விட்டும் விடாத)லக்ஷணை என மூவகையாம். இவைகளில் விட்டலக்ஷணையெனில் சொன்ன வார்த்தையின் வாஸ்தவமான அருத்தத்தைவிட்டு, வேறே அருத்தத்தை கிரஹிப்பது. அதாவது கங்கையில் கோஷம்(இடைச்சேரி)இருக்கிறதெனில், பிரவாகத்தோடுகூடக்கரையிலிருந்த இடைச்சேரியைக் கிரஹிக்கவேண்டியதுபோலாம். விடாதலக்ஷணையாவது=செவப்புக்குதிரையும், வெள்ளைப்பசுவும் ஓடுகின்றனவா? என்று கேட்குங்கால், சிவப்பு ஓடுகிறது என்றால், சிவப்புக்குதிரை யோடுகின்றது என்று கிரஹிக்கவேண்டியது. விட்டும் விடாத லக்ஷணையாவது= அந்த இந்த தேவதத்தன் என்றால் ஒருகால் காசியில்கண்ட தேவதத்தனை கொஞ்சகாலத்திற்குப் பிந்திக் காஞ்சியில் கண்டேனெனில், அந்தக்காலதேசம் இந்தக் காலதேசத்தோடு சமப்படுத்துவதசாத்தியமென்று கிரஹித்தலாம்.

நா—நல்லது தத்துவம் என்ற இரண்டு பதங்களில் வாச்சியார்த்தமெது? லக்ஷியார்த்தமெது?

அ—மாயை, மாயாபிரதிபிம்பன் மாயைக்கிருப்பிடமாகிய பிரம்மம் இம்மூன்றும் சேர்ந்ததே தத்பதத்திற்கு வாச்சியார்த்தம், பிரமம் மாத்திரம் தத்பதத்திற்கு லக்ஷியார்த்தம்.

நா—துவம்பத வாச்சியார்த்தமெது?

அ—அவித்தை, அவித்தியாபிரதிபிம்பன், அவித்தைக் கிருப்பிடமான சாக்ஷி சைதனியம் இம்மூன்றும் சேர்ந்து துவம்பத வாச்சியார்த்தம். சாக்ஷி கூடஸ்த சைதன்னியமாத் திரம் துவம்பதத்திற்கு லக்ஷியார்த்தம் ஆகவே தத்துவம் பதவாக்கியார்த்தத்தைக் கிரஹிப்பதில் வாச்சியார்த்தமானது ஜீவேசுவரர்களுக்கு விரோதமானபடியால், அவர்களுக்குள்ள விருத்தாம்சத்தை த்தள்ளி அவிருத்தாம்சமான பிரம்மசைதனியமும் கூடஸ்த சைதனியமும் ஒன்றானபடியினால் பிரம்மம் கூடஸ்தன் இவர்களை லக்ஷியமாகச்செய்து அகண்டார்த்தமாகிய ஐக்கியமே, அதாவது மாயை அவித்தை இந்த உபாதியைத் தள்ளுவதினால் சச்சிதானந்த சுவபாவ ஆத்ம வஸ்து ஒன்றே மிஞ்சும்.

நா—பரமாத்துமா முன்சொன்ன சரீரத்திரய லக்ஷணனென்றும், அவஸ்தாத்திரய ஸாக்ஷி என்றும், பஞ்சகோச வியதிரிக்தனென்றும், சச்சிதானந்த ஸ்வரூபனென்றும் நான் குவித லக்ஷணம் சொல்லுவானேன்? அவற்றின் விவரம் எப்படி?

அ—சரீரத்திரய விலக்ஷணமும், பஞ்சகோசவியதிரிக்தத்துவமுமே, அதத்வியாவிருத்தி லக்ஷணம், அவஸ்தாத்திரய சாக்ஷித்வம் தடஸ்தலக்ஷணம். சச்சிதானந்தம் சுவரூப லக்ஷணம்.

நா—அதத்வியாவிருத்தி லக்ஷண மென்றாலென்ன?

அ—ஆகாசம் முதல் சரீரம் வரையில் காணப்படுகிற வஸ்துக்களை இதல்ல இதல்லவென்று தள்ளி மிஞ்சினவஸ்து எதுவோ அதுவே ஆத்மா.

நா—ஆத்மவஸ்து எது?

அ—இந்தப்பிரபஞ்சத்துக்குஇருப்பிடமாயிருப்பதெதுவோ அதுவே.

நா—சுவரூபலக்ஷணமெது?

அ—தடஸ்தலக்ஷணம் சச்சிதானந்தம் பூரணம், நித்தியம் ஆத்மவஸ்துவே.

நா—சரீரத்திரயமெவை?

அ—ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமென்பவையே.

நா—ஸ்தூலதேகமெது?

அ—எல்லோருக்கும் பிரத்தியக்ஷமாயும் அவயவங்களோடும் கூடியதாயுமிருப்பது.

நா—சூக்ஷ்மதேகமெது?

அ—பதினேழு அவயவங்கள் கூடியதே.

நா—காரணசரீரமெது ?

அ—அக்ஞானமே.

நா—சரீரமென்றாலென்னே?

அ—நசிக்கிற வஸ்துக்களே.

நா—ஸ்தூலசரீரம் அன்னபானுதிகள் இல்லாவிட்டாலும், வியாதி முதுமையாதிகளினாலும் நசிக்கும், சூக்ஷ்மசரீரம், காரணசரீரம் எப்படி நசிக்கும்?

அ—சூக்ஷ்மதேகத்திற்கு இராகத்துவேஷாதி அந்தக்கரண விருத்தியினால் விரிதலும், அல்லது வளர்தலும், சுருங்குதலுமுண்டு. இப்படிச் சுருங்குதலே நசித்தல். காரண சரீரத்திற்கு "நான் ஜீவன்" என்கிறதே விருத்தி நானே பிரமமாயிருக்கிறேன் என்பது சுருங்கல். அதுவே நசித்தலாம்.

நா—சரீரம் என்ற பெயருக்கு இப்படிப் பொருள் செய்தீர். சிலர் இதை தேகம் என்கிறார்களே அதற்கெப்படி சமாதானம்?

அ—தகிக்க (எரிக்க)ப்படுகிற தெதுவோ அதுவே தேகம் என்று சொல்லிலக்கணத்தில் காணலாம்.

நா—அப்படியானல் ஸ்தூலதேகத்தை அக்கினி எரிப்பது பிரத்தியக்ஷம். சூக்ஷ்மகாரண தேகங்களை எப்படி அக்கினியினால் எரிக்கக்கூடும்?

அ—தாபத்திரயம் என்னும் (எரிச்சலினால்).

நா—தாபத்திரயமென்றாலென்ன?

அ—மூன்றுவிதம்

நா—அம்மூன்றும் எவை? விவரப்படுத்தும்.

அ—அத்யாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம்; இவைகளில் அத்தியாத்மிகம் ஜ்வரம் தலைவலி முதலியன. ஆதிதெய்விகம் தெய்வச்செயலா லுண்டாகும் இடிபுசல் முதலானவைகள், ஆதிபௌதிகம் புலி முதலானவைகளால் உண்டாகும்துன்பங்கள். தாபமும் எரிச்சலும் துன்பத்திலுண்டு.

நா—சூக்ஷ்மதேகத்திற் பதினேழு அவயவங்கள் கூடியுள்ளதென்று முன் சொன்னீரே அந்த விவரமெப்படி?

அ—காது துவக்கு கண் நாக்கு மூக்கு கூடிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், சப்தம், ஸ்பரிசம், ரசம், ரூபம், கந்தம் ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும், பிராணன்களைந்தும், மனம் புத்தியென்பவைகள் இரண்டுமாகப் பதினேழும் கூடியதே சூக்ஷ்மசரீரம்.

ந—நல்லது சத்து தானாகவே விளங்குகிறதா அல்லது மற்றொன்றினால் விளங்குகிறதா?

அ—சத்தே சித்தாகும், சத்தேசித்து, சித்தேசத்து, அது தானாகவே விளங்குகிறது.

ந—தானாக விளங்கிற சத்துக்கு ஆனந்தத்துவ மெப்படி ஐயா?

அ—சத்துக்கிரண்டாவது வஸ்து இல்லாததினால் ஆநந்தத்துவம் பூரணமாக இருக்கிறது. ஆகவே ஒன்றான சத்துக்கு இரண்டாவதில்லாததனால் அத்துவைதத்துவமும் அதினால் பூரணத்துவமும் சித்தம். இப்படிப்பட்ட பரிபூரணானந்த ஆத்துமாவுக்கு துக்கம் ஆகந்துகம்; அந்தத் துக்கம் சரீரத்தினாலும், சரீரம் கருமத்தினாலும், கருமம் இராகத் துவேஷாதிகளினாலும், ராகாதிகள் அபிமானத்தினாலும், அபிமானம் அவிவேகத்தினாலும், அவிவேகம் அக்ஞானத்தினாலும் வந்ததென்று அறிந்து அந்த அக்ஞானத்தை ஞானத்தினால் நிவர்த்தியாக்கவேண்டும். அந்த ஞானமே விசாரத்தினாலுண்டாகிறதென்றும் ஆத்மா சச்சிதானந்த ஸ்வரூபமே

ன்றும் தேகாதிபிரபஞ்சம் அந்த ஜடதுக்கரூபமான தென்றும், இந்தப் பிரபஞ்சமானது அத்தியாரோபமென்றும் விசாரித்து தத்துவம் பதவாக்கியார்த்தத்தினு லுண்டாகும் ஞானத்தினுல் "நானே பிரம்மம்" என்கிற என்னுடைய பரோக்ஷஞானுனுபவத்தினுல் சாக்ஷாத்காரமாகிற அபரோக்ஷ ஞானமெதுவோ அதை அடைகிறவனே பரம குருவு எனவும் பரமஹம்ஸனெனவும் சொல்லப்படுகிறுன், ஆகவே அனைவரும் ஆத்ம தத்துவத்தைக் கேட்டு மனனம் செய்து. தியானித்து சாக்ஷாத்காரம் செய்துகொண்டு நித்திய சுத்த புத்த முக்த சத்திய பரமானந்த அத்துவய பிரம்மஸ்வரூபமாய் இருக்க பிரயத்தனஞ் செய்யவேண்டும்.

இந்த அத்துவைத சித்தாந்தத்தை விவரமாக அறிய விரும்புவோர்—பிரம்ம சூத்திரங்கள். பகவத்கீதை, ஞான வாசிஷ்டம், கைவல்லியம் விவேகசூளாமணி, சீதாராமாஞ்சனேய சம்வாதம், ராமஸ்தவராஜம், வேதாந்தசாரசங்கிரகம், நிஷ்டானுபூதி முதலான கிரந்தங்களைப் பரிசோதிக்க வேண்டும்.

What does the Advaitist declare?

"He says, if there is a God, that God must be both the material and the efficient cause of the universe. Not only is He the Creator, but He is also the created. He Himself is this Universe. How can that be? God, the pure, the spirit, has become this universe? Yes; apparently. That which all ignorant people see, this universe, does not exist. You and I and all these things we see, what are these? Mere self-hypnotisms; there is but One Existence, the infinite, the ever-existing One. In that Existence we dream all these various dreams. It is the *Atman* beyond all, the Infinite, beyond the known, beyond the knowable; in and through That we see this universe. It is the only Reality. It it the wall. It is every

thing, minus the name and form. Take the form of the table, take away the name; what remains is that It. The Vedantist does not call It either He or She; these are fictions, delusions of the human-brain, there is no sex in the soul. People who are under illusion, who have become like animals, see a woman or a man; living gods do not see men or women. How can they who are beyond everything have any sex idea? Every one and everything is the *Atman*—the Self—the sexless, the pure, the ever blessed. It is name and form that makes the difference. It is the name, the form, the body, which are material, and they make all this difference. If you take off these two differences of name and form, the whole universe is One; there are no two, no three, but One everywhere. You and I are one. There is neither nature, nor God, nor the universe, only that One Infinite Existence, out of which, through name and form, all these are manufactured. How to know the knower? It cannot be known. How can you see your own Self? You can only reflect yourself. So all this universe is the reflection of that One Eternal Being, the *Atman* and, as the reflection falls upon good or bad reflectors, good or bad images are cast up. So, in the murderer, the reflector is bad and not the Self.

In the saint the reflector is pure. The Self—the *Atman*—is by its own nature pure. It is the same that is reflecting itself from the lowest worm to the Universe. The whole of this Universe is One Unity, One Existence physically, mentally, morally and spiritually. We are looking upon this One Existence in different forms and creating all these images upon it:

To the being who has limited himself to the condition of man, this world is what he sees. To the being who is on a higher plane of existence it may become like heaven. There is but one Soul in the Universe, not two. It neither comes nor goes, it neither reincarnates nor dies, nor is born. How can it? How to die? Where to go? all these heavens and all these earths and all these places are vain imaginations of the mind. They do not exist; never existed in the past and never will exist in the future.

I am standing here, omnipresent, eternal. Where can *I* go? Where am *I* not already? *I* am reading this book of nature. Page after page *I* am finishing and turning over; and one dream of life goes away; another page of life is turned over; another dream of life comes, and it goes away, rolling and rolling, and when *I* have finished my play, *I* let it go and stand aside, throw away the book, and the whole thing is finished. What does the Advaitist preach? He dethrones all the Gods that ever existed, or ever will exist in the Universe and places on that throne the Self of man, the *Atman*, higher than the sun and moon, higher than the heavens, more infinite than this infinite Universe itself. No books, no Scriptures, no science can ever imagine the glory of that Self, that appears as man, the most glorious God that ever was, the only God that ever existed, ever exists, or ever will exist *I* am to worship, therefore, none but my Self. "*I* worship my Self." says the Advaitist. Whom to bow down to? *I* salute my Self. Whom to go to for help? Who can help me, the infinite being of the Universe.

These are fools, dreams, brain hallucinations, who ever helped any one? Never. Wherever you see

a weak man, a dualist, weeping and wailing for help from somewhere above the skies, it is because he does not know that the skies also are in him. He wants help from the skies, and the help comes; we see that it comes; but it comes from within, and he mistakes it as coming from without. Sometimes a sick man is lying on his bed, and he hears a tap on the door. He gets up and opens the door. Nobody. He goes back to his bed, and again he hears the tap. He gets up and opens the door. Nobody. At last he finds that it was his own heart beating, which he interpreted as a knock at the door. Thus all this vain search after the Gods above, Gods of the skies, Gods of the water, after it has completed the circle, comes back to the point from which it started—the human soul—and man finds that the God for whom he was searching in every hill and dale, for whom he was seeking in every little brook of water, in every temple, in little churches, in worse heavens that God whom he was ever imagining as sitting in heaven, and ruling the world, is his own Self. *I* am He, and he is I. None but *I* was the God, and this little I never existed.

Yet, how could that perfect God have been in this delusion? It never was. How could a Perfect God have been dreaming? He never dreamed. Truth never dreams. One cloud is there; another comes and pushes it aside and takes its pleace. Another comes and pushes that one out. The very question where did this illusion arise is absurd. Illusion arises from illusion alone. There will be no illusion as soon as the truth is seen. Illusion always rests upon

illusion; it never rested upon God, the truth, the *Atman*, You are never in the illusion; it is illusion that is in you, before the eternal blue sky clouds of various hue and color come; they remain there for a short time and again disappear, leaving it the same blue, eternally standing, even so are you, eternally pure, eternally perfect, you are the veritable Gods of the Universe, nay, there are not two, there is but One." *I*t is a mistake to say you and *I*; say "H" *It* is *I* who am working in an infinite number of hands how can *I* be inactive? *It* is *I* who am living the life of the whole Universe; where is death for me? *I* am beyond all life, beyond all death. Where to seek for freedom, for *I* am free by my nature? Who can make me bound, the God of this Universe? What are these books for me? These Scriptures of the world are but little maps, wanting to delineate my glory, who am the only existence of the universe. Thus says the Advaitist." *The Awakened India*, by Swami Vivekanada, Page 48.

## விசிஷ்டாத்வைத சித்தாந்தம்.

இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தைபாரதவருஷத்தில் பிரபலமாக்கினவர் ஸ்ரீ இராமநுஜாசாரியார். இவர் கி-பி 1017-ஞூம் அல்லது கலியுகாப்தம் 4118-க்கு பிங்கள-ஞூ சித்திரை-மீ சென்னைக்கு 26-மயில் தூரத்திலிருக்கும் ஸ்ரீ பெரும்பூதூரில் பிறந்தவர். இவர் தந்தையார் கேசவஸோமயாஜி, யஜுர்வேதி, ஆபஸ்தம்ப சூத்திரதத்தைச் சார்ந்தவர். இவர் தாயார், காந்திமதிதேவியார். இவர் தனது பதினைந்து வருஷம் வரையில் தம் வீட்டிலேயே வேதவேதாந்தங்களை வாசித்துக்கொண்டிருந்தும், பிறகு காஞ்சிபுரத்துக்குப்போய் யாதவபிரகாசமிசராரிடம் தத்துவ சாஸ்திரங்களை வாசித்து அவரது ஸ்வரூப அத்துவைத சித்தாந்தம்

தமக்கு சம்மதிகொடாமையால் அவரைவிட்டு (1) பகவத் போதாயனர், (2) திரமிடாசாரியார், (3) டங்காசாரியார் அல்லது பிரம்மாநந்தி, (4) குஹதேவாசாரியார் (5) ஆசாரியபாருசி, (6) ஆசாரியகபர்த்தி (7) ஸ்ரீ நாதமுனிகள், (8) (9) யாமுனாசாரியார் முதலானவர்களுடைய விசிஷ்டாத்துவைதசித்தாந்தத்தில்பற்றுள்ளவராகி அப்போது ஸ்ரீரங்கத்திலிருந்த யாமுனாசாரியரை நாடிவர; அங்கு வந்து சேருவதற்குள் அவர் பரமபதத்திற்கு எழுந்தருளவே, அவருடைய முக்கிய சிஷியராகிய மஹா பூர்ணாசாரிய ரென்னும் பெரியநம்பிகளை ஆச்ரயித்து விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தைத் தெள்ளத் தெளியக் கற்றுக்கொண்டார். இவர் முதலில் இல்லறத்தில் இருந்தாலும் தம் பதினெட்டாம் வயதில் அதைவிட்டு சந்நியாச ஆசிரமத்தில் புகுந்து உலகத்தாருக்கு இந்தவிசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் போதித்து தமது 120-வதுவயதில் பரமபதமடைந்தார். இவரியற்றியபிரம்மசூத்திரத்தின் (1) ஸ்ரீ பாஷியம், (2) வேதந்ததீபம். (3) வேதாந்தசாரம், (4) வேதார்த்தசங்கிரகம், (5) கீதாபாஷியம் (6) கத்தியத்திரயம், (7) நித்யகிரந்தம் என்பவை. இவை ஆழ்ந்த கருத்துகளுள்ளதத்துவசாஸ்திரங்கள். இந்தவிசிஷ்டாத்துவைதசித்தாந்தத்தைப் பலர் பல பெரிய கிரந்தங்களாக எழுதி இருக்கின்றனர். சாதாரண வாலிபர்களும் சுலுவில் அறிந்துய்யுமாறு இங்கு சங்கிரகமாகவும் வினவிடையாகவும் பதிப்பிக்கின்றனம்.

நாம் (ஒரு விசிஷ்டாத்துவைதியைப் பார்த்து)
ஐயா—விசிஷ்டாத்துவைத மென்றாலென்ன?
(என்றுகேட்டால் அவர் சொல்லும் விடையாவது)

வி—அது விசிஷ்ட+அத்துவைதம் என்ற இரண்டு பதங்களால் ஆகிய வார்த்தை; அத்துவைதம் எனில்; இரண்டற்றது=ஒன்றேயுள்ளது, விசிஷ்டமெனில்=சித்து, அசித்து இவைகளைச்சரீரமாகக்கொண்டிருக்கறதென்னும் விசேஷணத்தைக் காட்டுவதாம்; விசிஷ்டாத்துவைதமெனில், சித்து—அசித்து சேர்க்கையினால் பிரகாசிக்கும் இரண்டற்ற ஒன்றான பரபிரமம் உண்டென்று ஸ்தாபிக்கும் சித்தாந்தமேயாம்.

நாம்—இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தின் முக்கிய கருத்தென்ன?

வி—பரப்பிரமம் ஒருவரே நித்தியமாக இருக்கிறார் என்பதாம்.

ந—அவர் எப்படிப்பட்டவர்?

வி—அவர் நித்தியமாயும், சத்தியமாயும், ஞானமாயும், ஆநந்தமாயும், விபுவாயும்: சர்வஞ்யராயும், சர்வ சக்தியுடையவராயும் பிரபஞ்சத்தின் உபாதான காரணராயும், ஸஹகாரி காரணராயும் இருக்கிறார்.

ந—அவருடைய நாமங்கள் எவை?

வி—வேதங்களில் அவரை சத்து என்றும், ஆத்துமா என்றும், பிரம்மம் என்றும், ஈசுவரர் என்றும், விஷ்ணுவென்றும் நாராயணரென்றும், வசுதேவரென்றும் புருஷோத்தமரென்றும் பின்னும் பல பெயர்களாலும் புகழப்பட்டிருக்கின்றன.

ந—அவர் எப்படிப்பட்டவர்?

வி—அவர் (சித்து)=ஆத்துமா(அசித்து)=அனாத்துமா என்னும் நித்தியப்பொருள்களோடு சதா சேர்ந்திருக்கிறார் இந்தச்சேர்க்கையினால் மாத்திரம் அறியக்கூடியவராக இருக்கினும்; அவர் பிரகிருதி ஸ்வரூபியல்லர், அவர் சித்து, அசித்துக்களுக்கு வேறாகவும், ஞானாத்மகமாகவும் இருக்கிறார்.

ந—பரமாத்துமா ஒருவரே நித்தியமானவரென்று முன் சொன்னீரல்லவா? இப்போது சித்தும், அசித்தும் நித்தியப் பொருள்களென்று சொல்லுகிறீரே, இது எப்படி சாத்தியமாகும்?

வி—பரமாத்துமா ஒருவரே நித்தியரும், சுதந்தரமுமுடையவர்; மற்ற சித்தும், அசித்தும் பரதந்திரமுடையவை. இந்தச் சித்தும், அசித்தும், பரப்பிரம்மமுமாகிய மூன்றும் தனித்தனி யானவைகளாக இராமல், ஒரு பதார்த்தமும் அதன் குணங்களும் கலந்திருப்பதைப்போல; அதாவது—ஒரு கடிதத்தில் அதன் வடிவமும் வருணமும் சேர்ந்திருப்

பதைப்போல பரமாத்மா சித்து அசித்தோடு சேர்ந்து இருக்கிறார்.

ந—இம்மூன்றின் சம்பந்தத்தைப்பற்றி வேதங்களில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது?

வி—பரபிரம்மமாகிய சாரீரிக்கு, சித்தும் அசித்தும் சரீரமாக இருக்கிறதென்றும்; சரீரி இல்லாமல் சரீரமும்: சரீரம் இல்லாமல் சரீரியும் இருத்தல் அசம்பாவிதமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது,

ந—உபநிஷத்துக்களில் சரீரத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறதற்கு இதுதானா பொருள்?

வி—உபநிஷத்துக்களில் சரீரம் என்னும் பதத்தை மானுஷீக சரீரத்தைப் போன்றவைகளைப்பற்றிச் சொன்னதல்ல; சரீரியின் லிலக்ஷணத்தைப்பற்றியே சொல்லப்பட்டிருக்கின்றது. சாரீரமென்றால்=அபிரதக் சித்தமென்றும், அது சேர்க்கையினால் அபிரதக் சித்தியென்றும்; அதாவது எக்காலமும பிரிக்கக்கூடாமலும்; சதாகாலமும் சேர்ந்திருப்பதால், சித்து, அசித்து ஈசுவரன் என்பவைகள் எப்போதும் பிரிக்கக்கூடாதபடி சேர்ந்திருக்கிறதென்பது கருத்து.

ந—இந்த மூன்றுக்குள் பேதாபேதங்களுண்டோ?

வி—அவுபாதிக மாயாகிருத வித்தியாசங்கள் தவிர வேறு வித்தியாசங்கள் இல்லை, சித்து, அசித்து,ஈசுவரனாகிய மூன்றும் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பது சத்தியம்;அந்த சம்பந்தத்தினால் தான் பிரம்மத்தை அறியக்கூடும், இதை ஏகத்துவமென்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது, இந்தச்சித்து, அசித்து ஆகிய இரண்டுக்கும் இடையில் ஈசுவரன் நடுநாயகமாக இருந்து பிரகாசிக்கின்றார்,

ந—இந்த சித்தாந்தம் அத்துவைத சித்தாந்தத்தை ஸ்தாபிக்கிற உபநிஷத்துக்களுக்கு விரோதமா யிருக்கிறதல்லவா?

வி—இல்லை, அசித்து சித்து, ஈசுவரருண்டென்னும் சித்தாந்தத்தையும், இந்த அசித்து, சித்தும் பரபிரம்மத்துக்கு

சாரீரமாக இருக்கிறதென்று ஸ்தாபிக்கிற உபநிஷத்துக்களும் இருக்கின்றன; ஆகவே, உபநிஷத்துகளில் ஒன்றுக்கொன்று வியதிரேகமான வாக்கியங்கள் இருப்பன பிரத்தியக்ஷம், அசித்தும் சித்தும் சேர்க்கையே பரபிரம்மத்தின் இலக்ஷணமென்றும், பிரம்மம் இவ்விரண்டிற்கும் நடுநாயகமாக இருக்கிறதென்றும் கொள்ளும்பக்ஷத்தில் உபநிஷத்துகளின் கருத்துக்களைச் சமரசப்படுத்தலாம்,

ந—வேதங்களில்பரப்பிரம்மம் நிர்க்குணமானதுஎன்று சொல்லியிருக்கிறதல்லவா ?

வி—ஆம். அதனால் பரப்பிரம்மமாகிய நித்தியவஸ்துநிற்குணமானதென்பதல்ல, ஆனால் மானவஜாதியாருக்கு இருக்கும்படியான் பிராகிருத சம்பந்தமானவும், பரதந்திரமும், அபரிபூரணமுமான ஹேயகுணங்கள் இல்லை என்பதே கருத்து.

ந—குணங்களென்றுலென்ன ?

வி—பிரகிருதி சம்பந்தமான சத்துவ ரஜஸ் தமசென்பவைகளே, இப்படிப்சட்ட பிரகிருதி சம்பந்தமான குணங்கள் பரப்பிரம்மத்துக்கு இல்லை.

ந—பிரம்மத்துக்குப் பெயரும் இல்லை யல்லவா ?

வி—ஆம்; ஆனால் அவரை அக்கினி இந்திராதிசாதாரணப்பெயர்களாலும்; விஷ்ணு, நாராயணன், வாசுதேவன் என்றுதி விசேஷப்பெயர்களாலும்பிரஜைகள் பிரார்த்திக்கலாம்.

ந—பரபிரம்மத்துக்கு ரூபமும் இல்லையல்லவா ?

வி—ஆம்; அதற்கு ரூபம், வருண முதலானதுகளுமில்லை. அது எங்கும் நிறைந்தும், எங்கும் பிரவேசித்தும், எல்லையற்றும் இருப்பதால், எவ்வித ரூபமுமில்லை. ஆனால் அந்தப் பரப்பிரம்மத்திற்கு இச்சையுண்டானால் எந்தவித ரூபமாகவாகிலும், எந்தவித வருணத்தோடும் அவதாரமெடுக்கலாம்.

ந—இப்படி அவதாரமெடுப்பது கர்மத்தினலா ?

வி—அல்ல.

நா—இப்படி எடுக்கும் அவதாரம் பிராகிருத சம்பந்தமானதா?

வி—அல்ல. சுத்தசத்துவ குணத்தோடு கூடியது.

நா—இந்த அவதாரத்தால் என்னபிரயோஜனம்?

வி—ஸ்வரூபமற்ற பிரம்மத்தைப்பற்றி மனதினால் தியானிப்பது கஷ்டமாகையால் யோகிகள் தியானிக்கும் பொருட்டு யாதாவது ஒரு அவதாரமாக விளங்குகிறார்.

நா—அசித்து எப்படி இருக்கிறது?

வி—அது காலம், மூலபிரகிருதி, சுத்தசத்துவம் என மூன்றுவிதங்களாக இருக்கின்றது.

நா—காலமென்றாலென்ன?

வி—அது எங்கும் நிறைந்து, நிரந்தரமாக எல்லாவித மாறுதல்களைச் செய்யுங் காரணமேயாம். ஆனால் கண்டகாலம் என்பது கிரஹாதிகள் ஒன்றை யொன்று சுற்று வதனாலாகும் ஓரை, நாள், யுகம், கல்பங்களைப் போன்றவை நிரந்தரமானவைகளல்ல.

நா—மூலப்பிரகிருதி அல்லது இயற்கை என்றாலென்ன?

வி—ஒரு பாத்திரத்திற்கு களிமண் எப்படி உபாதான காரணமோ, அப்படிமூலபிரகிருதியே இந்தபிரபஞ்சத்துக்கு உபாதானகாரணம். அது சித்து என்னும் ஜீவாத்துமாவுக்ும், பரமாத்துமாவுக்கும் வித்தியாச மானது. எங்கும் எப்போதும் ஆதியந்தமற்றும் தனியேகமானதா யிருக்கிறது. அப்படி இருக்கினும், அது பரப்பிரம்மத்துக்கு கீழ்ப்பட்டதாம்.

நா—இந்த மூலப்பிரகிருதிக்கு வேதத்தில் வேறுபெயர்களுண்டோ?

வி—இந்த இயற்கையாகிய மூலப்பிரகிருதிக்கு அவியக்தமென்றும், பிரகிருதி யென்றும், பிரதானமென்றும், தாமஸம், அக்ஷரம் பிரம்மம் என்றும்,மாய்கை யென்றாதி பெயர்களால் வழங்கிவரப்படுகிறதன்றியில் அது சத்துவ, ராஜஸ, தாமச குணங்களுக்கு நடுநாயகமாக இருக்கிறது.

ந—அது முதலில் எவ்விதமாக மாறுகிறது

வி—முதலில் மஹத்தாக (புத்திஸ்வரூபமாக) மாறுகிறது.

ந—இந்த மஹத்திலிருந்து உண்டாகும் மாறுதலெது?

வி—அஹங்காரம்.

ந—இதில் பேதங்களுண்டோ?

வி—சாத்வீகம் அல்லது வியவஹாரிக அஹங்காரம்; இராஜஸம் அல்லது தியாஜஸ அஹங்காரம். தாமஸ அஹங்காரம் அல்லது பூதாதி அஹங்காரமென மூன்று பேதங்களுண்டு.

ந—இந்த மஹத்தினுடையவும், அஹங்காரத்தினுடையவும் சுவபாவங்களெவை?

வி—பூமியிலிருந்து வெட்டி எடுக்கும் களிமண்ணானது ஒரு பாத்திரத்தைச்செய்வதற்கு முந்திப் பலவித வேறுபாடுகளுக்கு உட்படுவதைப்போலவே இந்தப்பிரபஞ்சத் தோற்றமாவதற்குள் பலவித மாறுபாடுகளைப் பெறுகின்றது.

ந—சாத்துவிக அஹங்காரத்திலிருந்து எது உற்பத்தியாகின்றது?

வி—மனம் அல்லது அந்தக்கரணம். கிராணம், ஜிஹ்வை, சக்ஷுஸ், துவக்கு, சோத்திரம் என்னும் ஞானேந்திரியங்களும், உபஸ்தம், பாயு, பாதம், பாணி, வாக்கு என்ற கர்மேந்திரியங்களும் உண்டாகின்றன.

ந—தாமஸ அஹங்காரத்திலிருந்து எது உற்பத்தியாகின்றது.

வி—கந்தம், ரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம் என்ற பஞ்சபூதங்களின் லக்ஷணங்களாகிய பஞ்சதன்மாத்திரைகளுண்டாகின்றன.

ந—பஞ்சபூதங்களெவை?

வி—ஆகாயம், வாயுவு, தேஜஸ், அப்பு, பிருதிவி என்பவைகளே.

ந—இராஜச அஹங்காரத்தினால் என்ன பிரயோஜனம்?

வி—சாத்துவிக அஹங்காரத்துக்கும், தாமச அஹங்காரத்துக்கும் அதாவது ஈசுவரனுடைய இச்சையின்படி எல்லாவற்றையும் உண்டாக்க, மூலப்பிரகிருதிக்கும், மஹத்துக்கும் உதவி செய்கிறது.

ந—இந்தப்பிரபஞ்சம் மண்ணுலகமாக மாறுவதற்கு முன் மூலப்பிரகிருதி என்னமாக இருந்தது,

வி—பிரபஞ்ச மாற்றமாவதற்கு முன்பு மூலப்பிரகிருதி ரூபமற்றதாயும், பார்க்கக்கூடாத அணுரூபமாயும், சூக்ஷ்மாவஸ்தையிலிருந்தது.

ந—சுத்த சத்துவ மென்றுலென்ன ?

வி—ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலவாமல் கேவல சத்துவமாய், நித்தியமாய், ஞானாநந்த ஜனகமாய், கர்மத்தாலன்றிக்கே கேவலம் பிரம்மத்தின் இச்சையாலே விமான கோபுர மண்டப பிராஸாதாதி ரூபங்களாய் பரிணமிக்கக் கடவதாய் நிரவதிக தேஜோரூபமாய், நித்திய முக்தராலும் ஈசுவரனாலும் பரிசோதிக்க வரியதாய், அதியத்புதமாயிருப்பதாம்.

ந—சித்து என்றுலென்ன ?

வி—அதுவே ஜீவாத்துமா, அது அசித்துக்கும், ஈசுவரனுக்கும் வேறானதாயும்; எவராலும் சிருஷ்டிக்கப்படாமல் நித்தியமாய், அஜடமாய், அணுவாய், ஆநந்தரூபமாய், அவ்வியக்தமாய், அசிந்தியமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஞானாசிரயமாய் ஈசுவரனுக்கு நியாமகமாய்; தாரியமாய், சேஷமாய் இருப்பதுவேயாம்.

ந—இந்த ஜீவாத்துமாவில் பேதம் உண்டோ ?

வி—நித்தியர், முக்தர், பத்தர் என்கிற மூன்றுவித பேதமுண்டு.

(1) நித்தியர் என்றால், பிரம்மானந்தர் நித்தியாநந்தர் என்று சொல்லும்படி சதா பிரம்மாநந்தத்தி லிருப்பவர்க

ளே, அவர்கள் பிராகிருத கர்மாதி கஷ்டங்களற்று வைகுண்ட லோகத்தில் சதாவதிந்து அநந்தர், கருடர், விஷ்வக்சேனாதிகளாகப் பிரகாசிப்பவர்கள்.

(2) முக்தர் யாரென்றால். சம்சாரபந்தமற்றுப் பரமசுகத்தை அனுபவிப்பவர்களே.

(3) பத்தர் யாரென்றால், சம்சார கஷ்டங்களில் விழுந்து கர்மபந்தம் உள்ளவர்களே;

ந—பரப்பிரம்மமே சகலத்துக்கும் கர்த்தாவென்று முன் சொன்னீர்; ஆனால் இப்போது மூலப்பிரகிருதியே உபாதான காரணமென்று சொல்லுகிறீரே! அதெப்படி ஐயா?

வி—மூலப்பிரகிருதியே மண்ணுலகிற்கு உபாதானகாரணமாக இருந்தாலும் அந்த மூலப்பிரகிருதியின் சரீரமாகிய பரப்பிரம்மமில்லாவிட்டால் பிரபஞ்சம் உண்டாகாது. ஆகவே; ஒரு ஆபரணத்துக்கு பொன்னே முக்கிய ஆதாரமாயிருப்பதைப்போலவும், பானைக்குக் களிமண் முக்கிய ஆதாரமாக இருப்பதைப்போலவும், பரபிரம்மமே மூலப்பிரகிருதிக்கு முக்கிய ஆதாரமாயிருக்கிறது. மூலப்பிரகிருதியானது சூக்ஷ்மாகாரமாகவும், ஸ்தூலாகாரமாகவும், இருக்கிறது. ஸ்தூலாகார ஸ்திதியினால் ஜகத் உண்டாகிறது, இந்த தத்துவத்தின்படி சூக்ஷ்மாகாரமான மூலபிரகிருதியே ஒரு காரியத்துக்குக்காரணமாக இருக்கிறது. இந்தத்தத்துவத்தின்படியே, பொன்னும் களிமண்ணும் ஆபரணத்துக்கும் பானைக்கும் முக்கிய காரணமாக இருக்கின்றன. ஆகவே மூலப்பிரகிருதி பரப்பிரம்மத்துக்கு சரீரமாகவும், பரபிரம்மம் மூலபிரகிருதிக்குச் சரீரியாகவும் இருக்கிறது.

ந—தங்கத்துக்கும் தட்டானுக்கும் களிமண்ணுக்கும் குசவனுக்கும், வித்தியாசமிருப்பதுபோலவே; உபாதான காரணத்துக்கும் கருவிகாரணத்துக்கும் ஒன்றுக்கொன்று வித்தியாசமிருக்கிறதல்லவா? ஆகவே பரப்பிரம்மம் எப்படி உபாதானகாரணமாகவும் கருவிகாரணமாகவும் இருக்கக்கூடும்?

வி—பரப்பிரம்மமே கருவிகாரணமாக இருக்கிறூர். அவரது இச்சையினல் மூலப்பிகிருதி பிரபஞ்சமாக மாறுகிறது. காலமும் பரப்பிரம்மத்தின் சரீரமாய் இருப்பதினல் அந்தக் காலமும் சஹகாரிகாரணமாக இருந்து பிரபஞ்சசிருஷ்டிக்கு உதவிசெய்கிறது.

ந—இந்த மண்ணுலகம் மூலப்பிரகிருதியின் மாற்றத்திஞலுண்டாகிறதாகில் பரப்பிரம்மத்தைச்சிருஷ்டிகர்த்தாவென்று எப்படி சொல்லலாம்?

வி—சிருஷ்டி யென்கிற வார்த்தைக்கு உலகத்தார் தப்பர்த்தம் கொண்டிருக்கிறூர்கள். பரபிரம்மம் ஆதியந்தமற்றிருக்கிற மூலப்பிரகிருதியிலிருந்து பிரபஞ்சமாக மாற்ற இச்சிக்க அந்த மூலப்பிரகிருதியானது அவர் ஆக்கினையின்படி தனக்குள்ளிருக்கும் சத்துக்களால் பிரபஞ்சமாக மாறுகின்றது. இந்த மாற்றத்துக்கே சிருஷ்டி என்று உலகத்தார் பெயரிட்டிருக்கிறூர்கள். சர்வசூனியத்திலிருந்து ஒன்றை சிருஷ்டிப்பது சாத்தியமல்ல.

ந—கேவல மூலப்பிரகிருயின் மாற்றமாகிய இந்த சிருஷ்டி எத்தனை வகைப்படும்?

வி—இரண்டு அல்லது மூன்றுவகைப்படும்.

ந—அவை எவை?

வி—சமஷ்டி (சாதாரண) சிருஷ்டி என்றும்; வியஷ்டி (விசேஷ) சிருஷ்டி என்றும் இரண்டுவகைப்படும்.

ந—சமஷ்டி சிருஷ்டி யென்றுலென்ன?

வி—ஈசுவரனுடைய இச்சையின்படி மஹத்து அஹங்காரம் முதலான மாற்றங்களே.

ந—வியஷ்டி சிருஷ்டியாவதென்ன?

வி—பஞ்சபூதங்களுண்டான பிறகு அவைகள் ஒன்றுக்கொன்று சேர்ந்து கர்ம சம்பந்தத்தினலே பிரபஞ்சத்தில் சுரர், நரர், திரியக்கென்னும் பிராணிகள் ஸ்தாவரமென்னுந் தாதுகந்த மூலாதி தேகங்களுண்டாவதே.

ந—மூன்றுவித சிருஷ்டியென்ன ?

வி—பிரகிருதி சிருஷ்டி அல்லது சமஷ்டி சிருஷ்டியைப்போல மஹத்து அஹங்காரங்கள் மாற்றமேயாம். இது பிரம்மா அல்லது ஹிரணியகர்ப்பமென்று ஒவ்வொரு மஹாகல்பத்தில் ஆரம்பிக்கிறது.

2-வது, நியனமதி சிருஷ்டி அதாவது வியஷ்டி சிருஷ்டியைப்போல பிரம்மாவின் ஒருதினமாகிய ஒவ்வொரு பிரும்மகல்பத்தில் மாறும் சிருஷ்டியாம்.

3-வது நித்திய சிருஷ்டி அதாவது கர்மானுசாரமாய் பிரதிதினமும் நடக்கும் ஜடதேக சிருஷ்டியாம்.

ந—கல்பமென்றுலென்ன ?

வி—கல்பமென்றால் காலத்தின் மத்தியகாலம்.

ந—அதை விவரமாய்ச் சொல்லும் ?

வி—மஹாகல்ப்ம், பிரும்மகல்பமென்று இரண்டு கல்பங்களுண்டு. இந்த கல்பங்கள் நான்கு யுகங்களாலாகிய மன்வந்தரங்களால் ஆக்கப்பட்ட காலமேயாம்.

ந—நான்கு யுகங்களின் விவரமெப்படி ?

வி—4,32,000-வருஷங்கள் கொண்டது கலியுகம். 8,64,000-வருஷங்கள் கொண்டது துவாபரயுகம் 12,96,000 வருஷங்கள் கொண்டது திரேதாயுகம் 17,28,000-வருஷங்கள் கொண்டது கிருதயும். இந்த நான்கு யுகங்களாகிய 43,20,000—வருஷங்கள் கொண்டது ஓர் மஹாயுகம்,

ந—மன்வந்தர மென்றுலென்ன ?

வி—எழுபத்தொரு மஹாயுகம் கொண்டது ஒருமனுவின் வயது. அந்தக் காலத்துக்கே மன்வந்தரம் என்று பெயர். இப்படிப்பட்ட மனுவந்திரங்கள் பதினான்கு.

ந—பிரம்மகல்ப மென்றுலென்ன ?

வி—பிரம்மாவின் ஒருநாள், சந்தியோடு கூடிய பதினான்கு மன்வந்தரங்களாம். அதாவது 1,000-மஹாயுகங்கள்.

ந—மஹாகல்ப மென்றுலென்ன ?

வி—பிரம்மாவின் 360-நாள்கள் கொண்டது ஒரு பிரம்ம வருஷம், இப்படிப்பட்ட நூறு பிரம்ம வருஷங்கொண்டது ஒரு மஹாகல்பம் அதாவது மானிட வருஷங்கள் 311 04,000,00,00,000 கொண்டவையே.

ந—நாம் இப்போது மஹாகல்பத்தின் எந்த பாகத்தைச்சேர்ந்திருக்கிறோம்?

வி—இக்தப் பிரபஞ்சம் மூலப்பிரகிருதியிலிருந்து மண்ணுலகமாகமாறிப் பாதிகாலமாகிவிட்டது. அதற்குபரமென்று பெயர். இப்போது ஆரம்பித்திருப்பது அபரமென்று பெயர், அதாவது பிரம்மாவின் 51-வது வயது ஆரம்பித்திருக்கிறது. இதுவரையில் ஆறு மநுக்களாண்டு இப்போது ஏழாவதுமநுவாகிய வைவஸ்வதமநு ஆண்டுவருகிறார். மேலும் 71-மஹாயுகங்களில் 27-மஹாயுகங்கள் சென்று, இப்போது 28-வது மஹாயுகத்திலிருக்கிறோம், இந்த மஹாயுகங்களில் மூன்று சாதாரண யுகங்களும் சென்று, இப்பொழுது நான்காவதாகிய கலியுகத்தின் 4999-வருஷத்திலிருக்கிறோம்.

ந—பிரளயமென்றுவலன்ன?

வி—இந்தப்பிரபஞ்சமானது இப்போதிருக்கும்படியான ஸ்திதியைவிட்டு சூக்ஷ்ம ஸ்திதியைப் பெறுவதேயாம். இதில் பிராகிருதப் பிரளயம், நைமித்திகப் பிரளயம் என நான்கு வகுப்புகளுண்டு.

ந—பிராகிருதப் பிரளயமென்றுலென்ன?

வி—இந்தப் பிரபஞ்சம் இப்போதிருக்கும் ஸ்திதியைவிட்டுசூக்ஷ்மமாக மாறி மூலபிரகிருதியோடு கலந்து சத்துவ ராஜச தாமச குணங்களற்றுப்போவதேயாம். இந்த பிராகிருதப் பிரளயம் ஒவ்வொரு பிரம்மாவின் காலத்திற்கு ஒருதடவை அல்லது மஹாகல்பகாலத்தில் சம்பவிக்கும்.

ந—நைமித்திக பிரளயமென்றுலென்ன?

வி—இது ஒவ்வொரு பிரம்மகல்பத்தின் கடைசியில் சம்பவிக்கிறது. இதில் சூரியாதி லோகங்கள் மாறி, பூதியங்களாகிப் புராதன ஸ்திதியைப் பெறுவதேயாம்.

ந—நித்திய பிரளயமென்றாலென்ன?

வி—இது பிரதி நிமிஷமும் சம்பவிப்பது. இதனால் பிரபஞ்ச பிராணிசமூஹங்கள் மடிந்து மாறிவிடுவதேயாம்.

ந—ஆத்தியந்திக பிரளயமென்றாலென்ன?

வி—ஜீவாத்துமாவுக்கும், பிரகிருதிக்கும் இருக்கும் சம்பந்தமற்றுப்போதலே இது ஜீவன் முக்தி யடையும்போது சம்பவிக்கிறது.

ந—இந்த உலகம் அழியாததென்று சொல்லுகிறீர்களே; ஆனால் பானைகள் உடைக்கப்பட்டுப்போவதும், நதிகள் வற்றிப்போவதும், மற்றப்பொருள்கள் கரைந்து காணாமல் போவதும் பிரத்தியக்ஷமல்லவா?

வி—உருவத்தோடு கூடிய உலகம் நித்தியமென்றுசொல்லவில்லை உருவமுள்ள எந்த வஸ்துவும் ஒருகாலத்தில்கெட்டுப்பட்டுப் பாழ்த்துப்போயே தீரவேண்டும்; ஆனால் அவற்றின் சூக்ஷ்ம ஆதாரசத்துக்கள் மாத்திரம் நசித்துப்போகா. இந்த சூக்ஷ்ம சத்துகளுக்கு சிருஷ்டி சம்ஹார மில்லாமையால் எப்போதும் இருக்கும். பிரளயகாலத்தில் சத்துவ ராஜச தாமசாதி குணங்கள் தம் தொழில்களைச் செய்யாமல்அடக்கமாக இருந்து பிரபஞ்சம் பிரகாசிக்கும்போது மாத்திரம் தம்தம் தொழில்களைச் செய்ய ஆரம்பிக்கின்றன; பானை உடைக்கப்பட்டு அது தூளாகிவிடலாம் ஆனால் அதன் அணுரூபமான சத்துக்கள்மாத்திரம் என்றும் இருக்கும். இந்த ஹேதுவைப் பற்றிப் பிரபஞ்சம் நித்தியமென்று சொல்லப்பட்டது.

ந—ஜனனமரணமென்றாலென்ன?

வி—ஜீவாத்துமா ஒரு தேகத்தில் பிரவேசிப்பதே ஜனனம். அந்தத் தேகத்தை விட்டு நீங்குவதே மரணம். ஜீவாத்துமா ஒரு தேகத்தில் பிரவேசிக்கும். அப்படிப் பிரவேசிப்பதே மறு ஜனனம். ஜனனமரணம மறு ஜனனங்கள் மாறுதலுக்கேற்ற தேகத்தைச் சேர்ந்ததேயொழிய மாறுதலற்ற ஜீவாத்துமாவுக்குக் கிடையாது.

ந—ஜீவாத்துமா மரணமற்றும் நித்தியமாயும்பரிசுத்தமுமானதாகில், பிரகிருதி ரூபமானதேகத்தில் சம்பந்தப்பட்டுச் சுகதுக்கங்களை அநுபவிக்க வேண்டியதேன்?

வி—கர்மத்தினால் ஜீவாத்துமா பிரகிருதி தேகத்தில் சம்பந்தப்பட்டுக்காரணசரீரியாகிச்சுகதுக்கங்களை அனுபவிக்கின்றது. ஜனனமரண மறுஜனனங்க ளுண்டாவதற்குக் காரணம் கருமமே.

ந—கருமமென்றாலென்ன?

வி—கருமமென்றால் ஜீவாத்துமா மனசாக்ஷி யறியச் செய்த தொழிலின் பலனேயாம். ஈசுவரனுக்குச் சந்தோஷமுண்டாகும்படி செய்வது நல்ல கருமம்.

ஈசுவரனுடைய கட்டளைக்கு விரோத முண்டாகும்படி செய்வதே பாபகர்மம்.

ந—ஜீவாத்துமாவின் செய்கையினால் எப்படி கர்மமுண்டாகும்?

வி—அக்ஞானம் அல்லது அவித்தையினால் உண்டாகிறது. அது அநித்திய ஞானம், விபரீத ஞானமென இருவகைப்படும்.

ந—அநித்திய ஞானமென்றாவென்ன?

வி—ஒருவஸ்துவின் லக்ஷணத்தை வேறொரு வஸ்துவினிட மிருப்பதாக மலைக்கச்செய்வது.

ந—விபரீத ஞானமென்றாலென்னே?

வி—ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகப் பாவிக்கச் செய்வதேயாம்.

ந—அவித்தையினால் கர்மமுண்டாவ தெப்படி?

வி—ஜீவாத்மா, ஜடதேகமேதானென்றும்; இந்த ஜடதேகத்தைச்சார்ந்த ஜனன மரணாதிகள் தன்னுடைய தென்றும்; பிரமித்துக் கொள்வதினாலேயாம். இந்த அக்ஞானத்தினால் காமக்குரோத லோபாதிகளுண்டாகி இவைகளினால்ஜீவாத்மா கர்மங்களுக் குட்படுகின்றது, இப்படி வந்தகர்மங்கள் வாசனையால் வேறு கர்மங்களையும் அக்ஞானத்தையும் உண்டாக்குகின்றன; மேலும் ஜீவாத்துமா ருசியென்னும் இச்சையால் வேறு பிராகிருத பதார்த்த சம்பந்தத்தினால் அக்ஞானமுண்டாகி, இந்த அக்ஞானத்தினால் கர்மமுண்டாகிறது

இப்படி கருமமானது அவித்தை வாசனை ரூசி பிரகிருதி சம்பந்தத்தினுல் (கருமமானது) குறிப்பான கர்லவரையன்றி வண்டி உருளையைப்போல் சுழன்றுகொண்டேஇருக்கின்றது; ஆனதுபற்றியே இந்த கர்மத்தைப் பற்றியும் ஜீவாத்துமாவின் ஜடதேகசம்பந்த காரணதேகத்தைப்பற்றியும் பிரவாஹாதி என்று சொல்லப்பட்டது. அதாவது நதியோட்டத்தின் அறுப்புக்கு ஆரம்பகாலமில்லாததுபோல பிரளயகாலத்திலும் ஜீவாத்துமா வோடு சூக்ஷ்ம சத்தாகக் கூடிக்கொண்டிருக்கிறது.

ந—ஜீவாத்மா பாபகர்மங்களைச் செய்யாதிருக்கும்படி ஈசுவரன் தடுக்கக்கூடாதா?

வி—ஈசுவரன், ஜீவாத்மா சமூஹத்தாருடைய பொது க்ஷேமத்தைக் கருதி "நன்மைசெய், தீமைமற" என்ற நற்பிரமாணத்தைக் கொடுத்திருக்கிறார். இந்த ஆக்கினையின்படி நடக்கவேண்டியது ஒவ்வொரு ஜீவாத்துமாவின் நீங்காக்கடமை. ஜீவாத்மாக்களுக்கு இது விஷயத்தில் சுவதந்திரம் கொடுத்திருப்பதால் பரதந்திரரைப்போல பாபகர்மங்களை அனுஷ்டிப்பவர் அவற்றின்பலனை அனுபவிக்கவேண்டும்.

ந—பாபகர்மத்தினுலுண்டாகும் பலன் என்ன?

வி—இவ்வுலகில் கஷ்டஜீவனத்தையும் பிறகு நரகத்தையும் அனுபவிப்பதேயாம்.

ந—நரகமென்றுலென்ன?

வி—துஷ்கர்மமாகிய பாவத்தினுல் ஜீவாத்மா எமலோகத்தில் கஷ்டத்தை அனுபவிப்பதேயாம்.

ந—நரகத்தில் ஜீவாத்துமா கஷ்டப்படும்போதுஅதற்குச்சரீரமுண்டோ?

வி—உண்டு ஜீவாத்மா ஸ்தூலதேகத்தைவிட்டுப் பிரிந்த உடனே சூக்ஷ்மசரீரத்திலிருந்து மாறிய நரகதேகம் அல்லது யாதனுதேகத்தை யடைகிறது.

ந—சத்கருமத்தின் பலனென்ன?

வி—இவ்வுலகத்தில் சுசவாழ்வையும், பிறகு சுவர்க்கலோக போகத்தைக்ம், அனுபவிப்பதேயாம்.

ந—சுவர்க்கமென்றாலென்ன?

வி—சூக்ஷ்மசரீரத்திலிருந்து மாறிய சுகதேகத்தைப் பெற்று ஜீவாத்மா ஊர்த்வலோகத்தில் யாதொரு விசனமுமற்றுச் சுகமாக வாழும் ஸ்திதியேயாம்.

ந—ஊர்த்வலோகங்களென்றாலெவை?

வி—புவர்லோகம் (அதாவது பூமிக்கும் சூரியனுக்கும் இடையிலுள்ள லோகம்) சுவர்லோகம் (அதாவது சூரியனுலகமுதல் துருவநக்ஷத்திர லோகத்துக்கு இடையிலுள்ள லோகம்) மஹர்லோகம், ஜனர்லோகம், தபோலோகம், சத்தியலோகங்கள், என்றால்=துருவலோகமுதல் பிரம்மாண்டலோகம் (Macrocosm)வரையிலுள்ளபுண்ணியலோகங்களே.

ந—ஜீவாத்மா, நரகம் அல்லது சுவர்க்கத்தில் எத்தனை காலமிருக்கும்?

வி—தம்தம் கர்மம் முடிகிறவரைக்கும் இருக்கும்.

ந—பிதுர்லோகம், விஷ்ணுலோகம், சிவலோகமென்றாலெவை?

வி—இவைகள் ஊர்த்வ லோகத்தின் சில பாகங்களே.

ந—இவற்றைவிட வேறு பிரம்மாண்டங்களுமுண்டோ

வி—சுவர்க்கம், நரகம், சூரியலோகம், சந்திராதி லோகங்களான பதினன்கு லோகங்களுமுண்டு.

ந—இந்த ஒவ்வொரு பிரம்மாண்டத்துக்கும் ஹிரணியகர்ப்பனென்னும் பிரம்மா உண்டோ?

வி—உண்டு.

ந—இந்த பிரம்மாண்டங்கள் நித்தியமானவையா?

வி—ஒவ்வொரு பிரம்மாவின் முடிவுகாலத்தில் இந்த பிரம்மாண்டங்கள் சூக்ஷ்மரூபங்களாக மாறிவிடும்.

ந—கர்மமானது வேறு பிரம்மாண்டங்களிலும் உண்டோ?

வி—உண்டு.

ந—எல்லா பிரமாண்டங்களும் ஒரே பிரளயகாலத்துக் குட்பட்டவையா?

வி—ஒவ்வொரு பிரம்மாண்டத்துக்கும் ஒவ்வொரு பிரளயமுண்டு.

ந—ஒவ்வொரு பிரம்மாண்டமும் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவையா?

வி—ஆம், பஞ்சபூதங்களுடன் மஹத்தும், அஹங்காரமும் கூடி வித்தியாசப்பட்டிருக்கின்றன.

ந—இந்த பிரம்மாண்டங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஈஸ்வரருண்டோ?

வி—ஒரே பரப்பிரம்மம் எல்லா பிரம்மாண்டங்களிலும் பூரணமாக இருந்து ஆண்டு வருகின்றார்.

ந—இந்த பிரம்மாண்டங்களெல்லாம் ஒரே மூலப்பிரகிருதியிலிருந்து உண்டானவையா?

வி—ஆம், மூலப்பிரகிருதியானது ஆதியும் அந்தமுமற்றது. அதில் மாற்றம் என்னும் சக்தி பிரவேசிக்க அநேக பிரம்மாண்டங்கள் உண்டாகின்றன.

ந—நரகமோ அல்லது சுவர்க்கமோ அனுபவித்தபிறகு ஜீவாத்துமாவுக்கு என்ன சம்பவிக்கிறது

வி—அது சுவர்க்கங்களை அனுபவித்த தேகங்களை விட்டுத்தம்தம் கர்மாநுசாரத்துக்கேற்றதேகத்தில் பிரவேசித்து மோக்ஷமடைகிறவரையில் பிரவர்த்தித்து கடைசியில் மறுஜனனமற்றதாகிறது,

ந—சத்கர்மங்களினால் ஊர்த்துவலோகங்களில் சதா சுகப்பட்டுக்கொண்டிருக்கலாமா?

வி—இல்லை. கர்மபலத்துக்குத் தக்கபடி ஒரு லோகத்தில்தான் சுகமடையக் கூடும்.

ந—ஊர்த்வலோகத்தில் யாரிருக்கிறார்கள்? அவர்கள் அங்கு செய்யும் காரியம் என்னை?

வி—ஹிரணியகர்ப்பர்: ருத்திரர், இந்திரர், அக்கினிமுத லான தேவர்களிருக்கிறார்கள். அவர்களில் ஹிரணியகர்ப்பர் பிரஜாபதியின் மூலியமாக சிருஷ்டி காரியங்களையும், மற்ற வர்கள் தம்தம் காரியங்களையும் செய்துக்கொண்டு இருப்பார் கள்,

ந—அந்த தேவதைகள் பரப்பிரம்மத்துக்கும் மேலான காரியங்களைச்செய்ய சக்தியுடையவர்களா?

வி—இல்லை. அவர்கள் பரப்பிரம்மத்துக்குக்கீழ்ப்பட்ட சில்லரை தேவதைகளே.

ந—அந்தச் சில்லரை தேவர்கள் அங்கு சதா வாழ்ந்து கொண்டிருப்பரோ?

வி—இல்லை. ஒவ்வொரு மஹாகல்பத்தின் முடிவில் எல்லாச் சில்லரை தேவதைகளும் தங்கள் தேகங்களைவிட்டு விட்டு மோக்ஷத்தை யடைவார்கள்.

ந—அப்படியானால் மறுபடியும் மஹாகல்பத்தில் எந்த தேவதைகள் இருப்பார்கள் ?

வி—கர்மபலத்தினால் இந்திராதி தேவர்களாகும்படி ஜீவாத்துமாக்கள் அந்த அந்தஸ்தைப் பெறுவார்கள்.

ந—மோக்ஷம் எத்தனைவகை ?

வி—கைவல்லியம் என்றும், பிரம்மாநந்த கைவல்லியம் என்றும் இருவகையாம், கைவல்லியம் என்றால்—ஜீவாத்து மா தனது நிஜஸ்திதியில் பரப்பிரம்மத்தைப் போலவே பரி பூரண சுகத்தையடைவது, இதற்குச் சாயுஜ்ஜியபதவி என்று பெயர்.

ந—சாயுஜ்ஜிய மென்றால் ஜீவாத்துமா பரப்பிரம்மத்தில் லயமான ஸ்திதியல்லவா ?

வி—அல்ல, ஜீவாத்துமா எந்தக்காலத்திலும் பரபிரம் மத்துடன் பூரணமாகச் சேருகிறதில்லை. சாயுஜ்ஜியமென்பதி னால் ஜீவாத்துமா பரப்பிரம்மத்தைப்போலவே பரிபூரணசுக த்தையடையும் ஸ்திதி. இதில் சாலோக்கியமும் சாரூப்பிய மும் சேர்ந்ததாகக்கொள்ளலாம்,

ந—சாலோக்கியமென்றா லென்ன.

வி—ஒரே இடத்தில் ஒருபொருளுடன் வசித்தலாம்.

ந—சாரூப்பியம் என்றாலென்ன ?

வி—சாரூப்பியம் என்றால் சுத்த சத்துவத்தினாலாகிய தும், ஈசுவரனுக்குச் சமானமான சரீரத்தைப் பெற்றிருத் தலுமேயாம்,

ந—ஜீவாத்மா முக்தியையடைந்தபிறகு பந்தஸ்திதியை யடையுமா?

வி—இல்லை, அது உலகநன்மையைக் கருதி அவதாரமெ டுத்தால் எடுக்கலாம், ஆனால் அந்த அவதாரங்களில் அவை களுக்கு பிராகிருத கர்மாதிகள் இல்லை.

ந—மோக்ஷமென்பது சுவர்க்கலோகத்தைப்போல ஒரு குறிப்பான இடத்தில் சுகமடையும் ஸ்திதியா ?

வி—வைகுண்டம் என்னும் பரமபதத்தில் அனுபவிக் கும் ஸ்திதியே, அந்த பரமபதம் பிராகிருத சம்பந்தமற்று, சத்தசத்துவத்தாலாகிய மேலான இடம், கைவல்லியமும் பிரம்மானந்தமும் வைகுண்டத்தின் பல பாகங்களில் அனு பவிக்கும் இன்பமேயாம்.

ந—மோக்ஷத்துக்கு முக்கிய சாதனங்களெவை?

வி—ஜீவாத்துமா பிராகிருத சம்பந்தமான எல்லா பற் றுகளையும்விட்டு ஒழித்தும் துஷ்கர்மம் சத்கர்மங்களை விட் டொழித்தும், சுத்தசைதன்னியமாக இருத்தலாம், மோ க்ஷம் என்னும் பதத்துக்கு, பந்தங்களை விட்டொழித்தலெ ன்று பொருள்.

ந—இந்தச் சாதனங்க ளெப்போது கிடைக்கும் ?

வி—பிராகிருத லோகங்களைக் கடந்து பரமபதத்தில் சேருவதற்கு முன்பே கிடைக்கும்.

ந—பிரம்மாநந்தத்தை அநுபவிக்கும் முக்தர்களுக் குள்ளே வித்தியாசமுண்டா ?

வி—இல்லை, பரபிரம்மத்தின் சுகத்துக்கும், முக்தர் களின் சுகத்துக்கும்கூட வித்தியாசமில்லை.

வி—பரிபக்குவ தசையைப்பெற்ற எல்லா ஜீவர்களும் மோக்ஷத்தை யடையக்கூடும்.

ந—அந்த பரமபதத்துக்கு அல்லது வைகுண்டத்துக்குப் போக இந்த பிரபஞ்சத்தில் வழியுண்டா?

வி—உண்டு. அதற்கு அர்ச்சராதிகதி திவியயான் வாசமென்றும், பிதிர்யானம் அல்லது தூமாதி மார்க்கமென்றும் இரண்டு வழிகள் சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒரு மனுஷன் இறந்து மோக்ஷமடைய வேண்டுமாகில், ஜீவனது சூக்ஷ்மசரீரியாகி, ஹிருதயத்திலிருந்து பிரம்ம ரந்திரத்திற்கு சம்பந்தப்பட்டிருக்கும் சுழிமுனை என்னும் நரம்பு வழியாகக் கபாலத்துக்குப்போய்பிரம்மரந்திரத்தைப் பிளந்துக்கொண்டு, சூரிய கிரகணங்களின் மூலியமாக சூரிய மண்டலத்துக்குப்போய் பிறகுசூரியனிலிருக்கிற கரும்புள்ளியின் மூலியமாகப் பரமபதத்துக்குப் போகின்றது.

ந—ஜீவன் பரமபதத்துக்குப் போகும் இந்த வழியை விவரமாகச் சொல்லுங்கள் பார்ப்போம்.

வி—ஜீவனனது போகசாதனத்தினால் அடையும் பரிபூரண ஞானத்தினால் பரமபதத்துக்குப் பிரவேசிக்கின்றது. அப்படி பிரவேசிக்கும் ஜீவன் அதிவாஹிகாதிகள் என்னும் அர்ச்சி, ஆகாசர், பூர்வபக்ஷர், உத்தராயணர், சம்வச்சரர், ஆதித்தியர், சந்திரர், மின்னல், வருணர், இந்திரர், பிரஜாபதி, அமானவர் விஷ்ணு என்னும் அதிவாஹிகாதிகளால் அழைத்துக்கொண்டு போகப்படுகின்றது. இங்குக் குறித்த அர்ச்சி ஆகாசாதிகள் பரிசுத்த ஆத்மஸ்வரூபிகளேயன்றி சாதாரண இரவுபகல் மாசவருடாதிகளல்ல.

ந—மோக்ஷத்தை அடைய உபாயமென்னை?

வி—கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தி என்னும் நான்கு சாதனங்களே.

ந—கர்மயோகமென்று லென்னை?

வி—சுருதிகளின் மூலியமாக சித்து அசித்து ஈசுவர ஞானத்தைப் பெற்றும், சுயலாபத்தைக் கருதாமல், நீதிக்

கும் சமயத்துக்கும். தக்க சத்கருமங்களை செய்தும், பரமாத்துமாவைப் பற்றி ஜபம், ஹோமம், யாகம், தானம், தபசு முதலானதுகளைச் செய்தலுமேயாம்.

ந—ஞானயோகமென்று லென்னை ?

வி—யோகசாஸ்திரத்தில் சொல்லியபடி, இயம, நியம, பிராணயாம, பிரத்தியாஹார, தியான, தாரண சமாதியாதி எட்டு அங்கங்களைத் தழுவி ஜீவாத்துமாவின் சுத்தசத்துவத்தை அறிவதேயாம். இதனால்மோக்ஷஸ்திதியைப்பெற்று கைவல்லியம் அல்லது பிரமமாநந்தத்தைப் பெறலாம்.

ந—பக்தியோகமென்று லென்னை ?

வி—இதற்கு உபாசனை என்றும் ஒருபெயர் சொல்லலாம்—அதாவது, பரபிரம்மத்தின் பல திவ்ய குணங்களைப் பற்றி தியானித்தும், அவரை உள்ளநாள் உள்ளவரையில் அநுஷ்டித்துக்கொண்டும், தம்தம் கடமைகளைத் தக்கபடி செய்வதேயாம். இந்தப் பக்தியை ஞானயோகத்தைப் போலவே அநுஷ்டிக்கலாம் இந்த பக்தியோகிகளுக்கும் மோக்ஷமுண்டாகி கைவல்லியம் பிரம்மாநந்தம் கிடைக்கும்.

ந—பக்தியோகத்தில் பரப்பிரம்மத்தைத்தியானிப்பதெப்படி ?

வி—அஹம் பிரம்மாஸ்மி=நான் பிரம்மம், எனது ஆத்துமா பிரம்மம், அதாவது பரப்பிரம்மத்துக்கு இருக்கும் பல லக்ஷணங்களைப்போல எனது ஜீவன் (பரப்பிரம்மத்துக்கு) சரிரியாக இருக்கின்றது என்று தெரிந்து கொள்ளுதல்.

ந—பக்தியோகத்தில் வேறுவிதங்களுண்டோ ?

வி—வேதாந்தத்தில், தகரவித்யா, அந்தராதித்யவித்யா, பிராணவித்யா புருஷ வித்யா, மதுவித்யா முதலிய முப்பத்திரண்டு வித்தையுண்டு.

ந—இந்த வித்தைகளில் வித்தியாசமுண்டோ ?

வி—பரப்பிரம்மத்தைத் தியானம் செய்யும் விஷயத்தில் வித்தியாசமில்லை, பரப்பிரம்மத்தினுடைய குணலக்ஷணங்களைப்பற்றித் தியானம் செய்வதில் மாத்திரம் பேதமுண்டு

ந—ப்ரபத்தியென்றாலென்ன ?

வி—மோக்ஷமடைவதற்கு ஹேதுக்களான முன் சொன்ன மூன்று சாதனங்களை அனுஷ்டிக்கச் சக்தியற்றவர்கள், ஈசுவரனுடைய திவ்ய குணலக்ஷணங்களையே சதா தியானித்தும், அவர் திருவுளப்பாங்கின்படியே நடந்துகொண்டு உள்ள நாள் உள்ளவரையும் அந்த ஜகத்ரக்ஷகனிடம் பக்திசெய்யும் மார்க்கமேயாம்.

ந—இதில் தியானிக்கும் ஈசுவர லக்ஷணங்களெவை ?

வி—ஈசுவரனுடைய ஞானம், சக்தி, பலம், ஐச்வரியம், வீரியம், தேஜசு, அனந்தம், தயை, வாஸ்தலியம், சவுலப்யம், சவுசீலியம், முதலானவைகளும் அசித்து, சித்து, பிரபஞ்சம் சரீரமாயிருக்கையும் தனதுஇச்சையின்படி லக்ஷ்மிஸமேதனுகத்தேவாவதாரமெடுக்கும் விலக்ஷணங்களுமேயாம்.

ந—இந்த நான்குவித மோக்ஷசாதனங்கள் எல்லாரும் அநுஷ்டிக்கத் தக்கவையா ?

வி—கல்வி கேள்வி ஞானத்தினால் சிறந்தவர்களே கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்னும் மூன்றுவித சாதனங்களால் மோக்ஷமடையக்கூடும், மனுதத்துவம் ஞானதத்துவம் அறிய சக்தியற்றவர்கள், மோக்ஷத்தை ப்ரபத்தியினால் அடையலாம், இந்த ப்ரபத்தி சாதனையை எந்த ஜாதியாரும் எந்த மதத்தாரும் ஆசாரியன் மூலியமாக ஞானம் பெற்ற எந்த சண்டாளரும், மிலேச்சரும் யாதொரு வித்தியாசமுமின்றி அநுஷ்டிக்கலாம்.

ந—இந்தப்படி மோக்ஷம்பெற விரும்புவோருக்கு எப்படிப்பட்ட யோக்கியதைக ளிருக்கவேண்டும் ?

வி—ஆசாரியனுடைய போதனையால் (1) அசித்து, சித்து, ஈசுவரஞானமும்; (2) இப்படிப்பட்ட ஆசாரியனிடம் அன்பும்; (3) சுருதிஸ்மிருதிகளில் நம்பிக்கையும்; (4) மோக்ஷவிருப்பமும்; (5) உலக ஆசாபாசங்களை விட்டொழிக்கு வைராக்கியமும்; (6) தருமத்தில் கருத்தும்; (7) வேதவேதாந்த கிரந்த காலக்ஷேபமும்; (8) சுபலாபத்தை விட்டொழித்துச் சாதுசங்கத்தில் பிரவேசித் திருத்தலுமேயாம்.

ந—இவைகளால கர்மபந்தத்தை விட்டொழிக்கக்கூடுமா ?

வி—இவைகளால் துஷ்கர்மம் சத்கருமங்களை விட்டொழிக்கலாம்.

ந—கர்மங்க ளெத்தனை வகைப்படும் ?

வி—(1) சஞ்சிதம்,(2) பிராரப்தம், (3) ஆகாமியம் என மூன்றுவகைப்படும்.

(1) இவைகளில் சஞ்சிதமென்றால்=வேறு கர்மபலத்தினால் தடுக்கப்பட்டு இன்னும் தன் பலன்களைக்காட்ட ஆரம்பிக்காதிருக்கும் கருமமாம்.

(2) பிராரப்த கருமமென்றால்=பலனையுண்டாக்க முன்னமே ஆரம்பித்த கருமமாம்.

(3) ஆகாமியம் என்றால் இனிமேல் நடக்கும் கருமமேயாம்.

ஷ்டு சாதனங்களினால் சஞ்சித கர்மத்தை நசிக்கச்செய்யலாம், பிராரப்த கர்மம் தன் பலனைக்கொடுத்து நசித்துப் போகின்றது. ஆகாமிய கருமம் இவைகளால் யாதொரு பலனைக்கொடாதபடி தடுத்துவிடலாம்.

ந—ஒருவனைப் பலஜன்மங்களில் பிரவேசிக்கச்செய்யும் பிராரப்த கருமத்தின் ஸ்திதிக்குத் தக்கபடியாகும் பிராரப்த கர்மம் நசித்தபோதே மோக்ஷத்தை அடையலாம்.அதுஒரே ஜன்மத்திலாகிலும் பல ஜன்மாந்தரங்களிலாகிலும் முடிவுபெறலாம். ஆனால் எவன் ப்ரபத்தியினால்எல்லாக்கருமங்களையும் முடிக்கிறானோ அப்போது அவனுக்கு மோக்ஷம் கிடைக்கத்தடை இல்லை. ஒருவன் மோக்ஷத்தை அடையத்தக்கவனாகும் போது சஞ்சிதம விட்டுவிடுகின்றது. ஆகாமியம் அசக்தியைப்பெற, பிராப்தம் பாழ்த்துப்போகின்றது. ஆகவே பிராகிருத பந்தமாகிய கர்மம் இந்த நான்கு உபாயங்களால் நசித்துப்போகிறது.

ந—இந்தச் சாதனங்களைக்கொண்டு ஹிரணியகர்ப்பர், மஹாதேவர், முதலான மற்ற தேவர்களையும் காளி முதலான

தேவதைகளையும் தியானம் செய்யும் விஷயத்தில் உபயோகப் படுத்தி மோக்ஷத்தை அடையக்கூடுமா ?

வி—கூடாது. ஏனெனில், அத்தேவர்களெல்லோரும் பரமாத்துமா அல்லது ஈசுவரன் அல்லது பராபர வஸ்துவல்ல. அத்தேவர்களெல்லாரும் தம் தம் சத்கருமங்களினால் சில சுதந்தரங்களைப்பெற்றுப் பரப்பிரம்மத்துக்கு அடியார்களாக இருப்பவர்கள். மோக்ஷத்தைக் கொடுக்கும் சக்தியையுடைய பரமாத்துமாவுக்கு இருக்கும்படியான குணலக்ஷணங்கள் இச்சில்லரைத்தேவர்களுக்கும் வேறு தேவதைகளுக்கும்கிடையா, இத்தேவர்களுக்கும்ப்ராகிருத கர்மபந்தங்களிருப்பதால் ஜீவர்களைப் பந்தித்திருக்கிற கர்மங்களைப்போக்கடிக்கப்போதுமானசக்தி சாமார்த்தியங்கள்கிடையா. மேலும் ஜீவாத்துமாக்களுக்கும் பரமசுகத்தைக் கொடுக்கவும் சக்தி கிடையா. ஆகவே சதா லக்ஷ்மி சமேதனாகவிருக்கிறவனெவனோ! விஷ்ணு, வாசுதேவன், நாராயணன் என்றுசிறந்த பெயர்களைப்பெற்றுப் பிரகாசிப்பவனெவனோ! சர்வசக்தி சர்வவியாபகம், சர்வாந்தரியாமியாக இருந்து அண்டபிண்ட சராசரங்களைச் சிருஷ்டித்து ஆதரித்து வரும்அப்பிரமேயன் எவனோ! எவனால் ஜீவாத்துமாக்கள் சகல கஷ்டங்களையும் விட்டொழிக்கப்பட்டு மோக்ஷசாம்ராஜ்யத்தைப் பெறுகின்றனவோ! அவனே பரமாத்துமா. அவனே பராபர வஸ்து. அவனே சர்வசக்தன். ஒப்பும் உவமையும் அற்ற உத்தமோத்தமன். அவனொருவனை அடைவோருக்கே அனந்தகாலம் ஆனந்த பதவி கிடைக்கும். இதுவே விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தின் தாத்பரியம்.

இந்தச் சித்தாந்தத்தை விஸ்தாரமாக அறிய விரும்புவோர் இராமாநுஜபாஷியம், தத்துவத்திரயம், தத்துவசேகரம் ஆசாரியஹிருதயம் தமிழ்த் தேசிகப்பிரபந்தம் முதலானகிரந்தங்களைப் பார்க்கக்கடவர்.

---

# A CATECHISM OF THE VISISHTADWAITAM.

——(o)——

What is the Visishtadwaitam ?

The word Visishtadwaita is composed of the two words Visishta and Adwaita. Adwaita means non-duality, or one reality; Visishta means containing the attributes (*viseshana*) *i e*, containing Chit and achit as sarira. The term Visishtadwaita, there fore, means the nonduality, or one reality—Parabrahman—which is united with Chit and achit ss its attributes.

How do you reconcile this system of Philosophy with certain passages in the Upanishads which set forth the doctrine of absolute non-duality ?

These passages cannat be looked upon as teaching absolute non-duality,for there are other passages which teach the reality of Achit, Chit and *I*swara, and others again teaching that Achit, and Chit are the Sarira of Para-brahmam.

Hence there are seemingly conflicting passages in the Upanishads themselves, and the ouly way to reconcile them is to look upon Achit and Chit as the attributes of Parabrahmam, and Parabrahmam the only reality, as the centre of these attributes. Hence there is indis-soluble union of tho three and this is what is meant when non-duality is asserted in the Vedanta.

But is not Brahmam said in the scriptures to be nirguna (devoid of attributes and qualities) ?

Yes, but by this it is not meant that Brahmam has no attributes whatever; for every reality must have attributes (and Brahmam is a reality) but what is meant is, that Brihmam is devoid of those qualities of Prakriti to which mankind is subject such as bad qualities (heyagunas), material limitati ons and imperfections.

Is not Parabrahmam said to be nameless ?

Yes, because it has no particular name. It is signified by all names either directly or indirectly Agni Indra and other names signify it sometimes directly and Vasudeva signify it directly.

Is not Parabrahmam said to be formless (nirak-ara) and colourless (arupa)·

Yes, It is shapeless,formless and colourl ess, be-cause it is omni-present, allpervading and infinite, but it cantake upon itself by its own will any form or body (wich is finite) "of the colour of the sun."

What is Achit ?

Achit (matter) is thereefold. It is Time (Kalu) Nature (Mulapprakriti) and Suddasatwa (intelectu-al substance).

What is time ?

Time is said to be the cause of all changes it is eternal universal and unconditioned. Conditioned time (Khandakala) is not eternal and is reckond by the rotation and revolution af planets, as hours, days, yugas, kalpas, ect.

What is Nature ?

Nature is the material basis (upadana karana) af the universe, just as clay is the upadana karana

of the pot, and as such forms the body of the indivi dual soul (Jivatma, and of everything else in the cosmos. It is different from either Chit (Jivatma)or Iswara, It has no origin, it is self-existing, eternal universal and single, but it is in every respect subor dinate to Brahmam.

By what names is nature called in the scriptures ?

It is called Prakriti, Pradhana, Mulaprakriti Avyakta and Maya. It is also sometimes signified by the words Thamas, Akshara and Brahmam. It is the centre of the three gunas, satwa, rajas and tham as; with these attributes it produces all its manifes-tations.

What is Chit ?

It is Jivatma (soul) and is not material. It is eternal, not produced by anything else, and different from Achit and Iswara. The Jivatma in each indivi-dual is different from that in another. It is pure, blissful (anandamaya) atomic (anu) intellectual, im-mutable, the centre of intellect, the ego (subject to Karma till it attains Moksha), subordinate (sesha) to Parabrahmam Until it attains Moksha it connot exist without Prakriti. Every particle of Prakariti co ntains Jiva and is the sarira (body) of that Jiva which contains Every Jiva has the Supreme Spirt as Sariri (antaryami) Para-brahmam pervades every Ji-va as well as every particle matter.

What ts moksha?

There are twe kinds: (1) Kaivalya, and (2) Br-ahmananda Kaivalya is the enjoyment by Jiva. in its real condition. of supreme bliss Brahmanandam is

enjoymentof supreme bliss by Jiva as Parabrahmam *i e* enjoymeut of supreme bliss as Parabrahmam enjoys it. This is also called Sayujya.

Is not Sayujya the laya or absolute unity ofthe Jiva in Parabrah mam?

No, I have already said that Jiva does not become absolutuly united with Parabrahmam. Sayujya means enjoyment of Brahmonanda equally along with Para brahmam as descriped in the Scriptures This includes Salokya and Sarupya.

What are the essentials of Moksha?

Entire separation of Jivafrom all connectionwith matter, and complete destruction of Karma whether good or bad. The word Moksha literally means relea se from bondage (bandha).

Is this Moksha attainable by every Jiva without exceptition? All Jivas can obtain moksha if qua lified to do so.

☞ சுத்த சைவமதமும், விசிஷ்டாத்துவைத மதமே; அந்த சித்தாந்தத்தைப் பிரபலப்படுத்தின ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியார் விஷ்ணுவுக்குப்பிரதிபாக சிவபெருமானைப்பர மாத்துமாவாகக் கொண்டிருக்கிறாரே யொழிய மற்றப்படி அதில் விசேஷ வித்தியாசங்களில்லை

---

## சரித்திர ஸார சங்கிரகம்.

மத்துவாசாரியர் கி. பி. 1119-ஃஅ ஆகஸ்டு மாதத்துக்குச் சரியான கலியுகாப்தம் 4120-க்கு சாலிவாஹன 1040 விளம்பி-ஃஅ ஆஷாடபஹுளம் 4-தேதியன்று துளுவ நாட்டில் உடுப்பிக்கருகில்அநந்தேசுவர கிராமத்தில் (பாஜக க்ஷேத்திரத்தில்) ஜனித்தவர். முக்கிய பிராணதேவனென்று

வாயுவே, இராமாவதாரத்தில் ஆஞ்சனேயராகவும், கிருஷ்ணாவதாரத்தில் பீமசேனனாகவும், கலியுகத்தில் மத்துவாசாரியராகவும் அவதரித்தாரென்று சொல்லுவாருமுண்டு. இவர் தந்தையாகிய மத்தியகேக பத்தர் இவருக்கு உபநயனமாக உடனே விவாகம் செய்ய யோசித்திருந்தார்; இவரோ சந்நியாச ஆச்சிரமத்தில் சேர்ந்து ஜனோபகாரமாக உழைக்கப் பிரவர்த்தித்தார். இவருக்கு முதலில் வாசுதேவாசாரியர், ஆநந்ததீர்த்தாசாரியர், என்ற பெயர்களுமுண்டு தமது ஒன்பதாவது வயதிலேயே அச்சுதப் பிரகாசஸ்வாமிகளாகிய ஆசாரியருக்குச் சீடராகி கங்காயாத்திரை செய்யஆரம்பித்தார்; ஆனால் ஆசாரியருடைய அனுக்கிரகத்தினால் ஷை கங்கையே அந்த இடத்துக்குவர அதில் அனைவரும் குளித்து அகமகிழ்ந்தார்கள். அது இன்றளவும் "மாத்துவஸரோவரம்" என்னும் பேர்பெற்றிருக்கிறது. இவரது 17-வது வயதில் ஆசாரியர் இறந்துபோக, இவர் பதரிகாச்சிரமத்துக்குப்போய் வியாசபகவானைத்தரிசித்தும், தத்துவஞானம்பெற்றும் எட்டு சாலக்கிராமங்களுடன் உடுப்பிக்கு வந்தும், அவைகளுக்கு எட்டு மடங்களை ஸ்தாபித்தும், வழியில் கோபிசந்தனத்திலகப்பட்ட ஒரு கிருஷ்ண விக்கிரகத்தைக் கொண்டுவந்து உடுப்பியில் ஒரு கிருஷ்ணன் கோயிலையுங் கட்டிவைத்தார். இவர் ரிக்பாஷியம், தசோபநிஷத் பாஷியம், கீதாபாஷியம், பிரம்மசூத்திர பாஷியம், பாரத தாத்பரிய நிர்ணயம், பாகவத தாத்பரிய நிர்ணயம் கிருஷ்ணாமிருத மஹார்ணவம், தந்திரசாரம், அணுவேதாந்தம் முதலான முப்பத்தேழு பெரிய கிரந்தங்களை இயற்றித், தமது மடத்தாருக்குப் போதித்து அவைகளை உலக ஜனங்களுக்கு போதிக்கும்படியாக ஆக்ஞாபித்து தமது 79-வது வயதாகிய கி. பி. 1198-ஹு பிப்பிரவரி மீ-த்துக்குச் சரியான சாலிவாகன 1120-ஹு பிங்கள-ஹு மாகமீ மறுபடியும் பதரிகாச்சிரமத்துக்குப் புறப்பட்டுப்போனார். அப்படிப்போனவர் இதுவரையிலும் திரும்பிவராமையால் அவரிப்போதும் அந்த ஆச்சிரமத்திலேயே ஸ்ரீ வியாசபகவானிடம் இருப்பதாக இம்மதஸ்தர்கள் சொல்லுகிறார்கள்.

## த்வைத சித்தாந்த ஸார விளுவிடை.

ந—(ஓர் த்வைத சித்தாந்தியைப்பார்த்து) த்வைத சித்தாந்த மென்றுலென்ன? என்று கேட்க,

த்வைதி—த்வி=என்றால் இரண்டு, அதாவது பரமாத்துமாவும் பிரபஞ்சமும் வேறுவேறுன இரண்டு வஸ்துக்களுண்டென்னும் சித்தாந்தம். அல்லது பரமாத்துமா ஒரு தனி வஸ்து, மற்றதுகள் அதில் சேராத வேறுவஸ்துக்கள் என்னும் சித்தாந்தமேயாம்,

ந—இந்த சித்தாந்தம் ஸ்ரீ மத்துவாசாரியரே ஸ்தாபித்ததா? அல்லது இவருக்கு முன் இதை யனுஷ்டித்தவர்களுமுண்டோ?

த்—இது புராதனமான சித்தாந்தம். பரமாத்துமாவின் ஆதி ஹம்ஸத்தினிடம் சதுர்முக பிரம்மாவும், அவரிடமிருந்து சனகாதி தேவர்களும், தூர்வாசரிஷியும், ஆதியில் அநுஷ்டித்து வரவும்; அவர் சந்ததிகளாகிய ஸ்ரீ ஞானநிதி, கருடவாஹனர், கைவல்லிய தீர்த்தர், ஞானேசதீர்த்தர், வரதீர்த்தர், சத்தியபிராகியர்; பிராகியர், அச்சுத பிரகாசர் முதலான மஹான்கள் அனுஷ்டித்துவர; இந்த அச்சுத பிரகாசரிடம் ஸ்ரீமத்துவாசாரியர் கற்றுத்தெளிந்து இந்தசித்தாந்தத்தைப் பிரபலப்படுத்தினர்.

ந—இந்த த்வைத சித்தாந்தத்தின் ஸார மென்ன?

த்—விஷ்ணுபரமாத்துமா சர்வசக்தராயும், சர்வாந்தரியாமியாயும் சர்வலோகசரண்யராயும், இருந்து இந்தப்பிரபஞ்சத்தை ஜடபிரகிருதியிலிருந்து மாறும்படி நியமித்த நிமித்த காரணர். ஜடபிரகிருதி உபாதான காரணம். விஷ்ணு பரமாத்துமாவும், ஜீவாத்துமாவும், ஜடபிரகிருதியும் எவராலும் சிருஷ்டிக்கப்படாமல் முடிவற்று என்றுமுள்ள நித்திய வஸ்துக்களாம், இம்மூன்றும், ஒன்றுக்கொன்று சம்பந்தமற்றுத் தனித்தனியான வஸ்துக்களாக விருக்கிறுப்; பிரகிருதியும், ஜீவனும், விஷ்ணு பரமாத்துமாவுக்குக்கீழ்ப்பட்டவைகளாம்.

ஜீவாத்துமா பிரகிருதி சம்பந்தமான நன்மைதீமை மத்திம குணங்களால் பீடிக்கப்படுவதனால், அநேககர்மங்களுக்குட் ஜனனமரணாதிகளில் சிக்கித் தவிக்கின்றது. இப்படித் தவிக்கு ம்ஜீவாத்து மாகர்ம க்ஷயத்தினால் ஜனனமரணாதிபந்தங்களை, விட்டொழித்தால் முக்தியையடையும். இந்த முக்தியடைவ தற்கு முக்கியசாதனம் பக்தி. பக்தி என்றால் மஹாவிஷ்ணு பிரசாதத்தை யடைதலாம். இப்படி விஷ்ணு பரமாத்துமா வின் கருணைகடாக்ஷமாகிய பிரசாதத்தையடைந்த விடத்து முக்தி கிடைப்பது நிச்சயம்; ஆகவே. ஒவ்வொரு ஜீவாத்து மாவும் தக்க முயற்சிசெய்து மோக்ஷசாமிராம்ஜ்பத்தை அடையவேண்டியது.

ந—இந்தச் சித்தாந்தத்துக்கு ஆதாரமெவை?

து—சுருதி, ஸ்மிருதி, பாஞ்சராத்திரம், மூல ராமாய ணம், மஹாபாரதம் முதலானதுகளும் ஆதாரங்களாக இரு ப்பதன்றியில்பிரத்தியக்ஷம், அநுமானம், சுருதியாகியமூன்று தருக்கசாஸ்திர பிரமாணங்களும் விசேஷ ஆதாரங்களாம்.

ந—த்வைதமத சித்தாந்தத்தின் தாத்பரியத்தைச் சொன்னீர் அதில் சில விசேஷங்களைப்பற்றித் தெரிந்துகொ ள்ள விருப்பமிருக்கிறது ஆகவே இந்த சித்தாந்தத்தார் எத் தனை தேவர்களை அங்கீகரிக்கிறார்கள்.

து—விஷ்ணு பரமாத்மா ஒருவரேபரப்பிரம்மம் ஆனால் அவர் பிரபஞ்சாதிகளை சிருஷ்டிக்கவும், காக்கவும், காலத் துக்குக் காலம் பல அவதாரங்களை எடுக்கிறார்.

ந—அப்படியானால் பவுத்தரும் ஒரு அவதாரம் தானே அவர் நாஸ்திகத்தைப் போதித்ததாகச் சொல்லுகிறார்களே அதெப்படி சாத்தியமாகும் ?

து—பவுத்தரும் விஷ்ணுவின் ஓர் அவதாரமே, அவர் இந்தக் கலியுகத்தில் அவதரித்து அநேக ஜீவஹிம்சை முத லான அக்கிரமங்களைக் கண்டித்து மோக்ஷசாதனமாகிய பவு த்தாகமத்தை ஸ்தாபித்தார். அவர் கருத்தை அறியாதமூடர் கள் அவரை நாஸ்திகரென்று சொல்லுகிறார்கள்.

ந—விஷ்ணுவைவிட வேறு தேவர்கள் சிலர் உண்டென்று நீங்கள் நம்புகிறீர்களா?

வி—ஆம், உலக பரிபாலனார்த்தம் அநேக சில்லரை தேவர்களுண்டு. அவர்களெல்லாரும் விஷ்ணு பரமாத்துமாவுக்குக் கீழ்ப்பட்டவர்களே.

ந—சில ஸ்திரீ தேவதைகளுமுண்டென்று நம்புகிறீர்களல்லவா?

து—ஆம் லக்ஷ்மிமுதலானவர்கள், இவர்களில் லக்ஷ்மி தேவியானவள் கேவலம் பிரகிருதியின் சக்தியே.

ந—அப்படியா? விஷ்ணு பரமாத்துமாவின் குணலக்ஷணங்களைச் சற்று சொல்லும்?

து—அவர் அத்துவிதீயராயும், அநந்தமாயும் இருக்கிறார். அவர் அத்துவிதீயராய் இருப்பதினால் அனைத்துக்கும் மேலானவராயும், ஒப்பும் உவமையு மற்றவராயும் இருப்பதன்றியில், தன் இச்சையின்படி அநேக அவதாரங்களை எடுத்து அநந்தமாயும் இருக்கிறார். அவர் ஸத்தியஸ்வரூபி, ஞானஸ்வரூபி, அநந்தஸ்வரூபி, நித்தியஸ்வரூபி, ஜனன மரணமற்ற நிரந்தரர், காலம் இடம் முதலானதுகளுக்கு மேலானவர்; முடிவற்ற குணபூஷணர்,

ந—அவர் அஸத்தல்லவா?

து—ஆம். அவர் அவியக்கதமாக இருப்பதினால்.

ந—அவருக்கு பெயருமில்லை யல்லவா?

து—அவருக்கு குறிப்பான எந்த பெயருமில்லை. அவர் சர்வர், எல்லாம் என்று சொல்லத்தக்கவர். அவரது பற்பல கிரியைகளைக் கருதி ஹிரணியகர்ப்பர், நாராயணர், விஷ்ணு என்றாதி பல பெயர்களால் புகழப்படுகின்றனர்.

ந—அவர் நிற்குணரா?

து—அவருக்கு பிரகிருத சம்பந்தமானதும் மானவ ஜாதியாருக்கு இருக்கும்படியானவும் குணங்கள் இல்லையேயொழிய நித்தியப்பொருளுக்குள்ள அனந்த திவ்ய குணங்களெல்லாமுண்டு,

ந—பரமாத்துமாவுக்குப் பிரகிருத சம்பந்தமான குண ங்களில்லாவிடில் அவர் பிரபஞ்சத்தையும் பிரஜைகளையும் சிருஷ்டிப்பதெப்படி ?

து—சிருஷ்டியென்பதனல் சூனியத்திலிருந்து ஜகத்தை யும் ஜனங்களையும் உண்டுபண்ணுகிறதென்று அர்த்தமல்ல. சூனியத்திலிருந்து யாதொன்றையும் சிருஷ்டிப்பது அசம் பவம். அநாதியாகவிருந்த மூலபிரகிருதியிலிருந்து மண்ணு லகத்தையும் மனுஷரையும் தோன்றச்செய்தார். இது தான் சிருஷ்டிக்கு அருத்தம்.

ந—அவருக்கு ரூபமும் வருணமுமில்லையல்லவா ?

து—அவருக்கு எவ்வித ரூபமும் வருணமுமில்லை.

ந—அப்படியானல்பரமாத்துமாவோடு வேறு வஸ்துக் களும் அநாதியாக இருக்கிறதென்றல்லவா ஏற்படுகிறது ?

து—ஆம் ஜடமாகிற பிரகிருதியும், ஜீவனென்னும் மா னுஷ ஆத்மாவும் வேறு சிலவும் பரமாத்துமாவைப்போல அநாதியாக இருக்கின்றன. ஆனல் அவைகள் யாவும் பரமா த்துமாவுக்குத் தாழ்ந்தவைகள்.

ந—அப்படியானல் பரமாத்துமா பிரபஞ்சத்துக்குகார ணரென்று எப்படி சொல்லலாம் ?

து—இதைப்பற்றி சற்று விவரமாகச் சொல்லுகிறோம் கேளும். சாதாரண காரணம் இரண்டுவகைப்படும்; எப்படி யெனில், தட்டான் பொன்னினல் ஒரு பதக்கத்தைப் பண் ணினதாக வைத்துக்கொள்வோம்; இவ்விடம் பதக்கம் காரி யம்; பொன்னும் தட்டானும் இரண்டுவித காரணமாம். பத க்கம் செய்வதற்கு முக்கிய காரணமாக இருந்த பொன் உபா தான காரணம்; தட்டான் பொன்னைத்திரட்டிச் செய்ய கரு வியாக இருப்பதால் கருவிகாரணம் அல்லது நிமித்த காரண ஞகிருன். இதைப்போல இந்த உலக சிருஷ்டியைப்பற்றி பரிக்ஷிப்போமாகில் இரு காரணங்களிருக்கின்றன. அதாவது பிரபஞ்சத்துக்கு ஜடபிரகிருதி முக்கியமாகிய பதார்த்தத் தைத் தருவதனல் உபாதான காரணமாயிருக்கிறது. இந்த

ஜடபிரகிருதிக்குள் பரமாத்துமா புருஷரூபமாக க்ஷோபாபி யாம்சமாகத் தூண்டியதனால் கருவிகாரணம் அல்லது நிமித்த காரணராகிறார். ஜடபிரகிருதி பரமாத்துமாவின் சக்தியுந் தூண்டுதலுமின்றி பிரபஞ்சமாக மாறும் வல்லமை யற்றதா கையால் பரமாத்துமாவே பிரபஞ்சத்துக்கு பரமகாரணரெ ன்று சொல்லப்பட்டனர்

ந—அப்படியா, இந்த பிரபஞ்சத்திலிருந்து எதேது எப்படி யெப்படித் தோன்றியது?

து—படைப்பு பத்துவகை. முதலில் தோன்றியது மஹத்து. (புத்தி) இரண்டாவது அஹங்காரம்; இதில்வைகா ரிக, தைஜஸ, பூதாதி என்ற மூன்று உட்பிரிவுகளுண்டு. (3-வது) இதிலிருந்து ஆகாசம், வாயு, தேஜசு, அப்பு, பிரு திவி ஆகிய தன்மாத்திரைகள் பிறந்தன. (4-வது) பஞ்சேந் திரியங்களும் கர்மேந்திரியங்களும்பிறந்தன; (5-வது) தேவ தைகள் பிறந்தன. (6-வது தாமச, மோஹ, மஹாமோஹ, தாமசமிச்ர, அந்ததா மிசமென்னும் அக்ஞானம் அல்லது அவித்தை பிறந்தன. இவ்வாறும் பிராகிருத சாரகமென்று சொல்லப்படும். (7-வது) ஸ்தாவரம்; (8-வது) திரியக்சுரோ தமென்னும் பிராணிகள் பிறந்தன; (9-வது) ஆர்வாக சுரோதமென்னும் மநுஷ ஜனனம் பிறந்தது. இம்மூன்றும் வைகிருதசாரகமென்று சொல்லப்படும். (10-வது) இந்த ஒன்பதுவித சிருஷ்டிகளைப் பாதுகாக்கப் பரமாத்துமாவே பல அவதாரங்களாகத் தோன்றியதாம்.

ந—இப்படிப்பட்ட சிருஷ்டி எப்போதுண்டாகிறது?

து—முட்டைக்குள் கரு முதலானதுகள் அடங்கியிருப் பதுபோல் ஜடபிரகிருதியில் அடங்கி இருந்த இவையனைத் தும் ஒவ்வொரு பிரும்ம கல்பகாலத்தில் தோன்றும்; இப் படிப்பட்ட பிரம்மகல்பங்கள் அநேகமாயிற்று, இன்னும் அநேகம் ஆகும். இந்த காலசக்கிரத்தின் அற்புதத்தை அறிய யாரால் ஆகும்!

ந—பிரம்ம கல்பமென்றாலென்ன?

து—432000 வருஷம் ஒரு கலியுகம், 864000 வருஷம் ஒரு துவாபரயுகம், 1296000 வருஷம் ஒரு திரேதாயுகம், 1788000 வருஷம் ஒரு கிருதயுகம், இந்நான்கும் கூடிய 4320000 வருஷம் ஒரு மஹாயுகம், இப்படிப்பட்ட எழுபத்தொரு மஹாயுகம் ஒரு மன்வந்தரம்; அல்லது ஒரு மநுவின் அரசாக்ஷிகாலம். 14-மன்வந் தரங்கள் சந்தியுள்பட 1000 மஹாயுகங்கள், இதுவே ஒருகல்பம்• அல்லது பிரம்மாவுக்கு ஒருநாள். இப்படிப்பட்ட 100 வருஷம் ஒரு பிரம்மாவின் ஆயுசு முடிவு; இதுவே ஒரு மகா கல்பமாம்; அதாவது 311040000000000 மனுஷவருஷங்களாம். இந்த பிரபஞ்சம் ஜடபிரகிருதியிலிருந்து தோன்றி இதில் பாதிபாககாலமாகிவிட்டது. இப்போது இரண்டாவது பாகம் ஆரம்பித்திருக்கிறது. அதாவது பிரம்மாவின் 58-வது வருஷம் ஆரம்பித்தது. இதற்குமுன் ஆறு மநுக்களாண்டார்கள், இப்போதிருக்கும் ஏழாவதாகிய வைவஸ்வதமனு அரசு செய்கிறார்.

ந—பரமாத்துமாவும், ஜடபிரகிருதியும், ஜீவனும் அநாதி நித்திய வஸ்துக்களென்றும், பிரபஞ்ச மாற்றத்தையும், பரமாத்துமாவின் குணலக்ஷணங்களையும் சொன்னீர்; இனி ஜடபிரகிருதியின் லக்ஷணத்தை சற்று சொல்லுங்கள் பார்ப்போம்?

அ—ஜடம் = கர்த்ருத்துவமற்றது ; ஆகவே லக்ஷ்மி என்னும் பிரகிருதியினுல் அந்தச் சக்தியைப் பெறுகிறது, இந்த லக்ஷ்மி என்னும் சக்தியானது பரமாத்துமாவுக்கு வேறானதாயும்; காலம், இடம் முதலானதுகளைப் போல அளவில்லாததாயும்; எப்போதும் எவ்விடத்தும் பரமாத்துமாவோடு இருக்கிறது. இந்த லக்ஷ்மியைப் பரமாத்துமாவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அது பரதந்திரமும் அபரிபூரணமு மானதாக இருக்கினும், மற்றப் பொருள்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது பூரணமுள்ளதாயும்; ஜடமும் அநாதியாகவும், அதன் சத்துவத்தில் பதார்த்தமானபடியால் களிமண் எப்படி ஒரு பாத்திரத்துக்கு முக்கிய காரணமாக இரு

க்கிறதோ அதுபோல இந்த ஜடமே பிரபஞ்சத்துக்கு உபாதானகாரணமாக இருக்கிறது; ஆகவே இந்த ஜடமானது ஜீவனுக்குத் தேகமாகிறது. இப்படி ஜடமானது உபாதான காரணமாகிறபடியால் சத்துவ, ரஜோ தம குணங்களைக்கொண்டிருக்கிறது.

ந—அப்படியா! இனி ஜீவன் அல்லது ஜீவாத்துமாவின் இலக்ஷணத்தைச் சொல்லும்?

து—ஜீவன் பிரகிருதியல்ல. அது அநாதி நித்தியவஸ்து; ஆனால் பரமாத்துமாவுக்குக் கீழ்ப்பட்ட ஓர் தனிவஸ்து. ஜீவன் ஜடதேகத்தில் கட்டுண்டபோது அந்த ஜடத்துக்கு இயற்கையாக உள்ள குணத்திரயங்களைப் பற்றுகின்றது. இது அநந்தவிதம். ஒவ்வொரு மானிட சரீரத்திலிருக்கும் ஒவ்வொரு ஜீவனும் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவை. ஆயினும் எல்லா ஜீவர்களையும் (திரிவிதமாக) மூன்று வகுப்புகளாகப் பிரிக்கலாம்.

ந—அம்மூன்றுவிதங்களின் விவரமெப்படி?

1-வது முக்தியோகிகள் அதாவது நிரந்தரம் பேராநந்தத்தை அநுபவிப்பவர்கள்.

2-வது தமோயோகிகள், அதாவது நிரந்தரகஷ்டங்களை அநுபவிப்பவர்கள்.

3-வது நித்திய சம்சாரிகள், அதாவது சுக துக்கங்களைச்சமமாக அநுபவிப்பவர்கள்.

இம்மூன்று வகுப்பாருள்ளும் ஒருவருக்கொருவர் வித்தியாசமுள்ளவர்கள் இருப்பார்கள்.

ந—இந்த த்வைத ஸித்தாந்தத்தினால் பரமாத்துமாவுக்கும் பிரகிருதிக்கும் ஜீவாத்துமாவுக்கும் வித்தியாசமிருப்பன ஸ்பஷ்டமாகிறதன்றோ?

து—ஆம். பஞ்சபேதங்களுண்டு. அதாவது:—

(1) பரமாத்துமா மற்ற எல்லாப்பொருள்களிலும் வேறுபட்டவர்.

(2) ஜடம், பரமாத்துமாவுக்கும் ஜீவாத்துமாவுக்கும் வேறுபட்டது.

(3) ஜீவன், பரமாத்துமாவுக்கும் ஜடத்துக்கும் வேறுபட்டது.

(4) ஜடாம்சம், அநந்த பிரகிருத அணுக்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவை.

(5) ஜீவர்கள், அநந்தகோடி. அவைகள் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவைகளாம்.

ந—இந்த வித்தியாசம் அல்லது வேறுபாடுகள் உண்மையானவைகளா?

து—ஆம். பரமாத்துமாவும் அவரது லக்ஷணங்களும் நித்தியமானவைகள். ஜீவன், நித்தியமானவை; ஜடமும் பிரபஞ்சமும் நித்தியமானவை; பரமாத்துமா, ஜீவாத்துமா ஜடத்தின் வித்தியாசங்களும் நித்தியமானவை; ஜீவர்களின் அநந்தகோடி பேதங்களும், பரமாணுக்களின் அநந்தகோடி பேதங்களும் நித்தியமானவையே.

ந—பிரதி தினமும் பாத்திரங்கள் உடைந்து புழுதியாவதும், நதிகள் வற்றி நாசமாவதும், பருவதங்கள் இடிந்து பொடியாவதும், பட்டணங்கள் இடிந்து பாழ்த்துப்போவதும் பிரத்தியக்ஷமாகப் பார்க்கச்சே இந்த பிரபஞ்சம் நித்தியமானதென்று எபபடி சொல்லலாம்.

து.—நாமரூபமான நதி, பருவதம், பட்டணம், பாத்திரம் முதலானதுகள் நித்தியமானவை என்று சொல்ல வரவில்லை. நாமரூபமுள்ளவை யாவும் நசித்தே தீரும். சிருஷ்டிக்குட்படாத சூக்ஷ்மப் பொருள்கள் மாத்திரம் நித்தியமாம். ஒரு பாத்திரத்தை உடைத்துப் பொடியாக்கி விடலாம், உண்மையே; ஆனால் அதன் அணுரூபமான சூக்ஷ்மப்பொருள் மாத்திரம் என்றும் நித்தியமாயிருக்கும். இந்தக் கருத்தின்படி உலகம் நித்தியமென்று சொல்லப்பட்டது.

ந—ஜீவாத்துமாவின் விஷயத்திலும் இப்படித்தானோ?

து—ஆம். ஜீவாத்துமா குடியிருக்கும் ஜடதேகம் நசிக்கும்; ஜீவன் மாத்திரம் நித்தியமாயிருக்கிறது.

ந—அப்படியானால் ஜனன மரணங்களென்பதின் பொருளென்னை?

து—ஜீவாத்துமா ஒரு தேகத்தில் கொஞ்சகாலம் வசித்து, அதைவிட்டு வேறு தேகத்தை யடைகின்றது; இப்படி ஜீவாத்துமா ஒரு தேகத்தில் பிரவேசிப்பதே ஜனனம்; அத்தேகத்தை விட்டுப் பிரிவதே மரணம்; அப்படி பிரிந்த ஜீவாத்மா வேறு தேகத்தில் பிரவேசிப்பதே மறு ஜனனம்; ஆகவே, ஜனன மரணங்கள் ஜடபதார்த்தத்தைச் சார்ந்ததே யொழிய ஜீவாத்துமாவுக்கில்லை.

ந—நல்லது, உங்கள் சித்தாந்தத்தின்படியே பரமாத்துமா எங்கும் நிறைந்திருக்கச்சே, ஜடமும் ஜீவாத்துமாவும் அந்தப் பரமாத்துமாவுக்கு வித்தியாசமானவைகள் என்றும், வேறுபட்டவைகளென்றும் சொல்வதெப்படி?

து—பரமாத்துமா எங்கும்நிறைந்து அணுவிலும் அணுவாக இருப்பது உண்மையே; ஆனால் அவர் எல்லா வஸ்துக்களிலும் சேர்ந்திருக்கிறாரே யொழிய, எல்லா வஸ்துவும் அவராகவே இருக்கவில்லை.

ந—என்ன! ஏகமாய் சம்பந்தித்திருப்பதை தனித்தனியேகமாகப் பிரிக்கக்கூடுமா? பரமாத்மாவை விட்டு ஜீவாத்மாவை பிரிப்பதெப்படி ஐயா?

து—சம்பந்தம் என்பதில் இருவகையுண்டு. அதாவது ஒரு மனுஷனுக்கும் அவன் உடைக்கும் இருக்கும் சம்பந்தத்தைப்போல. இந்தச்சம்பந்தத்துக்கு ஒரு ஆதியும் உண்டு, ஓர் அந்தமுமுண்டு; இந்த சம்பந்த ஆதியை, அந்த மனுஷனுக்கும், அவனுடைய உடைக்கும் கெடுதி வாராதபடி முடிவாக்கலாம்; ஆனால், பரமாத்துமாவுக்கும் ஜீவாத்துமாவுக்கும் இருக்கும் சம்பந்தம் இப்படிப்பட்ட ஆதியும் அந்தமும் உள்ளதல்ல. அது அவினாபாவ சம்பந்தம்,—அதாவது ஒரு விருக்ஷத்திற்கும் அதன் ரசத்துக்கும் இருக்கும் சம்பந்தத்

தைப்போல என்றும் இருப்பதும்; அந்த விருக்ஷத்தைக் கெடுத்தாலன்றி அதன் ரசத்தைப் பிரிக்கக்கூடாததுமான சம்பந்தமேயாம்; ஆகவே, பரமாத்துமாவுக்கும் ஜீவாத்துமாவுக்கும் முழுச் சேர்க்கையில்லை; ஆனால் இரண்டும் கூட்டுறவாக இருக்கின்றன. இந்தக் கூட்டுறவு பிரிக்கக்கூடாதது; அப்படியிருக்கினும், அவைகள் இரண்டும் ஒன்றேயல்ல.

ந—அப்படியானால் உமது துவைத சித்தாந்தத்தை அத்துவைத சித்தாந்தத்தைப் போதிக்கும் சுருதிகளோடு சமரசப்படுத்துவதெப்படி?

து—அத்வைதத்தைப்பற்றிச் சொல்லுவதாகச் சொல்லும் சுருதிகளில் இரண்டும் (ஜீவாத்துமா பரமாத்துமா) ஒன்றே என்று சொல்லவில்லை. ஒன்றில் இரண்டு என்று சொல்லுகின்றன. உதாரணமாக ஒரு விருக்ஷத்திற்கும் அதிலிருக்கும் ரசத்திற்கும்,—ஒரு மனுஷனுக்கும் அவனது சக்திக்கும்,—ஜலத்திற்கும் அதிலுள்ள உப்புக்கும் எப்படி வேறுபாடுகள் இருக்கின்றனவோ; அப்படியே, ஜீவாத்துமா பரமாத்துமா வேறுபட்டிருக்கிறது. இப்படி வேறுபட்டிருந்தும், எப்படி விருக்ஷமும் அதன் ரசமும் பிரிக்கக்கூடாததாயிருக்கின்றதோ; அப்படிப்போல, ஜீவாத்துமா பரமாத்துமாவிலிருந்து பிரிக்கக்கூடாததாயிருக்கிறது. இதைப்பற்றிப் பேசும் சுருதிகளையே அத்துவைத பரமானவைகள் என்று சிலர் எண்ணுகிறார்கள். அப்படி எண்ணுவது பிசகு; பரமாத்துமா சுதந்திரமும் பூரணமுமானது; ஜீவாத்துமா பரதந்திரமும் அபரிபூரணமுமானது; ஆகவே இவ்விரண்டும் ஒன்றே என்று சொல்லிற் பொருந்தாது.

ந—அப்படியானால் தத்துவமஸி=அது நீ = நீ அதுவாயிருக்கிறாய் என்ற சுருதி வாக்கியங்களுக்குப் பொருளென்ன? இந்த சுருதி வாக்கியத்தினால் ஜீவாத்துமாவும் பரமாத்துமாவும் கேவலம் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதாக சொல்லாமல், ஜீவாத்துமாவே பரமாத்துமா என்று பொருளாகின்றதே?

து—அந்தோ! அல்ல. இந்த சுருதி வாக்கியத்தினல் ஜீவாத்துமாவுக்கும் பரமாத்துமாவுக்கும் இருக்கும் சம்பந்தத்தைக் காட்டுகின்றதே யொழிய, அவ்விரண்டும் ஒன்றென்று காட்டவில்லை. உதாரணமாக தத்-என்னும் பதமானது அறியக்கூடாத அப்பிரமேய வஸ்துவைக்குறிக்கிறது; துவம் என்னும் பதம் அறியக்கூடிய பரிமித வஸ்துவைக் குறிக்கிறது; ஆகவே, இரண்டும் ஒன்றே என்று சொல்லக்கூடாது. மேலும், இந்த தத்துவமஸி என்ற வாக்கியமிருக்கும் சுருதி முழுதையும் இலக்கண ரீதியாகப் பரிசோதித்து பார்ப்போமாகில் அதில் வகுப்புகள் இருத்தல் பிரத்தியக்ஷமாகும்; எப்படியெனில், அதத்+துவம்+அஸி=அது நீ அல்ல=அது நீ ஆக விருக்கவில்லை. என்றால் தத்=பரமாத்துமா, ஒன்றே சுவயம்புவும் சுவதந்திரமுமானது என்றும், துவம்=(நீ)=ஜீவாத்துமா,அது=பரமாத்துமா, அஸி=இருக்கிறதில்லை என்றும் பொருளாகும்.

ந—துவைத சித்தாந்தத்தின் கருத்து இப்படியானல், இனி ஜீவாத்துமாவின் முடிவுதானெப்படி?

து—ஜீவாத்துமா பிராகிருத சம்பந்தமான பந்தங்களை விட்டு (மோக்ஷம் அல்லது முக்தியினல்) பரமாத்துமாவை யடைவதே. உலக சுக சம்பத்தும் ஆசாபாசங்களும் க்ஷணபங்குரமானவைகளாகவும் நிலையற்றவைகளாகவும் இருக்கின்றமையால்; புத்திமான்கள் நித்தியசுகமாகிய முக்தியை யடைய முயலல் வேண்டும்.

ந—முக்தியின் விலக்ஷணங்க ளெவை?

து—கர்மக்ஷயம். யுத்கிராந்தி, அர்ச்சிராதிமார்க்கம் என்ற மூன்று லக்ஷணங்களை யுடையது. ஜீவாத்துமா இவைகளைக்கடந்து பிறகு போகம் என்னும் நான்காவது அந்தஸ்தை யடைகின்றது.

ந—கர்மக்ஷயமென்றா லென்னை?

து—கர்மத்தை நசிக்கச்செய்தல் அதாவது மனம். வாக்கு, காயத்தால் செய்யும் கிரியைகளையும், அவற்றின் பல

ளையும் விட்டொழித்தலாம். ஜீவாத்துமா ஜடதேகத்தில் சம்பந்தப்படுவதினால், அந்த ஜடப்பிரகிருதிக்கு இயற்கையான நன்மை தீமையாதி குணங்கள் ஜீவாத்துமாவையும் பிடித்து அநேக தொழில்களைச் செய்யச் செய்து கர்மத்தையடையச் செய்கின்றன. இப்படி வரும் கர்மம் அநேக ஜனனமரணங்களை யடையச்செய்கின்றது, கர்மம் நசித்தால் ஜனன மரணங்கள் இல்லை.

ந—யுத்கிராந்தி என்றாலென்னை?

து—கர்மத்தை விட்டொழித்த ஜீவாத்துமா, மானுஷிக தேகத்திலிருக்கும் 72000 இரத்த நரம்புகளில் பிரதானமானதாகிய ஸுஷும்னை என்னும் பிரகாச வழியால் தேகத்தை விட்டுப்போகும் பிரவேசமேயாம்.

ந—அர்ச்சாரதி மார்க்கமென்று லென்னை?

து—அக்கினி முதலான வழிகளேயாம். அதாவது ஸுஷும்னையென்னும் வழியாகப் பிரவேசித்த ஜீவாத்துமா கபாலத்தில் சிறுபுள்ளி போலிருக்கும் பிரம்ம ரந்திரத்தின் வழியாகப் போய், அக்கினி மண்டலாதிகளில் பிரவேசித்து கடைசியில் முடிவான ஸ்தானத்தைப் பெறுதலாம்.

ந—போகமென்றாலென்ன?

து—இவ்விதமாகப் பிரவேசித்த பிறகு ஜீவாத்துமா அடையும் நித்திய சுகமேயாம்.

ந—ஜீவாத்துமா இப்படி நித்திய சுகத்தையடைய இம் மூன்றுவித மார்க்கங்களிலும் பிரவேசிக்க வேண்டுமோ?

து—ஆம், கர்மக்ஷயத்தினாலும், யோகாப்பியாசத்தினாலும் இந்த நித்திய சுகத்தையடை வேண்டும்.

ந—இந்த கர்மபந்தத்தை விலக்குவதெப்படி?

து—விஷ்ணு பரமாத்துமாவினிடம் பக்தியைக்காட்டி அவரது கிருபையாகிய பிரசாதத்தைப் பெற்றால் கர்மம்விலகும்.

ந—பரமாத்துமாவினிடம் பக்தியைக்காட்டுவதெப்படி?

